# தமிழர் வாழ்வியலில் திருக்கோயில்கள்

அழகப்பா பல்கலைக்கழக முனைவர் பட்டத்திற்காக (Ph.D.)
அளிக்கப்பெறும் ஆய்வின் பகுதியாக முடிக்கப்பெற்ற ஆய்வேடு.


ஆய்வாளர்

**ச. விசாலாட்சி**

(பதிவு எண் : 1316)

நெறியாளர்

முனைவர் **பீ.க. நபிசாள் பீவி**





**தமிழ்த்துறை**

**அழகப்பா பல்கலைக் கழகம்**

(தேசியத் தர மதிப்பீட்டுக்குழுவின் 'ஏ' மதிப்புப் பெற்றது)

காரைக்குடி - 630 003.


**மார்ச் - 2009**

முனைவர் பீ.க.நபீசாள்பீவி,
பேராசிரியர் & துறைத்தலைவர்,
தமிழ்த்துறை,
தாசீம்பீவி அப்துல்காதர் மகளிர் கல்லூரி,
கீழக்கரை.

நாள்: 17. 3. 2009

# நெறியாளர் சான்றிதழ்

"தமிழர் வாழ்வியலில் திருக்கோயில்கள்" என்னும் தலைப்பில் **ச.விசாலாட்சி** அவர்கள் முனைவர் பட்டத்திற்காகச் செய்த இந்த ஆய்வு, அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப் பெற்றது என்றும், இந்த ஆய்விற்காக வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

துறைத்தலைவர்
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி-630 003

(முனைவர் பீ.க.நபிசாள்பீவி)
நெறியாளர்
HEAD,
DEPARTMENT OF TAMIL,
TBAK COLLEGE FOR WOMEN,
KILAKARAI-623 517.
RAMANATHAPURAM DIST.

**ச.விசாலாட்சி,**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.

நாள்: 17.3.2009.

# ஆய்வாளர் உறுதிமொழி

**"தமிழர் வாழ்வியலில் திருக்கோயில்கள்"** என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்காக எழுதப் பெற்ற இவ்வாய்வேடு என் சொந்த முயற்சியில் உருவானதாகும். இவ்வாய்வேடு இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப் பெறவில்லை என்று உறுதியளிக்கிறேன்.

**ச.விசாலாட்சி** 17/3/09
ஆய்வாளர்

உறுதிக் கையொப்பம்

நெறியாளர்
**முனைவர் பீ.கநீசாள்பீவி,**
பேராசிரியர் & துறைத்தலைவர்,
தமிழ்த்துறை,
தாசீம்பீவி அப்துல்காதர் மகளிர் கல்லூரி,
கீழக்கரை.

HEAD,
DEPARTMENT OF TAMIL,
TBAK COLLEGE FOR WOMEN,
KILAKARAI-623 517.
RAMANATHAPURAM DIST.

# நன்றியுரை

**'தமிழர் வாழ்வியலில் திருக்கோயில்கள்'** என்னும் தலைப்பில் முனைவர் பட்ட ஆய்வினை மேற்கொள்வதற்கு ஒப்பதளித்த அழகப்பா பல்கலைக்கழக துணைவேந்தர் அவர்களுக்கும், தமிழ்த்துறைத்தலைவர் முனைவர் **மு. பாண்டி ஐயா** அவர்களுக்கும் முதற்கண் என் மனமார்ந்த நன்றிகளை சமர்ப்பிக்கின்றேன்.

ஆய்வு நெறிகளை சுட்டிக்காட்டியும், ஐயங்களை உடனிறுந்து அகற்றியும், வேண்டிய பொழுதெல்லாம் குறிப்பறிந்து, குறிப்பு தந்து உதவியும், ஆய்விற்கான செய்திகளைத் திருத்தியும், இவ்வாய்விற்காக எனக்கு பல்வேறு நிலைகளிலும் உதவிய என் ஆய்வு நெறியாளர் **திருமதி முனைவர் பீ.கா. நபிசாம்மாள்** துறைத்தலைவர், தமிழ்த்துறை, தாஸிம்பீவி அப்துல்காதர் மகளிர் கல்லூரி, கீழக்கரை அவர்களுக்கு என் மனமார்ந்த கோடான கோடி நன்றிகளை முதற்படியாக உவகையுடன் உரித்தாக்குகின்றேன்.

ஆய்வுக்காலங்களில் நான் சிறப்புற ஆய்வு மேற்கொள்ள உதவி செய்து தூண்டுகோலாக விளங்கிய எனது மாமனாரும், தந்தைக்குரியவருமான பெருமதிப்பிற்குரிய **சைவத்திரு. ந. கருப்பையாபிள்ளை** அவர்களின் பொற்பாதங்களை வணங்கியும் என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன். மேலும் ஆய்வுக் காலங்களில் நான் சோர்வுற்ற வேளையில் எனக்கு தன்னம்பிக்கையளித்து ஊக்கப்படுத்திய என் கணவர் **திரு.க. நடராஜன்,** என் அன்புச்செல்வன் **ந.கார்த்திகேயன்** ஆகியோருக்கும் என் உளம் கனிந்த நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இவ்வாய்வேடு சிறக்க உதவி செய்த அனைத்து உள்ளங்களுக்கும், இவ்வாய்வேட்டை சிறந்த முறையில் தக்க காலத்தில் நன்முறையில், வடிவமைத்துத்தந்த **ரமணி (லியோ கம்யூட்டர்ஸ்)** நிறுவனத்தாருக்கும் என் மனமார்ந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

**(ச. விசாலாட்சி)**

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகத் | - | அகத்திணையியல் |
| அகநா, அகம் | - | அகநானூறு |
| இளம் | - | இளம்பூரணர் |
| உ.ஆ., உரை. | - | உரையாசிரியர் |
| உ.கு.ஆ. | - | உரைக்குறிப்பு ஆசிரியர் |
| உவம். | - | உவமையியல் |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| கட.வாழ் | - | கடவுள் வாழ்த்து |
| கலி, கலித். | - | கலித்தொகை |
| கம்ப. | - | கம்பராமாயணம் |
| கழகம் | - | திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் |
| குறள் | - | திருக்குறள் |
| குறுந். | - | குறுந்தொகை |
| சிலம்பு | - | சிலப்பதிகாரம் |
| சீவக. | - | சீவகசிந்தாமணி |
| செய்யு. | - | செய்யுளியல் |
| த.கோ.செ. | - | தஞ்சைவாணன்கோவை செய்யுள் |
| திரு.மு.ஆ.படை | - | திருமுருகாற்றுப்படை |
| தொல். பொருள். | - | தொல்காப்பியம் பொருளதிகாரம் |
| நச்சி. | - | நச்சினார்க்கினியர் |
| நற். | - | நற்றிணை |
| நூற். | - | நூற்பா |
| நெடு.ந.வாடை | - | நெடுநல்வாடை |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| ப. ஆ. | - | பதிப்பாசிரியர் |
| பட்டினப் | - | பட்டினப்பாலை |
| பதி.பத்து | - | பதிற்றுப்பத்து |

| | | |
|---|---|---|
| பரி | - | பரிபாடல் |
| பா. | - | பாடல்கள் |
| பா.எ | - | பாடல் எண் |
| புறம், புறநா | - | புறநானூறு |
| புற.வெண்.மா. | - | புறப்பொருள் வெண்பாமாலை |
| பெரும்.ப.படை | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொருளி. | - | பொருளியல் |
| மணி | - | மணிமேகலை |
| மது | - | மதுரைக்காஞ்சி |
| மலை | - | மலைபடுகடகம் |
| மேலது | - | மேலே உள்ள நூல் |
| வ.எண் | - | வரிசை எண் |

# பொருளடக்கம்

# ஆய்வு முன்னுரை

## *1.1. ஆய்வுப்பொருளின் நோக்கமும் முக்கியத்துவமும்*

உலகில் மனித இனம் தோன்றி பல யுகங்கள் கடந்துவிட்டன. இந்த யுகாந்தர மாற்றத்தால் மனிதனின் கல்வி, நாகரிகம், வாழ்க்கைமுறை ஆகியவற்றில் மாற்றங்கள் ஏற்பட்டாலும் இந்திய மக்களின் குறிப்பாகத் தென் தமிழகத்தின் பண்பாடு, கலாச்சாரம், இறையாண்மை முதலியவை முற்றிலும் மாற்றமடையவில்லை என்றே கூறலாம். நம் முன்னோர்கள் வாழ்ந்து காட்டிய வழிச்சுவடுகளை இன்றும் நமக்கு உணர்த்திக் கொண்டு இருப்பவை திருக்கோயில்களேயாகும். இத்திருக்கோயில்கள் தோற்றத்திற்கு வித்திட்டவை வழிபாடேயாகும்.

வழிபாடு என்பது உயிர்ப்புள்ள ஒரு முயற்சியாகும். அகப்பயிற்சியின் மூலம் ஆன்மா தன்னை உயர்த்திக் கொள்வதற்கும் வழிபாடே துணை செய்யும் என்று கூறலாம். பற்றுக்கோடு ஏதுமின்றி சிந்திக்க இயலாத சராசரி மனிதர்கள் மிகப்பலர். இவர்களுக்குப் பற்றுக்கோடாகத் திருவுருவ வழிபாடு தோன்றியது. அதன்பிறகே திருக்கோயில் நாகரிகம் கால்கொள்கிறது. குறிப்பாக சைவ, வைணவ சமயங்களில் பற்றுகொண்ட மகான்களும், மன்னர்களும், வழிகாட்டிகளும் தோன்றிய காலக்கட்டங்களில்தான் திருக்கோயில்களை விண்ணளவு உருவாக்கும் நாகரிகம் மகோன்னத நிலையை அடைந்துள்ளது. மனித வாழ்வில் புதிய ஆற்றல் மிக்க சமுதாய உணர்வு அரும்பியுள்ளதைக் காணமுடிகிறது.

இத்திருக்கோயில்கள் மன்னராலும் மக்களாலும் போற்றி வளர்க்கப்பட்டு வந்துள்ளன. பழமையான மரபையும் பாரம்பரியத்தையும் காப்பாற்றி அதன்மூலம் பல்வேறு கலைகளும் வளர உதவி செய்துள்ளன. தென்னிந்தியாவின் அரசியல், பொருளாதாரம், சமுதாயம், சமயம், கல்வி, நாகரிகம் சார்ந்த பல்வேறு வாழ்க்கை நிலைகளையும் உணர்ந்து கொள்ள உதவும் சான்றுகளாகக் கல்வெட்டுக்கள், மெய்க்கீர்த்திகள், செப்பேடுகள், இலக்கியங்கள், கோயில் வரலாறு (தலபுராணங்கள்)

ஆகியவற்றைச் சிறப்பாகவும், முக்கியச் சான்றாதாரங்களாகவும் கூறலாம். இவை அனைத்தையும் தன்னகத்தே கொண்டுள்ள திருக்கோயில்கள் பற்றிய ஆய்வு இன்றியமையாததாகும்.

உலகம் அமைதியாக இயங்கவும், மக்கள் வளம் பெறவும் வேண்டுமெனில் ஒவ்வொரு தனிமனிதனும் குழப்பத்திலிருந்து விடுதலை பெறவேண்டும். மனத்தில் குழப்பம், துன்பம், தடுமாற்றம், ஏற்படும் பொழுது மக்களுக்கு ஆறுதல் அளிக்கும் இடங்களில் திருக்கோயில் தனித்துவம் பெறுகின்றது. இத்திருக்கோயிலில் மனம் பேராசை, பொறாமை, வெறுப்பு, பகையுணர்வு, ஆணவம், இவற்றினின்று விடுதலையடைந்து அறம் சார்ந்த நிலையை, அமைதியை அடைகின்றது. திருத்தலங்களுக்குச் சென்று வழிபடுவதன் மூலகாரணம் ஒரு நல்ல சற்குரு வாய்க்கவும் அவர்மூலம் இறையருள பெறவும், சாந்தமும், சாந்தியும் பெறவுமேயாகும். இவை இன்றைய மனித இனத்தின் முக்கியத் தேவையாகவும் அமைந்துள்ளன என்றே கூறலாம். இவ்வாறு மக்களின் மன அமைதிக்காகவும், நற்பேறு அடைவதற்காகவும் வழிகாட்டியாக, மூலாதாரமாகத் திகழும் திருக்கோயிலானது கல், மண், சுண்ணாம்பு இவற்றால் மட்டுமே ஆனது அல்ல. உயிர்க்கலைகள் திகழ்கின்ற அற்புதப்படைப்பாகும்.

தமிழ்நாடு ஆலயங்கள் நிறைந்த நாடு. விண்ணளந்துகாட்டி வினை மறைக்கும் திருக்கோயில்கள் தமிழ்நாட்டிற்கு அழகூட்டுவனவாகும். கல்லிலே கலைவண்ணம் படைத்து, பேசும் சித்திரமாகவும், வழிபடும் தெய்வமாகவும் படைத்துக்காட்டிய திறம் தமிழர்க்கே உரியது. சென்ற காலத்திலும் சரி, நிகழ்காலத்திலும் சரி, தமிழ்நாட்டினர் வரலாற்றை, தமிழரின் வாழ்வியலை இயக்குவதில் திருக்கோயில்கள் முக்கியப் பங்காற்றி வருகின்றன. தமிழக மக்கள் வாழ்க்கையில், வளர்ச்சியில், பண்பாட்டு கலாச்சாரங்களில் மிகுதியும் இடம் பெற்றிருந்தவை திருக்கோயில்கள். பழந்தமிழர் காலந்தொட்டு இன்றைய தினம்

வரையிலும் அன்றாட வாழ்க்கை, மொழி, கலை, இலக்கியம், சமயம், அரசியல், பொருளியல், சமூகவியல் ஆகிய அனைத்தும் திருக்கோயில்களின் வட்டத்தைச் சார்ந்தே இயங்கியுள்ளன. வருங்காலத்திற்கும் திருக்கோயில்கள் ஊன்று கோலாகவும், சான்றாதாரமாகவும் திகழும் என்பது உண்மையாகும். இவை ஆய்வுப்பொருளின் நோக்கமும் முக்கியத்துவமுமேயாகும்.

### *1.2 ஆய்வுத்தலைப்புவிளக்கமும் பயன்பாடும்*

மானுட வாழ்க்கை அக, புறநிலைகளில் வளம்பெற சமயம் சார்ந்த வாழ்க்கை தேவை. சமயம் என்பது ஒரு தத்துவம், கொள்கை, கோட்பாடாகும். அது வாழ்க்கைக்கு அப்பாற்பட்ட நெறி என்றால் வழி, உயிரும் உணர்வும் செல்லும் ஆறு இறையருளை நாடிச் செல்லுவோர் செல்லும் திருநெறி சமயமாகும். இந்த உயரிய குறிக்கோள்களை அடைவதற்குச் சமயம் துணை செய்வதோடு, தனிமனிதனைச் சான்றோனாக்கி, சமுதாய வாழ்வுடையவனாக்கி, அன்பினாற்றளும், அறவொழுக்கமும் உடையோனாக மாற்றுகிறது. சமயநெறியில் வாழத் துணை செய்வது வழிபாடு. வாழ்வியலை இயக்கிய, இயக்குகின்ற மூலாதாரமாகத் திகழ்ந்து வருகின்றது. தமிழர் வாய்வியலில் ஆதியோடந்தமாக, அன்று தொட்டு இன்று வரையிலும் திருக்கோயில்களின் பங்கும் பயன்பாடும் யாவை எனத் தேடல்களுக்கு இவ்வாய்வு வழிகாட்டுகிறது.

இந்தியத்திருநாட்டின், தமிழகத்தின் கலாச்சார மணிமகுடமாகத் திகழும் திருக்கோயில்கள் பற்றிய சிந்தனைகள், அவை தாங்கி நிற்கும் மூதாதையர்கள், மன்னர்களின் வரலாற்று உணர்வுகள் மங்கி மறைந்துகொண்டேவரும் இவ்வேளையில் திருக்கோயில்களின் அமைப்பு மற்றும் வழிபாட்டு முறைகள் மனிதனோடும், அவன் வாழ்வியலோடும் இரண்டறக் கலந்துள்ள நிலைப்பாட்டுண்மையைத் திருக்கோயில் ஆய்வோடு விளக்கிக் கூறுவதே இவ்வாய்வின் நோக்கமும் பயனுமாகும்.

*1.3 ஆய்வு எல்லை*

"தமிழர் வாழ்வியலில் திருக்கோயில்கள்" என்ற தலைப்பினை ஆய்வின் வழி நிறுவுவதற்குத் திருக்கோயில்கள் நிலைக்களன்களா எடுத்துக்கொள்ளப்பட்ட போதிலும் காலத்தின் அருமைப்பாட்டினைக் கருத்திற்கொண்டும் கள ஆய்வுத்தரவுகள் சேகரிப்பதற்கு ஏதுவாகவும் ஆய்வு எல்லைக் கருதியும் சேதுநாட்டுத்திருக்கோயில்களில் புராண, இதிகாச, வரலாற்று முக்கியத்துவமும் நுட்பமான கலையமைப்பும் கட்டமைப்பும் பெற்றுத்திகழும் திருக்கோயில்கள் இவ்வாய்வேட்டின் ஆய்வு எல்லையாக எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன.

*1.4 ஆய்வு அணுகுமுறை*

ஆய்வுக்குட்பட்ட திருக்கோயிலின் வரலாறுகளைக் கண்டறியும் முகமாக வரலாற்றியல் அணுகுமுறையும் (ஏண்ள்ற்ர்ழ்ண்ஸ்ரீஹப் ஹல்ல்ழ்ர்ஹஸ்ரீட்) திருக்கோயில்களின் அமைப்பு மற்றும் வழிபாடுகளை விளக்க விளக்கவியல் அணுகுமுறையும், கோயில்களுக்கும் சமுதாயத்தற்குமான உறவுகளைக் கண்டறிய சமுதாயவியல் அணுகுமுறைகளையும் (நர்ஸ்ரீண்ர்ப்ர்ஞ்ண்ஸ்ரீஹப் ஹல்ல்ழ்ர்ஹஸ்ரீட்) இவ்வாயிற்விற்குரிய அணுகுமுறைகளாகப் பயன்படுத்தப் பெற்றுள்ளன.

*1.5 ஆய்வு முன்னோடிகள்*

கோயில் குறித்த ஆய்வினை வரலாற்றுத்துறையினரும், தொல்பொருள் ஆய்வுக் கழகத்தினரும் செய்து வருகின்றனர். இவர்களிடம் ஆய்வுத்தரவுகள் சேகரிக்கப்பட்டுள்ளன. திருக்கோயில்கள் ஆய்வில் சுசீந்தரம் கோயிலை ஆய்வு செய்த கே.கே. பிள்ளை, தி.வி. மகாலிங்கம் – நாகேசுரசுவாமித்திருக்கோயில், சி. கிருஷ்ணமூர்த்தி – திருவொற்றியூர் திருக்கோயில், பு.பா. உமாமகேஸ்வரி – நெல்லையப்பர் திருக்கோயில், தேனப்பன்–ஒன்பது நகரத்திருக்கோயில்கள், எஸ்.கல்யாணசுந்தரம்–திருச்செந்தூர் முருகன் திருக்கோயில், எஸ்.எம்.கமால் – இராமேசுவரம் இராமநாதசுவாமித்திருக்கோயில் போன்றோர்கள் ஆய்வு

முன்னோடிகளாவர். இவர்களின் ஆய்வுகள் ஆய்வின் முன்னோடியாக விளங்குகின்றன.

### *1.6 கருதுகோள்*

'கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்.' 'ஆலயமில்லா ஊர் அடவிகாடு' என்னும் முதுமொழிகள் தமிழர் வாழ்வில் திருக்கோயில்களின் இன்றிமையாமையை உணர்த்துவன. இத்திருக்கோயில்கள் மக்களின் வாழ்க்கை முறை, அரசியல், இனம், பொருளாதாரம், பிறகாரணிகளான மதம் போன்ற சமூக இயங்குநிலைகளால் மாற்றத்திற்குபட்டிருக்க வேண்டும். சேது நாட்டுப் பகுதிகளிலும் அரசியல், சாதிய நிலைகள் இம்மக்களின் வாழ்க்கைமுறை, இவர்களுக்கும் திருக்கோயில்களுக்குமான தொடர்புகளில் மாறுதல்களும் நிகழ்ந்திருக்கும். இவ்வட்டாரத் திருக்கோயில்களின் அமைப்பு, வழிபாட்டுமுறைகள், திருவிழாக்களில் தனித்தன்மைகள் இருக்கும் என்பன இவ்வாய்வின் கருதுகோள்களாகும்.

### *1.7 ஆய்விற்கான சான்றாதாரங்கள்*

இவ்வாய்வில் முதன்மைச் சான்றாதாரம், துணைச்சான்றாதாரம் என்ற இருநிலைச் சான்றாதாரங்கள் பின்பற்றப்படுகின்றன.

*முதன்மைச் சான்றுகள்*

திருக்கோயில்களின் தோற்ற அமைப்பு, வளர்ச்சிநிலை, திருக்கோயில்கள் வளர்த்த வாழ்வியற்கலைகள், சேதுநாட்டுத் திருக்கோயில்களின் சிறப்புகள், கோயில் வழிபாட்டு முறைகள் உணர்த்தும் தத்துவங்கள் போன்ற தலைப்புகளை ஆய்வின் மூலம் நிறுவுவதற்கு, திருக்கோயில்களில் மேற்கொள்ளப்பட்ட களஆய்வும், களஆய்வுச் செய்திகளும், (திருக்கோயில் கட்டடப் பொறியாளரிடம் மேற்கொள்ளப்பட்டவையும், திருக்கோயில் நிர்வாகிகள், போன்ற பலதரப்பட்டோரிடமும் மேற்கொள்ளப்பட்ட களஆய்வுகள்) மற்றும் ஆய்வு எல்லையாக

அமைந்துள்ள திருக்கோயில்கள் ஆகம விதிப்படி அமைக்கப்பட்டுள்ளதையும், இக்கோயில்களில் நடைபெறும் வழிபாட்டு முறைகள், திருவிழாக்கள் பற்றியும் ஆய்வாளர் ஆய்வின் போது கண்ட உண்மைகளும், இத்திருக்கோயிலில் இன்றளவும் நடைமுறையில் உள்ள வழக்கங்களை ஆய்வேட்டில் குறிப்பிட்டு, கையாண்டுள்ளதும் முதன்மைச் சான்றுகளாகும்.

திருக்கோயில்களின் தோற்ற வரலாறு மற்றும் சங்க இலக்கியங்களில் ஆலய வழிபாடு என்ற இவ்விரு தலைப்புகளை நிறுவுவதற்கும் மூலாதாரமாக விளங்கிய பத்தி இலக்கியங்கள், சங்க இலக்கியங்கள், போன்றவையும் முதன்மைச் சான்றுகளாகும்.

*துணைமைச் சான்றுகள்*

திருக்கோயில்கள் பற்றிய தலபுராணங்கள் புராண, இலக்கிய, வரலாற்று நூல்கள், கோயில் அமைப்பு, வழிபாட்டு முறைகள் பற்றி வெளிவந்துள்ள நூல்கள் இந்து சமயக்கருத்துக்கள் பலதரப்பட்டவையும் தாங்கி வெளிவந்துள்ள நூல்கள் (எ.கா. இந்துமத இணைப்பு விளக்கம்) கோயில் பற்றிய செய்திகள் அடங்கிய கட்டுரைகள், இதழ்கள், திருக்கோயில்கள் பற்றிய நம்பிக்கைகள் ஆகியன யாவும் துணைமைச் சான்றுகளாகும்.

### *1.8. ஆய்வேட்டின் கட்டமைப்பு*

தமிழர் வாழ்வியலில் திருக்கோயில்கள் என்ற இவ்வாய்வேடு ஆய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களை உள்ளடக்கியதாக அமைகின்றது. அவையாவன,

1. **திருக்கோயில்களின் தோற்ற வரலாறு.**
2. **சங்க இலக்கியங்களில் ஆலய வழிபாடு**
3. **திருக்கோயில்களின் அமைப்பு, வளர்ச்சிநிலை**
4. **திருக்கோயில்கள் வளர்த்த வாழ்வியற்கலைகள்**

5. **சேதுநாட்டுத் திருக்கோயில்களின் சிறப்பு**

6. **கோயில் வழிபாட்டு முறைகள் உணர்த்தும் தத்துவங்கள்**

என்பனவாகும்.

முன்னுரையில் ஆய்வுத்தலைப்பு, ஆய்வுப் பொருளின் நோக்கமும் முக்கியத்துவம், ஆய்வுத்தலைப்பு விளக்கமும் பயன்பாடும், ஆய்வு எல்லை, ஆய்வு அணுகுமுறை, ஆய்வு முன்னோடிகள், ஆய்வு எல்லை, ஆய்விற்கான சான்றாதாரங்கள் போன்றவற்றை உள்ளடக்கியும் இயல் விளக்கங்களையும் பெற்று அமைந்துள்ளது.

### *1.9 இயல் விளக்கங்கள்*

### *1. திருக்கோயில்களின் தோற்ற வரலாறு*

பழந்தமிழர்கள் தங்கள் வாழ்க்கையின் இடையூறுகளாக இருந்த பெருமழை, சூறாவளி, புயல்காற்று, காட்டுத்தீ, கடுங்குளிர் ஆகியவற்றின் தாக்குதலிலிருந்து தங்களைக் காத்துக் கொள்ள முயன்ற பொழுது இவ்வியற்கையைத் தங்களின் வாழ்வாதாரத்திற்கும் வளர்ச்சிக்கும் பயன்படுத்தத் தொடங்கினர். இயற்கையைக் கண்டு வியந்த மனிதன் அதனை வழிபடத் தொடங்கினான். இவ்வாறே இயற்கை வழிபாடு தோன்றியது. இயற்கை வழிபாட்டின் தொடக்கமே மர வழிபாடாகும்.

நாகரிக வளர்ச்சி பெற்ற நிலையில் தங்கள் உடைமைக்கும், உணவுக்கும், உணர்வுக்கும் பாதுகாப்புக் கருதியும், ஊர்க்காவல், கட்டுப்பாட்டை முன்னிட்டும் குறிப்பிட்ட சிலரைக் காவல் தொழிலுக்கும், இவர்களில் ஒருவரைத் தலைவராகவும் ஏற்றுக்கொண்டனர். இத்தலைவர்கள் தங்களுக்காகவும், தங்கள் சமுதாயத்திற்காகவும் போரிட்டு உயிர் துறக்க நேர்ந்த பொழுது அவர்களை நினைவு கூறும் வகையிலும், அவர்களுக்கு நன்றி கூறும் வகையிலும் நடுகல்கோயில் அமைத்து இறந்தவர்களையே தங்கள் குலத் தெய்வமாக வழிபடத் தொடங்கியது நடுகற்கள் வழிபாடாகும்.

நடுகல் வீர வழிபாட்டில் இருந்து தோன்றியது சிறு தெய்வ வழிபாடாகும். இனக்குழு மக்கள் சமுதாய வளர்ச்சி பெற்ற நிலையில் ஐந்திணைத் தெய்வ வழிபாடும், வழிபாட்டில் வளர்ச்சி நிலையும் ஏற்பட்டன. சங்ககால சமய வாழ்க்கையில் முருகன், சிவன், திருமால், இந்திரன், கொற்றவை வழிபாடு மேலோங்கி இருந்தது. இக்கால கட்டத்தில் ஆரியர்களின் வருகையால் வேள்வி நெறியும், வைதீகச் செல்வாக்கும் வழிபாட்டில் மாற்றங்களை உண்டாக்கின.

சிந்திக்கும் திறனும், நாவினால் நவிலுந்திறனும் வாய்க்கப்பெற்ற மனிதன் இறைவனுக்கு நன்றி செலுத்த முற்பட்டபொழுது திருக்கோயில்களின் தோற்றமும் எண்ணிக்கையும் பல்கிப்பெருகின. கோ–அரசன், தலைவன், இல்–உறைவிடம், நாடாளும் அரசனைக் கண்டால் இறைவனைக் கண்டது போல் பழந்தமிழர்கள் மகிழ்ந்தனர். இம்மன்னர்கள் உலகத்தில் தலைவனாகிய இறைவனுக்குப் பக்தி வெளிப்பாடாக அமையும் வகையில் திருக்கோயில்களை உருவாக்கினர்.

இயற்கை வழிபாட்டில் தொடங்கி, நடுகற்கள் வழிபாடு என பல்வேறு பரிணாமங்களைப் பெற்றுத் திருக்கோயில் தோற்றம் பெற்ற வரலாற்று உண்மைகளை இவ்வியல் விளக்குகிறது.

### *2. சங்க இலக்கியங்களில் ஆலய வழிபாடு*

சங்க இலக்கியங்களில் தெய்வம் அவ்வந்நிலத்துக் கருப்பொருள்களுள் ஒன்றாகக் கூறப்படினும் எல்லாப் பொருள்களிலும் சிறந்ததாக மக்களால் வழிபடப்பெற்றது. வழிபடு தெய்வத்திற்குத் திருவுருவமைத்து, அத்திருவுருவத்தின் முன்னின்று பொருள்சேர் புகழ்திறம் மிக்க பாடல்களால் போற்றிப் பரவுதல் முன்னோர் கொண்டொழுகிய வழிபாட்டு முறையாக அறிகின்றோம். திருவுரு கொண்டு வழிபட்ட தெய்வத்தினை நல் இருப்பு செய்துள்ளனர் சங்ககாலமக்கள். மலைகளிலும், ஊருக்குள்ளும் இல்லத்திலும் நல்இருப்புச் செய்து வழிபட்டுள்ளனர்.

இக்காலகட்டத்தில் தோன்றியதே தெய்வத்திற்கு உயிர்ப்பலி இடும் முறையும் வெறியாட்டயர்தலுமாகும்.

சங்ககால மக்களிடம் வழிபடுதலில் ஏற்பட்ட மகிழ்ச்சி, ஈடுபாடு, பக்தி, மனத்தெளிவு காரணமாகத் திருக்கோயில்களும், திருக்கோயில்களில் தெய்வத்திருவுருவங்களும் தோற்றம்பெறலாயின. இத்தெய்வத் திருவுருவங்களுக்கு அணிகலன்கள் ஆடைகள், கைகளில் ஏந்தியுள்ள படைக்கலன்களையும் உருவாக்கியமைத்து வழிபடத் தொடங்கினர். இதனால் திருக்கோயிலில் வழிபடப்பெறும் தெய்வங்களின் திருவுருவத்திருமேனிகளிலும் மாற்றங்கள் உண்டாயின. முருகன் ஆறுமுகத்தோன், குழவி வடிவம் கொண்டும், சிவனுக்கு-தாபதவடிவம், அஷர்சடை முனிவர், முக்கண்ணன், போன்ற வழிபாட்டு வடிவங்களும் தோன்றின.

சங்ககால ஆலய வழிபாட்டின் துவக்க நிலையாக மலர்கொண்டு வழிபடுதல், மாலை சூட்டி அலங்காரம் தீபதூபவழிபாடு, மங்கலப் பொருட்களைப் படைத்தல், இசைக்கருவி இசைத்து வழிபாடு, வேண்டுதல் வழிபாடு போன்றவற்றை அறியமுடிகின்றது. ஆகம விதிப்படி திருக்கோயில்கள் நிறுவப்பெற்ற பிறகு திருக்கோயில்களில் நடைபெற்று வந்த பூசை முறைகள், திருக்கோயில் திருவிழாக்கள் பற்றியும் அறியமுடிகின்றது.

இவ்வாறு சங்க இலக்கியங்கள் சுட்டும் பல்வேறு வழிபாட்டு முறைகளும், அவற்றின் வளர்ச்சி நிலையான திருக்கோயில் வழிபாட்டு முறைகளும் இவ்வியலில் ஆய்வாக மேற்கொள்ளப்படுகிறது.

### *3. திருக்கோயில்களின் அமைப்பும், வளர்ச்சிநிலைகளும்*

இத்தலைப்பில் திருக்கோயில்களின் பொதுவான அமைப்பு, ஆரம்ப கால நிலையில் திருக்கோயில்களின் அமைப்பு, அவற்றில் ஏற்பட்ட வளர்ச்சி பற்றியும்

இதனடிப்படையில் ஆய்வு எல்லையாக அமைந்துள்ள சேதுநாட்டுத் திருக்கோயில்களின் அமைப்பு, வளர்ச்சி பற்றியும் விரிவாகக் கண்டறியப்பெற்றுள்ளது.

பண்டைத்தமிழகத்தில் திருக்கோயில்கள் செங்கற்களால், மரத்தால் அமைக்கப்பட்டுக் கருவறை மட்டிலும் விமானத்தோடு அமைக்கப்பட்டது. பல்லவர்களின் காலத்தில் கற்பாறைகள் குடையப்பட்டுக் குடைவரைக் கோயில்கள் தோன்றின. அடுத்து வந்த சோழர்காலத்தில் அருத்தமண்டபம், மகாமண்டபம், நீண்ட வாயில் மற்றும் திருச்சுற்றுக் கலையைச் சேர்த்து கோயிலமைப்பை விரிவுபடுத்தினர். இக்காலகட்டத்தில் தான் சிற்பவேலைப்பாட்டுடன் கூடிய உயரமான கோபுரங்கள் கட்டும் கலையும் தோற்றம் பெற்றுள்ளது. கோயில் திருச்சுற்றுக்குள்ளாகப் பரிவாரக் கோயில்களும் தோன்றின. இவ்வாறு திருக்கோயில் அமைப்பானது வளர்ச்சிநிலையைப் பெற்றுள்ளது.

### *4. திருக்கோயில்கள் வளர்த்த வாழ்வியற்கலைகள்*

மன்னர்களின் பக்தி, பராக்கிரமத் தன் வெளிப்பாடாக மட்டும் திருக்கோயில்கள் அமையாமல், இத்திருக்கோயில்கள் கல்வி அறிவூட்டும் மையங்களாக, ஆடல், பாடல், சிற்பசாத்திரம், அக்கர இலக்கணம் எனப் போற்றப்படும் ஆயகலைகளைப் போற்றிப் பரவும் இடமாகவும் திகழ்ந்துள்ளன. கலைகளை வளர்க்கும் கலைக்கூடமாகவும், மருத்துவச் சாலையாகவும், ஆவன காப்பகங்களாகவும், நீதி வழங்கும் மன்றங்களாகவும் திகழ்ந்துள்ளன. இவை மட்டுமின்றிப் பூத்தொடுத்தல் முதல் ஒப்புரவு வரை வாழ்வின் அன்றாட நிகழ்வுகளைக் கலையம்சம் பொருந்தியதொரு நிகழ்வாக மாற்றிவிடுகின்றன திருக்கோயில் நிகழ்வுகள் எனலாம்.

ஆலயங்கள் மக்களின் வாழ்க்கையில் நேர்முக பங்களிப்பாக அனுதினமும், மக்கள் வாழ்வில் அன்றாடம் கடைபிடித்தொழுகும், பழக்கவழக்கங்களும்,

சிக்கல்களுக்குத் தீர்வு காணும் திறனும் வாழ்வியற்கலைகளேயாகும். மக்களின் இவ்வாழ்வியற்கலைகளில் அன்று தொட்டு இன்று வரையிலும் திருக்கோயிலின் நிலைப்பாடு எவ்வாறு அமைந்துள்ளது என்பதனைப் பற்றி இவ்வியலில் சுட்டப்பெற்றுள்ளது.

திருக்கோயிலின் அமைப்பு மற்றும் வழிபாட்டு முறைகளிலும் கலைகள் முக்கிய இடம்பெற்றுள்ளன. இவை நுண்கலைகள் எனப்படும். இந்நுண்கலைகள் கட்டடக்கலை, சிற்பக்கலை, ஓவியக் கலை, கூத்துக்கலை, இசைக்கலை என்பனவாகும். இவற்றுள் ஆய்வெல்லை கருதி திருக்கோயில்களும் அழகுக் கலைகளும் என்ற உட்தலைப்பின் வாயிலாக கட்டடக்கலையும், சிற்பக்கலையும் பற்றியும் விளக்கப்படுகிறது. (கட்டடக்கலையில்–அதிட்டானம்–என்ற ஓர் அமைப்பு மட்டுமே ஆய்விற்கு மேற்கொள்ளப்படுகிறது)

### *5. சேதுநாட்டுத்திருக்கோயில்களின் சிறப்புகள்*

சேதுபதி மன்னர்களின் ஆட்சிக்குட்பட்ட பகுதியே சேதுநாடு, சேதுசீமை என வழங்கப்படுகிறது. இச்சேதுபதி மன்னர்கள் ஆன்மீகச் செம்மல்களாக விளங்கியுள்ளனர். சேதுநாட்டில் புராண, இதிகாச, வரலாற்று முக்கியத்துவம் பெற்ற திருக்கோயில்களும், பாடல்பெற்ற சிவத்தலங்களும், மங்களசாசனம் பெற்ற வைணவ ஆலயங்களும் நிறைந்துள்ளன. ஆய்வு எல்லையாக அமைந்துள்ள இராமநாதபுரம் இராமநாதசுவாமித் திருக்கோயில், திருஉத்தரகோசமங்கை மங்களநாதசுவாமித் திருக்கோயில், திருப்புல்லாணி ஆதி ஜெகந்நாதப்பெருமாள் திருக்கோயில் ஆகியனவும் மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகியவை பற்றியும், புராண, இதிகாச, வரலாற்று நிகழ்வுகளில் பெற்று விளக்கும் தனிப்பெறும் சிறப்புகளும் ஆய்வுக்குட்படுத்தப் பெற்றுள்ளது.

### *6. கோயில் வழிபாட்டு முறைகள் உணர்த்தும் தத்துவங்கள்*

திருக்கோயில்களின் அமைப்பும் வழிபாட்டு முறையும் ஒன்றோடொன்று தொடர்புடையவையாகும். ஒன்றிலிருந்து ஒன்றைப் பிரித்தறியமுடியாத தன்மையுடையதாகும். இத்தகைய திருக்கோயில்களின் அமைப்பும் வழிபாட்டு முறைகளும் மனிதனோடு நெருங்கிய தொடர்புடையதாகத் திகழ்கின்றன.

ஆலயங்கள் அனைத்திலும் மனிதனுடைய அறிவு, இச்சை, செயல் மூன்றுக்கும் உணர்வளிக்கும் வகையில், ஆலய அமைப்புமுறை, ஆராதனைமுறை, தரிசன முறை அமைகின்றன. மூர்த்தி, தலம், தீர்த்தம், கோபுரங்கள் அமைப்பு, ஆகியவற்றின் நோக்கமும் வழிபாட்டு முறைகளும் மனிதனைப் பக்குவப்படுத்தவும், பண்படுத்தவும் நம் முன்னோர்களால் நிர்ணயம் செய்யப்பட்டு இன்றளவும் அவை நடைமுறையில் செயல்படுத்தப்படுகின்றன. இவ்வாறு திருக்கோயில்களின் அமைப்பும் வழிபாட்டு முறைகளும் மனிதனிடத்தும், மனித வாழ்வின் செயல்பாடுகளிலும் எவ்வாறு முக்கிய இடம்பெற்றுள்ள என்பதனை இவ்வியலில் மேற்கொள்ளப்படுகிறது.

### *1.10. முடிவுரை*

ஒவ்வொரு இயலிலும் கண்டறிந்த உண்மைகளும் முடிவுகளும் அந்தந்த இயல்களின் இறுதியில் வழங்கப்பட்டு இருப்பினும் ஆய்வின் நிறைவினைக் கருத்தில் கொண்டு ஆய்வின் வழி கண்டறியப்பட்ட முடிவுகள் தொகுக்கப்பட்டு இறுதியில் நிறைவுரையாக வழங்கப்பட்டுள்ளது.

ஆய்வேட்டின் இறுதியில் ஆய்வுக்குத் துணை செய்த நூல்களின் பட்டியல் கொடுக்கப்பெற்றுள்ளன.

### *1.11 பின்னிணைப்புகள்*

1. இவ்வாய்விற்குப் பயன்பட்ட நூல்களில் பட்டியல் (அகர வரிசையில்) அடங்கிய துணைநூற்பட்டியல் முடிவுரையை அடுத்து இடம்பெற்றுள்ளது.
2. வரைபடங்களும் விளக்கமும்

   (அ) இராமநாதசுவாமித் திருக்கோயில்

   (ஆ)மங்களநாளசுவாமித் திருக்கோயில்

   (இ) ஆதி ஜெகந்நாதப்பெருமாள் திருக்கோயில்
3. திருக்கோயில் அமைப்பும்–மனித உடலும்–ஒப்பீட்டு விளக்கப்படம்.
4. அதிட்டானம்–வரைபடம்–விளக்கப்படங்கள்.
5. கோயில்கலை–கலைசொற்கள் பட்டியல் (அதிட்டானம்–அமைப்பு)
6. ஆய்வுக்குட்பட்ட திருக்கோயில்கள் பற்றிய ஆய்வுக்குட்பட்ட செயல்கள் பற்றிய பத்திரிக்கைச் செய்திகள், படங்கள்.
7. ஆய்வுக்குட்பட்ட திருக்கோயில்கள் பற்றிய, கல்வெட்டுச் செப்பேட்டுச் செய்திகளின் பிரதிகள்.
8. ஆடல்வல்லான் உருவ அமைப்புப் பற்றிய–இதழியல் செய்திகள்.
9. இவ்வாய்வேட்டில் பயன்படுத்தப்பட்டுள்ள பொன்மொழிகள்.
10. ஆய்விற்குட்பட்ட திருக்கோயில்கள் சார்ந்த, ஆய்வு சார்ந்த புகைப்படங்கள்.

# இயல் – 1

## திருக்கோயில்களின் தோற்றமும் வரலாறும்

*முன்னுரை*

மனிதனை மனிதனாக வாழச் செய்வது மனம். மனம் தெளிவடைய இன்பத்தையும், துன்பத்தையும் சமமாக என்னும் மனநிலையை மக்கள் பெற வேண்டும். இந்நிலையைப் பெறுதல் எளிதாகாது. இன்பமே எந்நாளும் துன்பமில்லை எனப் பாடிய அப்பரடிகள் போன்றோரை இந்நிலையில் வாழ்ந்து காட்டிய பெருமக்களாகக் குறிப்பிடலாம். வாழ்வின் அருமை நிலை சமய நெறியிலேதான் முழுமைபெறும் என சமயங்கள் இயம்புகின்றன.

ஆரம்ப கால மக்கள் இயற்கையைப் புரிந்து, அனுபவப்பூர்வமாக அதைச் சந்திக்க வேண்டிய சூழ்நிலையில், அவ்வியற்கையை இறைவடிவமாக நோக்கி வழிபடத் தொடங்கினர் என்பதை வரலாறு நமக்கு உணர்த்துகின்றது. இவ்வாறு இயற்கை வழிபாடாகத் தொடங்கி, நடுகல் வழிபாடு என பல்வேறு பரிணாமங்களைப் பெற்று காலப்போக்கில் திருக்கோயில்களின் தோற்றத்திற்கு அடிகோலியுள்ளன. தமிழகத்தின் பல்வேறு காலகட்டங்களிலும் தோன்றிய நாகரிகம், பண்பாடு, அரசியல், பொருளாதாரம் போன்றவற்றை உலகோர் அறியும் விதமாக, திருக்கோயில்களின் தோற்ற வரலாறு வழிச்சுவடாகத் திகழ்கின்றது என்பதை இதன் மூலம் பெற முடிகின்றது. இயற்கை வழிபாட்டில் தொடங்கி பல்வேறு வளர்ச்சி நிலைகளையும் பெற்று, திருக்கோயில்கள் என்ற நிலையான அமைப்பு உருவானது வரையிலும் இங்கு மேற்கொள்ளப்படுகிறது.

### I. *இயற்கை வழிபாடு*

பழந்தமிழர்கள் ஆரம்ப காலத்தில் இயற்கையின் கூறுகளான நிலம், நீர், காற்று, தீ, ஆகாயம் ஆகியவற்றை வழிபடத் தொடங்கினர் எனலாம். அப்பொழுது அவர்கள் மலைக்குகைகளிலும், காடுகளிலும் தங்கள் வாழ்க்கையை மேற்கொண்டனர். புதிதாக நெருப்பினைக் கண்ட மனிதன் உணவு சமைக்கவும்,

காட்டு மிருகங்களிடமிருந்தும், சுற்றுப்புறத்திலிருந்தும் தங்களைப் பாதுகாத்துக் கொள்ளவும் கற்றுக்கொண்டான். சூரியன், மழை, வெயில், நிலவு ஆகியவற்றின் தன்மைகளை மெல்ல மெல்ல உணர முற்பட்டார்கள். நாளடைவில் வேளாண்மையின் அவசியத்தைத் தெரிந்து கொண்டார்கள் என்பதையும் அறிய முடிகிறது. இதனால் சூரியனின் அளப்பறிய ஆற்றலையும் மழையின் அவசியத்தையும் கண்டுகொண்டார்கள். தங்கள் வாழ்க்கையின் பல்வேறு நிலைகளில் உதவும் இயற்கையை உற்றுநோக்க ஆரம்பித்த பொழுது அவர்கள் இயற்கையை வழிபடத் தொடங்கினர்.

> **“திங்களைப் போற்றதும்; திங்களைப் போற்றதும்**
> **கொங்கலர்தார்ச் சென்னி குளிர்வெண் குடையோன் போன்றுஇல்**
> **அங்கண் உலகளித்த லான்**
> **ஞாயிறு போற்றதும் ஞாயிறு போற்றதும்**
> **காவிரி நாடன் திகிரிபோல் பொற்கோட்டு**
> **மேரு வலந்திரித லான்**
> **மாமழை போற்றதும்; மாமழை போற்றதும்**
> **நாமநீர் வேலி உலகிற்கு அவன்அளி போல்**
> **மேனின்று தான்சுரத்த லான்(1)”**

**(சிலம்பு: மங்கள வாழ்த்துப்பாடல் 1-9)**

என்று சிலப்பதிகாரத்தில் மங்கள வாழ்த்துப் பாடலில் இயற்கையின் கூறுகளான ஞாயிறு, திங்கள், மழை, மேடு (மலை) ஆகியவற்றை வாழ்த்திப் பாடியுள்ளதால் இயற்கை வழிபாடு உறுதி செய்யப்படுகிறது.

### 1.1. *மரவழிபாடு*

தமிழர்களின் நன்றி பாராட்டும் பண்பாட்டிற்கு மரவழிபாடு சிறந்த சான்றாக உள்ளது எனலாம். ஆதிகாலத்தில் மனிதன் வனத்தின் மடியிலேயே வாழ்ந்து வளர்ந்துள்ளான். அன்றைய காலகட்டத்தில் காடுகள் செழித்திருந்தன. தெளிவான மலைகள், ஆறுகள் தவிர ஏனைய பகுதிகளில் பெரும்பாலும் வனாந்தரமாகவே இருந்துள்ளதை வரலாறு குறிப்பிடுகின்றது. அக்காலக்கட்டத்தில் மருதவனம், கடம்பவனம், புன்னைவனம், செண்பகாவனம், பத்ரிகாவனம், திருவாலங்காடு எனப்

ஊர்ப்பெயர்கள் அனைத்தும், வனத்தை அடிப்படையாகக் கொண்டே வழங்கப்பட்டுள்ளதாலும் அறிய முடிகின்றது.

"மெக்கன்சியின் ஆவணங்களிலிருந்து கொங்கு மண்டல, பாண்டிய மண்டல, தொண்டை மண்டல வரலாறுகள் என்று மூன்று நூல்களை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம் வெளியிட்டுள்ளது. இந்நூல்களில், காடுகளை அழித்துத்தான் ஊர், குளம், அமைத்துள்ளனர் என்பது தெரியவருகிறது."(2) மன்னர்கள் தங்கள் மேற்பார்வையிலேயே இப்பணிகளைச் செய்துள்ளனர் என்பதனையும் அறிய முடிகிறது. மரம் மனிதனுக்குப் பல வகைகளிலும் உதவுவதாகும். மரத்தின் வேர், தண்டு, இலை, பூ, காய், கனி, பட்டை என மரத்தின் அனைத்துப் பாகங்களும் பயன் அளிப்பவை. இத்தனை பயனளிக்கும் மரம், மனிதனால் நன்றியுடன் பார்க்கப்பட்டபோது மரவழிபாடு உருவானது எனலாம்.

"மர வழிபாடு மிகப் பழங்காலத்திலிருந்தே மேற்கொள்ளப்பட்டுள்ளது. மரத்தின் அடிப்பகுதியிலேயே 'கந்து' என்னும் இலிங்க வடிவில் இறைவனை வழிபட்டதனைத் தொல்காப்பியம், அகநானூறு, புறநானூறு, திருமுருகாற்றுப்படை, பட்டினப்பாலை போன்றவை கூறுகின்றன. கடம்ப மரத்தின் அடியிலேயே முருகனை வழிபட்டுள்ளனர் என்பதனைப் பரிபாடல், திருமுருகாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை ஆகியன குறிப்பிட்டுள்ளன"(3)

## 1.2. *மரத்தை வழிபடுதல்*

மழை, வெயில் இரண்டிலிருந்தும் தங்களுக்குப் பாதுகாப்பு அளிப்பவை மரங்களே என்பதை அறிந்து பழங்கால மக்கள் அவற்றை வழிபட்டுள்ளனர். தங்களுக்கு உயிர்மூச்சுக்காற்றையும் உணவு வழங்கியும் தங்களின் வாழ்வின் பல்வேறு நிலைகளிலும் ஒருங்கே இணைந்த, மரங்களின் மீது அன்புகாட்டத் தொடங்கி பின், இவ்மனப்பான்மையே அவர்களிடம் வழிபாடாகத் தொடங்கியதை அறியமுடிகின்றது.

**"துறையும் ஆலமும் தொல்வலி மராஅமும்**
**முறையுளி பராஅய்"** - **கலித் 101:14**

என்கிறது கலித்தொகை.

### 1.3. *மரங்களில் தெய்வம்*

நாகரிகம், பண்பாடு, சிந்தனை ஆகியவை சிறிது வளர்ந்த நிலையில், தாங்கள் நம்பிக்கையுடன் வழிபட்டு வரும் தெய்வங்கள் அம்மரங்களில் குடிகொண்டிருப்பதாகப் பழந்தமிழர்கள் நம்பத் தொடங்கினர். ஐவகை நிலங்களுக்கும் உரிய மரங்களில் தெய்வம் உறைந்து, தங்களைப் பாதுகாத்து வருவதாக மக்கள் நம்பினதையும் அறியமுடிகின்றது.

**"கடவுள் ஆலம்"**
**- புறநானூறு. பா. 199**

**"கடவுள் வாகை"**
**- பதிற்றுப்பத்து 7: 166**

**"ஆலமும் கடம்பும் நல்யாற்று நடுவும்"**
**- பரிபாடல் 4 : 67**

**"தெய்வம் சேர்ந்த பராரை வேம்பு"**
**- அகம் 309:4**

**"கடம்பு அமர் நெடுவேள் அன்ன"**
**- பெரும்பாணாற்றுப்படை-75**

**"புலவரை அறியாத கடம்பு அமர்ந்து"**
**- பரிபாடல் 19:2**

என்றெல்லாம் மரங்களோடு தொடர்புபடுத்தித் தெய்வங்கள் சங்கநூல்களில் கூறப்பட்டுள்ளதைக் காணமுடிகின்றது.

### 1.4. *கொடிநிலை, கந்தழி, வள்ளி*

**"கொடிநிலை கந்தழிவள்ளி யென்ற**
**வடுநீங்கி சிறப்பின் முதலன மூன்றும்**
**கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே"** (தொல்.பா.அ. புறத்.27)

“முறை செய்து காப்பாற்றும் மன்னனைப் புகழ்ந்து பாடும் பாடாண்திணை பற்றிய பாடல்களில் இறைவனை வாழ்த்திப் போற்றும் பகுதியில் கொடிநிலை, கந்தழி, வள்ளி இடம்பெறும் என்பதனை மேற்குறிப்பிட்ட சூத்திரத்தால் தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். கொடிநிலை மரங்களின் மீது தழைத்துச் செழித்து கானகத்துக் கொடிகள் சுற்றிப் படர்ந்து நெடிதுயர்ந்து இருக்கும் நிலையையும் இதனால் அறியமுடிகின்றது. இவ்வியற்கை நிலையைக் கொண்ட மரங்கள் தெய்வத்தன்மை கொண்டதாகக் கருதி மக்களால் வழிபடப்பட்டன”(4).

*கந்தழி*

“கானகத்துக் கொடிகள் சுற்றிய மரத்தின், வற்றி உலர்ந்து போன அடிப்பகுதி கந்தழி எனப்படுகின்றது. இம்மரத்தின் அடிப்பகுதியிலும் தெய்வம் உறைந்திருப்பதாகக் கருதி வழிபட்டுள்ளனர் என்று அறியலாகின்றது”(5)

*வள்ளி*

“வள்ளி என்பது கொடி. மரம் வற்றி உலர்ந்து கீழே சாய்ந்த நிலையில், முன்பு மரத்தைச் சுற்றி மேலே சென்ற இக்கொடியிலும் தெய்வத்தன்மை வாய்த்ததாகக் கருதி வழிபட்டுள்ளதை அறியமுடிகிறது”(6).

## 1.5. *கோயில் தொடர்பு*

“கானகத்தில் அம்மரத்தை பற்றிச் சுற்றிப் படர்ந்து மேலே சென்ற கொடி, திருக்கோயில் கொடிமரத்தில் ஏற்றப்படும் கொடியாக வடிவம் பெற்றுத் திகழலாயிற்று”(7).

“உலர்ந்த அடிமரமாய்த் தோன்றிய கந்தழியே, காலப்போக்கில், திருக்கோயில்களின் கொடிமரம் என்ற நிலையினைப் பெற்றன என்று உய்த்துரை முடிகிறது.”(8)

“வெள்ளி வள்ளி வீங்கு இறைப்பணைத்தோன்” என்று நெடுநல் வாடை (அடி 34) இதனைக் குறிக்கிறது. இதில் வள்ளி என்பதற்கு ‘வளையம்’ என்று பொருள் கூறப்படுகிறது. வளையம் என்பது வட்டவடிவமாகும். இதனையே வான்கோழ்வட்டம் என்றும் நெடுநல்வாடை (அடி 51) குறிப்பிடக் காண்கின்றோம். இதற்கு வெண்மையான வட்டக்கல் என்றும் பொருள் கண்டுள்ளனர். “வட்டம் என்பது வட்டக்கல்லைக் குறித்ததால், சங்க காலத்தில் குறிப்பிட்ட வள்ளி என்பது வட்டக்கல் எனவும், இன்றைய கோயில் நிலையில் பலிபீடத்தையும் குறிப்பிடுவதாய் அமைகின்றது எனலாம்”[9] இன்றும் கோயில்களில் கொடி, (கொடிமரம்) கந்து ஆகியவற்றின் அருகே பலிபீடம் இருக்கின்ற நிலை இதனை உறுதி செய்கின்றது.

முனிவர்கள், வீரர்கள், முருகன், பத்தினிப்பெண்டிர் ஆகியோர் கடவுளராக மதிக்கப்பட்டதைப் போன்றே சில மரங்களும் கடவுளாக மதிக்கப்பட்டுள்ள நிலையை அறியமுடிகின்றது. இனக்குழு வாழ்க்கை நிலையில் மரங்கள் தலைமை இடத்தை வகித்துள்ளன எனலாம். மரம், கடவுள் உறையும் இடங்களாகவும் வணங்கப்பட்டுள்ளன. கடவுள் தன்மை வாய்ந்தவைகளாகக் கள்ளி, ஆல், கடம்பு, வேங்கை, பனை ஆகிய மரங்களும், காந்தள், தாமரை ஆகிய மலர்களும் குறிக்கப்பட்டுள்ளன. இதனைப் பின்வரும் எடுத்துக்காட்டுகள் உறுதி செய்கின்றன.

> ***“கள்ளி நீழல் கடவுள் வாழ்த்தி”*** (10)
> ***“கடவுள் ஆலத்து தடவுச்சினை பல்பழம்”*** (11)
> ***“நெடுவீழ் இட்ட கடவுள் ஆலத்து”*** (12)
> ***“எரிமருள் வேங்கைக் கடவுள் காக்கும்”*** (13)
> ***“குறுகார் கழனியின் இதனைத்த ஆங்கண்”*** (14)
> ***“தொன்றுரை கடவுள் சேர்ந்த பராறை***
> ***“மன்றப் பெண்ணை..........*** ”.(15)

இனக்குழு மக்கள் தங்கள் அடையாளச் சின்னங்களாகிய விலங்கு, பறவை ஆகியவற்றிற்குக் கொடுத்த முதன்மையை மரங்களுக்கும் கொடுத்துள்ளனர்.

மரவழிபாடு என்பது தொல்குடி மக்களின் வாழ்வோடு கலந்ததும், உலகந் தழுவிய தொன்மைக்கால வழிபாட்டு முறைகள் அனைத்திற்கும் முந்தியதாகும் என்பதையும் மேற்கண்ட செய்திகள் உறுதி செய்கின்றன.

பௌத்த மதத்தில் அரசமரமும் (போதிமரமும்) சமண சமயத்தில் அசோகமரமும், சைவ, வைண மதங்களின் ஆலமரமும் இனக்குழுவின் அடையாளச் சின்னங்கள் என்று அடிப்படையாக ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளன. ஆலமரத்தில் இடிவிழாது என்பதும், எவ்வளவு மழை பெய்தாலும் அம்மரம் பாதுகாப்பைத்தரும் என்பதும் தமிழர்களிடையே உள்ள நம்பிக்கைகளாகும்.

"ஒவ்வொரு இனக்குழுவும் தனக்கென ஓர் அடையாள மரத்தை பெற்றிருந்ததையும், இதனைக் 'குலமரம்' என்றேக் குறித்துள்ளனர் என்பதனையும் அறிய முடிகிறது. அரசுகள் தோற்றம் பெற்று வளர்ச்சியடைந்தபோது இவை காவல் மரங்களாகவும், கோயில்கள் சமூகத்தலைமை ஏற்றபோது அவை கோயில் மரங்களாகவும் (தலவிருட்ஷம்) வணங்கப்பட்டுள்ளன. சில கோயில்கள் மரவழிபாட்டை ஒட்டியே வளர்ச்சி பெற்றுள்ளன. அரசுகளின் காவல்மரங்கள் வணங்கத்தக்க சிறப்பினைப் பெற்றநிலை மரவழிபாட்டின் தொடர்ச்சியே ஆகும். அரசர்கள் தாம் படைமேற்கொண்டு சென்ற நாட்டை அழிப்பதும், அந்நாட்டிற்குரிய காவல் மரங்களை வெட்டி, அவற்றில் வீரமுரசு செய்வதும், அம்முரசுகள் வைக்கப்பெற்ற கட்டில் கூட யாரும் நெருங்க முடியாத சிறப்பினைப் பெற்றதும் மரவழிபாட்டின் உயர்வினை நமக்கு உணர்த்துகின்றன எனக் கூறலாம்"(16).

இத்தகைய காவல் மரங்கள் அந்நாட்டு அரசனின் காவல்மரமாகவும் திகழ்ந்துள்ளதை அறியமுடிகிறது. பாண்டியர்கள் வேப்பம்பூவையும், சோழர்கள் அத்திப்பூவையும், சேரர்கள் பனம்பூவையும் சூடிக்கொண்டமையையும் குலமர வழிபாட்டினை உறுதி செய்கின்ற நிகழ்வுகளாகக் கூறலாம். இனக்குழுமக்களின் வாழ்வியலோடு தோற்றம் கொண்டு வளர்ந்த குலமர வழிபாட்டின் வெளிப்பாடே கடவுள் மரங்களின் தோற்றம், வழிபாடு என அறிய முடிகிறது. வேங்கை மரம்

பூக்கும் காலத்தைப் பெண்களின் திருமணத்திற்குரிய பருவமாக பழந்தமிழர்கள் கருதியுள்ளனர். இதனை,

> **"பூத்த வேங்கை வியன்சினைஏறி**
> **மயிலினம் அகவும் நான்**
> **நன்னுதற் கொடிச்சி மனத்தகத் தோனே "(17)**
>
> - ***யாப்பு மேற்கொள்-செற்கொடை***

என்ற பாடல் வழி அறியலாம்.

மரவழிபாடு தமிழர் வாழ்வியலோடு பிணைந்திருந்த நிலையையும் இதனால் அறியமுடிகிறது.

"கோயில் என்ற நிலை உருவாகும் முன்னர் மரத்தைத்தான் மக்கள் கும்பிட்டுள்ளனர்"[18] எனவும், மரத்தின் அடிப்பாகத்தில் மஞ்சளைத் தடவி, குங்குமம் இட்டு அம்மரத்தை வணங்கினார்கள் எனவும், இம்மர வழிபாட்டால் தலவிருட்சம் உருவானது என்றும் அறியமுடிகிறது. "தலவிருட்சம் இன்றும் உயிரோடிருந்தால் அதனைச் சுற்றிலும் மேடையமைத்து அதன்மேல் தெய்வஉருவச் சிலைகளை வைத்து வணங்குகின்றார்கள் என்பதையும் அறியமுடிகின்றது. மாத்தூரில் உள்ள மகிழமரவழிபாடு இதற்குச் சான்றாகும்"[19].

தமிழர்கள் பட்டமரத்தையும் வழிபடுவர்.

"தலவிருட்சம் உயிரோடு இல்லாதிருப்பின் பட்டுப்போன மரத்தின் தண்டுப்பகுதியை வழிபடுவர். மருதமரத்தின் அடிப்பகுதியைப் பிள்ளையார்பட்டியில் வழிபடுகின்றநிகழ்வு இதனை உறுதி செய்கின்றது. பட்டுப்போன மரமும் கிடைக்காதபோது அம்மரம் இருந்த இடத்தில் அம்மரத்தினைப் போன்ற சிற்பத்தைச் செதுக்கி வைத்து வழிபடுவதை வயிரவன் பட்டியிலும் இலுப்பைக் குடியிலும் காண முடிகிறது"[20].

சேது நாட்டுத் திருக்கோயிலான திருஉத்தரகோசமங்கையில் பத்ரி எனப்படும் இலந்தை தலவிருட்சமாக வழங்கப்படுகிறது. இம்மரம் 3300 ஆண்டுகள் பழமை

வாய்ந்தது என, அறிவியல் ஆராய்ச்சி மூலம் நிறுவிக்கப்பட்டுள்ளது. இம்மரத்தின் அடியில் உள்ள சகஸ்தர லிங்கமே முதலில் இத்தலத்தில் வழிபடப்பெற்றுள்ளது. அக்காலத்தில் மலையிலும், நீரிலும், மரங்களிலும் கடவுள் உறைவதாக மக்கள் நம்பினர். தெய்வம் உறைந்த ஓர் ஆலமரம் கடவுள் ஆலம் என வழங்கப்பட்டதாகப் புறநானூறு காட்டுகின்றது. இவ்வாறு எப்பொருளிலும் கடவுளைக் காணுமியல்பு பழந்தமிழ் மக்களிடம் இருந்துள்ளதை,

> **"நின் வெம்மையும் விளக்கமும் ஞாயிற்றுள**
> **நின் தன்மையும் சாயலும் திங்கள் உள**
> **நின் சுரத்தலும் வன்மையு மாரியுள**
> **நின் புரத்தலும் நோன்மையும் ஞாலத்துள"**

என்ற பரிபாடல்கள் சுட்டிக்காட்டுகின்றன[21].

## 1.II *வானியல் துறையில் இயற்கை வழிபாடு*

"இயற்கை வழிபாட்டில் பழந்தமிழர்கள் சூரிய, சந்திர, போக்கையும், பஞ்ச பூதங்களில் ஒன்றான ஆகாயத்தையும் வழிபாட்டோடு தொடர்புப்படுத்தித் தங்கள் வாழ்வின் மேம்பாட்டிற்குப் பயன்படுத்தியுள்ளனர் எனலாம். இன்றைய மனித இனம் கண்டு போற்றும் வானியல் துறையை இறைவழிபாடாகத் தொடங்கியவர்கள் பழந்தமிழர்கள். சியேட்டர் என்பவர் "தமிழருடைய வானநூற் கணிதமுறையே, வழக்கிலுள்ள எல்லாக் கணிதங்களிலும் நிதானமானது" என்று கூறுகிறார்"[22].

தமிழகத்தில் ஆரியர்கள் வருகைக்கு முன்னரே, தமிழர் வானியலில் பேரளவு ஞானம் பெற்றிருந்தனர். தமிழகத்துப் பரதவர்கள் திங்களின் நிலையைக் கொண்டு சந்திரமானக் காலத்தைக் கணித்தனர். உழவர்கள் சூரியன், திங்கள் இவற்றின் இயக்கத்தையும் பருவகாலங்களைப் பற்றியும் அறிந்திருந்தனர். "தமிழர்க்குரிய சமய விழாக்களின் காலம் சூரியமான முறைக்கும், சந்திரமான முறைக்கும் இடையே ஏற்படும் கால வேறுபாட்டை ஒட்டியதும் வேறுபட்டதுமாகும். இது சந்திரமானக் காலக் கணிப்பினடிப்படையில் கொண்டாடப்படும் பிற ஆரியச் சார்புள்ள இந்துப்

பண்டிகைகளிடமிருந்து பெரிதும் வேறுபடும் எனப் பேராசிரியர் கே.கே. பிள்ளை தம் நூலில் குறிப்பிட்டுள்ளதை இங்குக் கூறலாம்”.(23)

### *1.2.1 கணியர்*

தமிழ்நாட்டில் வானியலிலும், அதனடிப்படையிலெழுந்த சோதிடத்திலும் வல்ல அறிஞர்கள், கணியன் என அழைக்கப்பட்டுள்ளனர். கணியன் பூங்குன்றனார், பக்குருக்கை நன்கணியனார், கணிமேதாவியார் என வழங்கப்பட்டுள்ள பெயர்களை இதற்குச் சான்றாகக் கூறலாம். அரசனுடைய அவையில் பெருங்கணிகன் இருந்ததைச் சிலப்பதிகாரத்தின் வாயிலாக அறிய முடிகின்றது. நாழிகை வட்டில் கொண்டு காலத்தைக் கணிப்போர் நாழிகைக் கணக்கர் என கூறுப்படுகின்றார். மூவகைக் காலமும், நெறினாற்றும் அறிவர்களைத் தொல்காப்பியரும் குறிப்பிட்டுள்ளதைச் சான்றாகக் கூறலாம். இதனடிப்படையிலேயே திருக்கோயில்களில் ஆறுகால பூசை முறையும், நட்சத்திரத்தின் போக்கும், திதியின் பலன் அறிந்து வழிபாட்டு முறைகளும் உருவாக்கப்பட்டுள்ளன என்பதனை அறிய முடிகிறது.

“பண்டையத் தமிழர்கள் ஓர் ஆண்டினை ஆறு பெரும் பொழுதுகளாகப் பகுத்தனர். அவை கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்பனவாகும். நச்சினார்க்கினியர் கருத்துப்படி ஆவணியில் ஆண்டு தொடங்கி, ஆடியில் முடிந்துள்ளதை அறிய முடிகிறது. யானைமுகக் கடவுளை முழுமுதற்கடவுளாக வழிபடும் மரபும் பண்டைய சங்ககாலந் தொட்டே இருந்துவருகிறது எனலாம். இக்கடவுளைப் போற்றி வழிபடும் விநாயகர் சதுர்த்தி விழா ஆவணியில் இன்றும் கொண்டாடப்படுவது இவண் ஒப்புநோக்கத் தக்கதாகும். தொடர்ந்தாற் போல் தமிழர்களின் அனைத்துப் பண்டிகைகளும் ஒன்றன்பின் ஒன்றாக மாதந்தோறும் கொண்டாடப்பட்டுள்ளது. கடைசி இரண்டு மாதங்களான ஆனியும் ஆடியும் கழிவுமாதங்களாகக் கருதப்பட்டு, எவ்வித மங்கலமான நிகழ்ச்சிகளும் இம்மாதத்தில் நடைபெறவில்லை எனவும் அறிய முடிகிறது.

இப்பழக்கம் இன்றளவும் ஓரளவு நடைமுறையில் உள்ளதை அறியலாம். காலத்தின் வெள்ளோட்டத்தில் சில மாறுதல்கள் ஏற்பட்டிருந்தாலும் மேற்குறிப்பிட்டுள்ள காலவரையரையே முதன்மையானது. காலவுரிமையெய்திய ஞாயிற்றுக்குரிய சிங்கவோரை முதலாகத், தண்மதிக்குரிய கற்கடகவோரையிராக முடிவுறுவது ஓராண்டெனில், அதனை இம்முறையில் அறுவகைப்படுத்தி, இரண்டு திங்கள் ஒரு பருவமாக்கினார் என்று தம் பொருளதிகார உரையில் கூறியுள்ளார் தொல்காப்பியர். சிங்கவோரையாகிய ஆவணி, முதலாகக் கொண்டு கணக்கிடும் முறை கி.மு. 500க்கு முற்பட்டது என்றும், சித்திரை முதலாகக் கொண்டு கணக்கிடுவது 2500 ஆண்டுகளாக இருந்து வருகிறது என்றும் கா.சுப்பிரமணியபிள்ளை குறிப்பிட்டுள்ளார்". [24]

"தாமே ஒளிவிடக் கூடியன நாண்மீன்கள் என்றும், ஞாயிற்றிடமிருந்து கடன் பெற்று ஒளிர்வன கோன்மீன்கள் என்றும் பெயர் பெற்றுள்ளன. ஞாயிற்றின் ஒளியைக் கொண்டு ஒளிர்வன திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி என்பனவாகும். இராகுவும், கேதுவும் இராக்கோள்கள் அல்லது நிழற்கோள்கள் எனக் கூறப்படுகின்றன. ஞாயிறு நாண்மீன் எனினும் அதனைக் கோள்மீன்களோடு சேர்த்துள்ளனர். மண்ணும் ஒரு கோள் ஆதலாலும், அது ஞாயிற்றைச் சுற்றி வருதலாலும் அதன் சுழற்சியைக் கணக்கிட அதற்கு நேர் எதிரியிருக்கும் ஞாயிற்றின் போக்குக் கணக்கிடப்படுகிறது. ஆகையால் திங்களாகிய கோள்மீன் ஒவ்வொரு நாளும் நிற்கும் நிலையே நாண்மீன். அது ஞாயிற்றோடு சேர்வதும், பிரிந்து எதிர்ப்பக்கம் சேர்வதும் நிகழ்கையில் அதன் ஒளி நாளுக்கு நாள் வளர்ந்து முழுவட்டமாகும்."[25],

> **"மாக விசும்பின் வெண்டிங்கள்**
> **மூவைந்தான் முறை முற்ற"**
>
> **(புறம் 400)**

என்ற புறநானூற்றுப் பாடல் சுட்டுகின்றது.

வளர்கையில் பதினைந்து நிலைகளையடைவது போலவே, தேய்கையிலும் பதினைந்து நிலையடைகிறது. எட்டாம் நாள் பிறை நிலவு என்பதனை அறிய முடிகிறது.

**"எண்ணாட்டிங்கள்" (புறம் 118)**

பொருந்திய முழுப்பக்கமும் தெரியும் என்று குறிக்கப்பட்டுள்ளது. ஒளி மதி "உவாமதியாகும்" மன்னனின் வெண்கொற்றக்குடைக்கு இம்மதி உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

**"உலவுமதி உருவின் ஓங்கல் வெண்குடை" (புறம் 3:1)**

முழுமதிநாளில் சூரியனும் திங்களும் எதிரெதிராக நிற்கும். திங்கள் தோன்றும் பொழுது கதிர் மறையும், என்பதனை,

**"உவவுத்தலை வந்த பெருநாள் அமைத்து**
**இருசுடர் தம்முள் நோக்கி யொருசுடர்**
**புன்கண் மாலைமறைந் தாங்கு" (புறம் 65)**

என்றப் புறநானூற்றுப் பாடலால் அறியமுடிகிறது.

உறையூர் முதுகண்ணன் சாத்தனார் என்னும் புலவர் சோழநாட்டின் அறிவு வளத்தினைப் பாராட்டியுள்ள இடத்தில், செஞ்ஞாயிறு செல்லுகின்ற வழியினையும் அந்த ஞாயிற்றினது இயக்கம், அவ்வியக்கத்தால் சூழப்படும் பார்வட்டம், காற்று இயங்கும் திசை, காற்றினுள் வெற்றிடமாக உள்ள ஆகாயம் ஆகியன பற்றி அறிவியல் தன்மையோடு எடுத்துக்காட்டியிருக்கிறார். இத்துணை அளவுடையன என்று சொல்லும் அறிஞர்கள் அந்நாளிலேயே இருந்துள்ளனர் என்பதனை,

**"செஞ்ஞாயிற்று செலவும் அஞ்ஞாயிற்றுப்**
**பரிப்பும் பரிப்புச்சூழ்ந்த மண்டிலரும்**
**வளிதிரிதரு திசையும்**
**வறிது நிலைகிய காயமும் என்றிவை**
**சென்றளன் தறிந்தோர்போல வென்றும்**
**இணைத்தென் பாரும் உளரே" - புறம் 30**

என்ற பாடலில் குறிப்பிட்டுள்ளதால் ஞாயிற்றுக்கு மற்றவற்றை ஈர்க்கும் ஆற்றல் உண்டென்றும், வானில் காற்றில்லாத வெற்றிடம் உண்டென்றும் தமிழர்கள் அன்றே அறிந்துள்ளனர் என்பதை அறிய முடிகிறது.

**"விரிகதிர் மதியமொரு வியல்விசும்பு புணர்ப்ப**
**எரிசடை எழில்வேழம் தலையனக் கீழிருந்து**
**தெருவிடை படுத்தமுன் றொன்பதிற் றிருக்கையுள்**
**உருலகழு வெற்றிவந் தேற்றியல் சேர**
**வருடையைப் படிமகன் வாய்ப்பப் பொருடெரி**
**புந்தி மிதுனம் பொருந்தப் புலர்விடியல்**
**அங்கி உயர்நிற்ப அந்தணன் பங்குவின்**
**இல்லத் துணைக்கப்பால் எய்த இறைமகன்**
**வில்லியற் கடைபுறம் மேவப் பாம்பொல்லை**
**மதியமறைய வருநாளில் வாய்ந்த**
**பொதியின் முனிவன் புரைவரைக் கீறிக்**
**மிதுன மடைய விரிகதிர் வேனில்**
**எதிர்வரவு மாரி இயைகெனகிவ் வாற்றல்**
**புரைகெழு சையம் பொழிமழை தாழ**
**நெருதருஉம் வையைப் புனல்" (பரிபாடல் 11:1-15)**

இப்பாடல் பண்டைத் தமிழர்களின் வானியல் அறிவுக்கு மகுடம் சூட்டப் போதுமான சான்றாக விளங்குகிறது. முறுக்கார் காலத்திலே மழை, வெள்ளம் என்ற இந்த இயற்கை அடைப்பாலே உயர்ந்த பொதிய மலைக்கண் மழைபொழிய வையைபாலே வெள்ளம் வந்தது என்பது இப்பாடல் உணர்த்தும் முக்கியக் கருத்தாகும். பழந்தமிழர்கள் நாள், கோள் ஆகியவற்றின் தன்மை இன்னென்ன என்பதை அறுதியிட்டு அறிந்துள்ளனர். எனவேதான் குறிப்பிட்ட திங்கள்களில் வரும் அமாவாசை, பௌர்ணமி தினங்களை இறைவழிபாடோடு பொருத்தி வாழ்வியலில் நடைமுறைப்படுத்தியுள்ளனர் என்பதனை அறிய முடிகின்றது. ஆடி அமாவாசை, தை அமாவாசை, சித்ரா பௌர்ணமி, மார்கழிப் பௌர்ணமி, புரட்டாசி சனிக்கிழமைகள், ஆவணி ஞாயிற்றுக் கிழமைகள் போன்ற தினங்களில் உபண்யாசம் மேற்கொள்ளுதல், முக்கியத் தலங்களில் கடல்நீராடுதல், தீர்த்தமாடுதல், பித்ருக்களுக்குத் தர்ப்பணம் அளித்தல் போன்றவற்றைக் கடைபிடித்துள்ளதை முன்னோர்களின் வரலாற்றால் நாம் அறியலாம்.

பழந்தமிழர்கள் வாழ்க்கையில் வளம் பெறவும் நாகரிக முன்னேற்றமடையவும் முனைந்த பொழுது, தங்களுக்கு முதலில் இடையூறுகளாக இருந்த பெருமழை, சூறாவளி, புயல்காற்று, கடும் வெப்பம், குடுங்குளிர், அனைத்துப் பொருட்களையும் நொடியில் சாம்பலாக்கும் பெருந்தீ (காட்டுத்தீ) ஆகியவற்றின் தாக்குதலிலிருந்து தங்களைக் காத்துக் கொள்ள முற்பட்டதோடு இவற்றைத் தங்களின் வளர்ச்சிக்கும் பயன்படுத்திக் கொள்ள பழகினர் என்பதனை அவர்கள் வாழ்க்கை வரலாற்று முறைகளால் அறிய முடிகின்றது. கற்கருவிகள் மரக்கருவிகளை உருவாக்கிய மனிதன் அவற்றைத் தங்கள் படைக்கலன்களாகவும் பயன்படுத்தத் தொடங்கினான் எனலாம். தங்களுக்கு இடையூறாக இருந்த இயற்கையை, இறைவழிபாடாகத் தொடங்கி, பஞ்சபூதங்கள் என அவற்றிற்குப் பெயரிட்டழைத்தார்கள் என்று கூறலாம். இவ்வாறு இயற்கை வழிபாடு முதன் முதலில் பழந்தமிழர்களிடம் ஆதிக்கம் பெற்றது.

**II.** ***நடுகற்கள்***

நாகரிக வளர்ச்சி பெற்ற நிலையில் பழந்தமிழர்கள் தங்கள் உடைமைக்கும், உணவுக்கும், உணர்வுக்கும் பாதுகாப்புக் கருதி தங்களில் ஒருவரைத் தலைவராக்கினர். இத்தலைவர்கள் தங்களுக்காகவும், தங்கள் சமுதாயத்திற்காகவும் போரிட்டு உயிர் துரக்க நேர்ந்த பொழுது நினைவு கூறும் வகையிலும், அவர்களுக்கு நன்றி கூறும் வகையிலும் ஊர் எல்லையில் நடுகல் அமைத்தனர். இறந்தவர்களையே தெய்வமாக வழிபட்டு அவர்களைத் தங்கள் வாழ்வின் வழிகாட்டியாக ஏற்றுக்கொண்டனர் என்பதனையும் நடுகற்கள் வழிபாட்டின் வரலாறு வாயிலாக அறியமுடிகின்றது.

போரில் இறந்துவிட்ட வீரர்கட்குக் கல்நட்டு அவர்களைக் கடவுளாக வழிபட்ட மரபினை இலக்கியத்தின் வாயிலாக அறியலாம்.

***"காட்சி கால்கோல் நீர்ப்படை - நடுகல்***
***சீர்த்த மரபில் பெரும்படை வாழ்த்தலென்று***
***இருமூன்று வகையிற் கல்லொடு புணரச்***
***சொல்லப்பட்ட ஒரு மூன்று துணைத்தே"(26)***

போர்க்களத்தில் பிறர் பாராட்டும்படி போர் செய்து மார்பில் புண்பட்டு இறந்தவர்க்கும், வடக்கிருந்து மாண்டவருக்கும், கற்பில் சிறந்த பெண் மாய்ந்த பின்னரும் நடுகல் நாட்டுவது வழக்கமாகயிருந்துள்ளதையும் அறிய முடிகின்றது. பட்டினப்பாலை (வரி– 78–79) மலைபடுகடாம் (394–396) அகநானூறு (735), (பொருள் 63) முதலிய சங்கநூல்கள் நடுகல் வணக்கத்தைக் குறிப்பிடுகின்றன.

> ***"களத்திடை வீழ்ந்தோர்க்கு கற்கண் பிடுசெலுங்***
> ***கண்கோ வீழ்ந்தோர்க்கு பகுதியில்***
> ***கன்னாட் டுதனுங் கண்முறை பழிச்சுறும்***
> ***பொன்னா நற்கொரு புதுதலும் ஆகும்"*** (27)

"ஆவினங்களும், கால்நடைகளுமே பண்டைக் காலத்தில் தலையாயச் செல்வமாகக் கருதப்பட்டன எனலாம். பகைவரிடமிருந்து இவைகளைக் காக்கும் பொருட்டு, முயற்சியிலீடுபட்டு உயிர்நீத்த கரந்தை வீரர்கட்கே பெரும்பான்மையான நடுகற்கள் நடப்பட்டன என்பதனை அறியமுடிகிறது என்பர்".[28]

இந்த நடுகற்களில் வீரனுடைய பெயரும் அவனுடைய பெருமையும் எழுதப்பட்டன என்பதனை,

> ***"நல்லமர்க் கடந்த நாணுடை மறவர்***
> ***பெயரும் மீடும் எழுதி அதர்தொறும்***
> ***பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்"*** (அகம். 67)

என்னும் சான்றாலும் பல்வேறு குறிப்புகளாலும் அறியமுடிகிறது. இக்கற்கள் பலவாக நடப்பட்ட இடத்தில் வேலை ஊன்றி அதிலே கிடுகுப்படையை வைத்துப் படப்புலம் போலத் தோன்றும் என்றும் கூறியுள்ளனர். (அகம் 67:131) இந்நடுகற்கள் வரிசை வரிசையாக அமைந்திருந்தன என்பதை

> ***"நல்லிசை நிறுத்த நாணுடை மறவர்***
> ***நிரைநிலை நடுகல்"*** (அகம். 387)

என்றும், இந்நடுகற்களுக்கு மாலைகளும் மயிற்பீலிகளும் சூட்டப்பட்டுள்ளன எனவும் மேலும் கல்லை நட்டு அந்த இடத்தில் துணிப்பந்தலையிட்டனர் என்பதனையும் புறநானூறு குறிப்பிடுவதன் மூலம் அறிய முடிகின்றது.

"உயிரிசை வெறுப்புத் தோன்றிய பெயரே
மடஞ்சால் மஞ்சை அணியார் சூட்டி
இடம்பிறர் கொள்ளாச் சிறுவழிப்
படஞ்சால் பந்தர்க் கண்மிசை யதுவே" (புறம். 260)

வேங்கைப்பூவும், பனந்தோழும், கரந்தைப்பூவும் தொடுத்துச் சூடுவது மரபாக இருந்துள்ளதையும் அறிய முடிகின்றது..

"நாகுமலை பின்ன நறும்பூங் கரந்தை
விரகறி யாளர் மரபிற் சூட்ட" (புறம். 261)

## II.1. *நடுகல் வழிபாட்டு முறைகள்*

"பரலுடைய மருங்கிற் பதுக்கை சேர்த்தி
மரல் வகுத்துத் தொடுத்த செம்பூங் கன்னியொரு
அணிமயிற் பீலி சூட்டில் பெயர்பொறித்து
இனிநட் டனரே கல்லும்" (புறம் 264)

"ஊர்நனி யிறந்த பார்முதர் பறந்தலை
ஓங்கு நிலை வேங்கை ஏற்றினர் நறுவீப்
போந்தையந் தோட்டிற் புனைந்தனர் தொடுத்துப்
பல்லான் கோவலன் படையை சூட்ட" (புறம். 265)

இப்பாடல்கள் யாவும் கல்நட்ட முறையினைக் கூறுகின்றன. இந்நடுகற்களுக்குப் பீலிசூட்டி, ஆடுகள் வெட்டி, கள்ளைப் படைத்து வணங்கியதை அம்மூவனார்

"வில்லேர் வாழ்க்கை விழுத்தொடை மறவர்
வல்லான் பதுக்கைக் கடவுட் பேண்மார்
நடுகன் பீலி சூட்டித் துடிப்படுத்துத்
தோப்பிக் கள்ளொடு துரூஉப்பலி கொடுக்கும்
போக்கருங் கவலைய.............!" (அகம். 35)

என்று குறிப்பிட்டுள்ளார்.

"ஒன்னாத் தெவ்வ ருலைவிடத் தார்த்தெள
நல்வழிக் கொடுத்த நாணுடை மறவர்
செல்லா நல்லிசைப் பெயரொடு நட்ட
கல்லேசு கவலை எண்ணுமிகப் பலவே"
(மலை. 386-89)

***"செல்லுந் தேஎத்துப் பெயர்மருங் கறிமார்***
***கல்லெறிந் தெழுதிய நல்லரை மராஅத்த***
***கடவு ரோங்கிய காடேசு கவலை"*** **(மலை-394-96)**

இந்த நடுகற்கட்கு நாள் வழிபாடு செய்து வணங்கியுள்ளனர் என்பதனையும் அறிகின்றோம்.

***"சிலயே, நட்ட கனைவிழ் வம்பலர்***
***உயர்பதுக் கிவர்ந்த கதர்கொடி அதிரல்***
***நெடுநிலை நடுகல் நாட்பலிசூட்டும் அரண்"*** **(அகம். 289)**

கள் உகுத்துப் பரவுதல் வழக்கமாயிருந்துள்ளதற்கு அதியமான் இறந்த போது ஔவையார்,

***"இல்லா கியரோ காலை மாலை***
***அல்லா கியர்-யான் வாழும் நாளே***
***நடுகல் பீலி சூட்டி நாரரி***
***சிவகாத் துகுப்பும் கொள்வன் கொல்லே"*** **(புறம் 232)**

என வருந்திப் பாடியுள்ளதைச் சான்றாகக் கூறலாம்.

மற்றுமொரு வகையான இயற்கை நடுகல் பற்றிச் சங்க இலக்கியத்தில் ஒரு சான்று கிடைத்துள்ளது. பெண்யானை படுத்தாலொத்த குன்றின் பக்கத்திலேயே பல வீரர்களின் பெயர்கள் பொறிக்கப்பட்டிருந்தன என்றும், அப்பெயர்கள் அகன்ற இடத்தில் செதுக்கப்பட்டிருந்தன எனவும், அக்கல்லை வீரர்கள் மஞ்சள் நீரிட்டுக்கழுவி கரந்தைப் பூவைச் சூட்டி வணங்கினர் எனவும் செய்திகளை அறியமுடிகிறது. இதனை,

***"பிடிமடிந் தன்ன குறும்பொறை மருங்கில்***
***நட்டபோறும் நடாசு நெடுங்கல்***
***அகலிடம் குயின்றபல்பெயர் மண்ணி***
***நறுவிரை மஞ்சள் ஈர்ப்புறம் பொலிய***
***வம்புகொண் டறுத்த வார்நார் உரிவையிற்***
***செம்பூங் கரந்தை புனைந்த கண்ணி***
***வரிவண் டார்ப்பச் சூட்டிக் கழற்கால்***
***இளையர் பதிப்பெயரும் அருஞ்சுரம்!"*** **(அகம். 269)**

என்று அகநானூறு பாட்டு சுட்டியுள்ளதால் உறுதி செய்யலாம்.'ஒரு தலைவி தனக்கு நல்ல விருந்தினரும் தன் கணவனுக்கு நல்ல பகையும் (போர்) வேண்டி நடுகல்லைத் கைதொழுது வணங்கியுள்ளாள்.' (புறம் 306) என்றும், 'வழிச்செல்லுவோர் ஆங்காங்கு அமைந்திருந்த நடுகற்களை வணங்கிச் செல்வது மரபு' (புறம் 263) எனவும் சங்க நூல்கள் சுட்டியுள்ளதால் நடுகல் வழிபட்ட முறையை நன்கு அறியப்படுகிறது.

### II.1. *(அ) நடுகல்லும் வீரவழிபாடும்*

வீர வணக்கம் பண்டைய இனக்குழுச் சமுதாயத்தின் பெருவழக்குடைய முனைப்பான வழிபாட்டு முறையாய் இருந்ததை அறியமுடிகிறது. நடுகற்களுக்குரிய வீரர்கள் பெரும்பாலும் ஆநிரைகளை மீட்கும் போரில் தனது குழுவிற்கு வெற்றியைத் தந்து மாய்ந்த வீரர்களாகவே உள்ளனர். கால்நடைப் பொருளாதாரத்தை அடிப்படையாகக் கொண்டு வாழ்ந்த சமுதாயத்தில் நடந்த கரந்தைப் போர். அச்சமுதாய உடைமை பேணும் பொதுப் போரேயாகும் என்பதனையும் இதனால் அறிகின்றோம். இதில் இறந்துபட்ட அனைவருமே அச்சமுதாயத்தினரால் மதிக்கப்பெற்றுள்ளனர் என்றும், உடைமை காத்த கரந்தை வீரரை இறப்புக்குப்பின்னரும், நடுகல்லாய்த் தம்மோடு வாழ்பவராகக் கருதினர் என்றும். அதனால் நடுகல் வழிபாடு பெருவழக்காய் இருந்துள்ளது எனவும், அறியமுடிகின்றது. தவிர, தாம் வணங்கும் கடவுள் பற்றிப் புறநானூற்றுப் பாடல் ஒன்று அமைந்துள்ளதையும் குறிப்பிடத்தக்கச் சான்றாகக் கூறலாம்.

> **"ஒன்னாத் தெவ்வர் முன்னின்று விளங்கி**
> **ஒளிறேரந்து மருப்பிற் களிறுஎறிந்து வீழ்ந்தெனக்**
> **கல்வே பரவின் அல்லது**
> **நெல்லுகுத்துப் பரவுங் கடவுளும் இலவே"** **(புறம் 335)**

மேலும்,

> **"நிரம்பா நோக்கின் நிரயம் கொண்டார்**
> **நெல்லி நீளிடை எல்லி மண்டி**
> **பெயரும் மிடும் எருதி அதர்தொறும்**
> **பீலிசூட்டிய பிறங்குநிலை நடுகல்**

வேறூன்று பலகை வேற்றுமுனை கருக்கும்

உவலிடு பதுக்கை ஆறகு பாரந்தனால்" (அகம். 63: 6-15)

"வீறையம்பின் விழுந்தொடை மறவர்

நாளா வய்த்து நாம் வெஞ்சுரத்து

நடைமெலிந் தொலிந்த சேட்படர் கன்றின்

கடைமணி யுகுநீர் துடைத்த ஆடவர்

பெயரும் பீடும் எழுதி அதர்தொறும்

பீலிசூட்டிய மிறங்குநிலை நடுகல்

வேறூன்று பலகை வேற்றுமுனை கருக்கும்

வெருவரு தகுந கானம்" (அகம். 131:6-13)

என வரும் அகநானூற்றுப்பாடல்கள் வேந்தர் சமுதாயத் தாக்கம் ஏதும் இல்லாத இனக்குழுச் சமுதாயத்தில் கால்நடைகளைக் கவர்வதால் ஏற்படும் போரே நடுகல்லுக்குக் காரணமாய் இருந்துள்ளதைக் காட்டுகின்றன. நடுகற்கள் தலைவன் செல்லும் வழியில் பழைய கால்நடைப் பொருளாதாரச் சமுதாய எச்சங்களாய் நிலவியதையும் இப்பாடல்கள் சுட்டியுள்ளதன் மூலம் அறியமுடிகின்றது.

"ஒன்னாத் தெவ்வர் முன்னின்று விலங்கி

ஒளிறேந்து மருப்பிற் களிறெறிந்து வீழ்ந்தெனக்

கல்வே பரவினல்லது" (புறம் 335 : 9-11)

எனும் பாடல் களிற்றுப் போரில் ஈடுபட்டவர்க்கும் நடுகல் நடப்பட்டதைக் குறிப்பிடுகிறது. இவ்வாறே,

"பல்லான் கோவலர் படையை சூட்டக்

கல்லாயினயே கருமான் றோன்றல்

வானேறு புரையிநின் றாணிழல் வாழ்க்கைப்

பரிசிலர் செல்வ மன்றிறம் விரிதார்க்

கடும்பகட் டியானை வேந்தர்

ஒழுங்கா வென்றியு நின்னொடு செலவே" (புறம் 265: 4-9)

எனும் பாடல் வேந்துவிடு தொழிலுக்கு ஆட்பட்டவருக்கு நடுகல் நடப்பட்டதைக் காட்டுகிறது.

புன்செய்நிலம் உணவுப் பொருட்களையும் நடுகல் வழிபாட்டையும் மட்டுமே உடையதாய் இருந்த நிலையைப் புறநானூற்றின் பாடல் அடிகள் இயம்பியுள்ளதன் மூலம் அறியமுடிகின்றது. இதனை,

**"அடலருந்துப்பின்.................**
**குரவே தலிவே குருந்தே முல்லையென்**
**றிருந்தாள் கல்லது பூவுமில்லை**
**கருங்கால் வரகேயிருங் கதிர்த்திணையே**
**சிறுகொடிக் கொள்ளே பொறிகளை ரவரையோ**
**டிந்நான் கல்ல துணாவுமில்லை**
**துடியன் பாணன் பறையன் கடம்பனென்**
**றருந்தான் கல்லது குடியு மில்லை**
**ஒன்னாத் தெவ்வர் முன்னின்று விலங்கி**
**ஒளிறேந்து மருப்பிற் களிறெறிந்து வீழ்ந்தெனக்**
**கல்லே பரவி னல்லது**
**நெல்லுக் குத்துப் பரவுங் கடவுளு-மிலவே"** **(புறம்: 335)**

எனும் பாடல் நமக்குக் காட்டுகிறது.

நடுகற்கள் ஊருக்குப்புறத்தே தொலைவில் இருந்த திடல்களில் நடப்பட்டன. ஓங்கி வளர்ந்த வேங்கையின் மலர்களை வெள்ளிய பனந்தோட்டோடு விரவித்தொடுத்து மாலையாகச் சூட்டுவர். நடுகற்கள் அமைந்த இடத்தைச் சுற்றி அவ்வீரனுக்குரிய வேலைநட்டுக் கேடயங்களையும் நிறுத்தி வைத்தனர் என்பதனையும் சங்க இலக்கியங்கள் வாயிலாக அறிய முடிகின்றது,

**"கிடுகுநிரைத்து எப்ப கூன்றி**
**நடு கல்லின் அரண்போல" (பட்.பாலை. 78.79)**

என்ற குறிப்பாலும்,

**"பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்**
**வேறுரன்று பலகை வேற்றுமுனை கருக்கும்"(அகம். 131)**

என்ற பாடல்களாலும் அறியப்படுகிறது. 'இக்கற்களுக்கு வேங்கை மலரை மட்டுமின்றிச் செம்மையான கரந்தை மலரையும் சூட்டியுள்ளனர்'. **(அகம் 269)** இத்தகைய கற்கள் வரிசை வரிசையாகவும் மிகப்பலவாகவும் சில இடங்களில் காணப்பட்டதை, அகநானூறு சுட்டியுள்ளது.

"வில்லீண்டு அருஞ்சமம் ததையநூறி
நல்லிசை நிறுத்த நானுடை மறவர்
நிரை நிலை நடுகல்" (அகம் 389)

## II.1. *(ஆ) நடுகல் தெய்வ வழிபாடு*

இந்நடுகற்களைத் தெய்வமாகவே வழிபட்டு, நாள் வழிபாடு செய்தல் பலியிடுதல் ஆகியன அன்றைய மரபாயிருந்துள்ளது. இதனைப் பெயர் மருங்கறியார்,

"கல்லெறிந்து எழுதிய
நல்லரை மரா அத்தகடவுள்" - மலை.ப.கடா. 394-95

என்று கூறியுள்ளார்.

"நடுகல் தெய்வ வழிபாடு தோன்றிய நிலையில், அந்நடுகல் வீரர்களின் ஆன்மாக்களுக்கு ஊரையும், மந்தையையும் பாதுகாக்க கூடிய ஆற்றல் உண்டென்ற நம்பிக்கையால்தான் அவர்களுடைய நடுகற்களுக்குப் 'பெரும்படை' செய்து உணவும், கள்ளும் படைத்து, ஆடிப்பாடி வாழ்த்தி மகிழ்விக்க முயன்றனர் என்பதனையும் அறிகின்றோம். இறந்தவனது ஆன்மாவைக் கல்லில் நிலையாக இருக்கச் செய்வதற்காகத்தான் பொருத்தமான கல்லை ஸ்தாபித்து வழிபாடு செய்தனர் என்று இந்த நடுகல் தெய்வ வழிபாட்டின் வளர்ச்சி நிலையை நா. வானமாமலை கூறுகின்றார்கள்" (29)

நாடுகற் பீலி சூட்டி நாரரி
*சிறுகலத் துருப்பவுங் கொள்வன் கொல்லோ* (புறம் 232)

"நடுகல்லிற்கு உயிர்ப்பலி கொடுப்பதைத் தொல்காப்பியர் பெரும்படை என்கின்றார். தொல்காப்பியரைப் போலவே புறப்பொருள் வெண்பாமாலை ஆசிரியரும் நடுகல்லின் அறுவகை நிலைகளையும் விளக்கியுள்ளதைக் காண முடிகின்றது. கற்காண்டல், கற்கோள் நிலை, கல்நீர்ப்படுத்தல், கல்நடுதல், கல்முறை பழிச்சல், இற்கொண்டு புகுதல் என்பன புறப்பொருள் வெண்பாவில் வரும் துறைகள்"(30) இங்கு ஒப்புநோக்கத்தக்கன.

## II.1. *(இ) இற்கொண்டு புகுதல்*

"மேலே காட்டிய அறுவகை நிலைகளில் இற்கொண்டு புகுதல் என்பதற்கு, வீரனுக்கு எடுக்கப்பட்ட நடுகல்லிற்குக் கோயில் எடுத்தல் என விளக்கம் தருகின்றார் அய்யனாரிதனார். கோட்டம்–கோயில், படை–படைத்தல் என்பது அவர் தரும் விளக்கமாகும்"[31]

> **"வேத்தமருள் விளிந்தோன் கல்லென**
> **ஏத்தினர் துவன்றி இற்கொண்டு புகுதல்"**
>
> **(புற.வெண். மா-நூற்பா-13)**

இற்கொண்டு புகுதலைத் தொல்காப்பியர் கூறும் 'பெரும்படை' என்று இளம்பூரணரும் குறிப்பிட்டுள்ளார். நட்டகல்லிற்குக் கோட்டஞ்செய்தல், இற்கொண்டு புகுதலென நூற்பா பொருள் தருகின்றது. கடவுளாக வழிபட்ட நடுகற்களுக்குக் தனித்தனியே இல்லங்கள் கட்டப்பட்டன என்பதை மேற்கூறிய பகுதிகள் நமக்கு விளக்குகின்றன. வீரர்களை மதித்துப் போற்றிய மரபு, அவர்கட்கு நடுகல் எடுத்துச் சிறப்பித்த நிலையிலிருந்து கோயில் கட்டி விழாவெடுக்கும் நிலைமைக்கு உயர்ந்துள்ளது என்பதை அறியமுடிகிறது.

## II.1. *(ஈ) பள்ளிப்படைக்கோயில்*

போர்க்களத்தில் உயிர் துறந்த மகாவீரர்களின் நினைவாக வீரக்கல் நட்டுக் கோயில் எடுக்கும் மரபில், வெறுங்கல் மட்டும் ஞாபகர்த்தமாக நாட்டியிருந்தால் நடுகல் கோயில் என்று வழங்கியுள்ளார்கள் என்றும், அத்துடன் ஏதேனும் ஒரு தெய்வத்தின் சிலைகளையும், உருவம் வரையப்பட்ட கொடியையும் நட்டு ஆலயமாக எழுப்பியிருந்தால் அது பள்ளிப்படைக் கோயில் என்று வழக்கப்பட்டதையும் அறிய முடிகின்றது.

"சோழ நாட்டில் குடந்தை நகருக்கு அரைக்காதம் வடமேற்கில், மண்ணியாற்றுக்கு வடகரையில் திருப்புறம்பியம் என்னும் கிராமத்துக்கருகில் ஒரு பள்ளிப்படைக் கோயில் இருந்தது என்றும் இது அப்பகுதியில் நடந்த ஒரு மாபெரும்

போரில் உயிர்நீத்த கங்கமன்னன் பிரிதீவபதியின் நினைவாக எடுக்கப்பட்டது என்பதனையும் சோழர்கள் வரலாறு வாயிலாக அறிகின்றோம். "[32]

"போரில் இறந்தோர்க்கு மட்டுமல்லாது பத்தினிப் பெண்களுக்கும் நடுகல், பள்ளிப்படைக்கோயில் எடுக்கும் வழக்கம் இருந்துள்ளது என்பதனையும் அறியமுடிகிறது. இதற்குச் சான்றாக சேது நாட்டின் வடமேற்குக் கரையில் கிழவன் சேதுபதி மன்னர் இறந்து, அவர் உடல் தகனம் செய்யப்பட்ட வேளையில் அவரது மனைவிமார்கள் நாற்பத்தி எட்டுப் பேரும் உடன்கட்டை மேற்கொண்ட இடத்தில் நடுகல்லும், பள்ளிப்படைக்கோயிலும் உருவாக்கப்பட்டது என்றும் எனினும் காலத்தால் இப்பள்ளிப்படைக்கோயில் சிதைவுண்டாகிப்போனதையும் கடந்த கால சேதுபதி மன்னர்கள் வரலாற்றால் அறிய முடிகின்றது. "[33]

## III. *சிறுதெய்வ வழிபாடு*

நடுகல் வழிபாட்டு முறையில் இருந்து தோன்றியதே சிறுதெய்வ வழிபாட்டு முறையாகும்.

> **"கோவிசைய மயீந்திர பருமற்கு**
> **பதின் எட்டாவது**
> **மீவேணாட்டு ஆந்தைபாடி ஈசை**
> **பெரும்பாண் அரைசரு மருமக்கள்**
> **பொற்சேந்தியாரு சேவகரு**
> **தொறுக்கொண்ட ஞான்று**
> **மீட்டு பட்டாண் (வே) ணாட்டு**
> **நந்தியார் கல்..........." (34)**

என்பது கல்வெட்டுச் செய்தியாகும்.

இனக்குழு மக்களிடையே நிலவிய இப்பழக்கம் இன்றும் கூடத் தன் சுவடு மாறாத வகையில் பின்பற்றப்பட்டு வருகிறது. ஐயனார், சாத்தன், சுடலைமாடன், கருப்பன சுவாமி, முனியன் என்ற பல்வேறு பெயர்களில் வழிபடப்படுகின்றன. தமிழகச் சிற்றூர்களின் எல்லைப்புறங்களில் இன்றும் காவல் தெய்வங்களாக விளங்கும் ஐயனார் கோயில்கள் அனைத்தும் பழந்தமிழக மக்கள் வழிபாடு செய்த

நடுகற்களின் எச்சங்களேயாகும். ஐயன் என்ற சொல், ஆர் என்ற விகுதிப் பெற்று ஐயனார் என வழங்கப்படுகிறது என்று அறியலாம். 'ஐ' என்ற அடிச்சொல்லிற்கு தலைவன், படையை முன்னின்று நடத்தியவன், தந்தை என்பன போன்றப் பெயர்கள் வழங்கப்படுகின்றன.

"சாத்தன் என்னும் பெயர் சாத்து என்ற வேர்ச்சொல்லிலிருந்து வந்ததாகும். சாத்து என்ற சொல்லுக்குச் சாத்துகை, சாத்துமுறை, வணிகக் கூட்டம், குதிரைச் சேவகர் என்றப் பொருள்களும் உள்ளன".(35) "ஐயன் பெயர்களாகக் காரி, புறத்தவன், கடல்வள்ளன், சாத்தா, புரணைக்கேற்வன், யோகி, புட்கலைமணாளன், மாசாத்தான், செண்டாயுதன், வெள்ளையாணை யூர்தியன் என்று சூடாமணி கண்டு குறிப்பிடுகின்றது "(36)

சாத்தன், ஐயனார் என்ற பெயர் வழக்குச் சங்க காலந்தொட்டே காணப்படுகிறது. சங்ககாலப் பெயர்களில் குறிப்பிட்டுக் கூறும்படியான எண்ணிக்கையில் சாத்தன் என்ற பெயர் சூட்டப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கதாகும். "ஆடுதுறை மாசாத்தனார்"(37) "ஆலப்பேரி சாத்தனார்"(38) "ஆவூர் மூலங்கிழார் மகனார் பெருந்தலைச் சாத்தனார்"(39) "மணிமேகலையை இயற்றிய மதுரை கூலவாணிகள் மகன் சீத்தலைச் சாத்தனார்" (40) "உறையூர் முதுகண்ணன் சாத்தனார்"(41) "ஒக்கூர் மாசாத்தனார்"(42) போன்றோர் பெயர்களை நோக்கும் பொழுது தமிழகத்தின் அனைத்துப் பகுதிகளிலும் சாத்தன் எனும் பெயர் வழக்கத்தில் இருந்துள்ளதை அறிய முடிகிறது.

"குன்னக்குடி மற்றும் அறச்சனூர்ப் பண்டைத் தமிழ்க் கல்வெட்டுக்களின் ஆதன் சாத்தன், தேவன் சாத்தன் என்ற பெயர்கள் காணப்படுகின்றன."(43) தமிழகத்தில் சாத்தனுக்கு ஐயன் என்ற பெயரும் பிற்காலத்தில் ஏற்பட்டதும் தெரியவருகிறது. "பல்லவர் காலத்தில் வணிகர்கள் தங்களது குலப்பிரச்சனைகளைப் பேசித்தீர்த்துக்கொள்ள 'சாத்தகணம்' என்ற அமைப்பை ஏற்படுத்தியிருந்தனர்

என்றும், அவ்வமைப்பில் உறுப்பினராய் இருந்தவர் சாத்தகணத்தார் என்றும் சாத்தப் பெருமக்கள் என்றும் அழைக்கப் பெற்றுள்ளனர் எனவும் அறிய முடிகின்றது"[44] பிற்காலச் சோழர் காலத்து இலக்கியமான தக்காயகப் பரணியும் இதனைக் குறிப்பிட்டுள்ளது.

> **"மிக்கு அள்ளும் கறி அநந்த மிடாப்பல**
> **வும் தடாப் பலவும்**
> **எக்கள்ளும் ஒரு பிள்ளை மருந்தாட**
> **எடுக்குதியே"** **(தக்.யா.பரணி-230)**

"சாத்தனுக்கு விழா எடுக்கும் முறையும் சங்ககாலத்தில் இருந்துள்ளதை அறியலாம். பங்குனி முயக்கம் என்னும் விழா உறையூரையொட்டி காவிரியாற்றின் மணல் நிறைந்த பகுதியில், சோலைகளில் கொண்டாடப்பட்டதாக அகநானூறு கூறியுள்ளதால் இதனை அறியலாம் (அகம் 137). பங்குனித் திங்களில் உத்தரமும் நிறைமதியும் கூடிய நன்னாளைப் பங்குனி முயக்கம் என்கின்றார். இந்நாளில் இவ்விழா கொண்டாடப்பட்டதாகவும், இக்குறிப்புக் கொண்டு சாத்தனை வழிபட்டதாக உரையாசிரியர்கள் கூறுகின்றனர்".[45]

"சாத்து என்பது வணிகத் தொகுதியையும் குதிரை வீரணையும் குறிப்பதால் சாத்தனார் என்னும் தெய்வம் வணிகர்களின் முழுமுதல் தெய்வமாக இருந்துள்ளதை அறிய முடிகின்றது. சங்க காலத்தில் தமிழகத்தில் வணிகர்கள் அரசர்க்கு அடுத்த நிலையில் இருந்துள்ளனர் எனலாம். கி.மு. 3ம் நூற்றாண்டு முதல் 'நிகமத்தோர்' என்றும், தொழில் கருதி சிறப்பாக அறுவை வணிகர், உப்பு வணிகர், பொண் வணிகர், பணிக வணிகர், கூலவாணிகர், பண்டவாணிகர் என்றும் அழைக்கப்பட்டுள்ளனர் எனவும் அறிய வருகிறது. இவ்வணிகர்கள் யாவரும் பெரும் செல்வந்தர்களாகவும், புலவர்களாகவும் விளங்கியுள்ளனர்"[46] என்றும் அறிய வருகிறோம். இதற்குச் சான்றாக மதுரைக் கூலவணிகள் மகனார் சீத்தலைச் சாத்தனார், பேரிச்சாத்தனார் ஆகியோரைக் குறிப்பிடலாம்.

“தரைவழிப் பயணம் மேற்கொண்டு வணிகம் செய்தவர் ‘சாத்துவர்’ என்றும், கடல்வழிப் பயணம் மேற்கொண்டு வணிகம் செய்தவர் ‘நாயகர்’ என்றும் அழைக்கப்பட்டுள்ளனர். வணிகர்கள் தாங்கள் வணிகம் காரணமாக வெளியூர் பயணம் செல்ல நேர்கையில் தங்களைப் பாதுகாத்து வருவதற்கென அத்திகேறுத்தார், வீரகோசத்தார் என்ற படைகளைக் கொண்டிருந்தனர்”[47] என்பர். “தாங்கள் பயணம் மேற்கொள்ளும் பெருவழிகளில் சாத்தன் (ஐயனார்) சிலையையும் அமைத்து வழிபட்டிருக்கின்றனர் என்பதனையும், அறிய முடிகின்றது”[48]. “சிறப்பு வாய்ந்த பூலாங்குறிச்சியில் முதற் பராந்தகன் காலத்தில், ‘திசையாயிரத்தைஞ்ஞூற்றுவர்’ ஐயனாருக்குச் சிலை அமைத்து வழிபட்ட செய்தியைத் தெரிவிக்கும் கல்வெட்டும், அவ்வய்யனார் சிலையும் உள்ளன.”[49] என்ற செய்தியையும் பெறுகின்றோம்.

மேற்காணும் இக்கூற்றிலிருந்து “ ‘திசையாயிரத்தைஞ்ஞூற்றுவர்’ போன்ற வணிகர்கள் எங்கெங்கு வாழ்ந்தார்களோ அவ்விடங்களிலெல்லாம் சாத்தன் கோயில் இருந்துள்ளதை அறியமுடிகிறது. இக்கருத்துக்கு வலுவூட்டும் வகையில் பெரும் வணிகர்கள் வாழ்ந்த பூம்பூகாரில் புறம்பணையான் (சாத்தன்) கோயில் இருந்துள்ளது உறுதிசெய்யப்படுகிறது” [50]

**“தேவிர்கான் எம்உறுநோய்திர்மென்று மேவியோர்**

***பாசண்டச் சாத்தற்குப் பாடு கிடந்தாளுக்குப்”* (*சிலம்பு*)**

“அண்மைக் காலங்களில் கண்டறியப்பட்டுள்ள பழமையான ஐயனார் சிற்பங்கள் அனைத்தும் வணிகர்கள் வாழ்ந்திருந்த நகரங்களுக்கு அருகிலேயே கிடைத்திருக்கின்றன.

| | | | | |
|---|---|---|---|---|
| 2 ஐயனார் சிற்பங்கள் | – | ஆலகிராமம் | – | திண்டிவனம் அருகில் |
| 1 ஐயனார் சிற்பம் | – | எசாலம் | – | விழுப்புரம் அருகில் |
| 1 ஐயனார் சிற்பம் | – | நாகத்தி | – | தஞ்சாவூர் அருகில் |
| 1 ஐயனார் சிற்பம் | – | சூணாம்பேடு | – | மரக்காணம் |

1 ஐயனார் சிற்பம் – காட்டுப்புதூர் – திருச்சிமாவட்டம்"(51)

இதனால் சாத்தனார் எனும் ஐயனார் வணிகர்களின் முக்கியத் தெய்வமாக வணங்கப்பட்டார் என்பது உறுதி செய்யப்படுகிறது.

சாத்தன் வழிபாடு கேரள மாநிலத்தில் சாஸ்தா வழிபாடாகவும் தமிழகத்தில் ஐயனார் வழிபாடாகவும் நடைபெறுகிறது. கேரள மாநிலத்தில் முக்கியக் கோயில்களின் திருச்சுற்றில் தென்மேற்கு மூலையில் சாஸ்தாவுக்கென சிற்றாலயங்கள் உள்ளன. தமிழகத்தில் முக்கியக் கோயில்களின் திருச்சுற்றில் தென்மேற்கு மூலையில் விநாயகருக்குத்தான் சிற்றாலயம் உண்டு. ஐயனாருக்கென முக்கிய ஆலயங்களில் இடம் கிடையாது. ஐயனார் காவல் தெய்வங்களில் ஒன்றாக ஊரின் புறத்தே வழிபடப்படுகின்றார். இதனைச் சிலம்பு, "புறம்பணையார் கோயில்" என்று தெரிவிக்கின்றது. சாஸ்தா வழிபாட்டை, கோயிலின் முக்கிய ஆலய பூசாரியே தான் நடத்துகிறார். தமிழ்நாட்டில் ஐயனார் கோயிலுல் சிறு தெய்வங்களுக்கு வழிபாடு நடத்தும், பிராமணர் அல்லாத பிற இனத்தாராலேயே வழிபாடு நடைபெறுகிறது.

"ஊரின் புறத்தே வணங்கப்படும் காவல் தெய்வங்கள், ஊரின் எல்லையைக் காவல் காக்கும் தெய்வங்களாகவும், குறிப்பிட்ட இனத்தவரின் காவல் தெய்வங்களாகவும் (குலதெய்வம்) இன்றளவும் வணங்கப்படுகின்றன. பாண்டிய மன்னர் காலத்தில் இத்தெய்வம் சாத்தன் என்ற நிலை மாறி ஐயனார் என்ற பெயரில் வழிபடப்பட்டிருக்கிறது என்று மற்றொரு கல்வெட்டுச் செய்தியால் அறியமுடிகிறது."(52)

'சேதுநாட்டில் சேதுபதி மன்னர்கள் ஆட்சியில் கி.பி. 1623 முதல் கி.பி. 1897 வரை அந்தந்த மன்னர்களால் பொறிக்கப்பட்ட கல்வெட்டுக்கள் கிடைத்துள்ளன. இந்த கல்வெட்டுக்களிலிருந்து பெறப்படும் செய்தியாவது, ஐய்யனார் வழிபாடு மக்களிடம் பிரசித்தி பெற்றிருந்தது எனவும், சேதுநாட்டின் பெரும்பாலான

கிராமங்களில் ஐய்யனாருக்குச் சிறு ஆலயங்களும் அமைக்கப்பட்டன என்றும் அறியமுடிகின்றது. இவ்வாலயங்களில் ஐய்யனார் திருவுருவங்கள் நிற்கும் நிலையிலும் அவரது இரு மனைவிகளுடனும் காட்சி தருகின்றார் எனவும், யானை, குதிரை ஆகிய பரிவார சிலைகளுடன் காணப்பட்டதையும் அறிய முடிகின்றது. இந்தக் காவல் தெய்வங்களுக்குப் பொதுமக்கள் எடுக்கும் விழா 'புரவி எடுப்பு' என அழைக்கப்பட்டதாகவும் அறியமுடிகின்றது. இன்றளவும் இவையாவும் நடைமுறையில் உள்ளதையும் குறிப்பிடலாம். கூத்தன் சேதுபதி மன்னர் (கி.பி. 1623–1635) இராமநாதபுரம் கோட்டை, மேற்கு மதிலை ஒட்டிய பகுதியில் கூரிச்சாத்த ஐயனார் கோயிலை நிறுவி பல கொடைகளையும் வழங்கினார் போன்ற பல்வேறான செய்திகளை இக்கல்வெட்டின் வாயிலாக அறியமுடிகின்றது'.[53]

இச்சிறு தெய்வக் கோயில்களில் கார்த்திகை மாதத்தில் எல்லா நாட்களிலும் விசேசமாக செவ்வாய், வெள்ளிக் கிழமைகளில் விளக்கிட்டுச் சிறப்புச் செய்தல் நிகழ்ந்துள்ளது என்பதனை அறிய முடிகின்றது. கார்த்திகை மாதத்தில் வீதிகளில் விளக்கு வைத்துக் கொண்டாடியதைச் சங்க நூல்கள் குறிப்பிடுகின்றன. (அகம். 41,141) ஞானசம்பந்தர் "தொல்கார்த்திகை" என கார்த்திகையைக் குறிப்பிடுகின்றார். கார்த்திகை என்பதற்கு அழல் என்பது பொருளாகும். சிலப்பதிகாரம் 'அழர் சேர்கூட்டம்' எனக் கூறுகிறது. (23–134) "பரிபாடல் எரிசடை 'அழல் வேழம்' எனக்குறிப்பிடுகிறது. இதற்குப் பரிமேலழகர் அங்கியைத் தெய்வமாக உடைய கார்த்திகை என உரை கூறுகின்றார்"[54]. (பாடல் 11 வரி 2) சங்க காலத்தில் இத்தெய்வ வழிபாட்டிற்கும் பனி கார்த்திகை தீபம் கொழுத்துதலுக்கும் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளதை அறியலாம். கார்த்திகை விழாவிற்கும் சைவத்திற்கும் உள்ள தொடர்பு இங்கு நினைவு கூறத்தக்க ஒன்றாகும்

## IV. *ஐந்திணைத் தெய்வ வழிபாடு*

> **"மாயோன் மேய காடுறை உலகமும்**
> **சேயோன் மேய மைவரை உலகமும்**

**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**
**வருணன் மேய பெருமணல் உலகமும்**
**முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்**
**சொல்லிய முறையில் சொல்லவும் படுமே''**

**(தொல்.அகத்.நூற்பா-5)**

என்னும் நூற்பா பண்டைத்தமிழர்கள் நிலப்பகுதியைக் குறிஞ்சி முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐந்திணைகளாகப் பிரித்தனர் என்பதை அறியமுடிகிறது. பாலைநிலத்தைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது,

**''முல்லையும் குறிஞ்சியும் முறையிற் றிரிந்து**
**நல்லியல் யிழந்து நடுங்குதுயர் உறுத்துப்**
**பாலை என்பதோர் படிவம் கொள்ளும்''**

**(சிலம்பு. காடுகாண்காதை (64-66)**

எனச் சுட்டியுள்ளனர். இப்பாலைநிலத்தில் வேனிற்காலத்தில் நிகழ்வன கருப்பொருளாகக் கொள்ளப்படும். தெய்வம் கொற்றவை ஆவாள். உணவு– ஆறலைத்தலால் வரும் பொருளாகும்.

இவ்வாறு ஐந்துவகை நிலப்பாகுபாட்டை ஐந்திணை என்று இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன. ஒவ்வொரு நிலப்பகுதிக்குரிய மக்கள் அவ்வப்பகுதியில் விளைந்த, கிடைத்த பொருட்களைத் தத்தம் தெய்வங்களுக்குப் படைத்து மகிழ்ந்தனர் என்பதனையும் அறிய முடிகிறது.

### IV. 1 *குறிஞ்சி*

குறிஞ்சி நில மக்கள் தமக்குக் கிடைத்த காய், கனி, கிழங்கு வகைகளைச் 'சேயோனுக்குப்' படைத்துக் குரவைக் கூத்தாடி மகிழ்ந்தனர் எனவும், சேயோன் எனும் குறிஞ்சிக் கடவுளான முருகன் தமிழர்கள் வணங்கிய தெய்வங்களில் மிகவும் பழமையானவன் என்பதையும், கடற்பரப்பில் காலையில் தோன்றும் இளஞாயிறே செவ்வேளாகிய முருகன் என்று பழந்தமிழர்கள் சுட்டியுள்ளனர் என்ற செய்தியையும் சங்க இலக்கியங்கள் வாயிலாக பெறமுடிகின்றது.

### IV. 2 *முல்லை*

முல்லைநில மக்கள் "மாயோனாகிய கண்ணனிடம்" மிகுந்த ஈடுபாடு கொண்டும், கண்ணனைத் தங்கள் குழந்தையாகவும், தங்களையும், தங்கள் ஆநிரைகளையும் காக்க வந்த தெய்வமாகவும் பாவித்து நெய்யும், தயிரும், பாலும் படைத்து வழிபட்டனர். முல்லை நில ஆண்மக்கள் ஏறுதழுவியும் பெண்கள் குரவைக் கூத்தாடியும் மகிழ்ந்துள்ளனர் என்றும் அறியமுடிகின்றது.

### IV. 3 *மருதம்*

மருதநில மக்கள் தம் நிலத்தில் விளைந்த நெல் மற்ற தானிய வகைகளையும் தம் நிலத்தலைவனாகிய இந்திரனுக்குப் படைத்து இந்திர விழா எடுத்துள்ளனர்.

### IV. 4 *நெய்தல்*

நெய்தல் நிலத் தெய்வம் வருணனாவான். வருணன் என்றால் கடல் தெய்வம் எனப்பொருள்படும். "நெய்தல் நில மக்கள் (பரதவர்கள்) முழு நிலா நாளில் மீனும், இறைச்சியும் படைத்துக் கடற்தெய்வத்தை வணங்கியுள்ளனர் என்றும் சுறாமீனின் கொம்பினை மணலில் நட்டு, மலர் மாலைகளைச் சூட்டி பணங்கன்றைப் படையலிட்டு விழா எடுத்துள்ளதையும் அறிய முடிகின்றது".[55]

### IV. 5 *பாலை*

முல்லையும் குறிஞ்சியும் முறைமையிற் திரிந்த பாலை நிலத்துக் கொற்றவைக்கு எயினரும், வேட்டுவரும், மறவரும் விலங்குகளைப் பலியிட்டு விழா எடுத்தனர் என்பதையும் தம்முயற்சியில் வெற்றி பெற வேண்டி, உடலின் தசைகளையும் அரிந்துப் பலியிடுவர் என்றும் அறிய முடிகின்றது. மேலும் நேர்த்திக் கடனாக தம் உடல் உறுப்புகளையோ, தலையையோ அரிந்து பலியிடும் பழக்கமும் இருந்துள்ளதை அறிகின்றோம்.

### V. *சங்க கால சமய வாழ்க்கை*

சங்ககால சமுதாயத்தில் சமய வளர்ச்சி குறிப்பிட்டதக்க வகையில் ஏற்பட்டிருந்தது எனலாம். சிவன், திருமால், முருகன், பலராமன், கொற்றவை,

திருமகள் போன்ற தெய்வங்கள் மக்களால் வணங்கப்பட்டவையாகும். சைவம், வைணவம் என்னும் சமயநிலைகள் உருவாவதற்கான அடிப்படையான கோட்பாடுகளும் தோன்றியது இக்காலமேயாகும். அத்தோடு ஆரிய நாகரிகக் கலப்பினால் வேதவேள்வியும் இடம்பெறத் துவங்கின என்பதனைப் பரிபாடல் நமக்கு அறிவுறுத்துகிறது. மேன்மக்களிடமே இச்சடங்குகள் வேரூன்றி காணப்பட்டன எனலாம். நாட்டுப்புறத்து மக்களிடம் அவை அவ்வளவாக செல்வாக்குச் செலுத்திடவில்லை. இம்மை, மறுமை, சொர்க்கம், நரகம், நிலையாமை, வீடுபேறு, வினைப்பயன்கள் பற்றியும் சான்றோர்கள் சிந்திக்கத் தொடங்கினர் என்ற சங்க கால சமய வாழ்க்கை முறையை அறிய முடிகின்றது.

### V.1 *ஐந்திணையுள் வழிபாட்டின் வளர்ச்சிநிலை:*

"தொகை நூல்கட்கு வணக்கச் செய்யுள் பாடிய பெருந்தேவனாருடைய செய்யுளில் சிவனுடைய உருவத் திருமேனி புகழப்பட்டுள்ளது".[56] சங்க காலத்தில் சிவன் வணங்கப்பட்டதையும், சிவனுக்கென்று கோயில்கள் நிறுவப்பட்டிருந்ததையும் புறநானூறு சுட்டியுள்ளது.

> **"ஏற்றுவலன் உயரிய எரிபொருள் அவிர்சடை**
> **மாற்றருங் கணிச்சி மணிமிடற் றோறும்"** **(புறம்-56)**

என்று புறநானூறு அடிகளாலும்,

> **"பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்**
> **அறுமுகச் செவ்வேள் அணிதகழ் கோயிலும்"**
> **(சிலம்பு இ.வி.கா. 69-70)**

என்று இளங்கோவடிகள் சிலம்பில் சுட்டியுள்ளதாலும் மேற்கூறிய கருத்துக்கள் உறுதி செய்யப்படுகின்றன. மேலும்,

> **"நுதல் விழி நாட்டத்து இறையோன் முதலா**
> **பதி வாழி சதுக்கத்துத் தெய்வம் ஈறு ஆக"**
> **(மணி. 55, 56)**

என்று மணிமேகலைப் பாடல் அடிகளிலும் சில வழிபாட்டைச் சுட்டியுள்ளன.

"பால்புரை பிறைநுதல் பொலிந்தசென்னி

நிலமணி மிடற்று ஒருவன்" (புறம்-91)

என ஔவையார் குறிப்பிட்டுள்ளார். சிவன் ஐந்து பூதங்களைப் படைத்தவன் என்றும், மழுவாளையுடைய நெடியோன் என்றும் மதுரைக் காஞ்சி சுட்டியுள்ளது. (மதுரை 453–55) நவிர மலையில் உரைந்த நஞ்சுண்ட கடவுளை மலைபடுகடாம் குறிப்பிடுகிறது. (மலை 82–83) பின்னால் எழுந்த திருமுருகாற்றுப்படையில் சிவபெருமானை வெள்ளேற்றுக் கொடியினை வலக்கரத்தினை உயர்த்தியவன் எனவும், உமையொருபாகம் உடையவன் என்றும், முக்கண்ணன் என்றும், திரிபுரம் எரிந்த திரிசடைக் கடவுள் என்றும் கூறப்பட்டுள்ளது. (திருமு. 151–154)

புறநானூற்றில் சிவன் கோயில் "முக்கட் செல்வன் நகர்" எனச் சுட்டப்படுகிறது (புறம் 6: 18) சிவபெருமான் இடைவிடாமல் வேதத்தை மொழியவன் என்றும் நீண்ட சடையினை உடையவன் என்றும் ஆவூர் மூலங்கிழார் குறிப்பிட்டுள்ளார்.

"நன்றாய்ந்த நின்நிமிர்சடை முலைமுதல்லவன்" (புறம் 166)

மேற்கூறிய கருத்துக்களால் சங்க கால சமய வாழ்வில் சிவவழிபாடு இடம் பெற்றிருந்ததை அறிய முடிகிறது.

**V.1. (ஆ) முருகன்**

முருகன் குறிஞ்சிக்கடவுள், எனினும் முருகனின் குறியீடாகப் பழந்தமிழர்கள் குறித்தது 'குன்று' ஆகும். திருப்பரங்குன்றம், குன்றுதோராடல் போன்ற பெயர்கள் சங்கநூல்களில் சுட்டப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. பெரிய மலைத்தொடரோடு ஒப்பிடுகையில் குன்று, அளவில் சிறியதே, குறிஞ்சியில், குன்றுகளும் உண்டு என்பது அறியவருகிறது. மேலும் குன்று என்ற அமைப்பானது முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய நான்கு நிலங்களிலும் குறிப்பிடப்பட்டுள்ளதைக் காணமுடிகின்றது. இந்நான்குடன் குறிஞ்சி ஒன்றையும் சேர்த்து, இவ்வைந்தும் நில அமைப்பில் வேறுபட்டாலும் அனைத்திற்கும் பொதுவான ஆகாயத்தையும்

இணைத்து, ஆக முருகனுக்கு ஆறுமுகங்கள் என்று பழந்தமிழர்கள் இயற்கையை வழிபாட்டோடு இணைத்தே பார்த்துள்ளனர் என்ற கருத்தினைப் பெறமுடிகின்றது.

தமிழர்கள் தெய்வங்களில் ஆதிக் கடவுளாக முருகன் புகழப்படுகின்றார். அழகு, இளம் ஞாயிறு, போன்றவற்றை முருகனுக்கு ஒப்பாகக் கூறியுள்ளனர் முன்னோர்கள், முருகு என்றால் அழகு என்றும் பொருள்படும். முருகன் வீரம் மிக்க கடவுளாக, போர்க்கடவுளாகச் சங்க நூல்களில் புகழப்படுகின்றான். மன்னருடைய வீரத்திற்கும், சீற்றத்திற்கும் முருகனின் வீரமும் சீற்றமும் உவமையாக்கப்பட்டுள்ளன என்பதை,

***வெல் போர்ச் சோய்!***
***வெல்போர்க் கொற்றவை சிறுவ!***
***கடம்பமர் நெடுவேள்!***
***திருத்தகு சோய்!***
***செருவெம் சோய்!***
***செருமிகு சோய்! (புறம்)***

என்றும் பாடல் வெளிப்படுத்துகின்றது. பலவாறாக முருகன் புகழப்படுகின்றான். முருகன் கோயில் அணங்குடைக் கோட்டம் (புறம். 298) எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. திருச்சீரலைவாய் முருகன் கோயில் சிறப்புற்றிருந்தது என்பதனை,

***"திருமணி விளக்கின் அலைவாய்ச்***

***செருமிகு சோ யொரு" - அகம் 266***

***"வெண்டலைப் புணரி அலைக்கும் செந்தில்***
***நெடுவேள்" -புறம்.55***

என்ற பாடலால் அறியலாம். திருமுருகாற்றுப்படையால் முருகன் கார்த்திகைப் பெண்கள் அறுவரால் வளர்க்கப்பட்டவன் எனவும், வானோர்தானைத் தலைவன், அல்கெழு கடவுட்சிறுவன், கொற்றவை சிறுவன், குறிஞ்சிக் கிழவன் எனப் பலவாறு கூறப்பட்டுள்ளான் எனவும் அறிகின்றோம். 'திருப்பரங்குன்றம்', 'திருச்சீரலைவாய்', 'பழமுதிர்ச்சோலைமலை', 'திருவேரகம்', 'குன்றுதோராடல்', 'திருஆவினன்குடி' போன்றவை முருகனின் அறுபடை வீடுகளாக ஆற்றுப்படையில் கூறுப்பட்டுள்ள செய்தியாகும். திருமுருகாற்றுப்படையில் முருகனோடு தொடர்புடைய குரவைக்குத்து

விளக்கப்பட்டுள்ளது. குறமகள் முருகனை வழிபடும் இயல்பு இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். குறமகள் முருக வழிபாட்டிற்குரிய களத்தை அழகுபடுத்தி, கோழிக்கொடியை நடுவதாகவும், நெய்யும் வெண்சிறுகடுகும் நெற்றியிலே பூசி சிறு மந்திரங்களை ஓதுவதாகவும், அழகிய மலர்களைத் தூவுகிறாள் எனவும் இருவேறு நிறமுடைய ஆடைகளை உடுத்தி, செந்நூல் காப்பினை அணிந்து கொண்டதாகவும் ஆட்டுக்கிடாயின் குருதியை அரிசியோடு கலந்து தூவி, பச்சை மஞ்சளோடு சந்தனத்தைத் தெளித்ததாகவும், செவ்வலறி மாலையையும், நந்தியா வர்த்த மாலையையும் முருகனுக்குச் சூட்டித் தன்னையும், தன் இனத்தாரையும் மலைப்பக்கத்து உயிர்களையும் பசி, பிணி இன்றி காக்குமாறு முருகனை வேண்டி குரவைக் கூத்து ஆடுவதாகவும் திருமுருகாற்றப்படை வாயிலாக அறிய வரும் செய்திகளாகும். வயது முதிர்ந்த அந்தணர் முந்நூல் அணிந்து, குளிர்ந்த நீரில் குளித்து, ஈரம் உலராது, உடுக்கையுடன் நின்று, இருகைகளையும் தலைக்கு மேல் குவித்து ஆறெழுத்து மந்திரத்தை ஓதி வழிபடுவதும் இதில் கூறப்பட்டுள்ளதை அறிகின்றோம். (தி.மு.ப.பா.அடி. 190–217)

“பழந்தமிழர்கள் சேயோன் என்னும் முருகனை இவ்வாறு வழிபட்டதையும், திருமுருகாற்றுப்படையின் காலத்தில் முருகன் கார்த்திகேயனாக வழிபடப்பட்டதையும் அறியமுடிகின்றது. திருச்சீரலைவாய்ப் பகுதியில் முருகன் பன்னிரு கைகளுடன், தேவசேனாதிபதியாகிய கார்த்திகேயனாக சுட்டப்பட்டுள்ளது குறிப்பிடத் தக்கதாகும்” (57)

### V.1. *(இ) பிரம்மா*

பிரம்மா மருத நிலக்கடவுளாவார். மருத நிலத்தில் உணவுப் பொருட்கள் வேளாண்மையால் உற்பத்தியாக்கப்படுவதால் ஆக்கல் தொழில் அங்கே நடைபெறுவதாகக் கொண்டு, மருதநிலக் கடவுளாக பிரம்மாவைக் கொண்டனர் பழந்தமிழர். முல்லை, மருதம், பாலை ஆகிய நிலப்பகுதிகளுக்குப் பொதுவான வான்வெளியையும் சேர்த்து, மருத நிலக்கடவுளான பிரம்மாவிற்கு நான்கு முகங்கள் எனக் குறியீடாகக் கொண்டு பிரம்மாவை வழிபட்டனர் என அறியமுடிகிறது.

V.1. *(ஈ) நாராயணன் (திருமால்)*

முல்லை நிலக்கடவுளாக நாராயணன் வணங்கப்பட்டதையும் சங்கச் செய்யுள் வழி அறியமுடிகின்றது. கடலாகிய நெய்தலோடு குறிஞ்சி, முல்லை, மருதம், பாலை ஆகிய நான்கு நிலங்களுக்கும் உண்டு. நாராயணன் கடலில் பாம்பின் மேல் பஞ்சனை கொண்டவர் எனவும், நெய்தல் நிலத்தில் வாழுபவர்கள் முழுக்கக் கடலை நம்பி வாழ்வதால் பாற்கடலில் துயிலும் தங்கள் கடவுள் நாராயணனுக்கு ஒருமுகம் மட்டும் குறியீடாகக் கொண்டனர் எனவும் அறிய முடிகின்றது.

"கடவுளின் தோற்றம் என்பது பழந்தமிழர்களிடத்தே தங்களைச் சுற்றியுள்ள இயற்கையின் இடத்திலிருந்தே ஆரம்பமாகியுள்ளதை நன்கு அறியமுடிகின்றது. காலப்போக்கில் பல்வேறு தத்துவங்களாலும், அத்தத்துவத்தில் உருவான நடைமுறைகளாலும், அத்தோற்றக் காரணங்கள் பலவாறாக மறுவி, புதிய பரிணாமம் பெற்று, இன்று ஒருநிலைப்பாட்டில் நிலைநிறுத்தப்பட்டுள்ளது எனலாம். மேற்கூறிய கருத்திற்கு வலுவூட்டும் வகையில் இச்சான்று அமைந்துள்ளது எனலாம்." [58] பரம்பரை பரம்பரையாக இன்ன கடவுளுக்கு இன்ன ஆயுதம் என்று வந்துள்ள மரபு ஆழ்ந்த வரலாறு கொண்டது எனலாம். "நடுகல் வீர வழிபாட்டில் உருவான சிறுதெய்வமான ஐயனார் கையில் எளிய ஆயுதமான அரிவாள் இடம்பெற்றிருக்கும். இவ்வாயுதம் முற்கால வீரர்கள் பயன்படுத்திய முதற் கருவியாகும். பொதுவாக ஆண்டவன் கைகளில் காணப்படும் ஆயுதங்களான மழு, அங்குசம், குத்துக்கத்தி, சக்கரம் போன்றவை பின்நாட்களில் மனிதர்களால் பயன்படுத்தப்பட்டவையேயாகும். இவை குறிப்பிட்ட தரவீரர்கள் மட்டுமே பயன்படுத்தியவையாக அறியமுடிகிறது. ஆதிகாலத்தில் மனிதன் தன்னை இயற்கையில் இருந்து பாதுகாத்துக் கொள்ளவும், தங்கள் நாகரிக வளர்ச்சிக்குப் பெரிதும் உதவிய மரம், கல் போன்றவற்றால் செய்த ஆயுதங்களையே, தாங்கள் வழிபடும் கடவுளரின் ஆயுதமாக்கினர் என்பதனை இதனால் நன்கு அறிகின்றோம். எனவேதான் பண்டைத் தமிழர்கள் வகுத்த ஆகமங்களில் மூர்த்தங்களைப்பற்றி (உருவங்கள், சிற்பங்கள்) குறிப்பிடும் பொழுது

மறக்காமல் ஆயுதங்களையும் குறிப்பிட்டுள்ளனர்"[59]. இதனைப் பழந்தமிழர்களின் நன்றி பாராட்டும் பண்பிற்குச் சிறந்த சான்றாகக் கூறலாம்.

மாயோன் எனப்படும் திருமால் முல்லை நிலத்து ஆயர்களால் வணங்கப்பட்டதையும் அறிகின்றோம். தொல்காப்பியம், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகியவற்றில் திருமால் பற்றிய குறிப்புகள் கிடைத்துள்ளன. திருமாலின் பண்புகளை உணர்த்தும் வகையில் பல்வேறு பெயர்களைச் சங்கநூல்கள் சுட்டியுள்ளன. "மாயோன்"[60] "மால்"[61] "திருமறுமார்பன்"[62] "நேமியோன்"[63] "திகிரியோன்"[64] "நெடியோன்"[65] "முந்நீர்வண்ணன்"[66] "வெப்போன்"[67] "மாயவண்ணன்"[68] "அறிதுயிலோன்"[69] "கேசவன்"[70] போன்றப் பெயர்கள் சுட்டப்பட்டுள்ளன. மாயோன் என்ற சொல் பெரியவன், கரியவன் என்ற பொருளில் பண்டை இலக்கியங்களில் வழங்கப்பட்டுள்ளன. கரியநிறத்தன் என்ற பொருளில் மாயோன் என்ற சொல் ஆளப்பட்டுள்ளதைப் பிற்காலத்து வந்த திருமாலடியார்களின் பாடல் அடிகள் உறுதி செய்கின்றன. பச்சை மாமலைபோல் மேனி என்ற பாடல் அடியில், நற்றிணையில் கபிலர் நடுமலையினைக் குறிப்பிடும் பொழுது, கண்ணனை உவமித்துச் சுட்டுகின்றார் எனலாம். மாயோன், மால், விண்டு என்பன ஒரு பொருட்சொற்களாகும் விண்டு என்னும் சொல்லுக்கு முகில், வானம், திருமால் என்னும் பெயர்கள் உண்டு.

> **"நனந்தலை உலகம் வளைஇ நேமியோடு**
> **வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை**
> **நீர்செல நிமிர்ந்த மாஅல்"** (முல்லை (1-3)
> **"மாயோ னன்ன மால்வரைக் கவாஅன்"** (நற்-32)

என்று திருமால் வழிபாட்டையும், திருமாலின் பண்புகளையும் சங்க நூல்கள் சுட்டியுள்ளன.

## V.1. *(உ) திருமால் திருமகள்*

சங்க இலக்கியங்களில் 'திரு' என்ற சொல்லாட்சியும் திருமகள் பற்றிய குறிப்புகளும் பலவிடங்களில் காணக்கிடைக்கின்றன. தொடக்க காலத்தில் அழகு,

செல்வம், இறையருள் எனப் பொருள் வழங்கப்பட்ட திரு எனும் அடைமொழி காலப்போக்கில் மாற்றம் அடைந்துள்ள நிலையை அறியமுடிகிறது.

"அரிவம்சமும் விஷ்ணுபுராணமும் திருமால் திருமகள் தொடர்புடைய பலகதைகளைக் கூறுகின்றன. சங்க இலக்கியங்களில் வழங்கும் திருமகள் பற்றிய குறிப்புகள் மேற்கூறியகருத்தை வலியுறுத்துவதாக உள்ளன எனலாம்" (71) "மாயுடைமலர் மார்பு"(72) "திருநெமர்ந்து அமர்ந்த மார்பினை " (73) "மதிமறுத்செய்யோன் சேர்ந்தளின் மாசின் அகலம்" (74) " பொன்னிற் றோன்றிய புனை மறு மார்ப" (75) "திருவின்கண்" (76) என்று பல இடங்களில் பரிபாடல் சுட்டியுள்ளது. திருமரு மார்பன் என்று முல்லைக்கலியும், திருமறு மார்பு என்று பெரும்பாணாற்றுப் படைாசிரியரும் திருமலைப் போற்றுகின்றதைக் காண முடிகிறது.

### V.1. *(ஊ) இந்திரன்*

"இந்திரன் தொல்காப்பியத்தில் வேந்தன் எனப்பட்டான். மன்னனைத் தெய்வமாக வணங்கியதை இது சுட்டுகிறது. இந்திரனைப் பற்றிய செய்திகள் தொகை நூல்களில் மிகவும் குறைவாகவே காணக்கிடைக்கிறது." (77)

**"வச்சிரத்தடக்கை நெடியோன் கோயிலுள்"** (புறம்-241)

என்ற குறிப்பால் இந்திரனுக்குக் கோயில் இருந்தது அறியப்படுகிறது. ஐங்குறு நூற்றில் இந்த விழாவிற் பூவின் அன்ன –ஐங் 62. என்னும் உவமை காணப்படுகிறது. பத்துப்பாட்டில், திருமுருகாற்றுப்படையில்தான் இந்திரன் இடம்பெறுகிறான் எனலாம். அவன் ஆயிரம் கண்கள் உடையவன் எனவும், வேள்விகள் பல இயற்றியவன் என்றும் திருக்கிளார் செல்வன் எனவும் நான்கு மருப்புக்களை உடையதும் நீண்ட துதிக்கை உடையதுமான யானையின் பிடரியில் ஏறிவருபவன் என்றும் திருமுருகாற்றுப்படை சுட்டியுள்ளதன் மூலம் அறிய வருகின்றது. (திரு.முருகு. 155–159) இந்திர விழாவைக் கொண்டாடிய முறைப்பற்றிச் சிறப்பாகவும், விரிவாகவும், சிலப்பதிகாரம் மணிமேகலை நூல்கள்

சுட்டிக்காட்டுகின்றன. இதன் மூலம் இந்திரவணக்கம் புகழ்பெற்றது, இரட்டைக்காப்பியங்களின் காலத்தில்தான் என்பது தெளிவாகின்றது.

### V.1. *(எ) கொற்றவை வழிபாடு*

"கொற்றவை பண்டைத் தமிழரின் வெற்றித் தெய்வமாக வழங்கப்பட்டுள்ளாள். கொற்றம்–வெற்றி, அவ்வை–அடுமை வெற்றித்தாயாகிய இவளை வணங்குதலைக் 'கொற்றவை நிலை' என்று தொல்காப்பியர் குறிப்பிடுகிறார்"(78). போருக்குச் சென்ற தலைவன் வெற்றி பெற்று மீள வேண்டுமென்று தலைவியின் தோழியர் கொற்றவையை வழிபடுதலை நெடுநல்வாடை கூறுகிறது. (அடி–168 நச்சி உரை) சேரமன்னர்கள் அயிரைமலையில் உறைந்த கொற்றவையை வழிபட்டுள்ளதை

**"உருகெழு மாயன் அயிரை பரவியும்"** **(பதிற்றுப் பத்து 90: 198)**

பதிற்றுப்பத்தின் தொன்னூற்று ஒன்பதாம் பாடலில் 'அஞ்சுவருமாயிற் கடவுள் அயிரை நிலை' என்றும் கூறப்பட்டுள்ளது. மலைப் பிளவுகளும், குகைகளும் உள்ள மலைப்பக்கத்திலே கொற்றவைக்குப் பலியிட்டு வணங்கியமையைக் குறுந்தொகைப் பாட்டொன்று குறிப்பிட்டுள்ளது.

**"விடர் முழையடுக்கத்து விறல்கெழு சூலிக்குக்**
**கடலும் பூணாம்"** **(குறுந். (218))**

சிலப்பதிகாரம் கொற்றவையைக் கவுரி, சபரி, சூலி, நீலி, மாலின் கங்கை என்று புகழ்கிறது. இக்கொற்றவை வழிபாடே பின்நாளில் சக்தி வழிபாடாக மாறியதை அறியமுடிகின்றது.

### VI. *வேள்வி நெறியும் வைதீகச் செல்வாக்கும்*

சங்க இலக்கியப் புலவர்களுள் அந்தணப் புலவர்களும் இருந்துள்ளனர் எனலாம். கபிலர், பரணர், நக்கீரர், மலைபடுகடாம் பாடிய பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகன், கடியலூர் உருத்திரங்கண்ணனார் முதலியோர் புலமை மிக்கவர்களாகவும் திகழ்ந்துள்ளனர் என்பதனை அறிய முடிகின்றது. கபிலர் வேந்தரோடு உறவு கொண்டதைப் பின்வரும் பாடலாலும் அறியமுடிகின்றது.

"மூவரு ளொருவன் றுப்பாசியரென
ஏத்தினர் தருஉங் கூழே நுங்குடி
வாழ்த்தினர் வருஉ மிரவல ரதுவே" (புறம் 122: 5-7)

என, அவர்களுக்காகப் போரிட்டு அவர்கள் கொடுத்த பரிசுப் பொருட்களை இரவலர்க்குக் கொடுத்ததை,

"காரி நின்னாடே அழல்
புறந்தரு உம் அந்தணரது" (புறம்-122)

என்னும் புறப்பாடலின் வாயிலாக அறியமுடிகின்றது.

என அவன் நாட்டை அந்தணர்க்கு உரியதாய், அரசரினும் அந்தணர் உயர்ந்தவர் எனும் கருத்தை நிலைநாட்டும் போக்கிற்குப் பின்வரும் பாடலைச் சான்றாகக் கூறலாம்.

"சிறந்த வேதம் விளக்கப்பாடி
விருச்சீ ரெய்திய ஒழுக்கமொரு புணர்ந்து
நிலமமர் வையத்து ஒருதமாமகி
உயர்நிலை உலகம் இவனின்று எய்தும்
அருநெறி பிழையா அன்புடை நெஞ்சிற்
பெரியோர்" (மது 468-473)

அந்தணர் வேதம் ஓதுதல், விழுமிய ஒழுக்கம் உடைமையுடன் இருத்தல். யாருக்கும் இணையில்லாத இயல்புடைமையும், சுவர்க்கப்பேற்றை இந்நிலவுகிலிருந்து அடையுந்தன்மையும், அறநெறி பிழையாமை, அன்புடைமை எனும் ஒழுக்கங்களை உடையவர்கள் எனவும் புகழப் பட்டுள்ளதை அறிகின்றோம். இத்தகு அந்தணர் வேதம் ஓதுதல், வேள்வி கேட்டல், உள்ளிட்ட அனுதொழில் புரிந்துள்ளனர் எனலாம். இவர்களை அரசன் தன்துணையாகக் கொண்ட அவசியமும் வலியுறுத்தப்படுகின்றது நன்கு புலப்படுகிறது.

"அறம்புரி யந்தணர் வழிமொழிந் தொழுகி
ஞால நின் வழி யொழுகப் பாடல் சான்று
நாடுடன் விளங்கு நாடா நல்லிசைத்
திருந்திய வியன்மொழிச் திருந்திழை கனவ" (பதிற்-பத்-24: 8-11)

அந்தணர் வழியில் நடக்கும் அரசர், உலகம் முழுவதும் தம்வழிபட்டு நடக்கும்படியான பெரும்புகழ் அடைவர் எனப் பதிற்றுப்பத்து கூறுவதால் அந்தணர் மேன்மையும், துணையும், அறிவுறுத்தப்பட்டது நன்கு புலப்படுகிறது.

## VI. *(அ) அந்தணர் செந்தழல் (வேள்வி)*

இனக்குழு மக்களிடம் அரசு முறை உருவான காலகட்டத்தில் வணிகர், வேளாளர் உள்ளிட்ட பல்வேறு சமுதாயத்தினரைப் பாதுகாப்பதும், அந்தணரைப் போற்றுவதும் வலியுறுத்தப்பட்டத்தைப் போன்றே வேள்விகள் செய்வதும் அரசரின் அவசியக் கடமையாகக் கூறப்பட்டுள்ளதை அறிந்து கொள்ள முடிகின்றது. போர் வெற்றிக்கு யாகப்பாலிகள் இன்றியமையானவென்றும் கூறப்பட்டுள்ளதைக் காணலாம். போர்கள் அதிகமாக நடைபெற்ற சங்க காலத்தில், மூவேந்தர்கள் தமக்குள்ளும், பிறருடனும் போரிட்டுக் கொண்டு பெருமன்னராய் உயர்த்தலைப்பட்டதைக் காலச்சூழலில் யாகங்கள் முக்கியத்துவம் பெற்றுள்ளன என்று அறியமுடிகிறது. தலையங்காணத்துச் செருவென்ற பாண்டிய நெடுஞ்செழியன்,

> **"ஆன்ற வேள்வி யடங்கிய கொள்கை**
> **நான்மறை முனிவர் சுற்றமாக**
> **மன்ன ரேவல் செய்ய மன்னிய**
> **வேள்வி முற்றிய வாய்வாள் வேந்தே"** (**புறம் 26 : 12-15**)

என நான்மறை முனிவர் சுற்றமாக இருந்து வேள்வி செய்வதையும், பிற மன்னர்கள் அதற்கு ஏவல் செய்வதையும் புறநானூறு சுட்டியுள்ளதால் தெரிகிறது. அந்தணர்களுக்கு மன்னர்களின் அரண்மனை வாயில் என்றுமே திறந்திருக்குமென சிறுபாணாற்றுப்படை இலக்கியச் சான்று இங்கு நோக்கத்தக்கதாகும்.

> ***"பொருநர்க் காயினும் புலவர்க் காயினும்***
> ***அருமறை நாவின் அந்தணர்க் காயினும்***
> ...............................................................................
> ***அடையா வாயில்" (சிறுபாண். 203-206)***

வேள்விகள் பல நடத்தப்பட்டு வேள்வித் தூண்கள் நடப்பட்ட பல யாகசாலைகள் உள்ள நாட்டை உடையவன் எனப் பல்யாகசாலை முதுகுடுமி பெருவழுதி புகழப்பட்டான் என்பதையும் அறியமுடிகின்றது. (புறம் 15: 20, 21)

மேலும் நான் மறைமுதல்வர் ஏந்துகை எதிரே தன் சென்னி இறைஞ்சினான் எனவும் அவன் புகழப்படுகிறான் (புறம் 46)

> **"நாற்பனுவல் நால் வேதத்து**
> **அருஞ்சீர்த்தப் பெருங்கண்ணுறை**
> **நெய்ம்மலி ஆவுதி பொங்கப் பன்மான்**
> **வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி**
> **யூபம் நட்ட வியன்களும் பலகொல்"** (புறம். 15)
> **"தூவியர் கொள்கைத் துகளறு மகளிரொடு**
> **பருத் உருவிற் பல்படைப்புரிசை**
> **எருவை நுகர்ச்சி யூப் நெடுந்தூண்**
> **வேதவேள்வித் துறைமுடித் தகஉம்"** (புறம். 224)

என்றுப் பாராட்டுதலும் குறிப்பிடத்தக்கது.

"அறுதொழில் அந்தணர் செய்த வேள்வித்தீயுடன் விளங்கும் நாட்டினன்" எனக் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன் பாராட்டப்பட்டுள்ளதை இங்குக் காண்கின்றோம். சிறந்த யாகங்களுக்கு உரித்தான நெறிமுறைகளையெல்லாம் முறையாய்ப் படித்தவன் எனத் தலையங்கானத்துச் செருவென்ற பாண்டிய நெடுஞ்செழியனைப் புகழ்கிறார் மாங்குடி மருதனார் (மது. 759–762). அமரர் பேணியும், ஆவுதி அருத்தியும், நல்ல பசுக்களோடு எருதுகளைப் பாதுகாத்தும் நான்மறையோர் புகழ்பரப்பியவனெனக் கரிகாற்சோழன் குறிப்பிடப்பட்டுள்ளான் (பட்டினப் 201–2021) என்பன போன்ற இலக்கியச்சான்றுகள் நோக்கப்படுகின்றன.

பல மன்னர்கள் அந்தணர்க்கு ஊர்களைப் பிரமதேயமாக விட்டுள்ளதை அறிகின்றோம். மலையமான் திருமுடிக்காரி அத்தகையோனாவான். அவனுடைய நாட்டைக் கடன்கொள்ள முடியாது, பகைவர்களாலும், கவரவொண்ணாது, அவன் அந்தணர்க்குரியதாய் விட்டதை

"கடல் கொளப் படாசு உடறுநர் ஊக்கார்
கழல்புனை திருந்தடிக் காரிநின் நாடே
அழல் புறந் தருஉட் அந்தண ரவ்வே" - புறம். 122

எனப் புறநானூறு சுட்டியுள்ளதால் அறிந்து கொள்ள முடிகின்றது.

### VI. 1. *வைதீக நெறியும் இறைவழிபாட்டு மாற்றமும்*

முருகன், சிவன், மாயோன் முதலான தெய்வங்களோடு தம்மை இணைத்துக்கொண்டு வளரத் தலைப்பட்ட வைதீக நெறியின் செல்வாக்கைச் சங்ககாலத்தில் காணமுடிகிறது. அந்தணர் பள்ளி இருந்ததை மதுரைக் காஞ்சி சுட்டியுள்ளதால் அறிகின்றோம். சங்க கால வைதீக நெறியின் தாக்கத்தால் தமிழகத் திணைத் தெய்வங்கள் வழிபாட்டு முறையில் மாற்றம் ஏற்பட்டது எனலாம். குறிஞ்சி நிலத் தெய்வமான முருகனுடன் கார்த்திகேயனின் (கந்தனின்) தொன்மங்களும், முல்லைநில மாயோனுடன் விஷ்ணுவின் அவதார வரலாறும், சிவனுடன் ருத்திரனின் தொன்மங்களும், கொற்றவையோடு உமையாள் (சக்தியின்) தொன்மங்களும் இணைக்கப்பட்டன என்பன வரலாற்றின் வாயிலாக பெறப்படும் உண்மையாகும்.

முருகனுடன் கார்த்திகேயனின் பிறப்புக்கதை இணைந்ததைப் பரிபாடல் (8:12–16, 5:26–54, 9: 1–7), திருமுருகாற்றுப்படை (253–58) ஆகியன சுட்டியுள்ளன. தெய்வானை முருகனின் மனைவி எனக் கூறும் பின்பழந்தமிழ் இலக்கியங்கள் மிகுதியாக உள்ளன எனலாம். (பரி 9:8–11, 9:57–6, 15: 5–6, திருமுருகாற்றுப்படை–264)

"அல்கெழு கடவுட் புதல்வ மால்வரை
மலைமகள் மகனே" (திரு. படை. 256, 57)

எனத் திருமுருகாற்றுப்படை முருகனை மலைமகள் (உமை) மகனாய்க் காட்டுவதால் அறிகின்றோம். திருமுருகாற்றுப்படையில் பன்னிருகைகளையும் (107–118) ஆறுமுகங்களையும் உடையவனாய்க் காட்டப்பெறும் முருகனின் ஒருமுகம்,

"மந்திர விழியின் மரபுளி விழாஅவ்
வந்தனர் வேள்வி யோக்கும்மே" (திரு. படை 95, 96)

என வேள்வி வேட்கும் அந்தணர் முகமாய்க் காட்டப்பட்டுள்ளது. இங்குக் குறிப்பிடத்தக்க இலக்கியச் சான்றாகும்.

திணைவாழ்வு பேணப்பட்ட சூழலில் வெறியாட்டில் வணங்கப்பட்ட திணைத் தெய்வமான முருகன், வீரம் முதன்மைப்படுத்தப்பட்ட காலச்சூழலில் சூரனைவென்ற வீரநிலைத் தெய்வமாக உயர்ந்து பின்னர், வைதீக நெறியின் ஆளுமையால் சங்க கால இறுதிப்பகுதியில் கார்த்திகேயனாய், ஆறுமுகனாய் மாற்றமடைந்ததையும் திருமுருகாற்றுப்படை வாயிலாக அறியமுடிகின்றது.

ஆயர்களின் திணைநிலைத் தெய்வமான மாயோனுடன், விஷ்ணுவின் வராக அவதாரம் (பரி 2: 16–19, 3:21–24, 4:22–24, 13:34–37), நரசிம்ம அவதாரம் (பரி 4: 10–21) வாமனம் (பெரும் 29–31, முல்லை 3–5, பரி 3: 20, 3:54–56, கலி 24:1) கிருஷ்ணவதாரம் (பரி, 3: 31, 32, கலி 103: 53–58) முதலியன இணைத்துக் கூறப்பட்டுள்ளன எனவும் பாற்கடல் கடைதல் (பரி : தி : 1 : 64–71) மோகினி வடிவெடுத்தல் (பரி 3 : 33, 34) அன்ன உருவெடுத்தல் (பரி 3: 25, 26) போன்றவையும் மாயோனுடன் இணைத்துக் கூறப்பட்டுள்ளன என்னும் இலக்கியச் சான்றுகள் இங்கு நோக்கத்தக்கனவையாகும்.

சிவனுடன் திரிபுரமெரித்தல் (புற 55: 1–4, பரி 5:22–27 கலி 2:1–8), இராவணன் கைலாயமலையைப் பெயர்த்தல் (கலி : 38 : 1–5) பாற்கடலில் பிறந்த நஞ்சையுண்ணல் (மலைபடு–83, புறம் 55 : 4, 91 : 6, 7) கங்கையைத் தலையில் தாங்குதல் (பரி 9: 4–6, கலி 38:1) போன்ற செய்திகளையும் இலக்கியங்கள் வாயிலாக அறியப்படுகின்றன.

இந்திரன் அகலிகைப் பற்றியும் (பரி 9 : 50–52) இராகு, கேதுக்கள் சூரியனைப் பற்றுவதான கிரகணத் தொன்மம், பார (புறம் 2: 13–16, சிறுபா 238–241, கலி 25:1–4, 101: 18–20, 108:13, 104: 57–59, 25:7,8, 101: 18, 20, 52: 2–3),

இராமாயண (அகம் 30 : 13–16, புறம் 378: 21) கதைக்கூறுகள் பலவும் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன.

அந்தணர்கள் அரசர்களிடம் இணக்கமாய் இருந்ததையும், வேள்வி வேட்டல், கல்வி புகட்டுதல் போன்ற பணிகளை மேற்கொண்டதையும், அந்தணர்களை அரசர்கள் போற்றியதையும் மேற்கூறிய சான்றுகள் உறுதிசெய்கின்றன. மேலும், பல்வேறு சமுதாயப் பிரிவினரின் வழிபாட்டு நெறிகளை எல்லாம் ஒரு தெய்வ (பெருந்தெய்வ) வழிபாட்டிற்குள் கொண்டு வந்ததையும் அறியமுடிகிறது.

### VI. 2. *அரச மேலாண்மையும் இறையாண்மையும்*

தமிழக மக்கள் இறைவனிடத்தில் விரும்பியது பொன்னும், பொருளும், போகமுமல்ல, அன்பும், அருளும் அறனுமேயாகும். நாடாளும் அரசனைக் கண்டால் ஆண்டவனையே கண்டதுபோல் இன்பம் எய்துள்ளனர் நம் மக்கள். நெல்லும் உயிரன்று நீரும் உயிரன்று, மன்னனே உயிர் (புறம் : 186) எனும் நிலையால் அரசனே உலக நல்வாழ்வுக்கு அடிப்படையானவன் எனும் கருத்தை முன்வைக்கும் "பொருண்மொழிக் காஞ்சிப்பாடல்கள் அரச மேலாண்மையைப் பாடியுள்ளன எனலாம். மேலும் அரசனைத் தெய்வங்களுடன் இணைத்துப் பாடும்" பூவைநயம் பாடல்களும் சங்க காலப்புலவர்களால் பாடப்பட்டுள்ளன.

> **"நீ, உடன்று நோக்கும்வா யெரிதவழ**
> **நீ நயிந்து நோக்கும்வாய் பொன்புப்பச்**
> **"செஞ்ஞாயிற்று நிலவு வேண்டினும்**
> **வெண்டிங்களுள் வெயில் வேண்டினும்**
> **வேண்டியது விறைக்கு மற்றவை யாகான்"** -**புறம் 38: 5-9**

அரசன் ஞாயிற்றில் குளிர்ச்சியையும், திங்களுள் வெயிலையும் விளைவிக்கும் ஆற்றல் வாய்ந்தவன் என்றும் இலக்கியங்களில் புகழப்படுகிறான்.

> **"கால்பார் கோத்து ஞாலத் தியக்கும்**
> **காவற் சாகாடு கைப்போன் மாணின்**
> **ஊறின்றாகி யாறினது படுமே"** - **புறம் 185: 1-3**

காப்பாகிய சகடத்தைச் (வண்டியைச்) செலுத்துபவன், மாட்சிமைப் பட்டவனாக இருக்க வேண்டும் எனக் கூறுவதோடு மன்னன் உயிர்த்தே மலர்த்தலையுலகம் (புறம்: 186–2) என மன்னன் உயிராகவும் குறிப்பிடப்பட்டுள்ளான் என்பது இங்குப் பெறப்படும் செய்தியாகும். எதையும் படைத்துக் காக்கவல்ல ஆற்றல் வாய்ந்தவனாகக் காட்டப்பட்ட தெய்வங்களுடன், மன்னர்கள் இணைத்துப் பேசப்பட்டுள்ளனர் என அறியமுடிகின்றது. ஆகவேதான் மன்னர்கள் இறைவன் எனவும் அழைக்கப்பட்டுள்ளனர்.

> **"கூற்றொத் தீயே மாற்றருஞ் சீற்றம்**
> **வலியொத் தீயே வாலி யோனைப்**
> **புகழொத் தீயே யகழுந் நடுநனை**
> **முருகொத் தீயே முன்னியது முடித்தலின்**
> **ஆங்தாவ் கவரவ ரொத்தலின் யாங்கும்**
> **அரியவு முறவோ நினக்கே"** **(புறம் 56 : 11-16)**

எனப் பாண்டிய மன்னர் இலவந்திகைப் பள்ளி துஞ்சிய நன்மாறன் கோபம், வலிமை, புகழ், எண்ணியது முடித்தல் எனும் இயல்புகளால் சிவன், பலராமன், மாயோன், முருகன் இவர்களோடு ஒப்பிட்டுக் காட்டப்பட்டுள்ள செய்தியினை இலக்கியத்தின் வாயிலாகப் பெறமுடிகின்றது.

"ஒரு நாட்டை ஆளும் வேந்தனே பரமேசுவரன் எனவும், அவனது கடமைகள் உழவு, பசுக்காவல், வாணிகம், செங்கோல்செழுத்துதல் முதலியனவாகும். இவ்வின்றியமையாத செயல்களின் அடிப்படையிலேதான் அரசனை மக்கள் கண்டார்கள்" (79) என்பர்.

> **"நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே**
> **மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்**
> **அதனால் யானுயிர் என்பதறிகை**
> **வேன்மிகு தானை வேந்தற்குக் கடனே!"** **(புறம் 186)**

"இந்திரன், வாயு, யமன், தீ, கதிரவன், குபேரன் ஆகிய தெய்வங்களின் தன்மைகளைக் கொண்டு பிரமன் அரசனைப் படைத்தான் எனவும், அரசன் மற்றவர்களைப் போன்று சாதாரண மனிதன் அல்லன் என்றும், மாறாக மக்கள்

முன் தோன்றிய ஒரு பெரிய தெய்வத்தின் (சிவன்) மானிட வடிவமானவன் (மனுதர்மம் 7: 37–38)''[80] அரசனை இந்திரனோடும், யமனோடும் ஒப்பிட்டு அர்த்த சாத்திரம் விளக்கியுள்ளது இங்கு ஆய்வின் வாயிலாகப் பெறுகின்ற செய்தியாகும்.

''அரசர் கண்கூடாக அறிவும் தெளிவும் உடையோர் ஆதலின் இந்திரனையும், மறலியையும் ஒப்பாவர் என்றும் அவ்வரசரை அவமதிப்போரைத் தெய்வமும் ஒறுப்பதாகும். எனவே அரசர் அவமதிக்கத்தக்கவரல்லர் (கொளடலீயம் 1: 13பக் 75, 76) குறிப்பிடுகின்றது''[81].

எந்தச் செயல் தொடங்கினும் முதலில் மன்னரை வாழ்த்தித் தொடங்குதல் அக்கால மரபாக இருந்துள்ளதைக் காணமுடிகின்றது. இந்திரவிழாவூரெடுத்த காதையில் இடம்பெறும் நிகழ்சிகளில் மூன்று இடங்களில் மன்னனை வாழ்த்திப் பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

***"பெருநில மன்னன் இருநில மடங்களும்***
***பசியும் பிணியும் வகையும் நீங்கி***
***பசியும் பிணியும் சுரக்கென வாழ்த்தி"***
***- சிலம்பு இ.வி.காதை 71-73***

***"வெற்றி வேந்தன்கொற்றம் கொள்ளென"***
***-சிலம்பு இ.வி. ஊ. கா. 85***

***"அரைசுமேம் பரீஇய அகனிலை மருங்கில்***
***உரைசால் மன்னன் கொற்றம் கொள்கென "***
***- சி.இ. ஊ.கா. 161, 162***

ஆடு, மாடு முதலியவற்றைப் பலிகொடுத்து வணங்குதல் தொன்றுதொட்டு வழங்கும் மரபாக உள்ளதை நாம் காண்கின்றோம். முரசு போன்றவற்றிற்கு மறியறுத்துப் பலியிட்டுள்ளனர். மக்களும் தங்களைத் தாங்களே பலியிட்டுக் கொள்ளும் வழக்கம் இருந்ததென்பதைச் சிலம்பு கூற காண்கின்றோம்.

மருவூர்ப் பாக்கத்து மறவரும், பட்டினப்பாக்கத்து படைகெழு வீரரும் இந்திர விழாத் தொடக்கத்தில் நாளங்காடியில் ஒன்று கூடுகின்றனர் என்றும் நாளங்காடிப் பூதத்தின் முன்னர் தங்கள் தலைகளைத் தாங்களே வெட்டிப் பலிபீடத்தில் வைத்து

வெட்டிக் கொள்வதாக ஒரு நிகழ்ச்சி சுட்டப்பட்டுள்ளதையும், அரசனின் வெற்றி சிறப்பதற்காக இத்தகைய தலைப்பலி தரும் பழக்கம் இருந்துள்ளதையும், இது மன்னன் பொருட்டு அளிக்கப்படும் உயிர்க்கடனாக மதிக்கப்பட்டுள்ளதையும் இலக்கியங்கள் நமக்கு உணர்த்துகின்றன.

> **"சூர்த்துக் கடைசிவந்த சுடுநோக்குக் கருந்தலை**
> **வெற்றி வேந்தன் கொற்றம் கொள்கென**
> **நற்பலி பீடிகை நலங்கொள வைத்தாங்கு**
> ***உயிர்ப்பலி உண்ணும் உருமுக்குரல் முழக்கத்து"* (*சிலம்பு* 84-87)**

இவ்வாறு அரசனைத் தெய்வங்களின் பண்புகளைக் கொண்டவனாக, குறிப்பாக இந்திரன், யமன் ஆகியோரின் பண்புகளைக் கொண்டவனாகப் புனையும் இயல்பு படிப்படியாக மாறி திருமாலின் வடிவம் என்று சொல்லும் மரபு உருவானது என்பதை அறியமுடிகின்றது.

மகாபாரதம் வனபர்வதத்தில் சொல்லப்பட்டுள்ள ஒரு நிகழ்ச்சியினை இங்கு மேற்கோளாகக் காட்டலாம், "அத்திரி, வைஸ்யராசனைப் புகழ்ந்தார் எனவும், கௌதம மகரிஷி இந்திரன் யாவருக்கும் அரசனாக இருப்பதால் அவனைப் புகழலாம், ஆனால் நீ வைஸ்யராசனைப் புகழ்ந்தது தவறு என்று கூறுகிறார் என்றும் அதற்குச் சனத்குமாரர் எல்லா அரசர்களிடத்தும் மகாவிஷ்ணுவின் அம்சம் இருப்பதால் அவர்களைப் புகழ்ந்து கூறலாம் என்றும் எடுத்துரைக்கிறார் என்பர். "[82]

### VI. 2. *(அ) திருமங்கை ஆழ்வார்*

திருமாலோடு மட்டுமின்றி, என்றுமே தன் இயல்பு மாறாது நிலைத்து நிற்கும் ஞாயிற்றோடும் ஒப்பிட்டு பாடியுள்ளனர்.

> **"ஞாயிறு போற்றதும் ஞாயிறு போற்றதும்**
> **காவிரி நாடன் திகிரிபோற் பொற்கோட்டு**
> **மேரு வலந்திரித லான்" (சிலம்பு வ.உ.கா. 23)**

நாட்டையாளும் அரசன் வேறுபாடுகளுக்கு அப்பாற்பட்டவனாக அறநெறியில் நம்பிக்கை கொண்டவனாக இருத்தல் வேண்டும் என அறிவுறுத்தப்பட்டுள்ளார்கள் எனவும், அரசர்கள் மக்களின் காவலன் என்று அழைக்கப்பட்டதன் காரணம்

அவர்களின் சார்பற்ற தன்மையேயாகும் என்றும், செங்கோல் வளையாமையே அரசியல் அறத்தின் இலக்கணமாகவும் வலியுறுத்தப்பட்டது என்பன போன்றவை குறிப்பிடத்தக்க செய்திகளாகும்.

**"முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு**
**இறை என்று வைக்கப்படும்" (வள்ளுவம்)**

### VII. *திருக்கோயில்கள் தோற்றம் :- முற்காலமும், பிற்காலமும்*

தமிழகத்தில் சிவன், திருமால், முருகன், சக்தி (அம்பாள்) போன்ற கடவுளர்க்கே வானளாவ உயர்ந்த கோபுரங்களுடன் கூடிய கோயில்கள் உள்ளன. தமிழக வரலாற்றில் இன்றைய நிலையில், இப்பொழுதுள்ள கோயில்களும், இக்கோயில்களுள் வணங்கப்படும் தெய்வங்கள் மட்டுமே இடம்பெறவில்லை என்றும், தற்போது கோயில் கொண்டுள்ள கடவுளர் வரிசை மட்டுமின்றி, பழந்தமிழர்களாலும், சங்ககாலத்திலும் வணங்கப்பெற்ற கடவுளர் வரிசையும், கோயில்களுள் உள்ளன என்றும் அறிய முடிகின்றது. அவை சிறுதெய்வங்கள், ஐந்திணைத் தெய்வங்கள், பெருந்தெய்வங்கள் என நிலப்பாகுபாட்டின் அடிப்படையிலும் தோற்ற அடிப்படையிலும், வழிபாட்டின் அடிப்படையிலும் பல்வேறு காலகட்டங்களில் தமிழர்களால் வணங்கப்பட்டுள்ளன. இன்றும் வணங்கப்படுகின்றன என்பது வரலாற்றுண்மையாகும்.

சிவன், திருமால், முருகன் போன்ற தெய்வங்களுக்குச் சங்ககாலம் தொட்டு இன்றுவரை கோயில் கட்டும் மரபும், வழிபாட்டு முறைகளும் உள்ளன எனலாம். கொற்றவை என்ற பாலைத்தெய்வ வழிபாடு காளி, மாரியம்மன், துர்க்கை என்ற பெயர்களில் சக்தி வழிபாடாகத் தொடங்கியதே. எனினும் இயற்கை வழிபாட்டினும், ஐந்திணைத் தெய்வங்களிலும் சில கடவுளர்க்குத் தனிப்பட்ட கோயில் என்பது கிடையாது. உதாரணமாக வருணன், இந்திரன், விசுவபிரம்மா, அக்கினி, ஞாயிறு, திங்கள் போன்ற தெய்வங்களைக் கூறலாம்.

சங்ககாலத்தில் சமய வளர்ச்சி குறிப்பிடத்தக்க வகையில் ஏற்பட்டது எனலாம். அக்கால கட்டிடத்தில் ஆரிய நாகரிகக் கலப்பினால் வேதவேள்வியும், கருங்கற்களால் கோயில் கட்டும் மரபும், குடமுழுக்கு, விழாக்கள் நடத்தி, தினமும் பூசை செய்யும் முறையும் வந்தபோது வணங்கப்பட்ட தெய்வங்களுக்குக் கோயில்கள் பரவலாகக் கட்டப்பட்டுள்ளன. இக்கோயில்கள் கட்டும் மரபு உருவானபிறகு எழுப்பப்பட்ட கோயில்களில், இயற்கை வழிபாட்டுத் தெய்வங்களான, அக்கினி, ஞாயிறு, திங்கள், (சூரியர் சந்திரர்) இராகு, கேது என்பனவும், ஐந்திணைத் தெய்வங்களான இந்திரன், வருணன் போன்றவர்களின் வழிபாடுகளும் விடுபடாத வண்ணம் அஷ்டதிக் பாலகர்கள், என்று கோயில்களில் நிர்மானம் செய்யப்பட்டு வழிபாட்டு முறைகளும் உருவாக்கப்பட்டன.

சிவபெருமான் கோயில் முக்கட் செல்வன் நகர் என்று சுட்டப்பட்டுள்ளது. இக்கோயில் மரம், சுண்ணாம்பு போன்ற பொருட்களால் கட்டப்பட்டதால், சிதைந்து அழிவுக்குள்ளானது என அகநானூறு குறிப்பிடுகிறது.

> **"இட்டிகை நெடுஞ்சுவர் விட்டம் வீழ்ந்தென**
> **மணிப்புறாத் துறந்த மரஞ்சேர் மாடத்து**
> **எழுதணி கடவுள் போகலின் புல்லென்று**
> **ஒழுகுபலி மறந்த மெழுகாய் புற்றிணை" - அகம் 167**

"இக்கோயில்கள் யாவும் சுதையாலும், செங்கல்லாலும் கட்டப்பட்டவை. இவை தவிர மரத்தாலயே கோயில்கள் கட்டப்பட்டிருக்க வேண்டும் என வரலாற்று அறிக்கைகள் கூறியுள்ளனர்." (83) கேரளத்தில் இன்றளவும் அத்தகு கோயில்கள் உள்ளன. குருவாயூரப்பன் கோயில் இவ்வமைப்பேயாகும். இன்றும் தில்லையிலுள்ள, சிற்றம்பலமாகிய சபரிமண்டபம் மரத்தாலானதே. அதன் கூரை கெடாமல் தடுப்பதற்காகவே அது பொன்னோடு வேயப்பட்டது என்பதனைக் காண்கின்றோம்.

நாயன்மார்களும் ஆழ்வார்களும் வாழ்ந்த காலத்தில் நூற்றுக்கணக்கான கோயில்கள் இருந்துள்ளன என்றும் அவையாவும் செங்கற்களால் ஆனவையே

என்றும் அறியமுடிகின்றது. சங்ககால இறுதியில் கோச்செங்கணான் சிவபெருமானுக்காக எழுபது கோயில்கள் எழுப்பியதாகத் திருநாவுக்கரசரும், திருமங்கையாழ்வாரும் பாராட்டியுள்ளதால் அறிகின்றோம்.

அப்பர் பெருமான் அவன் கட்டியவை எழுபத்தெட்டு என்று கூறுவதோடு அவற்றின் வகைகளையும் குறித்துள்ளார் என்பதனைப் பாடலால் அறியலாம்.

“பல்லவர் காலம் கோயிற் கட்டிடக் கலையின் தொடக்கக் காலம் எனலாம். பின்னால் வந்த கோயில்கட்கெல்லாம் முன்னோடியாக விளங்குபவை பல்லவர் காலத்துக் கோயில்களேயாகும். தமிழகக் கோயிற்கட்டிடக்கலை பல்லவர் காலத்தில் உருவாகிச் சோழர் காலத்தில் செம்மையுற்று, பாண்டியர், நாயக்கர் காலத்தில் வளர்ச்சியும் முடிவும் பெற்றது”[84] என்றே கூறலாம்.

### VII. 1 *சேதுநாட்டுத் திருக்கோயில்கள்*

#### *சேது மன்னர்கள்*

“இராமேஸ்வரம் கோயிலுக்குச் செல்லும் பயணிகளுக்குக் கள்வர்களால் அபாயம் ஏற்பட்டுக் கொண்டிருந்தன. மன்னர் திருமலை நாயக்கரிடம் முறையீடு செய்யப்பட்டதால் அவர் உடையாத்தேவர் என்பவரை நியமித்து, இராமேஸ்வர வழித்தடத்தில் கள்வர்கள் பயத்தை நீக்கச் செய்தார். அவ்உடையாத்தேவர் வம்சா வழியினரே சேதுபதிகள் எனவும் அறியப்படுகிறது

இராஜஇராஜசோழனும் அவன் மகன் இராஜேந்திர சோழனும் இலங்கை படையெடுப்பை மேற்கொண்ட போது அவரது படைத்தலைவர்களில் ஒருவரை இராமேஸ்வரம் பகுதிக்குப் பொறுப்பாளராக நியமித்தார். அவ்வம்சத்தினரே சேதுபதிகள் என்பதும் ஓர் செய்தியாகும்”[86]

“இலங்கை சென்று சீதாப்பிராட்டியை மீட்டு வந்த இராமபிரானைப் பிரம்மஹத்தி தோஷம் தொடர்ந்து வந்ததால் அதற்குத் தோஷ நிவர்த்தியாக

இராமேஸ்வரம் கடற்கரையில் இராமனும் சீதாப்பிராட்டியும் சிவலிங்கம் பிரதிஷ்டை செய்து வழிபாடு செய்தனர் எனவும், அதன்பிறகு அயோத்தி திரும்புவதற்கு முன்னர் அங்கு மிகுதியாக வாழ்ந்த மறவர் இனத் தலைவரைச் சேது அணையைக் காத்து வருமாறு நியமித்தார் எனவும் அம்மறத் தலைவரது வழித் தோன்றல்களே சேதுபதிகள் என்பதும் செய்தியாகும்'' (87)

சேதுபதி மன்னர்களது ஆட்சி கி.பி. 15ஆம் நூற்றாண்டு தொடக்கம் முதல் இருந்ததாகத் தெரிகிறது. இச்சேதுபதி மன்னர்களின் ஆட்சிக்குட்பட்ட திருக்கோயில்களே சேதுநாட்டுத் திருக்கோயில்களாகும். இவற்றின் தோற்ற வரலாற்றைச் சுருக்கமாக இங்குக் காணலாம்.

### VII. 2. *(அ) இராமேஸ்வரம் திருஇராமநாதசுவாமித் திருக்கோயில்*

கி.பி. 7ஆம் நூற்றாண்டில் ஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் இங்கு வருகை தந்து இறைவனைப் பாடிப் போற்றியபொழுது இந்த இறை இல்லம் ஒரு சிறு கற்றளியாக இருந்தது எனத் தெரியவருகிறது. சேது மன்னர்கள் தங்களது கட்டுமானத் திருப்பணியை முதன் முதலில் தொடங்கியதை, கி.பி. 1414, 1434 ஆம் வருடத்திய சேது மன்னர்களது கட்டுமானங்கள் பற்றிய செய்திகள் குறிப்பிடுகின்றன. இதன் பின்னர் நடைபெற்ற திருப்பணிகைளயும், கி.பி. 1622க்கும் 1630க்கும் இடைப்பட்ட காலத்தில் ஆட்சி செய்த கூத்தன் சேதுபதி மன்னரின் கட்டுமானப் பணிகளைப் பற்றியும் உறுதிசெய்யும் வகையில், கூத்தன் சேதுபதி மன்னரது கி.பி. 1623ம் ஆண்டைச் சேர்ந்த கல்வெட்டு இக்கோயிலின் முதலாவது பிரகாரத்தின் மேற்குச்சுவற்றில் இன்றும் உள்ளதைக் காணமுடிகின்றது.

### VII. 2. *(ஆ) அருள்மிகு ஆதிஜெகநாதப் பெருமாள் திருக்கோயில்-திருப்புல்லாணி*

இக்கோயில் இராமபிராணின் தந்தை தசரதனின் வாழ்க்கையோடு தொடர்புடையதும், இராமனின் இலங்கைப் படையெடுப்பின்போது தொடர்புடையதுமாகும். தசரத சக்கரவர்த்தி தனக்குப் புத்திரவரம் வேண்டி

இங்குத்தான் புத்திரகாமேஸ்டியாகம் செய்ததாக கர்ண பரம்பரைசெய்தி உண்டு. இராமாயணக் காலத்துடன் தொடர்புடைய இக்கோயில் ஆரம்ப காலத்தில் கற்றளியாகவும் பின்னர் கற்கோயிலாகவும் உருவானது என்ற செய்தியினை இங்குப் பெறமுடிகின்றது.

**VII. 2.** ***(இ) திருஉத்தரகோசமங்கை திருமங்களநாதசுவாமித் திருக்கோயில்***

இக்கோயிலின் கட்டமைப்பு பாண்டியர் காலத்தைச் சார்ந்தவை. பாண்டியர்கள் தொன்றுதொட்டு ஆட்சிபுரிந்து வந்த நிலம் பாண்டி மண்டலம். இப்பாண்டி மண்டலம் மதுரை, திருநெல்வேலி, இராமநாதபுரம், புதுக்கோட்டையின் சிலபகுதிகள் என்பதை நெல்லையப்பர் கோயில் ஆய்வு தெரிவிக்கின்றது. பாண்டியர்கள் காலத்தில் இவ்வுத்தரகோசமங்கை தலைநகராகத் திகழ்ந்ததாகவும், ந.சுப்புரெட்டியார், மாணிக்கவாசகர் என்ற தம் ஆய்வு நூலில் குறிப்பிட்டுள்ளார். பாண்டியர்கள் காலத்தில் கட்டுமானப்பணிகள் தொடங்கினாலும், சேதுபதி மன்னர்கள் காலத்திலேயே இக்கோயில் நன்கு வளர்ச்சியடைந்துள்ளது. சேதுபதி மன்னர்கள் காலத்தில் இராயர் என்ற பெயருடைய தலைவரின் கீழ் இக்கோயில் கிழக்கு வாசல் மூலவர் இராஜகோபுரம் நிறுவப்பட்டுள்ளதையும் பெறமுடிகின்றது.

*தொகுப்புரை*

மக்களிடம் வழிபாடு தோன்றிய பின்னர் திருக்கோயில் நாகரிகம் கால்கொண்டுள்ளது. வழிபாட்டின் முதல் நிலையாக இயற்கை வழிபாடு அமைந்தது எனவும், இவ்வியற்கை வழிபாட்டில் மரவழிபாடே ஆரம்பமாக அமைந்தது எனவும் அறியமுடிகிறது.

வழிபாட்டின் அடுத்த நிலையாக நடுகல் வீரவழிபாடு என்ற முறை வழக்கத்தில் இருந்துள்ளது. இந்நடுகல் வீரவழிபாட்டில் நடுகல் தெய்வ வழிபாட்டுமுறை, இற்கொண்டு புகுதல், பள்ளிப்படைக்கோயில் முதலியன இடம்பெற்றுள்ள செய்திகளும் சான்றுகளுடன் விளக்கப்பட்டுள்ளன.

நடுகல் வழிபாட்டில் இருந்து தோன்றியதே சிறுதெய்வ வழிபாட்டுமுறை என அறியப்படுகின்றது. இச்சிறுதெய்வ வழிபாட்டு முறையில், சாத்தன், ஐயனார் போன்ற சிறுதெய்வ வழிபாடு எவ்வாறு தோற்றம் பெற்றன பற்றியும், மன்னர்களிடமும், மக்களிடமும் அவை பிரசித்து பெற்ற விளங்கிய நிலையும் நன்கு விளக்கப்பட்டுள்ளது.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற ஐந்திணையுள் வழிபாட்டின் நிலைப்பாடு ஆய்வு செய்யப்பட்டு விளக்கப்பட்டுள்ளது. ஐந்திணை வழிபாட்டின் வளர்ச்சி நிலையாக சிவன், முருகன், பிரம்மா, திருமால், திருமகள், இந்திரன், கொற்றவை வழிபாடு ஆகியன மாற்றமும் ஏற்றமும் பெற்ற நிலை விவரிக்கப்பட்டுள்ளது.

ஆரியர்களின் வருகையால் வேள்விநெறி மன்னர்களிடத்தில் பரவிய சூழலில் மக்களிடத்தும் செல்வாக்குப் பெற்று விளங்கியது. வழிபாட்டு முறைகளில் மாற்றம் உண்டான வரலாற்றுச் செய்திகளும் பெறப்படுகின்றன. இக்காலகட்டத்தில் பல்கிப்பெருகிய திருக்கோயில்கள், ஆகம விதிப்படி உருவாக்கப்பட்ட விதமும் அறியலாகின்றது. இதன் தொடர்ச்சியாக ஆய்வுக்குட்பட்ட சேதுநாட்டுத் திருக்கோயில்களின் தோற்ற வரலாறும் விளக்கப்படுகின்றது.

வழிபாட்டின் அடிப்படை நிலையான மரவழிபாடு, நடுகற்கள் என மாற்றமடைந்து பல்வேறு பரிணாமங்களையும் பெற்று ‘‘திருக்கோயில்கள் தோற்றம்’’ என்ற நிலைப்பாடு உருவானது வரையிலும் சான்றுகள் வழி ஆய்வு செய்யப்பட்டு மேற்கண்ட செய்திகள் பெறப்பட்டுள்ளன.

*அடிக் குறிப்புகள்*


1. ஜெ. ஸ்ரீசந்திரன், சிலம்பு மூலமும் உரையும். ப–46.
2. தட்ஷிணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப–166.
3. A. Social History of the Tamils, Part – I, Page 409, 410
4. தட்ஷிணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும் பண்பாடும், பக் 167, 168
5. மேலது, ப. 169
6. சு. சௌந்திரபாண்டியன், தமிழர் சிந்தனை–சமயக்கோட்பாடுகள், ப.82.
7. பரிபாடல். பா.எண். 8, 126
   பெரும்பாணாற்றுப்படை, ப.எ–75
   திருமுருகாற்றுப்படை, பா.எண்–225
8. க.நெடுஞ்செழியன், தமிழ் இலக்கியத்தில் உலகாய்தம், ப–321
9. புறம்–260
10. புறம்–199
11. நற்–343
12. நற்–216
13. நற்–303
14. அகம்–152
15. க. நெடுஞ்செழியன், தமிழ் இலக்கியத்தில் உலகாய்தம், ப–323
16. மேலது, ப–324.
17. சு. சௌந்திரபாண்டியன், தமிழர் சிந்தனை, ப–128
18. வ. தேனப்பன், ஒன்பது நகரக்கோயில்கள், ப–2
19. மேலது, பக்–81, 82
20. த. தனபாக்கியவதி, தமிழ் இலக்கியத்தில் திருமால் வழிபாடு,ப–98.
21. நாராயணசுவாமி, தமிழக அற்புத ஆலயங்கள்,ப. 42.
22. செந்துரைமுத்து, திருத்தலங்கள் கூறும் தத்துவங்கள், ப–27.
23. அ. தட்சிணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப–129.
24. க. நெடுஞ்செழியன், தமிழ் இலக்கியத்தில் உலகாய்தம், ப–311.
25. மேலது, ப–312
26. மேலது, ப–313
27. கல்கி, பொன்னியின் செல்வன், ப–157.
28. ஜெகாதா, விடுதலை வேங்கை, ப–112,
29. நடனகாசிநாதன், கல்வெட்டு, ப–41.

30. நடன காசிநாதன், தமிழர் தெய்வங்கள், ப–24.

31. சூடாமணி நிகண்டு, ப–13. தேவப்பெயர்த்தொகுதி,

32. புறம் 227

33. நற் : 152, 225, அகம் : 47, 81, 143, 175

34. நற் : 262, அகம் 13, புறம் 164, 165

35. புறம் : 27–30, 325

36. அகம் : 14, புறம் 245

37. TA. Gopinatha Rao.

38. C. Minakshi, Elements of India, I conagraphy Page 485, 486 Vol-II, Part-2. Administration and Socila lite under the pallavas-P. 143.

39. முத்து எத்திராசன், காக்குத்தி அய்யனார், ப–78,

40. நடனகாசிநாதன், தமிழர் தெய்வங்கள், ப–26.

41. சிலம்பு, புகார் காண்டம், வரிகள் 20–39

42. இரா. பூங்குன்றன், அத்திகோசத்தார்–தொல்காப்பியக் கருத்தரங்கு தொகுதி–2, ப–79.

43. நடன காசிநாதன், தமிழர் தெய்வங்கள் ப–27.

44. சிலம்பு, கணாத்திறம் உரைத்தகாதை வரி–15.

45. சீ. சசிவல்லி, சமயச் சொல்லகராதி, ப–144.

46. நா. மார்க்கிய காந்தி, ஐயனார் வழிபாடு–கட்டுரை, ப–38.

47. அ.கா. பெருமாள், தொல்பழம் சமயக்கூறுகள், ப–261,

48. அ. தட்சிணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப–192.

49. சு. சௌந்தரபாண்டியன், தமிழர் சிந்தனை, பக், 1, 7, 8, 9

50. மேலது, பக்–160, 161.

51. அ. தட்சிணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப–195.

52. சு. சௌந்தரபாண்டியன், தமிழர் சிந்தனை ப–7.

53. பரி.பா. பகுதிகள் 7–1–3

54. முல்லை பா–1–3

55. பரி.பா. 1–36–39

56. முல்லை. கலி–5–9–10

57. முல்லை. கலி–4–78, 79

58. மதுரைக்காஞ்சி 456–60

59. பெரும்பா–29–30

60. புற–56–5–6

61. பரி–1: 36–39

62. பரி–3: 31–35

63. த. தனபாக்கியவதி, தமிழ் இலக்கியத்தில் திருமால் வழிபாடு ப–12,

64. பரி–1–3–கடவுள்வாழ்த்து

65. பரி–6–13

66. பரி–2: 28–35

67. பா–3: 90

68. அ. தட்சிணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப–200

69. தொல். பொருள் : அடி 56

70. க. நெடுஞ்செழியன், தமிழ் இலக்கியத்தில் உலகாய்தம் ப–340.

71. மே.கு.நூ. ப–342

72. மே.கு.நூ. பக்–342, 43

73. கே.எஸ். இராமசாமி சாஸ்திரி, மகரிஷிகளின் வரலாறு ப–35.

74. த. தனபாக்கியவதி, தமிழ் இலக்கியத்தில் திருமால் வழிபாடு, ப–87.

75. அ. தட்சிணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப–314

76. மேலது ப.314

77. அ. தட்சிணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப–314.

78. மேலது, ப–313

79. மேலது, ப–316

80. மேலது ப–318

81. எஸ்.எம். கமால், சேதுபதி மன்னர் வரலாறு, ப.14.

82. மேலது. ப–14

83. மேலது. ப–14

84. மேலது. ப–14

85. மேலது. ப–71

86. இராமநாதபுரம் மாவட்ட பயணியர் கையேடு, ப–9, இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை வெளியீடு, இராமநாதபுரம் சமஸ்தானம்.

87. எஸ்.எம். கமால், சேதுபதி மன்னர் வரலாறு, ப–71.

# இயல் – 2

## சங்க இலக்கியங்களில் ஆலய வழிபாடு

*முன்னுரை*

சங்க காலத்தில் ஆலயம் (திருக்கோயில்) என்ற அமைப்பு நிலைபெறுவதற்கு முன் சங்ககால மக்களிடம் பல்வேறு நிலையிலான வழிபாட்டு முறைகள் பழக்கத்தில் இருந்துள்ளதைச் சங்க இலக்கியங்கள் வழி அறியமுடிகின்றது. தெய்வ வழிபாட்டின் தொடக்க நிலையாக மக்கள் மரங்களை வழிபடத் தொடங்கினர் எனவும் அதன் வளர்ச்சி நிலையில் தாங்கள் வழிபடும் தெய்வங்களை மலைகளிலும், ஊருக்குள்ளும், இல்லத்திலும் நல்இருப்பு செய்யத் தொடங்கினர் என்றும் அறிய முடிகின்றது. தெய்வ நம்பிக்கை கால்கொண்டு வளர்ச்சி ஏற்பட்டபொழுது தமிழரின் ஐவகை நிலப்பாகுபாட்டிலும் தெய்வத்திரு உருவச் சிந்தனை நிலைபெறத் தொடங்கியதாக அறியமுடிகின்றது. இதன்பிறகே திருக்கோயில் வழிபாடு தோற்றம் பெற்று வளர்ச்சி அடைந்துள்ளதை அறிகின்றோம். இதன் அடிப்படையிலேயே திருக்கோயிலில் நாள் வழிபாட்டு முறைகள், திருவிழாக்கள் உண்டானதையும் அறியமுடிகின்றது. இவ்வாறு தெய்வ வழிபாட்டின் வழி தொடங்கி, திருக்கோயில் வழிபாடு என்ற நிலைப்புத்தன்மை உண்டானது வரை அறியலாகும் சங்ககால வழிபாட்டுச் செய்திகளைச் சங்க இலக்கியங்கள் வழி இங்கு நோக்கப் பெற்றுள்ளது.

### I. *சங்க இலக்கியங்கள்*

சங்கங்களில் வைத்து ஆராயப் பெற்ற இலக்கியங்களாதலால் அவை சங்க இலக்கியங்களாயின. “பாண்டிய மன்னர்கள் தமிழ்ச்சங்கம் நிறுவித் தமிழ் ஆய்ந்த காலத்தினைச் சங்க காலம் என வழங்குகின்றோம். கடல் கொண்ட தென்மதுரையிலும், கபாடபுரத்திலும், இப்பொழுதுள்ள கூடல் மாநகரமாகிய மதுரையிலும் அடுத்தடுத்துப் பாண்டியர்களால் மூன்று சங்கங்களும் முறையே தலைச்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் ஆகியன நிறுவப்பட்டதாக அறிகின்றோம். இவற்றுள் மூன்றவதாகிய கடைச்சங்கம் இன்றைக்கு 1800 ஆண்டுகட்குமுன்னே நிறுவப்பட்டது

எனவும், அறிய முடிகின்றது. இக்கடைச்சங்க காலத்தில் வாழ்ந்த செந்தமிழ் புலமைச் சான்றோர்களால் பாடப்பெற்ற செழும் பாடல்களுள், அடிவரவு பற்றியும் திணைவகை பற்றியும் தேர்ந்து தொகுக்கப் பெற்ற பத்துப்பாட்டு, எட்டுத்தொகை என்னும் பாடல்களே சங்க இலக்கியங்களாகும்"[1]என்பர்.

மேற்குறிப்பிட்ட சங்க இலக்கியங்கள் மக்களது வாழ்வியலில் அகமும் புறமுமாகிய ஒழுகலாற்றைக் குறித்துப் பாடப்பெற்றனவாயினும், மக்கள் வாழ்விற்கு இன்றியமையாத தெய்வ உணர்வையும், வழிபாட்டு நெறிகளையும் ஆங்காங்கே குறித்துச் சொல்லியுள்ளனர். பத்துப்பாட்டில் முதலாதவாக இடம்பெற்றுள்ள திருமுருகாற்றுப்படை, குறிஞ்சி நிலக்கடவுளாகிய முருகப் பெருமானிடத்து அன்பர்களை ஆற்றுப்படுத்தும் நிலையில் அமைந்துள்ளதை அறியமுடிகின்றது. இதனைப் பாடிய மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரர் தன் பாடலால் கடவுள், உயிர், உலகம் என்னும் முப்பொருள் பற்றிய உண்மைகளைக் குறிப்பிற் புலப்படுத்தியுள்ளமையை அறிய முடிகின்றது. பத்துப்பாட்டின் ஏனைய பிற பாடல்களில் தெய்வ வழிபாடு பற்றிய குறிப்புகள் ஆங்காங்கே இடம்பெற்றுள்ளதைக் காணமுடிகிறது.

எட்டுத்தொகையுள் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு, புறநானூறு ஆகியவற்றின் கடவுள் வாழ்த்தாக அமைந்த பெருந்தேவனார் பாடல்களும், கலித்தொகை கடவுள் வாழ்த்தான நல்லந்துவனார் பாடியபாடலும், பதிற்றுப்பத்துக் கடவுள் வாழ்த்தாகத் தொல்காப்பிய உரையிற் காணப்படும் பாடலும் சிவன், முருகன், திருமால் ஆகிய தெய்வங்களைப் போற்றிப் பரவுவனாக அமைந்துள்ளன. மேற்குறித்த கடவுள் வாழ்த்துப் பாடல்களேயன்றி அகத்திணை, புறத்திணை ஒழுகலாறுகளை விரித்துரைக்கும் இத்தொகை நூற் செய்யுட்களில் பண்டைக் காலத்தமிழ் மக்கள் மேற்கொண்டொழுகிய தெய்வ வழிபாடுகள் பற்றிய குறிப்புகள் ஆங்காங்கே இடம்பெற்றுள்ளதைக் காணமுடிகின்றது.

முக்கட் செல்வனாகிய சிவன், சேயோனாகிய முருகன், திருமால் (மாயோன்) அவரது உந்தித்தாமரையில் தோன்றிய நான்முகன், மாயோன் மகனாகிய காமன், இந்திரன் ஆகிய தெய்வங்களின் திருமேனி வண்ணமும், அவர்தம் ஊர்தியும், கொடியும், படையும், தாரும் முதலியன பற்றிய குறிப்புகள் புறநானூறு, கலித்தொகை ஆகிய தொகை நூல்களில், உவமை வாயிலாக விரித்துரைக்கப்பெற்றுள்ளதால் அறியமுடிகின்றது. சிவனுடைய உமை, கொற்றவை, திருமாலின் தேவியாகிய திருமகள், முருகன் தேவியராகிய வள்ளி, தெய்வானை போன்ற தெய்வங்களைப் பற்றிய குறிப்புகளும் சங்கட் செய்யுட்களில் இடம்பெற்றுள்ளதைக் காணமுடிகின்றது.

எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றாகிய பரிபாடல் "இன்னியல் மாண்தேர்ச்சி இசைப்பரிபாடல்" எனக் குறிப்பிடப்படுகின்றது. இது இயலிசைப் பாடல்களாகப் பாடப்பெற்று இசை வல்லோரால் பண்ணமைக்கப்பெற்ற இசைத்தமிழ் இலக்கியமாகும். எழுபது பரிபாடல்களால் இயன்ற இத்தொகை நூலில் திருமாலைப் போற்றிப் பாடிய பாடல்கள் முப்பத்தொன்றிலும், காடு கிழாளாகிய கொற்றவையைப் போற்றிப் பாடிய பாடல் ஒன்றும், தமிழ்வையைப் புனலாடல் விழாவினைப் புனைந்து போற்றும் பாடல்கள் இருப்பத்தாறும், தமிழ் நிலைபெற்ற மதுரைப் பதியினைப் போற்றும் பாடல்கள் நான்கும் அமைந்திருக்கக் காணலாம். இதனை,

> **"திருமால் கிருநான்கு செவ்வேட்கு முப்பத்**
> **தொருபாட்டுக் காடுகாட் கொன்று - மருவினிய**
> **வையையிரு பத்தாறு மாமதுரை நான்கென்ப**
> **செய்யபரி பாடற்றியும்"**(2)

என வரும் பழைய வெண்பாவாற் அறிகின்றோம். தெய்வத்திறம் போற்றும் தோத்திரப் பனுவலாகக் கடைச்சங்கத்தார் தொகுத்த எழுபது பரிபாடல்களில் இக்காலத்தில் முழுமையாகக் கிடைப்பன இருபத்திரண்டு முழுப்பாடல்களும், உறுப்புகளாகக் கிடைத்த சில பாடல்களின் பகுதிகளுமே என அறியமுடிகின்றது.

திருமாலிருஞ்சோலையில் கோயில் கொண்டருளியகாத்தற்கடவுளாகிய திருமால், திருப்பரங்குன்றத்தில் கோயில் கொண்டருளிய குறிஞ்சிக் கடவுளாகிய முருகப்பெருமான் ஆகிய தெய்வங்களின் அருள் நலன்களை இசையுடன் பரவிப்போற்றும் பண்நிறைந்த பாடல்களின் தொகுதியாக அமைந்தது பரிபாடல் என்னும் தொகைநூலாகும். இயற்கை வனப்பும், இயற்கைப் பொருட்களின் வாயிலாகத் தோன்றும் தெய்வ வனப்பும் ஆகிய இருவகை வனப்புகளே இசைப்பாடற்குரிய பொருள்வகை என்கின்றனர் சான்றோர். இவ்விருவகை வனப்புகளையும் தன்னகத்தே கொண்டு மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் வகையில் சங்ககாலத் தமிழ் மக்கள் மேற்கொண்டொழுகிய தெய்வ வழிபாட்டு முறைகளை விரித்துரைப்பது பரிபாடல் எனும் சங்க இலக்கிய நூலாகும். கடைச்சங்க காலத்திற்குப்பின் தோன்றிய, தேவாரம், திருவாசகம் முதலிய சைவத்திருமுறைகள், ஆழ்வார்கள் அருளிச் செய்த நாலாயிரத்திவ்விய பிரபந்தம் முதலிய பத்திமைப் பனுவல்களுக்கு அடிப்படையாக விளங்குவது இப்பரிபாடல் தொகுதியேயாகும் என்பதனை அறியமுடிகின்றது. திருமால், முருகன் ஆகிய தெய்வங்களை இசையுடன் பரவிப்போற்றும் பரிபாடல், திருமாலடியார்கள் தெளிந்துணர்த்திய மெய்ந்நெறிக் கொள்கையினையும், சிவனடியார்கள் மெய்ந்நெறிக் கொள்கையினையும், சங்க காலத்தில் தமிழகத்தில் பரவிய வைதீக நெறியையும் புலப்படுத்தும் முறையில் அமைந்துள்ளது எனலாம்.

மேலும் இச்சங்ககாலப் பாடல்கள், திருமால், முருகன், சிவன் போன்ற தெய்வங்களுக்குக் கோயில் இருந்ததையும், அங்கு நடைபெற்ற வழிபாடுகளையும் அவற்றோடு இயைந்த சங்ககால மக்களின் வாழ்க்கை நிலையையும் பரவலாக எடுத்தியம்பியுள்ளன என்பது குறிப்பிடத்தக்க செய்தியாகும்.

**II.** ***சங்க இலக்கியங்களில் தெய்வ வழிபாட்டின் தொடக்கநிலை***

சங்க இலக்கியங்களில் தெய்வம் அவ்வந்நிலத்துக் கருப்பொருள்களுள் ஒன்றாகக் கூறப்படினும் எல்லாப் பொருள்களினும் சிறந்ததாக மக்களால் முதற்கண்

போற்றத்தக்கது என்னும் உண்மையினைப் பண்டைத்தமிழ்ச் சான்றோர் மறவாது பேணிவந்துள்ளதை அறியமுடிகின்றது. தொல்காப்பியர், தெய்வத்தை முன்னிறுத்தியும், கருப்பொருள்களை எண்ணுமிடத்துத் தெய்வ உணர்வை தெய்வத்தை முதற்கண் வைத்தும், மக்களால் வழிபடுதற்குரிய தெய்வத்தின் சிறப்பினை நன்கு வலியுறுத்தியுள்ளதைக் காண்கின்றோம். மேலும் சங்கத்தமிழ் சான்றோர்கள் சங்கநூல்களில் தெய்வமாகிய கருப்பொருளை நிலைக்களன்களாகக் கொண்டு உள்ளுறை கூறுதல் கூடாதென்றும், தெய்வம் நீங்களாகவுள்ள ஏனைய கருப்பொருள்களைக் கொண்டே உள்ளுறையுவமை கூறுதல் வேண்டுமென்றம் வரையறை செய்தார்கள் எனலாம். இவ்வரையறையினை,

> **"உள்ளுறை தெய்வம் ஒழிந்ததை நிலமெனக்**
> **கொள்ளு மென்ப குறியறிந்த தோரே"**(3)

என வரும் சூத்திரத்தில் தொல்காப்பியனார் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளதால் அறியமுடிகின்றது. இதனை நன்கு சிந்திக்கும் பொழுது தொல்காப்பியனார்க்கு முற்பட்ட பண்டைத் தமிழ்மக்கள் தெய்வக் கொள்கையிற் கொண்டிருந்த நன்மதிப்பும், உறுதிப்பாடும் நன்கு புலப்படுகிறது.

கடவுளை வழிபட்டுப் போற்றுதல் மக்களது தலையாய கடமையென்பதும், வழிபடு தெய்வத்தின் திருவருளால் குறைவற்ற பெருஞ்செல்வத்துடனும், மக்கட்பேற்றுடனும் நெடுங்காலம் தன் சந்ததியினர், நிலைபெற்று இனிது வாழலாம் என்ற உண்மையினைத் தமிழ் சான்றோர்கள் தெய்வ வழிபாட்டின் மூலம் உணர்த்தியுள்ளதை அறியமுடிகின்றது. நினக்குத் தொழுகுலமாகிய தெய்வம் நின்னைப் புறங்காப்ப, இல்லற முதலிய நல்லறங்களாற் பழிபின்றி, புகழுடன் பெற்ற செல்வரோடு, செல்வமும் பெற்றுத் நான் புதல்வரும் இத்தன்மையராகி நீடுவாழ்வின் என்று தம்பால் அன்புடையாரைத் தெய்வத்தின் திருவருளைத் துணைகொண்டு வாழ்த்தினார்கள் எனலாம்.

இவ்வாழ்த்து புறநிலை வாழ்த்து எனப்பட்டது. எடுத்துக்கொண்ட செயல் இனிது நிறைவேறுதற்குக் காரணமாகிய கடவுள் தோன்றாத்துணையாய் நின்று

நின்னைத் துன்பம் தொடாதவாறு புறங்காப்பம் என வாழ்த்துதலாலும் புறநிலைவாழ்த்து எனப் பெயர் பெற்றுள்ளது எனலாம். இவ்வாழ்த்தினால் துள்ளலோசைத்தாகிய கலிப்பாவினும், தூங்கலோசைத்தாகிய வஞ்சிப்பாவினும் பாடப்பெறாது, இவையொழிந்த பாவினில் வரும் என்பதனை,

> **"வழிபடு தெய்வம் நிற்புறங் காப்பப்**
> **பழிதீர் செல்வமொரு வழிவழி சிறந்து**
> **பொலியான் என்னும் புறநிலை வாழ்த்தே**
> **காலிநிலை வகையும் வஞ்சியும் பெறா"**
>
> **(தொல். பொ.அதி. செய்யுளியல்-106)**

என வரும் நூற்பாவில் தொல்காப்பியர் வரையறுத்துள்ளதைக் காண்கின்றோம்.

வழிபடு தெய்வத்திற்குத் திருவுருவமைத்து, அத்திருவுருவத்தின் முன்னின்று பொருள்சேர் புகழ்த்திறங்களைச் செழும் பாடற்களால் போற்றிப் பரவுதல் சங்கத்தமிழ் முன்னோர் கொண்டொகுகிய வழிபாட்டு முறையாக அறிகின்றோம். இவ்வாறுப் போற்றிப் பரவுவதற்கு அச்செய்யுள், கலிப்பாவகை நான்கனுள் ஒத்தாழிசைக் கலிப்பாவும் ஒன்றாகும். இவ்ஒத்தாழிசைக்கலி வண்ணகம் எனவும், ஒருபோகு எனவும் இருவகைப்படும். இத்தகைய செய்யுளின் அமைப்பினை,

> **"ஒதத்தா ழிசைக்கலி இருவகைத் தாகும்"(4)**

எனவும்,

> **"ஏனை யோன்றே**
> **தேவர்ப் பராவுதல் முன்னிலைக் கண்ணே" (5)**

என்றும்,

> **"அதுவே**
> **வண்ணகம் ஒருபோ கெனவிரு வகைத்தேரு"(6)**

எனவரும் சூத்திரங்களால் தொல்காப்பியனார் குறித்துள்ளதைக் காணமுடிகிறது. இனித் தெய்வநம்பிக்கை காரணமாக எழுந்த வழிபாட்டின் பல்வேறு நிலைகளைக் காணலாம்.

### II.1. *தெய்வங்களை நல்இருப்புச் செய்தல்*

மலைகள், இல்லங்கள், ஆற்றங்கரை, முதலிய இடங்களில் எல்லாம் தாங்கள் வழிபடுகின்ற தெய்வத்தை நல் இருப்புச் செய்து வழிபட்டனர் எனக் கூறலாம்.

#### II.1.1. *மலைகளில் தெய்வம்*

**"அயிரை பரைஇ"** **(பதிற்.பத். பதிகம் 3)**

"அயிரை என்னும் மலையில் வாழும் கொற்றவைத் தெய்வத்தைத் தன் குலத்துள்ளார் செய்து வரும் வழிபாடு கெடாமல் வழிபட்டு' என்று பதிற்றுப்பத்து பழைய உரையாசிரியர் விளக்கம் தரக்காணலாம். தன்வழி, மரபுவழி முன்னோர், வெற்றி வேல்போர்க் கொற்றவையாகிய பழையோனை எவ்வாறு ஏத்திப் பரவினார்களோ அவ்வழிபாட்டு முறைகளில் எவ்வகையிலும் குறைவுபடாமலும், மாறுபடாமலும் பரவினர் என்னும் கருத்தைத் தன்குலத்துள்ளார் செய்து வரும் வழிபாட்டு கெடாமல் வழிபட்டு என உரையாசிரியர் நன்கு புலப்படுத்துவதைக் காணலாம்."[7] முன்னோர்கள் விதித்த வழிபாட்டு முறைகளை மாற்றக்கூடாது, அவ்விதிமுறைகள் மருவினால் வழிபாடு ஆகாது என்னும் குறிப்பும் பழைய உரையாசிரியரின் உரையால் தெரியவருகிறது. சினம் கொண்ட நிலையைக் காளி எனவும், போர்க்களத்தில் வெற்றி நல்கும் நிலையைக் கொற்றவை எனவும், சக்தியானவள் வழங்கப்படுவதை அறியமுடிகிறது.

**"கடவுள் அயிரையின் நிலைஇக் கேடிலவாக"(1-பதிற்.பத்து 8 : 79)**

அயிரை மலையில் மேவி நிலைபெற்று நிற்கும் கடவுள் எனப் பதிற்றுப்பத்து குறிப்பிட்டுள்ளது

**"......................................... தன்மலைத்**
**தெறல் அரும் மரபின் கடவுள் பேணி"**
**(அகம் : களியற் பா 13:3)**

தனது மலையில் வீற்றிருக்கும் கடவுளை மரபுநிலை வழுவாது பேணி வழிபட்டு என அகநானூறு கூறுகிறது.

"மலை உறை தெய்வம் குலம் முதல் வழுத்தி" (ஐங்: 259)

மலையில் வசிக்கின்ற தெய்வத்தைத் தங்கள் குலத்தார் அனைவரும் போற்றித் தொழுது வழிபடும் நிலையைப் பின்வரும் பாடலடிகள் உறுதிசெய்கின்றன.

"கடவுள் நிலையகிய கல்லோங்கு நெடுவரை
வடதிசை எல்லை இமயம் ஆக" (பதிற்.பத். 4:43)
"கடவுள் நித்தமாய் வீற்றிருக்கும்
உயர்ந்தோங்கிய இமயமலை" (பதிற்பத் :44)
"வரைதாழ்அருவி பொருட்டான் கடவுள்" (மதுரைக்காஞ்சி : 42)
"நனிமலைச் சிலம்பின் நன்னகரட வாழ்த்தி" (திரு.முரு.ஆள். 238)
"பிறங்குமலை மீமிசை கடவுள் வாழ்த்திக் கைதொழுது"
(குறிஞ். பாட்டு. 208)

மலை உச்சியில் வீற்றிருக்கும் கடவுளைக் கைகுவித்து வணங்கி என வழிபாட்டு முறை நிறுவுகிறது குறிஞ்சிப்பாட்டு.

"அணங்கு உடைநெடுவரை உச்சி" (அகம். 22)

திண்டி வருத்தும் தெய்வம் வீற்றிருக்கும் மலைஉச்சி.

### II.1.2. *ஊருக்குள் தெய்வ வழிபாடு*

"கொடுஞ்சுழிப் புகார்த் தெய்வம் நோக்கி" (அகம்.களிற். 110:4)

மலைமீது வீற்றிருந்து தங்களுக்கு அருள் வழங்குகின்ற தங்களின் வழிபடு தெய்வத்தைச் சங்ககால மக்கள், தாங்கள் வாழும் ஊரின் புறத்தேயும் எழுந்தருளப் பண்ண முற்பட்டார்கள் என்பது இச்சான்றால் உறுதிசெய்யப்படுகிறது.

### II.1.3. *இல்லத்தில் தெய்வம்*

சங்ககால மக்கள் தாங்கள் வழிபடும் தெய்வத்தினைத் தத்தமது இல்லங்களில் எழுந்தருளச் செய்தும், சிறப்பு செய்தும் பலிதூவியும் வழிபட்டதையும் அறியமுடிகின்றது.

"முருகுஎன உணர்ந்து முகமற் கூறி
உருவச் செந்தினை நீரொடு தூஉய்
நெடுவேற் பரவும் அன்னை" (அகம். 272 : 13-15)

மலையிலிருந்து, தங்கள் இல்லங்கள்தோறும் எழுந்தருளி அருள்பாலிப்பது முருகனே என்றுணர்ந்து, நல்வரவு கூறி வரவேற்று, செந்திணையை நீரோடு பலியாகத் தூவி அன்னை வணங்குகிறாள் என்று அகநானூறு கூறுகிறது. இப்பண்பு சங்ககால மக்கள், தங்கள் இல்லத்திற்கு வரும் விருந்தினரை முகமன் கூறி வரவேற்று சிறப்புச் செய்யும் உயரிய பண்பினைப் புலப்படுத்துகிறது எனலாம். மேலும்,

> **"நல்இறை மெல்விரல் கூப்பி**
> **நல்உறை கடவுட்கு ஆக்குதும் பலியே"** (அகம். 282: 17-18)

தங்கள் இல்லத்தில் நிலையாகத் தங்கி அருள் வழங்குகின்ற தெய்வத்தை இருகரம் கூப்பித் தொழுது, பலிதூவி உபசரித்து வணங்கினார்கள் என்றும் குறிப்பிட்டுள்ளதைக் காண்கின்றோம்.

இல்லத்திற்குள் தெய்வத்தினை எழுந்தருளச் செய்வதன் மூலம் இல்லமும், சுற்றுப்புறமும் தூய்மையும், புனிதமும் அடைவதாக மக்கள் கருதியுள்ளதைக் காணமுடிகின்றது. தீய எண்ணங்களும், தீய செயல்களும் மறைந்து மனம் அமைதி அடைந்ததை உணர்ந்துள்ளனர் எனலாம். இதன் காரணமாக சங்க கால மக்களிடம் சிறப்பான இல்லறப் பண்புகள் உருவாயின என்றும், இப்பண்புகள் பெருகி வளர்ந்து உன்னதமான சமூகப்பண்புகள் தோன்றின என்றும் அறியமுடிகிறது.

'இல்லங்களுக்கு வந்த தெய்வம்' என்று மதித்து முற்காலத்தில் வணங்கி வந்த வழிபாட்டு முறையே, இக்காலத்தில் தெய்வ வீதி உலாக் காட்சியின் போது, ஒவ்வொரு இல்லத்திலும் 'திருக்கண் சாற்றும்' ஐதிகமாக வடிவம் பெற்றுள்ளது எனக் கூறலாம். இது சங்ககால மக்களிடமிருந்து உருவான வழிபாட்டு, பண்பாட்டு வளர்ச்சியேயாகும். எந்த ஒரு எண்ணத்திற்கும், செயலிற்கும் உயர்ந்ததொரு நிலை, வடிவம் கொடுத்தே நம் முன்னோர்கள் செயல்படுத்தியுள்ளனர் என்பதனை உணரமுடிகின்றது.

**II.1.4.** *வெறியாட்டயர்தல்*

"குறிஞ்சி நிலத் தெய்வமாகிய முருகனுக்குப் பூசனை புரிவோன், அம்முதல்வனது படைக்கலமாகிய வேலினை ஏந்தி ஆடுதலின் வேலன் என்று

அழைக்கப்பட்டான் எனவும், அவனது உயிணரூர்வின் வாயிலாகத் தெய்வம் வெளிப்பட்டுத் தோன்றுதலின், தெய்வத்தன்மை வாய்ந்த அவனது ஆடல் வெறி எனப்பெயர் பெருவதாயிற்று என்றும் அறியப்படுகிறது. வெறி: மணம், இங்கு மணம் என்பது தெய்வ மணத்தினைக் குறித்து நின்றது எனப் பொருள்படும்."[8] தெய்வம் தன்மேல் ஆவேசிக்கப்பெறும் நிலையில் முருகனை வழிபடும் முறையினை அறிந்து வெறியாடல் நிகழ்த்தும் சிறப்பு முருகபூசை செய்யும் வேலனுக்கு உரியதாதலால் பற்றி 'குறைகள் வெறியறி சிறப்பின் வேலன்' எனவும், மக்களது நோய், நீங்க வேலன் வெறியாட்டயர்தல் பற்றியும் தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளதால் அறிகின்றோம்.

குறிஞ்சி நில மக்கள் தம்குல முதல்வனாகிய முருகப் பெருமான், கடப்ப மலர் மாலையைச் சூடிக் கையில் வேலினை ஏந்தி வழிபடும் அன்பர்கள் முன்னே காட்சி தருதல் உண்டு என்பதனை உறுதியாக நம்பினார்கள் எனக்கூறலாம். இவர்தம் வாழ்க்கையில் நிலை பெற்றுள்ள கடவுள் நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டு புனைந்துரை வகையாகப் பாடப்பெற்ற செய்யுட்களே சங்கத்தொகை நூலாகும். முருகன் தன்னை வழிபடும் அன்பர்க்கு அவரவர் நினைந்த திருமேனி கொண்டு அவர்முன் காட்சி நல்கும் நிலையைச் சங்க செய்யுள் குறிப்பிடக் காணலாம்.

> ***"சூருடைச் சிலம்பிற் சுடர்ப்பூ வேய்ந்து***
> ***தாம்வெண் டுருவின் அணங்குமார் வருமே"*** **(அகம். 158)**

என்பதால் அறியப்படுகிறது. ஐம்புலன்கள் வழியே செல்லும் உள்ளத்தைச் சிதைவின்றி ஒருமுகப்படுத்தி வழிபட்டு, எல்லாம் வல்ல இறைவனைக் கண்ணாரக் கண்டு மகிழும் பேறு பெற்றவர்களாகச் சங்ககால மக்கள் திகழ்ந்துள்ளார்கள் எனலாம். இந்நிலை தொன்று தொட்டு இன்றும் நிலைத்திருப்பதையும் காண முடிகிறது. இவ்வனுபவ உண்மையையும் பாடல்வழி காணலாம். இதனை

> ***"அழிவிலர் முயலும் ஆர்வ மாக்கள்***
> ***வழிபடு தெய்வம் கட்கண் டாங்கு"*** (நற்.9)

என வரும் நற்றிணைத் தொடரால் உறுதிசெய்யப்படுகிறது.

முருகனைப் பூசித்து அவன் அருள் வழிநின்று தான் கூறும் வாய்மொழியால் ஊர் மக்களுக்கு நலம் புரிதலையே தனது வாழ்க்கை நோக்கமாகக் கொண்டு வாழும் வேலன் கூறும் மொழிகள் மெய்ம்மை உடையனவே என்ற ஊர் மக்களின் நம்பிக்கையையும் அறிய முடிகின்றது. இதனை,

> **"பொய்யாமரபின் ஊர் முதுவேலன்**
> **கழங்கு மெய்ப்படுத்துக் கன்னந்தூக்கி**
> **முருகென மொழியு மாயின்"** - **ஐங். 245**

என்ற பாடல் அடிகள் குறிப்பிடுகின்றன.

> **"வேலன் வெறிஅயர் வியன்களம்" (அகம் 182: 17)**

> **"வேலன்புனைந்த வெறிஅயர் களம்தொறும்**
> **செந்நெல் வான்பொரி சிதறி அன்ன" (குறுந். 58)**

வேலன் வேடம் புனைந்தோன் வெறியாட்டயர்கின்ற விழாக்களை இல்லங்களில், வழிபாடு செய்து பலிகாட்டுவதன் காரணமாகச் செந்நெல்லின் வெண்பொரி சிதறிக் கிடப்பதைப் போல – என்று மேற்கூறிய பாடல் சுட்டிக்காட்டுகிறது. இதனால், மலையில் விறைகின்ற செந்நெல், வெண்ணெய் இவற்றால் பொரிசெய்து வேலனுக்குப் பலி தூவி, வழிபாடு செய்தார்கள் என்பதனை அறியமுடிகிறது.

முருகனை வழிபடும் நிலையில் ஆடப்பெறும் வெறியாடல் மலைவாணர்குடியில் மனை முதிர் மகளிரால், புறத்தே யாவரும் காண ஆடப்பெறும் பொதுவிழாவாகவும், மனையத்தே வேலனைக் கொண்டு நிகழ்த்தப்பெறும் மனைவிழாவாகவும் நிகழும் என்பதனை,

> **"................ குறவர்**
> **மனைமுதிர் மகளிரொடு குறவை தூங்கும்**
> **ஆர்கலி விழவுக் களங்கடுப்ப நாளும்**
> **விரப்வுப்பூம் பலியொரு விரைஇ யன்னை**
> **முருகென வேலற் றரூஉம்**
> **மருவ மாகப் பயந்தன்றால் நமக்கே" (அகம் 232)**

எனவும்,

“செறிதொடி முன்கை கூப்பிச் செவ்வேள்
வெறியாடு மகளிரொடு செறியத்தாஅடப்பு” (பட்டின. 154-155)

எனவும் வரும் பாடற் பகுதியால் அறிய முடிகின்றது.

“கறிவளர் சிலம்பின் கடவுள்பேணி
அறியா வேலன் வெறிஎனக் கூறும்” (ஐங். 243)

கறி–மிளகு, சிலம்பு–மலை–மரங்களில் மிளகுக்கொடி பற்றி வளரும் மலையில் உறைகின்ற முருகனை நினைத்து வேலன் ஆடுகின்ற வெறியாட்டம் என ஐங்குறுநூறு குறிப்பிடப்பட்டுள்ளது இங்கு நோக்கத்தக்கதாகும்.

“கூடுகொள் இன்இயம் கறங்க, களன்இழைத்து
ஆடுஅணி அயர்ந்த அகன்பெரும் பந்தர்
வெண்போழ் கடம்பொரு சூடி இன்சீர்
ஐதுஅமை பாணி இரிஇ கைபெயரா
செல்வன் பெரும்பெயர் ஏத்தி வேலன்
வெறிஅயல் வியன்களும் பொற்ப” (அகம் 98: 14-19)

பொருத்தமான இசைக்கருவிகள் இணைந்து முழங்க, கடம்ப மாலை சூடி, கைகோத்து ஆடி முருகனைப் போற்றும் நிலையினைச் சங்கப்பாடல் வழிக்காணலாம்.

“அருங்கடி வேலன்முருகொடு வளைஇ
அரிக்கூடி இன்னியம் கறங்க நேர்நிறுத்தக்
கார்மலர் குறிஞ்சி சூடிக் கடம்பின்
சீர்மிகு நெடுவேற் பேணித் தழூஉப்பிணையூ
மன்று தொறும் நின்ற குரவை” -மதுரைக்காஞ்சி 611-615

வெறியாட்டயரும் வேலன், குறிஞ்சி மலரைச் சூடி, முருகனைத் தனது உடம்பிலே வருமாறு கொணர்ந்து நிறுத்தி வழிபடுகிறான் அருகில், மலைக்குறமகளிர் வட்டமாக நின்று, கைகோத்துக் குரவைக் கூத்து ஆடுகின்றனர் என்ற தாட்சியினையும் பாடல்வழி காண முடிகின்றது.

சங்ககாலமக்களின் பக்தி, கற்பனைத்திறன், நுண்கலை ஆர்வம், ஒப்பனை செய்யும் ஆற்றல், முருகியல் உணர்வு ஆகிய பண்பாட்டுக் கூறுகளை வேலன் வேடம் புனைவதிலிருந்து அறிந்து கொள்ள முடிகின்றது. “சங்ககாலத்தில், வெற்றி பெறும் அரசன், வெற்றிவாகை சூடி ஊர்வலம் வருவான் எனவும்

ஊர்வலத்தில் தேரில் அமர்ந்து வரும் வேளையில், தேருக்கு முன்னால் வீரர்கள், விறலியர்கள் ஆடிக் கொண்டு வருவது முன் தேர்க்குரவை எனவும், தேருக்குப் பின்னால் ஆடிக்கொண்டு வருவது 'பின்தேர்க்குரவை' எனவும் வழங்கப்படும் என்றும் அறியவருகிறது. பழங்கால வெறியாட்டயர்தல்தான், இக் 'குரவை'களாக தோற்றம் பெற்றுள்ளன. இவையே இன்னும் உருமாறி, கடவுளர் வீதி உலா வரும்பொழுது சப்பரத்தின் முன்னால் சாமியாடிக் கொண்டும், குறிசொல்லிக் கொண்டும் வரும் நிகழ்ச்சியாக உருமாற்றம் பெற்றுள்ளன என்ற செய்தியினை இங்குப் பெறமுடிகின்றது. வெறியாட்டாக ஓரிடத்தில் கூடி நின்று ஆடிய ஆட்டம், கடவுளர் வீதியினை முன்னால் தொடர்ந்து ஆடிக்கொண்டே வரும் ஆட்டமாக மாறியது எனலாம். "[9]

### II.1.5. *உயிர்ப்பலி இடுதல்*

முருகப் பெருமானை வழிபட்டு வெறியாட்டுமிடம் பல மலர்களால் அணி செய்யப் பெற்றிருக்கும் எனவும், முருகனுக்குரிய வாத்தியமாகிய தொண்டகப்பறை முதலியன முழங்கத் தெய்வ உருவினைத் தாங்கி வேலன் நிகழ்த்தும் வெறியாடல் நள்ளிரவில் நிகழ்த்தப்பெறும் என்றும், இவ்வெறியாடலில் ஆட்டுக்குட்டியாகிய மறியினையறுத்துக் குருதிப்பலியும் செந்தினையும் படைத்து வழிபடுதல் இயல்பு என்பதனையும், சங்கப்பாடல் வழி காணமுடிகின்றது.

> **"படியோர்த் தேய்த்த பல்புகழ்த் தடக்கை**
> **நெடுவேள் பேணத் தணிகுவள் இவளென**
> **முதுவாய்ப் பெண்டிர் அதுவாய் கூலி**
> **களநன் கிழைத்துக் கண்ணி சூட்டி**
> **வளநகர் சிலம்பப் பாடிப் பலிகொடுத்து**
> **உருவச் செந்தினை குருதியொரு தூஉய்**
> **முருகாற்றுப் படுத்த உருகெழு நடுநாள்"** **(அகம் 22:5-11)**

எனவும்,

> **அணங்கறி கழங்கிற் கோட்டங்காட்டி**
> **வெறியென வுணர்ந்த வுள்ளமொடு மறியறுத்து**
> **அன்னை அயரும் முருகுநின்**
> **பொன்னேர் சுணங்கிற் குதவாமாளே** **(நற்.47)**

எனவும் வரும் தொடர்களால் நன்கு அறியப்படுகின்றது. படைக்கப்படும் படையல் பற்றி குறிப்பிடுகையில்,

***"குருதியொடு விரைஇய தூவெள் அரிசி***
***குருதிச் செந்தினை பரப்பி"*** **(திருமுருகு. 233, 242)**

எனவும் திருமுருகாற்றுப்படை கூறக்காணமுடிகிறது.

குளிர் மிகுந்த மலைப்பகுதிகளில் மக்கள் தங்களின் உடல் வெப்பம் குறையாமல் சமநிலையில் வைத்துக் கொள்ளவும், குளிரிலிருந்து காத்துக்கொள்ளவும், கடுமையான தொழில்களைச் செய்வதற்கு ஏற்ற உடல்வலிமை பெறவும் புலால் உணவு அருந்தினர் எனவும் தாங்கள் உண்ணும் புலால் உணவையே தாங்கள் வழிபடுகின்ற கடவுளர்க்கும் படைத்துக் வழிபட்டனர் என்பதனையும் அறியமுடிகின்றது.

***"தோப்பிக் கள்ளுடன் துரூஉப்பலி கொடுக்கும்"*** **(அகம் 35:9)**

அரிசிலிருந்து வடித்து எடுக்கப்பட்ட ஒருவகைக் கள்ளையும், மலை ஆட்டையும் பலி கொடுத்து வழிபட்டனர் என்பதனைப் இப்பாடல் சுட்டுகிறது.

***நனைமுதிர் நளவின் நாட்பலி கொடுக்கும்***
**(அகம் 2:3:7)**

***கள்ளும் கண்ணியும் கையுறை யாக***
***நிலைக்கோட்டு வெள்ளை நால்செவிக் கிடாய்***
***நிலைத்துறைக் கடவுட்கு உளப்பட ஓச்சி***
**(அகம் 156:13-15)**

கடவுளுக்குக் கையுறையாக மலர்க்கண்ணியுடன், கள்படைத்து வழிபட்டதை இவ்வகனானூற்றுப்பாடலால் அறியமுடிகின்றது.

### III. *தெய்வத்திருஉருவச்சிந்தனை*

வழிபாட்டு முறைகளைக் கடைபிடிப்பதற்கும், நெறிப்படுத்துவதற்கும் தெய்வத்திருஉருவச்சிந்தனை அடிப்படையாக அமைந்தது எனலாம். ஏதும் அறியா சிறு குழந்தையிடத்து, கணக்குப் பாடத்தில் கூட்டல், கழித்தல் கற்பிப்பதற்கு ஏதேனும் ஒரு துணைக்கருவியைப் பயன்படுத்துகிறோம். அச்சிறுகுழந்தை பெரியவர் ஆன பிறகு மனத்தாலயே கூட்டி, கழித்துக் கணக்குப்பாடம் படித்து

விடுகிறது என்பது நடைமுறை உண்மையாகும். இதுபோலவே வழிபாடு தோன்றிய தொடக்க காலத்தில் தெய்வத்திருஉருவச் சிந்தனை, அவசியமாக அமைந்துள்ளது எனலாம். இறைத்தன்மையை உணர்ந்து, மனதிற்குள்ளேயே நினைத்து வழிபடும்பரி பக்குவம் ஏற்பட்ட பிறகு உருவ வழிபாடும் குறைந்து விடுகிறது. சமய வழிபாட்டு முறைகளை நெறிப்படுத்துவதற்கும் நடைமுறையில் கடைபிடிப்பதற்கும் தெய்வத்திரு உருவங்கள் சிறந்த முன்னிலையாகச் சங்க காலமக்களுக்குப் பெரிதும் உதவின எனலாம்.

உருவ வழிபாடுகற்பித்து இணைத்துக் கொண்டு வழிபாடு செய்து வந்த சங்க கால மக்கள், அத்தெய்வங்களுக்குத் திருமேனியையும் உருவாக்கினர் என்பதனை அறியமுடிகின்றது. சங்ககாலம் முதலே தெய்வத்திருமேனியே செதுக்குவதற்குக் கல்லைப் பயன்படுத்தியுள்ளனர் என்று தெரியவருகிறது. சிலை அமைக்கக் கல் எடுத்து வருதலைப்பற்றி மலைபடுகடாம், பாடல்வழி அறியலாகின்றது.

> ***"கல்எறிந்து எழுதிய நல்அரை மராஅத்***
> ***கடவுள் ஓங்கிய"*** **(மலை. அ. 365)**

கல்லைப் பெயர்த்துக் கொண்டு, அக்கல்லிலே இவ்வாறே பொருத்தப்பட்ட இன்னான் என்று அவன் பெயரை உலகம் அறிவதற்கு எழுதிய கடவுள் என்று மேற்கூறிய பாடல் சுட்டியுள்ளது. நடுகல் பற்றிக் குறிப்பிடும் பொழுது, சிலைவடிப்பதற்கு உகந்த கல்லைத் தேர்வு செய்து, அதனை நீராட்டினர் என்றும் (நீராட்டுதல் என்பது சிலை வடிப்பதற்குரிய கல்லை நன்னீருக்குள் சிலகாலம் இட்டு வைத்திருத்தல், இதன் மூலம் இக்கல் குற்றம் இல்லாதது, சிலை செதுக்குவதற்கு ஏற்ற கல்தான் என்பதனை உறுதி செய்கின்றனர்) தேரை முதலான குறைபாடுகள் இல்லாதது அக்கல் என்பதனையும் உறுதிசெய்த பின்னரே அக்கல்லில் சிலை படைப்பர் என்று மலைபடுகடாம் சுட்டியுள்ளதால் அறியப்படுகிறது. "காட்சி, கால்கோல், நீர்ப்படை" என்னும் செயல்கள் எல்லாம் கல்லிலே சிலை வடிப்பதற்கு இலக்கணம் கூறுகின்ற சிற்ப நூலுக்கு அடிப்படையாக அமைந்தவையாகும் எனலாம். இவற்றிலிருந்து

பழங்காலத்திலேயே தெய்வத்தைப் பல்வேறு வடிவங்களில் சிலையாக வடித்து, வழிபடும் வழிபாட்டு இடங்களிலும், கோயில்களிலும் நிறுவியிருந்தனர் என்பதனை அறியமுடிகிறது.

சங்க காலத்தில் திருக்கோயில்களில் தெய்வத்திரு உருவங்கள் எவ்வாறு அமைந்திருந்தன என்பதனையும் சங்கப்பாடல்கள் வாயிலாக அறியமுடிகின்றது. ஒரு தெய்வத்தைப் பற்றித் தொடர்ந்து சிந்தனை செய்கின்றபொழுது விருப்பம் காரணமாக அளவிளந்த மகிழ்ச்சி, ஈடுபாடு, பக்தி, மனத்தெளிவு ஆகியவை ஏற்படுகின்றன எனவும், சங்ககால மக்கள் தெய்வத்தின் மீது பக்தி, பேரன்பு கொண்டதன் காரணமாக அத்தெய்வத்தைப் பலவடிவங்களில் உருவகம் செய்து நினைவில் நிலை நிறுத்தத் தொடங்கினர். இவ்வெண்ணத்தின் விளைவே தெய்வத்தின் பல்வேறு வடிவங்களான சேயோன், முக்கட் செல்வன், திருமால், சிவன், சக்தி, இலக்குமி, கொற்றவை ஆகிய தெய்வங்களின் திருஉருவத் தோற்றங்கள், அணிகலன்கள், ஆடைகள், கைகளில் ஏற்றியுள்ள படைகள் ஆகியவை என்றும் சங்க இலக்கியங்கள் சிறப்பித்துச் சொல்வதன் வாயிலாக அறியப்படுகிறது.

### III. 1. *(அ) முருகன்*

**"ஆர் மருங்கு அவத்த சுடர்இலை நெடுவேல்**
***சீர்மிகு முருகன் தான்பரங் குன்றம்*"(அகம்-களிற்-பா. 59.அ.10-11)**

இப்பாடல்பகுதியில், திருப்பரங்குன்றத்தில் உறையும் முருகப் பெருமானின், திருஉருவம், திருக்கரத்தில் திகழும் நெடுவேல் ஆகியவற்றை மருதன் இளநாகநாதன் குறிப்பிடுகின்றார்.

### III. 1. *(ஆ) ஆறுமுகத்தோன்*

**"ஆறுமுகத்து ஆறுஇலு தோறில்" (பரிபாடல்-பா-11அ.21)**

இப்பாடலில் முருகப்பெருமானின் ஆறுமுகம், ஆறிரு தடத்தோள் ஆகியவை சொல்லப்படுகின்றன. ஆறுமுகங்களாவன மந்திரேசம், பதேசம், வன்னேசம்,

புவனேசம், தத்துவேசம், கலேசம் என ஆகமம் கூறுகிறது. ஆறுமுகக் கடவுளுக்கு அத்துவா மூர்த்தி என்றும் பெயரும் உண்டு என்பதனையும் அறியமுடிகிறது.

**III. 1.** ***(இ) கிழமையில் குழவி வடிவம்***

திருமுருகாற்றுப்படையில் முருகப்பெருமானின் ஆறுமுகங்களின் சிறப்பு, பன்னிரு கரங்களின் செயற்கரிய செயல்கள், தெய்வஉத்தி, வலம்புரி, அரையணி முதலிய அணிகலன்கள், பூந்துகால்அடை முதலியனவற்றைச் சிறப்பித்து முருகப்பெருமானைக் குழந்தைசாமியாகக் கண்டு போற்றுகிறார் நக்கீர்.

**III. 2.** ***(அ) சிவபெருமான்***

**“ஐந்தலை உயரிய அணங்குடை அருந்ததியில்**
**மைந்துடை ஒருவனும் மயங்கனும் நீ ”**

**(பரிபாடல்.பா-1அ. 45)**

ஈசானம், தத்புருடம், வாமவேதம், அகோரம், சத்யோசாதம் ஆகிய தத்துவார்த்த ஐந்து முகங்களை உடைய ஒப்பற்றவன் சிவபெருமான் என பரிபாடல் குறிப்பிடுவதலால் அறியமுடிகிறது. உமையொரு பாகன்,

**“நீலமேனி வாலிழை பாகத்து**
**ஒருவன் இருதாள் நிழல்கீழ்**
**மூவகை உலகமும் முகிழ்த்தன முறையே”**

**(ஐங்குருநூறு-கட)**

சிவனின் உமையொரு பாகமாகிய வடிவம், திருவடிச்சிறப்பு ஆகியவை போற்றப்படுகின்றன. பிரவிருத்தி தருமத்தால் சிவனை அம்மையப்பனாக வணங்கினர் என்பதனை அறிகின்றோம்.

**III. 2.** ***(ஆ) சிவனின் தாபத வடிவம்***

**“தாழ்சடை பொலிந்த அருந்த வத்தோன்”(புறம்-கடவுள் வாழ்த்து)**

அம்மையிடமிருந்து அப்பனைப் (சிவனைப்) பிரித்து ‘நிவிருத்தி தருமத்தால்’ தாபத வடிவத்தால் போற்றினர் எனவும், வேறு எந்தத் தெய்வத்துக்கும் இல்லாமல் சிவன் ஒருவனுக்கே அமைந்துள்ளது சிறப்பு வாய்ந்த சடைமுடி, ஸ்ரீஉருத்திரத்தால்

'கபந்தம்' என்று சிவனின் சடைமுடி சொல்லப்படுகிறது) ஆகியனவும் சங்க இலக்கியத்தில் புகழ்ந்து கூறப்பட்டுள்ளன.

தவம் இயற்றும் சடைமுடி கொண்ட துறவியரைக் கண்ட மனிதர்கள்மனத்தில் எழுந்த சிந்தனைத் திறத்தின் விளைவே சிவனுக்குத் தாபத வடிவமாகும்.

### III. 2. *(இ) அவிர்சடை முனிவர்*

"சங்கவிலக்கியங்களில் கூறப்படும் அவிர்சடைமுனிவர் என்போர் செஞ்சடைக் கடவுளாகிய சிவபெருமானை வேள்வித் தீ வடிவிற் போற்றி வழிபடும் விரிசடை விரதிகள் எனக் கருதவேண்டியுள்ளது."(10) அருந்தவ முனிவர்களாகிய இவர்கள் மலைகளிலும், காடுகளிலும், ஊர்ப்புறங்களிலும் தங்கித் தவம்புரியும் இயற்றி எனவும், வேள்விக்குண்டான வேள்வித்தீயினை வளர்த்து ஆவுதி வழங்கி அழல் வண்ணனாகிய இறைவனை வழிபடுதல் இவர்தம் இயல்பாகும் என்றும் தவமுனிவராகிய இவர்கட்கு யானை முதலிய விலங்குகளும், பணி செய்தன என்பன போன்ற செய்திகளையும் சங்க இலக்கியங்களில் காணலாம். இன்வீர்

> ***கின்னரம் முயலும் அணங்குடைச்சாரல்***
> ***மஞ்ஞையாறும் மரம்பயிலிறும்பின்***
> ***கலையாய்ந்துதிர்ந்த மலரவிழ்புளவின்***
> ***மந்தி சீக்கும் மாதுஞ்சுடுமுன்றிற்***
> ***செந்திப்பேணிய முனிவர் வெண்கோட்டுக்***
> ***களிறுதலு விறகின் வேட்கும்***
> ***ஒளிறிலங்கருவிய மலைகிழவோனே***  **(பெரும்பாண் 493-500)**

எனவும்,

> ***கானயானை தந்த விறகின்***
> ***கடுந்தெளிற் செந்தீவேட்டுப்***
> ***புலிந்தாழ்புரிசடை புலர்த்துவோனே***  **(புறம் 251)**

என்றும்,

> ***தாழ்காவின், அவிர்சடைமுனிவர் அங்கிவேட்கும்***
> ***ஆவுதி நறும்புகை***  ***(பட்டினப்பாலை 53, 54)***

எனவும் வரும் தொடர்கள், அருந்த முனிவர்களின் இயல்பு, செயல்களைக் குறிக்கின்றன.

III. 2. *(ஈ) முக்கண்ணன்*

ஞாயிறு, திங்கள், தீ என்னும் முச்சுடர்களைக் கண்களாக வுடையவன் இறைவன் ஆதலின் முக்கண்ணன் என்பது திருப்பெயராயிற்று. "முக்கண்ணின் மூவெயிலும் உடன்றக்கால் முகம்போல என்கதிர்தெறுதலின்" (கலி. தொ.1) எனக் கலித்தொகையிலும், "பணியியரத்தை நின்குடையே முனிவர், முக்கட் செல்வர் நகர்வலஞ்செயற்கே" (புறம்.6) எனப் புறநானூற்றிலும் இப்பெயர் பயின்றுள்ளமையைக் காணலாம். மூன்று கண்களுள் வலக்கண் ஞாயிறு, இடக்கண் திங்கள், நடுவேயுள்ளது தீயருவாகிய நெற்றிக் கண்ணாகக் குறிக்கப்படுகின்றது. இது ஏனைய இரண்டு கண்களைப் போல் நெற்றியின் கீழ் இருபக்கங்களிலும் படுத்த நிலையிலமையாது நிமிர்ந்து நின்ற நிலையில் இருத்தலால், உயர்ந்து விளங்கும் தன்மையுடையதாகும். என்பதனை,

> **"கறைமிடற்றண்ணல் காமர் சென்னிப்**
> **பிளைநுதல் விளங்கும் ஒருகண்போல**
> **வேந்து மேம்பட்ட பூந்தார் மாற" (புறம் 55)**

என வரும் தொடரில் மதுரை மருதன் இளநாகனார் உவமையாக எடுத்துக்காட்டியுள்ளதால் அறியமுடிகிறது.

III. 2. *(உ) இறைவனுக்குரிய ஊர்தி, கொடி, படைக்கலங்கள்*

தூய வெள்ளை நிறம் வாய்ந்த ஆனேறு சிவபெருமானுக்குரிய ஊர்தியாகவும், கொடியாகவும் தொன்றுதொட்டு போற்றப் பெற்று வருகிறது எனலாம், இச்செய்தியினை

> **"ஊர்தி வால்வெள்ளேனே சிறந்த**
> **சீர்கெழு கொடியும் அவ்ஏறு என்ப" (புறம். கட. வாழ்)**
> **"ஊர்ந்து ஏனே சேர்ந்தோள் உண்மையே"(அகம்.கட.வாழ்)**
>
> **"உருவ ஏற்றூர்தியின்" (கலத்-6)**
>
> **"புங்கவம் ஊர்வோனை" (பரி-6)**

"ஏற்றுவலன் உயரிய எரிமருள் அவிர்சடை

மாற்றருங்கணிச்சி மணிமிடற்றோனும்" (புறம் 56)

என வரும் சங்க இலக்கியத் தொடர்களால் நன்கு அறிய முடிகிறது.

"சிவபெருமான் தன் திருக்கைகளில் ஏந்திய படைக்கலங்களாகக் கணிச்சி – மழு, முத்தலைச் சூலம் என்பன குறிக்கப் பெற்றுள்ளன இறைவனுக்குப் படையாகக் கூறப்படும் கணிச்சியும் மழுவும் சொல்லால் வேறுபடினும் பொருளால் ஒன்றே என்பது பழைய உரையாசிரியர் உரையாற் புலனாகின்றது எனலாம்."[11]

"இகலட்டுக், கையது கணிச்சியோடு

மழுவே, மூவாய் வேறும் உண்டு அத்தோலாதேற்கே"

(அகம்.கட.வாழ்)

என வரும் கடவுள் வாழ்த்தில் கணிச்சியாகிய மழுவும் மூவாய் வேலாகிய முத்தலைச் சூலமும் சிவனுக்குரிய படைக்கலங்களாகக் குறிக்கப்பெற்றுள்ளன எனக் கூறலாம்.

### III. 2. *(ஊ) ஆனேற்றவிர்பூண்*

"சிவனுக்குரிய ஊர்தியும் கொடியும் ஆகிய ஆனேற்றினை (இடத்தினை) நடுவில் வைத்து அதன் ஒரு பக்கத்தில் திருமாளுக்குரிய நாந்தகம் என்னும் வாட்படையும் மற்றொரு பக்கத்தில் சிவனுக்குரிய மழுப்படையும் விளங்கப் பொன்னாலும், பவளத்தாலும் செய்தமைத்த பொற்பூணினை இளங்குழந்தைகட்குக் காப்பாக அணிவதென்பது சங்ககாலந்தொட்டு தமிழ் மக்களிடையே நிலவி வந்துள்ளதை சங்கப்பாடல் வழி இச்செய்தியினை உணரமுடிகின்றது."[12]

"தண்டயை

எறியா வாளும் எற்றாமழுவும்

செறியக்கட்டி ஈரிடைத் தாழ்ந்த

பெய்புல மூதாய்ப் புகர்நிமித் துகிரின்

மையற விளங்கிய ஆனேற்று அமர்பூண்" (கலித். 85)



எனவும்,

"பொலஞ்செய் மழுவொடு வாளணிகொண்ட

நலங்கினர் ஒண்பூண்" (கலித். 86)

எனவும் வரும் மருதக்கலித் தொடர்களால் அறிய முடிகிறது. சிவனுக்குரிய அடையாளப்பூ கொன்றைமலராகும்.

***"கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்த்***
***தாரன் மரலையன் மலைந்த கண்ணியன்" (அகம்.கட.வாழ்)***
***"கண்ணி கார்நறுங் கொன்றை காமர்***
***வண்ணமார்பில் தரும் கொன்றை" (புறம். கட. வாழ்)***
***"அயந்திகழ் நறுங்கொன்றையலங்கலந் தெரியலான்" (கலி. 150)***

எனவும் வரும் சங்க இலக்கியத் தொடர்களால் திருவைந்தெழுத்தான் அமைப்பில் உருவும், நிறமும் வாய்ந்த கொன்றைமலர் சிவனுக்குரிய அடையாளப் பூவாயிற்று என்பதனை அறியமுடிகிறது.

### IV. *திருக்கோயிலின் நிலைப்பாடும் ஆலய வழிபாட்டின் துவக்கநிலையும்*

சங்க கால மக்கள் தாங்கள் வாழ்ந்து வந்த சமுதாய வாழ்வின் பிரதிபலிப்பையும், பண்பாட்டின் பிரதிபலிப்பையும், தாங்கள் வழிபடும் தெய்வம் சார்ந்த வழிபாட்டு முறைகளில் காண்பதற்கு விழைந்தனர். அவர்கள் தங்களின் விழைவை நிறைவேற்றிக் கொள்வதற்காகவே திருக்கோயில்களைத் தோற்றுவித்தனர் எனலாம். இக்கோயில் வழிபாட்டு முறைகளால் சமூக வளர்ச்சிப் பிரதிபலிப்பு. பண்பாட்டின் பிரதிபலிப்பை நிலைநிறுத்தினர். தாங்கள் செய்யும் எல்லா (நற்) செயல்களையும் தெய்வம் சார்ந்த, ஒரு வட்டத்தை, கோயிலை மையமாகக் கொண்டே செய்ய விழைந்தனர் என அறிய முடிகின்றது. தாங்கள் அறிந்திருந்த நடனம், இசை, ஓவியம் ஆகிய நுண்கலைகளைத் தெய்வத்தோடும், கோயிலோடும், திருவிழாக்களோடும் தொடர்புபடுத்தி அவற்றை நடைமுறைப்படுத்த விழைந்தனர் எனவும், திருக்கோயிலில் நாள்தோறும் நடைபெறுகின்ற நடைமுறைகளும், விழாக்களும் மானிட சமுதாய வாழ்க்கையின் பிரதிபலிப்புகளே என்றும் அறியமுடிகின்றது.

அக்காலத்தில் ஆட்சி செய்த மன்னர்களும், தங்களுடைய அரண்மனையைக் காட்டிலும் மேலான, காலத்தை வென்று நிற்கக்கூடிய திருக்கோயில்களை இறைவனுக்கு அமைத்திட முற்பட்டனர் என அறியமுடிகின்றது. நாடாளும் மன்னர் இறைவனுக்கு என்றும் அழியா திருக்கோயில்களைக் கட்டுவித்துள்ளமையே இதற்குச் சான்றாகும். மன்னனைக் கண்டாள் இறைவனையேக் கண்டதுபோல் மக்கள் மகிழ்ந்தனர் எனலாம். அரசன் வீதி உலா வந்து மக்களை மகிழ்வித்ததைப் போன்று, தெய்வங்களையும் வீதிஉலா எழுந்தருளச் செய்து மன்னனும், மக்களும் மகிழ்ந்தனர் என்றும், திருக்கோயில்களில் நடைபெறும் முக்கிய நிகழ்ச்சிகளில், மங்கல நிகழ்ச்சிகளில் அனைவரும் பங்கேற்று மகிழ்ச்சியுறும் விதமாகத் தினப்படி பூசைகளையும், திருவிழாக்களையும் உருவாக்கினர் என்றும், அரண்மனைகளில் நடைபெறும் மங்கல நிகழ்ச்சிகள் முரசறைந்து தெரியப்படுத்துவது போன்று, கோயில்களில் தொடங்கவிருக்கும் திருவிழாத் தொடர்பான செய்திகளையும், மன்னர்கள் மக்களுக்கு முரசு அறைந்து தெரிவித்தார்கள் என்றும் அறியப்படுகின்றது. இதனால் மக்களின் இன்பதுன்பங்களில் நேரடியாக பங்கேற்கும் வாய்ப்பும் மன்னர்களுக்கு ஏற்பட்டது எனக் கூறலாம். அரசன் கொழு வீற்றிருக்கும் இடம் அரண்மனையாக இருந்தாலும், மக்களிடம் ஆணை செழுத்துமிடம் கோயிலாகவே திகழ்ந்துள்ளதைக் காண்கின்றோம். சுருங்கக் கூறின் திருக்கோயில்கள் அரசுக் கட்டில்களாகச் சங்க காலத்தில் திகழ்ந்துள்ளன என்பது திருக்கோயில் வரலாறு கூறும் உண்மையாகும்.

### IV. 1 *கோயிலோடு குடியமர்த்தல்*

காடுகளை அழித்து நாடாக்கி கோயில் எடுப்பித்து, கோயிலைச் சுற்றிலும் மக்களைக் குடியமர்த்தினார் மன்னர் என்னும் செய்தியினைப் பின்வரும் சங்கப்பாடல் சுட்டுகிறது.

> **"காடுகொன்று நாடாக்கிக்**
> **குளம் தொட்டு வளம் பெருக்காப்**

**பிறங்குநிலை மாடத்து உறந்தை போக்கிக்**

**கோயிலொடு குடிநிறீஇ.... " (பட்டி.பாலை. அ. 283-286)**

இக்கோயில்களில் பூசைகளும் சிறப்புத் திருவிழாக்களும் எவ்விதத்தடையும் குறைவுமின்றி நடைபெற போதுமான திட்டங்களை வரையறை செய்திருந்தனர் என்பதையும், சங்க காலத்தில் அரசர்கள் குறுநில மன்னர்கள் திருக்கோயில்களுக்கு வேண்டிய நிவந்தங்களையும், பொன்பொருட்களையும் வழங்கியதையும் சங்கப் பாடல்கள் வாயிலாக அறியமுடிகிறது.

**"கடவுள் அயிரையின் நிலைஇக்**

**கேடில வாக" (பதி.பத்து.பா. 8 அ. 31)**

**"நவிரம் மேஎய், காரி உண்டிக் கடவுள்" (மலைபடுகடாம் . அ. 282)**

## IV. 2 *மலர் வழிபாடு*

சங்க காலத்தில் மலர் கொண்டு இறை வழிபாடு செய்தல் முக்கிய இடம் பெற்றிருந்தது. இறைவழிபாட்டுக்குரியவை என்று சிலவகை மலர்களை வகைப்படுத்தி வைத்திருந்தனர். அம்மலர்களை வேறு காரியங்களுக்குப் பயன்படுத்தமாட்டார்கள் எனவும் மலர்களின் இயற்கையான வண்ணமும், அமைப்பும், நறுமண இயல்பும் அவர்களின் உள்ளத்தால் உயர்ந்த சிந்தனையை எழுப்பின எனவும், வாழ்க்கையின் எல்லா நிகழ்ச்சிகளையும், சங்ககால மக்கள் மலர் மணம் பரப்பியே அமைத்துக்கொண்டார்கள் போன்ற செய்திகளையும் சங்க இலக்கியங்கள் கூறக் காணலாம்.

**"நாறுகமழ் வீயும் கூறும்இசை முழவும்" (பரிபாடல், பா. 7 அ. 99)**

**"நீத்துடை நெடுங்கயம் தீப்பட மலர்ந்த**

**கடவுள் ஒண்பூ" (பெரும்.பா.படை. அ. 289)**

**"நிரை இதழ்க் குவளை கடிவீ தொயினும்**

**வரையர மகளிர் இருக்கை காணினும்" (மலைபடு கடாம். அ. 189)**

**"கடவுள் கற்சுனை அடையிறந்து அவிழ்ந்த**

**பறியாக் குவளை மலரொடு" (நற்:பா. 34)**

**"நெல்லும் மலரும் தூஉய்க் கைதொழுது"(நெடு.ந.வாடை. அ. 43)**

**"பரவினம் தொழுதும் விரவுமலர் தூஉயிம்"** (குறிஞ்சிப்பாட்டு, அ. 5)

### IV. 3 *மாலை சூட்டி அலங்காரம்*

தேர்ந்தெடுத்த மலர்களைப் பறித்து மாலையாகத் தொடுத்துத் தெய்வத்திற்குச் சூட்டினார்கள் என்றும் சங்ககால மக்கள் திருக்கோயிலின் தோரண வாயிலிலும், கோயிலுக்குள்ளும் தொங்கவிட்டு அழகுபடுத்தினர் என்றும் அறியமுடிகிறது.

**"கண்ணி கார்நறுங் கொன்றை காமர்**
**வண்ண மார்பில் தாருங் கொன்றை"** (புறம். கட. வாழ்)

**"அரும்பு மூசாச் அடர்ப்பூங் காந்தள்**
**பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன்"**(திரு.மு.ஆ.படை. அ. 43)

### IV. 4 *தீபதூப வழிபாடு*

தீபம் ஏற்றி வழிபாடு செய்யும் முறையும் சங்க காலத்தில் இருந்தமை தெளிவாகத் தெரியவருகிறது.

**"அல்லல் இல் அனலன்"** (பரி.பா.பா. 5. அ. 57)

**"ஆறுசெல் வறியான் அவியா விளக்கமும்"** (பரி.பா. 8. அ. 98)

வேகமாகக் காற்று வீசுகின்ற சமயத்திலும் அவியாது நிலைத்து நின்று சுடர்விட்டு ஒளிரும் பெரிய அளவில் தீபத்தை ஏற்றிக் கோயிலில் வழிபடும் மரபு இருந்ததை மேற்கண்ட பாடல் அடிசுட்டியுள்ளது குறிப்பிடத்தக்க செய்தியாகும்.

**"இரும்புசெய் விளக்கின் ஈர்ந்திரி கொளீஇ"** (பட்டி.பாலை. அ. 27)

வலிமையான, உயர்ந்த, அகன்ற, ஆழமான அமைப்பை உடைய இரும்பால் செய்யப்பட்ட விளக்கில் நெய்யை ஊற்றி, நிலைத்து நின்று, நீண்ட நேரம் சுடர்விடும் வகையில் முறுக்கிய திரியை இட்டுச் சுடர் ஏற்றிவழிபாடு செய்ததைப் இப்பாடல் அடி உணர்த்துகின்றது.

*தூபம் காட்டி வழிபடுதல்*

**"புகைபூஅவி ஆராதனை அழல்பல ஏந்தி"** (பரிபாடல் 6. அ. 11)

ஆராதனைக்குரிய மலர்கள், பலப்பொருட்களை ஏந்தியும், நறுமணப் பொடி தூவி புகையை எழுப்புவதற்குரிய தீக்கனல் நிரப்பப்பட்ட தூபக்கால்களை ஏந்தியும் சென்றனர் என்றும்,

**"நறையும் விரையும் ஒச்சியும்"** (குறிஞ். பாட்டு. அ.7)

இத்தூபக்கால்களில் கோஷ்டம், குந்துருக்கம், அகில், சந்தனம் ஆகியவற்றால் ஆன நறுமணப் பொடிகளைத் தூவி தூபம் காட்டி வணங்கினர் என்றும் சங்கப்பாடல்கள் வழி அறிகின்றோம்.

### IV. 5 *மங்கலப் பொருட்களைப் படைத்தல்*

தங்களின் வாழ்வு வளம் பெறவும், வாழ்வில் அறநெறி தழைத்தோங்கவும் அருள்புரியுமாறு இறைவனை வேண்டினர். அவ்வாறு வணங்கும்பொழுது கடவுளின் திருமுன்னர் மங்கலப் பொருட்களைப் படைத்து வழிபாடு செய்யும் வழக்கம் அம்மக்களிடையே இருந்துள்ளது என்பதனையும் பாடல்வழி அறியமுடிகின்றது.

**"சிறுபசு மஞ்சளொடு நறுவிரை தெளித்து"** (திரு. மு.ஆ.படை. அ. 235)

என்றும், வெற்றிலைப் பாக்கு படைத்துக் கடவுளை வழிபட்டனர் என்பதனை

**"பாகு உகுத்த மஞ்சிகை"** (பட்.பாலை. அ. 166)

என்றும், திருவமுது படைத்து வழிபட்டனர் என்பதனை,

**"காழுடை கொழுமஞ்சிகைத்**
**தாழுடைத் தண்பணியத்து**
**வாலரிசிப் பலிசிதறி"** (பட்.பாலை. 159)

என்ற சங்கப்பாடல் அடிகளால் அறியமுடிகிறது.

### IV. 6. *இசைக்கருவி இசைத்து வழிபாடு*

திருக்கோயில்களில், கடவுளர் திருமுன்னர் இசைக்கருவிகளை இசைத்து வழிபாடு செய்யும் வழிபாட்டுமுறை சங்க காலத்தில் இருந்து வந்ததாகும். பக்தி உணர்வை மிகுதிப்படுத்துவதற்காக இசைக்கருவிகளின் இசை தூண்டு கோலாகப் பயன்பட்டது எனக் கூறலாம். தெய்வத்தின் முன்னர், மன ஒருமைப்பாட்டுடன் வழிபாடு செய்விப்பதற்கு இவ்விசை மிகவும் உதவியது எனலாம். மனப்பக்குவம்

பெறாத மாந்தரையும் பக்தியில் மனத்தை ஒருமுகப்படுத்த இவ்விசை பெரிதும் பயன்பட்டதும் என்று கூறலாம்.

"குழல், யாழ், தொண்டகப்பறை, பம்பை, உடுக்கை, மத்தளம், தட்டை, முழவு, காகளம், பணவம் சங்கு, ஆனகம், துந்துபி, சல்லரி, கொருகொட்டி, தண்ணுமை முதலிய பலவகை வடிவமைப்புகளை உடைய இசைக்கருவிகள் சங்க காலத்தில் வழிபாட்டின் போது இசைக்கப்பட்டுள்ளன என்று சங்க இலக்கியங்களின் வழி அறியவருகிறது"[13].

திருக்கோயில்களில் நிகழும் உச்சிக்காலப் பூசை, நண்பகல் பூசை, மாலைநேரப்பூசை, இராக்காலப் பூசை போன்றவற்றை அறிவிப்பதற்கு ஏற்றவகையில், அந்தந்தக் காலப் பூசைகளுக்கு ஏற்றவாறு முறைப்படுத்தி வைத்திருந்த இசைக்கருவிகளை இசைத்தனர் என்றும் இதனால், குறிப்பிட்ட இசைக்கருவி எழுப்பும் இசை ஒலியைக் கொண்டு மக்கள் பொழுதையும், பூசை வகையையும் அறிந்தனர் என்றும் அறியலாகிறது.

கோயிலில் திருவிழா தொடங்க இருக்கிறது என்பதைச் சுற்றிலும் உள்ள சிற்றூர் மக்கள் அறிந்து கொள்வதற்கும், நெடுந்தொலைவில் உள்ளோருக்கும் கேட்கும் வகையிலும், விரைந்து சென்று அடைவதற்கும் பெரு முழக்க முரசு, பேரொலி எழுப்பும் கொம்பு முதலிய இசைக்கருவிகள் வடிவமைத்துச் செய்யப்பட்டிருந்தன என்றும் மக்கள் அனைவருடைய மனத்தையும் இறை உணர்வில் ஈர்ப்பதற்கும், நிலைத்து வைப்பதற்கும், மக்களை மகிழ்ச்சியில் ஆழ்த்துவதற்கும் இசை சிறப்பாகப் பயன்பட்டது என்ற உண்மையையும் இங்குப் பெறமுடிகிறது.

*யாழ்*

**"அணங்குமெய்ந் நின்ற அமைவரு காட்சி"** **(பொ.ஆ. பா. அ.20)**
**"தெய்வப் பிரமம் செய்கு வோரும்"** **(பரிபாடல் பா. 19 அ. 40)**
**"அந்தரப் பல்இயம் காரங்கத் திண்காழ்**
**வயிர்எழுந்து இசைப்ப வால்வளை ஞரல**

உரம்தலைக் கொண்ட உரும்இடி முரசமொடு"

(திரு.மு.ஆ.படை. அ. 119, 121)

(அந்தரப் பல்இயம்–தேவதுந்துபி)

"குழல் அகவ யாழ் முரல
முழவு அதிர முரசு இயம்ப" (பட்.பா.அ. 156-157)

என வரும் சங்கப்பாடல் அடிகள் திருக்கோயில்களில் இசைக்கப்படும் இசைக்கருவிகளைப் பற்றிச் சுட்டுகின்றன. மேலும்,

"முழவு இமிழும் விழவு" (மதுரைக் காஞ்சி. அ. 327)

இப்பாடலடி, கோயிலில் திருவிழா தொடங்கிவிட்டது என்பதற்கு அடையாளமாகத் திருவிழாக் காலத்தில் முழவு பெருமுழக்கத்துடன் ஒலிக்கிறது எனவும், இவ்வொலிமுழக்கம் நெடுந்தொலைவில் சிற்றூர்களில் வசிப்பவர்களின் செவிகளிலும் கேட்கும் அளவுக்கு முழங்கும் ஆரவாரம் மிகுந்த திருவிழா என்றும் மதுரைக் காஞ்சி குறிப்பிடக் காணலாம்.

## IV. 7 *வேண்டுதல் வழிபாடு*

சங்க காலத்தில் வாழ்ந்த மக்கள் தங்களின் அகவிழைவுகளை நிறைவேற்றி வைக்குமாறு இறைவனை வேண்டி வழிபாடு செய்தனர் என்பதனை,

"கைதொழூஉப் பரவி பழிச்சினிர்" (மலைபடுகடாம். அ. 360)

என்ற பாடல் வாயிலாக அறிகின்றோம்.

திருக்கோயில்களில் உறையும் தெய்வங்களைக் கைகூப்பித் தொழுது, எங்களின் குறைகளைப் போக்க வேண்டும் என வேண்டி வழிபட்டதனையும் பாடல்வழி அறியமுடிகின்றது.

"....................நின்புகழ் ஏத்தி
அணி நெடுங்குன்றம் பாடுதும் தொழுதும்
அவை, யாமும்எம் சுற்றமும் பரவுவதும்
ஏம வைகல் பெறுகயாம் எனவே"

(பரிபாடல் : பா. 17 அ. 48-53)

முருகப் பெருமானே! நினது பெயரையும், புகழையும் போற்றி, நீ எழுந்தருளியுள்ள உனது அழகிய திருப்பரங்குன்றத்தையும் பாடித் தொழுகின்றோம். நீ, எங்களுக்கு எல்லாவகை நலன்களையும் பெற்று வாழ அருள்புரிவாயாக என்று வேண்டுவதாக இச்சங்கப் பாடல் சுட்டியுள்ளது. மேலும்,

**"பனகபெரு மையில் தெய்வம் செப்ப"(பதிற்றுப்பத்து: பா. 8, அ.82)**

பகையிடமிருந்து தங்களைப் பாதுகாக்குமாறு இறைவனை வேண்டுவதாகவும் கூறியுள்ளதை அறியமுடிகின்றது. இவ்வாறு வெற்றி அருள வேண்டியும், செல்வம் அருளவும், திருமணம் நிறைவேறவும், மகப்பேறு அருள வேண்டியும், கடுஞ்சூல் காக்க வேண்டியும், நல் ஓரையில் மகவு பிறக்க வேண்டியும் என பல்வேறு வேண்டுதல்களையும், திருக்கோயில் இறைவனிடத்தில் வேண்டுவதாக சங்கப்பாடல்கள் வழி அறியப்படுகின்றன.

**"ஐஅமர் அடுகனை அருச்சிப் போரும்" (பரி.பா. 8 அ. 708)**

**"செய்பொருள் வாய்க்க" (பரிபாடல். பா. 8. அ. 107)**

**"எந்தையும் கொடுக்க என்வேட்டேமே"**

**(ஐங்குறுநூறு பா. 6, அ-8)**

**"கருவயிறு உறுகஎனக் கடம்படு வோரும்"**

**(பரி.பா.பா. 8. அ. 196)**

**"கடுஞ்சூல் மகளிர் பேணிக் கைதொழுது"**

**(மதுரைக்காஞ்சி. அ. 609)**

(கடுஞ்சூல்–முதல் மகப்பேறு)

**"தாய் வயிற்று இருந்து தாயம் எய்திப் பிறந்து"**

**(பொருநராற்றுப்படை, அ. 132)**

வேண்டுதலை நிறைவேற்றியமைக்குப் படையல் இடுதல் பற்றியும் அறியவருகிறது.

**"...................பகழிடப் போக்கு நினைந்து காணவன்**
**அணங்கொடு நின்றது மலைவான் கொள்க எனக்**

**கடவுள் ஓங்குவரை வேண்மார் வேட்டு எழுந்து**

**இறையோடு மகிழும்........... "**

**(நற்றிணை. பா. 115. அ. 2-5)**

தனது வேண்டுதல் நிறைவேறியது குறித்து மகிழ்ந்து வேட்டுவன் படையலிட்டதை இப்பாடல் வழி அறிகின்றோம்.

*திருவிழாக்கள்*

மக்களுக்கு இறை உணர்வை எப்பொழுதும் நினைவூட்டுவதற்கு மிகச் சிறந்த ஆன்மீகச் சின்னங்களாக அமைக்கப்பட்டவை திருக்கோயில்களாகும். கடவுள் மீது கொண்டுள்ள பக்தி உணர்வை வெளிப்படுத்துவதற்கும், கோயில்கள் மீது மக்கள் வைத்துள்ள நம்பிக்கை, ஈடுபாடு ஆகியவற்றை மிகுதிப்படுத்துக்கொள்வதற்கும், கோயில்களைத் தொடர்ந்து பேணிப் பராமரிப்பதற்கும் நம் முன்னோர்கள் திருவிழாக்களை ஏற்படுத்தி நடத்தினார்கள் என்று கூறலாம்.

அரசர்கள் தங்களுடைய வாழ்வின் முக்கிய தினங்களைப் பரம்பரையாக நினைவு கூறும் வகையில் கோயில்களில் விழாக்களைத் தொடங்கினர் என்பதனை,

**"பிறந்த நாள்வயின் பெருமங் கலமும்" (தொல். புறத். நூ. 36)**

இதேபோன்று கடவுளர்க்குரிய நட்சத்திரங்களுடன் இணைத்துத் திருவிழாக்களைக் கொண்டாடினர் என்றும், இதனால் மன்னன் சமுதாயத்துடன் பொருத்தமான முறையில் உறவு வைத்துக் கொள்வதற்கும், அவ்வுளவைப் பேணுவதற்கும், வளர்த்துக் கொள்வதற்கும், இக்கோயில் திருவிழாக்கள் பெரிதும் உதவின என்றும் அறியவருகிறது.

சங்க காலத்தில் திருவிழாக்களை முறையாகக் கொண்டாடுவதற்குச் சங்க காலமக்கள் சரியான திட்டங்களை ஏற்படுத்தி இருந்தனர். திட்டமிடுதல், அறிவித்தல், நிறைவேற்றுதல் ஆகிய பல கூறுகளைப் பகுத்தாய்ந்து அமைத்துக் கொண்டனர். இதற்கு அனுபவம், அறிவு, திறமை, ஊக்கம், ஈடுபாடு, உழைப்பு ஆகிய பண்புகளைப் பொருந்திய தக்கவர்களைக் கொண்டு ஆலோசனை நடத்தினர் என்றும் அறியமுடிகின்றது. இதனால் ஒருவருக்கொருவர்

எண்ணங்களைப் பரிமாறிக் கொள்வதற்கும், தங்களின் அனுபவங்களை எடுத்துச் சொல்வதற்கும் வாய்ப்பு கிடைத்தது எனலாம். அவர்கள் ஆலோசனை நடத்திய விபரம் பற்றிச் சங்க இலக்கியமும் குறிப்பிட்டுள்ளது.

**"சீறடியவர் சாறுகொள எழுந்து" (பரிபாடல். பா. 8 அ. 96)**

*1. திருக்கோயில் திருச்சுற்றுத்திருவிழா*

கடவுளரின் எழுந்தருத்துத் திருமேனியை (உற்சவத்திருமேனியை) எழுந்தருளப் பண்ணி, கோயில் திருச்சுற்றை வலம் வந்து திருவிழாக் கொண்டாடினார்கள் என்ற செய்தியை,

**"முக்கட் செல்வர் நகர்வலம் செயற்கு" (புறம். பா. 8)**

என்ற புறப்பாட்டு உணர்த்துகின்றது.

(நகர்–கோயில்)

முக்கட் செல்வராகிய சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் திருக்கோயில் திருச்சுற்றுக்குள் உடையார் எழுந்தருளி வலம் வருவது என்பது இப்பாடல் அடி சுட்டும் பொருளாகும். இதிலிருந்து திருச்சுற்றுத்திருவிழா நடைபெற்று வந்தது தெரியவருகிறது.

*2. இரத வீதித் திருவிழா*

**"யாறு கிடந்தன்ன அகல்நெடுஞ் தெருவில்**
**சாறு என நூவறும் முதுவாய்க் குயவ" (புறம். 48)**

அகலமான நீண்ட ஆற்றைப் போன்ற பெரிய நீண்ட இராச வீதியில் திருவிழா.. என்று அறிவிப்பாளன் மக்களுக்குத் தெரியப்படுத்துகிறான் என்று மேற்குறிப்பிட்டுள்ள பாடல் தெரிவிப்பதன் மூலம் இரவீதித் திருவிழா நடைபெற்றதைத் தெரிந்து கொள்ள முடிகின்றது.

*3. தேர்த்திருவிழா*

**தேர் வழங்கு தெரு (மதுரைக் காஞ்சி. அ. 648)**

தேர் செல்லுகின்ற தெரு என்று சிறப்பித்துச் சொல்லப்படுகிறது.

**மாண்வினை நெடுந்தேர்** **(புறம் : 39)**

சிறந்த வேலைப்பாடமைந்த பெரியதேர்

**வைகல், எண்தேர் செய்யும் தச்சன்** **(புறம் 87)**

நாள்தோறும் எட்டுத்தேர்களைச் செய்து முடிக்கக்கூடிய கைவினைத் திறன்மிக்க தச்சன் என்று இப்பாடல் அடி குறிப்பிடுகின்றது.

தேரின் ஒவ்வொரு பகுதியையும் செய்வதற்கு ஏற்ற மரத்தைத் தேர்ந்தெடுப்பதற்குரிய மரங்களைப் பற்றிய அறிவு, சக்கரம், அச்சு இவை செய்வதற்கு ஏற்ற வலிமைமிக்க மரத்தைக் கண்டறியும் நுட்ப அறிவு, தேரின் நீல அகல உயரத்துக்கு ஏற்ற சரிவிகித அளவு பற்றிய கணக்கியல் அறிவு, வடிவமைக்க அறிவு, உயரத்திற்கு ஏற்ப தேரின் அடிப்பாகம் செய்யும் திறமை, தேர் இழுக்க சரியான வழுவில் வடம் செய்யும் ஆற்றல் மிக்க தொழில் நுட்பவியலாளர்கள் அப்பழங்காலத்திலேயே இருந்து வந்தனர் என்பதனைச் சங்கப்பாடல்கள் வழி அறிகின்றோம். அன்றைய மன்னர்களால், சமூகத்தினரால் அவர்கள் பாதுகாக்கப்பட்டு வந்துள்ளனர் என்பதையும் நமது பண்பாட்டுக்குப் பெருமை சேர்ப்பது தேர்த்திருவிழா எனவும் அறியலாம்.

*(4) ஊர்த்திருவிழா*

சங்க காலத்தில் எல்லா ஊர்களிலும் திருவிழாக்கள் கொண்டாடப்பட்டன என அறியமுடிகின்றது.

**ஊர்ஊர் கொண்ட சீர்கெழு விழவினும்**

**(திரு.முரு.ஆ.படை. அ. 220)**

**தண்பரம் குன்றம் கலிகொள் அம்மை**

**(மதுரைக்காஞ்சி அ. 263)**

திருப்பரங்குன்றத்தில் திருவிழக்கள் நடைபெறுவதால் எழுகின்ற ஆரவாரப் போரொலி – என்று மதுரைக் காஞ்சி குறிப்பிடுகிறது எனலாம்.

*(5) அங்காடி வீதிக்கோயில் திருவிழா*

பல்பொருள் அங்காடி வீதிக் கோயிலில் நடைபெறும் திருவிழாவைப் பற்றியும் சங்க இலக்கியம் கூறுவதால் அறியவருகிறது.

**"விழவு அளா வியல் ஆவனத்து**
**மைஅறு சிறப்பில் தெய்வம் சேர்த்திய"** **(பட்.பாலை. 158, 159)**

*(6) திடலில் திருவிழா*

கோயில்கள் அமைந்துள்ள விசாலமான பெரிய ஊரில் தெய்வ இரத வீதி வலம் வந்து விழவுக்களம் எனும் திடலுக்குப் போய்ச்சேரும் செய்தியினையும் பெறமுடிகிறது.

**"சாறு கொண்ட களம்போல வேறுவேறு பொலிவு தோன்றி"**

**(புறம். பா. 22)**

*(7) தீர்த்த வாரித்திருவிழா*

**"கழுநீர் கொண்ட எழுநாள் அந்தி"** **(மதுரைக்காஞ்சி. 421)**

தீய வினைகளையெல்லாம் கழுவி நீக்கிப் புண்ணியத்திற்குக் காரணமாக அமையும் தீர்த்த நீரைத் தன்னிடத்தே கொண்ட ஏழுநாள் திருவிழா. திருவிழா நடைபெறும் நாட்களில், நிறைவு நாளன்று, 'தீர்த்த வாரி' நடைபெற்ற செய்தி சங்க இலக்கியங்கள் மூலம் அறியப்படுகிறது. இந்நிகழ்ச்சி இன்றளவும் திருக்கோயில்களில் கடைபிடிக்கப்பட்டு வருகிறது.

*(8) ஆளாட்டுத் திருவிழா*

ஆளாட்டுத்திருவிழா என்னும் ஒரு பெருந்திருவிழா பழந்தமிழகத்தில் நடைபெற்றதாகப் பதிற்றுப்பத்து கூறுகிறது. ஆளாட்டுத் திருவிழா அன்று, ஊர்மக்கள் திருமாலின் திருப்பெயரைச் சொல்லிக்கொண்டு, உண்ணா நோன்பிலிருந்து நீர்த்துறைக்குச் சென்று நீராடினர் என்றும் திருமாலை வழிபட்டனர் என்றும் அறியமுடிகிறது.

“இவ்ஆளாட்டுத்திருவிழா இப்போதும் கேரளத்தில் நடைபெற்று வருகிறது. கன்னியாகுமரி மாவட்டத்திலும் சிறப்பாக நடைபெற்று வரக்காண்கின்றோம். திருவனந்தபுரத்தில் ஷண்கேக் கடற்கரையில் ஸ்ரீபத்மநாபசுவாமிக்கு ஆளாட்டுத்திருவிழா இன்றும் நடைபெற்று வருகிறது குறிப்பிடத்தக்கது. இவ்விழா ஊர்வலத்தில் அரச மரபினர் நடந்தேவந்து கலந்து கொள்கின்றனர் என்றும் அறியப்படுகிறது.”[14] என்பது நோக்கத்தக்கது.

*(9) ஏழுநாள் திருவிழா*

**“கழுநீர் கொண்ட எழுநாள் அந்தி”** **(மதுரைக்காஞ்சி. அ. 421)**

இப்பாடலடி சங்ககாலத்தில் ஏழுநாள் திருவிழா நடைபெற்ற செய்தியைத் தெரிவிக்கிறது.

ஏழு நாட்கள் நடைபெறுகின்ற தொடர்திருவிழா ‘பெருந்திருவிழா’ என அழைக்கப்பட்டது. இந்நாளில் இதனைப் பிரமோற்சவம் எனவும் சொல்கிறார்கள். ஏழுநாள் திருவிழா என்பது வாரநாட்களுடன் பொருந்தி வருவதாகும்.

*(10) ஏழாம் நாள் திருவிழா-கணம்*

**“ஆடு துவன்று விழவின்”** **(மதுரைக்காஞ்சி. அ. 428)**

வெற்றி நெருங்கும் திருநாளாகிய ஏழாம் நாள். “திருவிழா தொடங்கி, ஏழாவது நாளில் கொண்டாடப்படும் திருவிழாவைச் சங்க காலத்தில் ‘கணம்’ என்று சிறப்பித்துச் சொல்லியுள்ளதைக் காண்கின்றோம்.”[15]

சங்க காலத்தில் திருவிழா ஊர்வலத்தில் கூத்தர்கள் கூத்தாடிக்கொண்டு வருவார்கள் என சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. நாயன்மார்கள் காலத்தில், சிவபெருமானே கூத்தராக வேடம் தாங்கி வீதிவலம் வந்து அருள்புரியத் தொடங்கினார் என்பதனைக் கூத்தராய் வீதியோந்தார் என்பதற்கு நடராசப்பெருமாள் திருவீதிஉலா வந்தார் என்று கூறுவது மூலம் அறியப்படுகிறது. இன்றும் மதுரை மாநகரில் சோமசுந்தரப் பெருமான்–மீனாட்சியம்மை சித்திரை

மாத அட்டமி தினத்தில், அட்டமி சப்பரத்தில் எழுந்தருளி திருவிதி உலாவரும் திருவிழா கொண்டாடப்பட்டு வருகின்றதைக் காணலாம்.

இவையெல்லாம், சங்க காலத்தில் திருவிழாக்கள் நடைபெற்று வந்தமைக்குச் சான்றுகளாகவும், காலம்தோறும் தொடர்ந்து நடைபெற்று வருகின்றமைக்குச் சான்றுகளாகவும் விளங்குகின்றன.

இன்று திருக்கோயில்களில் பெறும் திருவிழாக்கள் எல்லாம் சங்ககாலத் திருவிழாக்களை அடியொற்றியே, காலத்திற்கும், சமுதாய நோக்கிற்கும், போக்கிற்கும் ஏற்ற வகையில் தொடர்ந்து நடைபெற்று வந்திருக்கின்றன என்பதையும், இன்றும் நடைபெற்று வருகின்றன என்பதனையும் அறியமுடிகிறது.

*(11) தீர்த்தம் ஆடுதலும் நோன்பு நோற்றலும்*

பக்தி, நம்பிக்கை காரணமாக ஆறுகளையெல்லாம் சக்தியின் (பெண்தெய்வம்) வடிவங்களாக வணங்கி வருகின்றோம். கடற்கரையிலும் புனித நீராட்டுக் கட்டங்களை ஏற்படுத்தி கடல் நீராடி வருகின்றோம். கடவுளர்களுக்கும் தீர்த்த வாரித்திருவிழா நடத்தப்படுகிறது. நமது வழிபாட்டுமுறையில், புனிதநீராடல் நாகரீக வளர்ச்சிக்குச் சிறந்த எடுத்துக்காட்டாய் விளங்குகிறது எனலாம்.

திருக்கோயில்கள் தோறும் திருக்குளங்களை உண்டாக்கி, அவற்றைப் புனித நீராடல் கட்டங்களாகப் பக்தியுடன் பயன்படுத்துகின்றோம். மார்கழித் திங்கள் பொழுது புலர்வதற்கு முன்னால், குளிர்ந்த நீர்நிலைகளிலும் ஆறுகளிலும் நீராடி இறைவனை வழிபடுகின்றோம். தைத்திங்கள் புனித நீராடி, உண்ணாநோன்பு மேற்கொள்கின்றோம். மார்கழி நீராடல், தைந்நீராடல் இரண்டும் சங்க இலக்கியங்களிலும் சிறப்பித்துச் சொல்லப்பட்டுள்ளதை மேலே கண்டோம்.

*(12) உபவாசம் மேற்கொள்ளல்*

உண்ணா நோன்பிருந்து இறைவனை வேண்டிய விரதம் எனும் நிகழ்ச்சிப் பற்றிச் சங்க நூல்கள் கூறியுள்ளன.

**"நீ தையின் நீராடிய தவம்தலைப் படுவாயோ"**

**(குறிஞ். கலிபா. 23. அ. 12)**

**“நண்பகல் பலவுடன் கழிந்த உண்டியர்”**

**(திரு.முரு.ஆ.படை. அ. 130)**

*(13) நேர்த்திக்கடன் செலுத்துதல்*

கடவுளுக்கு நேர்ந்து நேர்த்திக்கடன் செலுத்தும் ‘வேண்டுதல் வழிபாடு’ சங்க காலத்தில் இருந்துள்ளது. உபவாசம் மேற்கொள்பவர்களும், கடல் தீர்த்தம் ஆடுபவர்களும் தங்களின் அணிகலன்கள், தங்களிடம் உள்ள விலையுயர்ந்த பொருட்களைக் காணிக்கையாக புண்ணிய தீர்த்தங்களில் வீசி மூழ்கி நீராடி, வழிபாடு செய்வதாக பதிற்றுப்பத்து கூறுகிறது. இதனைப் பின்வரும் பாடல்வழி அறியலாம்.

**“தெள்ளிய வடிமணி எறியுநர் கல்என**
**உண்ணாப் பைஞ்ஞிலம் பனித்துறை மண்ணி**
**வண்டுஊது பொலிதார்த் திருரெமர் அகலத்துக்**
**கண்பொரு திகிரிக் கமழ்குரல் வழாய்**
**அலங்கல் செல்வன் சேவடி பரவி”**

**(பதி.பத்து. பா. 4 அ. 31)**

*(14) இதரத் திருவிழாக்கள்*

கார்த்திகைத் திருவிழா, மார்கழித் திருவிழா, போன்று திருவாதிரைத் திருவிழா மற்றும் திருவோணத்திருவிழாவும் சங்க காலத்தில் சிறப்பாகத் திருக்கோயில்களில் கொண்டாடப்பட்டதை அறியமுடிகிறது.

*(15) திருக்கோயிலில் திருவாதிரைத் திருவிழா*

ஆடல்வல்லான் நடராசப் பெரமானுக்குரிய திருவாதிரைத் திருவிழா சங்க காலத்திலிருந்தே கொண்டாடப்பட்டதனை,

**“மாயிலும் திங்கள் மறுநிரை ஆதிரை**
**விரிநூல் அந்தணர் விழவு தொடங்கப்**
**புரிநூல் அந்தணர் பொங்கலம் ஏற்ப”**

**(பரி. பா. பா-11, அ. 77, 79)**

எனும் பாடல் வழி அறிகின்றோம்.

### (16) திருவோணத்திருவிழா

> "கணம்கொள் அவுணர்க் கடந்த பொலந்தார்
> மாயோன் மேயஓண நன்னாள்"
>
> (மதுரைக்காஞ்சி அ. 590)

அவுணர்களுடன் போர் செய்து வென்ற, அழகிய மாலையினை அணிந்துள்ள திருமாலை முதன்மையாக வைத்துக் கொண்டாடப்படுகின்றன திருவோணத்திருவிழா எனச் சங்க இலக்கியம் மதுரைக்காஞ்சி வழி நன்கு அறிய முடிகிறது.

## V. சங்க இலக்கியங்களில் ஆலய வழிபாடு

### V.1. தெய்வ வழிபாடும் திருக்கோயில்களும்

### V.1. (அ) முருகன் வழிபாடு

குறிஞ்சி நிலத்திற்குரிய தெய்வமாகத் தொல்காப்பியம் கூறும் சேயோன் வழிபாடானது முருகன் அமரும் மாமலைகள் எல்லாவற்றிலும் குன்றுதோறாடல் என்ற முறையில் பொதுவாக நிகழ்வதாயினும், கடைச்சங்ககாலத்தில் மதுரையை அடுத்துள்ள திருப்பரங்குன்றம், கடற்கரை ஊராகி திருச்சீரவையாய், மலையைச் சார்ந்த ஊராகிய திருவாவினன்குடி, திருவேரகம், மலைப்பகுதியாகிய பழமுதிர்சோலை என்னும் திருப்பதிகளை மிகவும் சிறப்பாக பேசப்படுவதைக் காண்கின்றோம். இச்செய்தி, பத்துப்பாட்டுள் முதலாவதாகிய திருமுருகாற்றுப்படையிலும், எட்டுத்தொகை நூலான பரிபாடலிலும் நன்கு விரித்துரைக்கப்பெற்றுள்ளது.

தன்னிகரற்ற தலைவன் ஒருவன்பால் பரிசில் பெற்று வரும் கூத்தர், பாணர், பொருநர், விறலி முதலிய பரிசில் பெறுநர் வழியிடையே தம்மை எதிர்ப்பட்ட இரவலர்களது துயரைக்கண்டு இரங்கித் தாம் பெற்ற பெருஞ்செல்வத்தை அவர்களும் பெற்று மகிழும்படி வழிப்படுத்துதல் ஆற்றுப்படை எனும் இலக்கியமாகும்.

> "கூத்தரும் பாணரும் பொருநரும் விடியாயும்
> ஆற்றிடைக் காட்சி உழரைத் தோன்றிப்

**பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇ**

**சென்று பயன்எதிரச் சொன்ன பக்கமும்''**(16)

என்பது தொல்காப்பியர் கூறிய ஆற்றுப்படை இலக்கணமாகும். "யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்று எண்ணி விரிந்த உள்ளத்துதோடு ஒருவருக்கொருவர் தத்தம் அனுபவங்களை எடுத்துரைத்து வையத்து வாழ்வாங்கு வாழ வழிகாட்டி உதவும் இத்தகைய தெய்வ அருட்குறிப்பினை

**"ஆற்றிடைக் காட்சி உயிழத் தோன்றிப்**

**பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇ"**

எனவரும் தொடரால் ஆசிரியர், தொல்காப்பியர் புலப்படுத்துகிறார். சிந்தைக்கும் மொழிக்கும் எட்டாத முழுமுதற் பொருளாகிய முருகப்பெருமானை அடையும் நெறியறிந்து, சென்று சேர்தல், சில வாழ்நாளில் பல்பிணிச், சிற்றறிவினராகிய மன்னுயிர்கட்கு இயலாதென்பதும், முருகனாகிய அம்முதல்வனே தன் அருள் காரணமாக மன்னுயிர்த் தொகுதியாகிய நம்மை நோக்கி அருள்புரியும் வண்ணமும், நலம் அவ்விறைவனை அன்பின் திறத்தால் போற்றிப்பரவும் முறையிலும் முருகன் குறிஞ்சிக் குன்றுகளில் எழுந்தருளியுள்ளான் என்பதனை அறியமுடிகின்றது.

"**மாடமலிமறுகில் கூடல்குடவயின்**
**இருஞ்சேற்ற கல்வயல் விரிந்து வாயவிழ்ந்த**
**முட்டாட்டா மழைத்துஞ்சி**" (17)

எனப் இப்பாடல் அமையப்பெற்றதால் இது திருமுருகாற்றுப்படை எனும் பெயர்பெற்றது என்பதனையும் அறிகின்றோம்.

"**....................................குறமகள்**
**முருகியம் நிறுத்து முரணினார் உட்க**
**முருகாற்றுப்படுத்த உருகெழு வியனநர்**"(18)

என வரும் இத்திருமுருகாற்றுப்படைத் தொடராலும்,

**"களநன் கிழைத்துக் கண்ணிசூட்டி**

*வளநகர் சிலம்பப் பாடிப் பலிகொடுத்*
*துருவச் செந்தினை குருதியோடுதூஉய்*
*முருகாற்றுப் படுத்த உருகெழு நடுநாற்கு"*(19)

*-அகம்*

எனவரும் அகப்பாடலாலும் நன்கு புலப்படுத்துகிறது. "இத்திருமுருகாற்றுப்படையில் எடுத்துரைத்துச் சிறப்பிக்கப்பட்ட திருப்பதிகள் திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம் எனும் நான்குமேயாகும். திருமுருகாற்றுப்படை ஐந்தாவதாகக் கூறும் குன்றுதோறாடல் என்பது ஒரு தனித்திருப்பதி அன்று எனவும், சேயோனாகிய முருகப் பெருமான் குறிஞ்சி நிலத் தெய்வம் ஆதலால் அவ்விறைவனுக்கு எல்லா குன்றுகளும் விரும்பி விளையாடுவதற்கு உரிய சிறப்புடைய திருத்தலங்களே என்பதை

**"குன்று தோறாடலும் நின்றதன் பண்பே"**

என்ற திருமுருகாற்றுப்படை ஆசிரியரின் கருத்தால் அறிகின்றோம். "[20]

இவ்வாறே குறிஞ்சிக்கிழவன் என்ற பொருள்படப் பழமுதிர்சோலைமலை கிழவோன் என முருகவேளை இந்நூலாசிரியர் திருமுருகாற்றுப்படையின் இறுதி அடியில் குறிப்பிட்டுப் போற்றியுள்ளார்.

இவர் தாம் பெற்ற பேரின்பத்தை உலகமக்கள் அனைவரும் பெறுதல் வேண்டும் என்னும் அருள் நோக்கம் உடையவராய், முருகப் பெருமானது திருவருளால் அதற்குரிய பேரின்பத்தை எடுத்துக்கூறி; அவ்விறைவன் பால் ஆற்றுப்படுத்தும் நிலையாகத் திருமுருகாற்றுப்படை என்னும் இந்நூலைப் படைத்துள்ளதை அறிய முடிகின்றது. இதில் முருகப்பெருமான் எழுந்தருளியுள்ள தெய்வத்திருப்பதிகளின் சிறப்பையும், அங்கு மக்கள் பலரும் அன்பினால் ஒருங்கு கூடி முருகப்பெருமானது புகழ்பாடி, போற்றி உயர்வு பெறும் நிலையில் ஆங்காங்கே நிகழும் வழிபாட்டு முறைகளையும், முருகன் இப்பதிகளில் தோன்றிக் காட்சியளிக்கும் பெற்றியினையும், அவனருளை நாடி வந்த இரவலனுக்கு அவர்தம் வேண்டுகோளை ஏற்று பரிசிலாகிய வீடுபேற்றினை அளித்து ஆற்றுப்படுத்தும்

திறத்தையும் விரித்துரைக்கும் வகையில் அமைந்தது இத்திருமுருகாற்றுப்படைப்பனுவல் எனலாம்.

பாண்டிய மன்னன் வைகறையில் விழித்தெழுந்து, நீராடி, அதிகாலைப் பொழுதிலே திருப்பரங்குன்றத்தினையடைந்து, முருகப் பெருமானுடைய திருவருள் நோக்கிற்குரியவனாகி அம்முதல்வனைப் பரவிப் போற்றும் வழிபாட்டு நிகழ்ச்சியினை, திருமுருகாற்றுப்படையில் காணலாம். இதனை,

> **"மாடமலிற் மறுகிற் கூடற்குடவயின்**
> **இருஞ்சேற் றகல்வயல் விரிந்து வாயவிழ்ந்த**
> **முட்டாட் டாமரைத் துஞ்சி பெறப்படக்**
> **கண்போல் மலர்ந்தகாமரு சுனைமலர்**
> **அம்சிறை வண்டின் அரிக்கணம் ஏயக்கும்**
> **குன்றமர்ந்த துறைதலும் உரியன்"**
>
> **- திருமுருகாற்றுப்படை 71-77**

என வரும் பகுதியில் நக்கீரனார் குறிப்பிற் புலப்படுத்துகிறார்.

> **"முன்னியது முடித்தலின் முருகொத்தியோ"**
>
> **(புறம்118)**

என்ற வண்ணம் தன்னை அன்பினால் வழிபடும் அடியார்கள் எண்ணியவற்றை முடித்தருளும் ஆற்றல் வாய்ந்த தெய்வம் முருகன் பெருமான் என்பது சங்க காலத்தமிழ் மக்களின் உறுதியான நம்பிக்கையாக விளங்கியதை இதனால் அறியமுடிகின்றது. முருகப்பெருமானின் ஆறுமுகங்களும் காத்தற் தொழிலை மேற்கொண்டுள்ளன என்றும், முருகப்பெருமானால் காக்கப்பெற்ற விண்செலல் மரபினர், முனிவர் எனப்படுவர் என்பதனையும் அறிகின்றோம்.

> **"நிலமிசை வாழ்நர் அலமரல் தீர**
> **பெறுகதிக் கனலி வெம்மை தாங்கி**
> **காறுணவாகக் சுடரொடு கொட்டும்**
> **அவிர்சடை முனிவர்"**
>
> **(புறம் 43)**

என்று புறநானூறு குறித்துள்ளது குறிப்பிடத்தக்க செய்தியாகும்.

திருஆவிநன்குடியில் முருகப் பெருமானை அன்பினால் வழிபடும் பெருந்தவச் செல்வர்களின் உள்ளத்தியல்பினை,

> **"சீரை கைதிய உருக்கையர் சீரொடு**
> **வலம்புரி புரையும் வானரை முடியினர்**
> **மாசற இமைக்கும் உருவினர் மானி**
> **னுரிவை தைகிய ஊன்கெடு மார்பு**
> **னென்பெழுந் தியங்கு மியாக்கயைர் நண்பகற்**
> **பலவுடன் கழிந்த உண்டியர் இகலொடு**
> **செய்யும் நீக்கிய மனத்தின ரியாவதும்**
> **க்றறோ ரறியா வாழிவினர் கற்றோர்க்குத்**
> **தாம்வரம் பாகிய தலைமையர் காமமொடு**
> **கடுஞ்சினம் கடிந்த காட்சியர் இரும்பை**
> **யாவது மறிய வியல்பினர் மேவரத்**
> **துணியில் காட்சி முனிவர்"**(21)

எனத் திருமுருகாற்றுப்படை சுட்டியுள்ளதால் அறியமுடிகின்றது.

திருவாவினன்குடித் திருக்கோயிலில் முருகனது புகழ்ப்பாடல்களை இசையுடன் பாடும் மகளிரும், யாழில் இசைபோடருமாகிய இசைவாணர்களும் முருகனைத் தொழுதேற்றும் தூய நெஞ்சம் உடையராய் விளங்கி வழிபட்டதை,

> **"புகைமுகந் தன்ன மாசில் தூவுடை**
> **முனகவா யவிழ்ந்த தகைசூழ் ஆகத்துச்**
> **செவிநேர்பு வைத்த செய்வுறு திவவின்**
> **நல்லியாழ் நவின்ற நயனுடை நெஞ்சின்"**
>
> **- திரு.ஆ. படை**

என வரும் தொடரில் நக்கீரர் விரித்துக் கூறியுள்ளதால் அறிகின்றோம்.

திருப்பரங்குன்ற மலைதனில் ஆடவரும், மகளிரும் பெருந்திரளாகக் கூடி இம்மலையில் கோயில் கொண்டுள்ள முருகப் பெருமானுக்குத் திருவிழாக் கொண்டாடும் முறையில் ஆடல்பாடல் ஆகியவற்றை நிகழ்த்துதலின் ஆரவாரம் வானளாவ ஓங்கி விளங்கியதை,

> **தனிமழை மொழியும் தண்பரங்குன்றில்**
> **கலிருகாற் கும்மை ஏலாகாற் ஆயன்**
> **ததைந்த கோதை தாரொடு பொலிய**

***புணர்ந்துடன் ஆடும் இசையே அனைத்தும்***
***அகலிரு வானத் திமிழ்ந்தினி திசைப்ப***

**(மது.காஞ். 262-267)**

என மதுரைக்காஞ்சியின் வாயிலாக அறியமுடிகின்றது. மேலும் மன்றங்கள்தோறும் மகளிர் பலரும் முருகனது புகழ்பாடி குரவைத் கூத்தாடி வழிபட்டனர் என்பதனையும் கூறுகிறது

***"அருங்கடி வேலன் முருகொருவறைஇ***
***அரிக்கூட்டி இன்னியங் கறங்க நேர் நிறுத்து***
***கார் மலர்க் குறிஞ்சி சூடிக் கடம்பின்***
***சீர்மிகு நெடுவேட் பேணித்தழூஉப் பிணையூஉ***
***மன்றுதொறும் நின்ற குரவை"***

**- மது.காஞ். 610-615**

காவிரிபூம்பட்டிணத்தில் கட்டப்பெற்றுள்ள பல்வேறு கொடிகளுள் நெடுநிலை மாடத்து வாழும் இறைமகளிர் முருகவேளை வணங்கினர். அவனைக் குறித்து வெறியாடல் நிகழ்த்தும் மகளிரொடு பொருந்த குழலும் யாளும் இயம்பத், திருவிழா நீங்காத அகன்ற வீதியாலே தீமையை அகற்றும் சிறப்பினையுடைய தெய்வத்தை வழிபட்டுத் தூவிய மலர் நிறைந்த கோயில் வாயிலிலே பலருந்தொழுது கட்டிய கொடிகள் நிழல் செய்யும் தளத்தினைப் பின்வரும் பாடல் உணர்த்துகின்றது.

***"காந்தளந் துடுப்பிற் கமழ்குலை யன்ன***
***செறிதொடி முன்கைகூப்பிச் செவ்வேற்***
***வெறியாடு மகளிரொடு செறியத்தாஅய்க்***
***குழலகவ யாழ்முரல***
***முழுவதிர முரசியம்ப***
***விழவறா வியலாவணத்து***
***மையாறு சிறப்பிற் றெய்வம் சேர்த்திய***
***மலரணி வாயில் பலர் தொழு கொடியும்"(22)***

**- பட்டினப்பாலை**

எனப் பட்டினப்பாலை விரித்துரைக்கப் காண்கின்றோம். இதனால் முருகனுக்குரிய வழிபாட்டில், கொடியேற்று விழாச் சடங்கில் வெறியாடு மகளிரொடு இறைமகளிரும் கலந்து விழாவினைச் சிறப்பித்தனர் என்றும் அவர்கள் முருகப்பெருமானை மணந்த வள்ளி நாச்சியாரைப் போற்றி வணங்கினார் என்றும் அறிய முடிகின்றது.

பெறுதற்கரிய இறைமைத்தன்மையைப் பெற்ற பெரியோர்கள் நுகரும் பேரின்பத்தினை மண்ணுலகில் வாழும் அனைத்து மக்களும் எய்துக என, அருள்நோக்குடன் முருகப் பெருமான் திருப்பரங்குன்றத்தில் எழுந்தருளியுள்ளான் என்பதனைப் பரிபாடற் கருத்தால் அறியமுடிகின்றது.

**"நிலவரை யழுவத்தான் வானுரை புகழ்தந்து**
**புலவரை யறியாத புகழ்பூத்த கடம்பமர்ந்து**
**அடுமுனி மரபின் ஆன்றவர் நுகர்ச்சிமன்**
**இருநிலந்தோரும் இயைகென, ஈத்தநின்**
**தண்பரங்குன்றத்தியலானி"** (பரி 19:1-5)

V.1. *(ஆ) முருகன் திருவடி அடைவோரும், அடைந்தோரும்*

**நின்குணம் எதிர் கொண்டோர் அறங்கொண்டோர் அல்லதை**
**மன்குணம் உடையோர் மாதவர் வணங்கியோர் அல்லது**
**செறுதீ நெஞ்சத்துச் சினம்நீடி னோரும்**
**சேரா வறத்துச் சீரிலோரும்**
**அழிதவல் படிவத்து அயரியோரும்**
**மறுபிறப்பு இல்லெனும் மடவோரும் சேரார்** -பரி 71-79

V.1. *(இ) முருகனிடம் வேண்டுதல்*

**நின்னிழல் அன்னோர் அவ்வது இன்னோர்**
**சேர்வோர் ஆதலின், யாம் இரப்பவை**
**பொருளும் பொன்னும் போகமும்அல்ல நின்பால்**
**அருளும் அன்பும் அறனும் மூன்றும்**
**உருளிணர்க் கடம்பின் ஏலிதா ரோயே!** 77-81

V.1. *(ஈ) திருப்பரங்குன்ற வழிபாட்டுச்சிறப்புகள்*

கோல்விளக்கும், இசைக்கருவிகளையும், சந்தனம் போன்ற பிற நறுமணப் பொருள்களையும், புகைகளையும், கொடிகளையும், மணிவேல் முதலிய பூசைப் பொருள்களையும் கொண்டு திருப்பரங்குன்றத்து முருகனை வழிபடுவோர் வானுலகையும் விரும்பார் என்பதனைப் பரிபாடல் நன்கு உணர்த்துகின்றது. சான்றாக

**"தேம்படு மலர்குழை பூந்துகிழ் வடிமணி**
**ஏந்திலை சுமந்து சாந்தம் விரைஇ**
**விடையரை அசைத்த வேலன் கழமரம்**

பரவினர் உரையொரு பண்ணிய விசையானர்
விரிமலர் மதுவின் மாநனை குன்றத்து
கோலெரி கொளைநளை புகைகொடி யொருங்கெழ
மாலைமாலை அடியுறை யியைநர்
மேலோர் உறையுறும் வேண்டுநர் யாகர்
ஒருதிறம், பாணர் யாழில் தீங்குர லெழ
ஒருதிறம், பாணர் வண்டின் இமிரிசையெழ
ஒருதிறம், கண்ணார் குழலின் கரையெழ
ஒருதிறம், மண்ணார் முழவின் இறையெழ
ஒருதிறம், அண்ணல் நெடுவரை அருநீர் ததும்ப
ஒருதிறம், பாடல்நல் விறலியர் ஒல்குடி நுடங்க
ஒருதிறம், வாடை யுளர்வாயிற் பூங்கொடி நுடங்க
ஒருதிறம், பாடினி முரனும் பாலையங் குரலின்
நீகொறர், கிழமை நிறைகுறை தோன்ற
ஒருதிறம், ஆடுசீர் மஞ்ஞை, அரிகுரல் தோன்ற
மாறுமா றுற்றன்போன் மாறெதிர் கோடல்
மாறட்டான் குன்றம் உடைத்து" (பரி: 17: 1-21)

என வரும் பாடலைக் குறிப்பிடலாம்.

### V.1.2 *திருமால் வழிபாடு*

காத்தற் கடவுளாக வழிபடப்பெறும் திருமால், திருவோணை நாளில் அவதரித்தமையால், திருவோணநாளைத் திருமாலுக்குரிய நாளாகப் போற்றுதலை மரபாகக் காண்கின்றோம். இதனை,

"கணங்கொற் அவுணர்க் கடந்த பொலந்தார்
மாயோன் மேய ஓண நன்னாற்" (மது.காஞ். 590-91)

எனவும், இந்நாளில் மதுரை மாநகரில் போரில் பெருவிருப்புடைய வீரர்கள் பலருங் காணத்தம்முந் தாம் மாறாய்ப் பொருது நிற்கும் சேரிப்போர் மறவரது விளையாட்டாக நிகழ்ந்தது என்பதனையும் மதுரைக் காஞ்சியால் அறியமுடிகின்றது.

"மறங்கொற் சேரி மாறுபொரு செருவின்
மாறா துற்ற வடுப்படு நெற்றிச்
அரும்பார் கண்ணிப் பெரும்புகல் மறவர்" -மதுரை. 594-596

மண்ணுலகிலே வாழும் மக்கள் பலரும் ஒருங்கு கூடி உண்ணாநோன்புடையராய்த் திருவனந்தபுரத்திலுள்ள திருமால் கோயிலுள் திருவமர் (இலக்குமி) மார்பனாகிய

அலங்கார் செல்வன் திருமாலின் திருவடிகளைப் பரவிப்பாடிக் கிடத்தலும், அக்கோயிலின் தீர்த்தம் ஆடித் திருமாலை வழிபட்டு மனம் நிறைந்த மகிழ்ச்சி உடையராய்த் தாம்தாம் வாழும். ஊரை நோக்கி மீண்டு செல்லுதலும் ஆகியவற்றைச் சங்க காலத்தில் நிகழ்ந்த திருமால் வழிபாட்டு நிகழ்ச்சியாக அறியமுடிகின்றது. இச்செய்தியினை,

> **"குன்றுதலை மணந்து குழூஉக்கட லுடுத்த**
> **மண்கெழு ஞாலத்து மாந்த ரொராங்குக்**
> **கைசுமந் தலமரும் பூசன் மாதிரத்து**
> **நாள்வேறு நனந்தலை யொருங்கெழுந் தொலிப்பத்**
> **தெள்ளுயர் வடிமணி யெறியுநர் கல்லென**
> **உண்ணாப் பைஞ்ஞிலம் மனித்துறை மண்ணி**
> **வண்டூது பொலந்தார்த் திருஞெம ரகலத்துக்**
> **கன்பொரு திகிரிக் கமழ்சூரற் றுழா அய்**
> **நெஞ்சுமலி உவகையர் துஞ்சுபதிப்பெயர"** (பதிற்-பத்-31)

எனவரும் பதிற்றுப்பத்துப் பாடற்பகுதி விரித்துரைக்கக் காண்கின்றோம். "இப்பகுதியில் 'அலங்கார்செல்வன்' என்றது திருவனந்துபுரத்துத் திருமாலை என்பர் பழைய உரையாசிரியர். "[23]

இக்கருத்தினை வலியுறுத்தும் வகையில், சங்க இலக்கியத்தில் திருவனந்தபுரத்ததுத் திருமால் விளக்கம் பெறக்காணலாம். "உறையூர் முதுகூத்தனார் என்னும் புலவர் பாடிய அகநானூறு 137ஆம் பாடலில் தாம் வாழ்ந்த உறந்தையிலும், அதற்கருகிலுள்ள அரங்கத்திலும் பங்குனி மாதத்தில் நடைபெறும் விழாவைக் குறிப்பிடுகின்றார். இன்றும் பங்குனி மாதத்தில் நடைபெறும் விழாவில் அரங்க நகரப்பன் உறையூருக்கு எழுந்தருளுவது வழக்கமாக உள்ளதைச் சான்றாகக் கூறலாம்."[24]

> **"வென்று எளிமுரசின் விறல்போர்த் தோழர்**
> **இன்கடும் கள்ளின் உறந்தை அங்கன்**
> **வருபுனல் நெரிதடும் இருகரைப் பேரியாற்று**
> **உருவவெண்மணல் முருகு நாறு கண்பொழில்**
> **பங்குனி முயக்கம் கழிந்த வழி நாள்**
> **வீஇலை அமன்ற மரம் பயல் இரும்பில்**

*தீஇல் அடுப்பின் அரங்கம் போல*

*பெரும்பாழ் கொண்டன்று நுதலே”* அகம்-137-144

என்னும் பாடல்பகுதியில் “விழா திருவரங்கத்தில் நடப்பது என்று கூறினாரேயன்றித் திருமாலுக்கு நடப்பது என்று கூறவில்லையே என்று, கூறுவார்க்கு விடையளிப்பது போன்று சிலப்பதிகாரத்தில் (சிலம்பு–காடு கான்காதை–35–40) திருவரங்கத்தில் பள்ளி கொண்டிருப்பவன் திருமாலே என்று மிகத் தெளிவாகக் கூறப்பட்டுள்ளதையும் சான்றாகக் கூறலாம். ” (25)

சங்க இலக்கியங்களில் திருமாலைப் பற்றிய பல செய்திகள் காணப்படுகின்றன. திருமால் அச்சம் ஊட்டும் தெய்வமாகச் சில இடங்களில் கூறுப்படுகின்றார். சில இடங்களில் நன்மை செய்யும் தெய்வமாகவும் போற்றப்படுகின்றார். “சங்க இலக்கியங்களுள் பதிற்றுப்பத்தும், பரிபாடலும் திருமாலைக்கோயிலில் வைத்து வணங்கிய செய்திகளைத் தருகின்றன. பதிற்றுப்பத்தில் ‘களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலைக் காப்பியாற்றுக் காப்பியனார்’ பாடியபாடலில் சேரமக்களால் திருமால் கோயிலில் வைத்து வணங்கப்பட்டமையைக் காணலாம். மக்கள் புலர்காலைப் பொழுதில் நீராடி உண்ணாநோன்பு மேற்கொண்டவராகித், திருமார்பும், துளசிமாலையும், ஒளிச்சக்கரமும் கொண்ட திருமாலை வணங்கினார் என்னும் செய்தியை பெறமுடிகின்றது. ”(26)

“பரிபாடலில் திருமாலிருந்த இருந்தையூர் பற்றிய செய்திகள் கூறப்பட்டுள்ளன. துறக்கவுலகத்திற்கு ஈடான திருமாலிருங்குன்றம்–அழகர் மலைத்திருக்கோயில் திருமால் கோயில் கொண்ட இடமாகச் சங்க காலத்தில் திகழ்ந்தாமையையும், இம்மலையில் அமர்ந்த கோலத்தில் மஞ்சள் வண்ண ஆடையில் திருமால் காட்சி தந்தமையையும் சங்க இலக்கியங்கள் வாயிலாக அறிகின்றோம். திருமால் எழுந்தருளியிருக்கும் மாலிருங்குன்றமே தன்னைக்

கண்டவர்களுக்குப் பிறவியை அருத்து வீடுபேற்றை நல்குவது என்றும் உணர்த்தப்படுகின்றது"[27] என்பர்.

"பரிபாடல் திரட்டில் ஆசிரியர் நான்மாடக் கூடலில் வையைக்கரையிலுள்ள இருந்தையூர் என்னும் பதியில் அமர்ந்த கோலத்திலிருந்த திருமாலைத் தொழுது போற்றக்காணலாம். 'இருந்த எந்தை ஊர்' என்பதே இருந்தையூர் என மருவிற்று என அறியமுடிகின்றது. அடுத்து வருமிடங்களிலே இருந்தையூரின் மலை, குளம், வயல் ஆகியவற்றின் சிறப்பையும் பேசுகிறார் ஆசிரியர். எனவே திருமால் உறையும் கோவில்களைப் பற்றிக்கூறும் பொழுது திருமாலின் கோலத்தைக் குறிப்பிட்டுச் சொல்லும் பழக்கத்தைக் காண்கின்றோம். மேலும் திருவேங்கடமலையில் இறைவன் நின்ற கோலத்திலும், திருவரங்கத்தில் கிடந்த கோலத்திலும் இருப்பதாகச் சிலப்பதிகாரத்தில் கூறப்பட்டுள்ள செய்தியால் அறிகின்றோம். இதற்கு அடித்தளமாக விளங்குவது திருமாலைக் கோலத்துடன் சித்தரிக்கும் இருந்தையூர், சங்க காலச்செய்தியாகும். ஆகையால் திருமலைக் கோலத்துடன் சித்தரிக்கும் பண்பு சங்க காலத்திலேயே உருவானது என்பது உறுதிசெய்யப்படுகிறது."[28]

இளம்பெருவழுதியார் தாம் பாடிய பதினைந்தாம் பரிபாடலில் திருமாலிருஞ்சோலை மலையின் சிறப்பினைப் போற்றியுள்ளார்.

முல்லைநிலத்துக் கோவலன் தன்னுடைய ஆநிரைகளைப் பாற்பயன் தருதல் வேண்டித் திருமாலைப் பரதவிப் போற்றுதலும், மகளிராகிய ஆய்ச்சியர் குரவைக் கூத்தாடி மானோனை வழிபடு கடவுளாகக் கொண்டு போற்றியதையும், இலக்கியங்கள் வாயிலாக அறியலாம்.

> **"குரவை தமீஇ யாம் மரபுளிபாடித்**
> **தேயா விழுப்புகழ்த் தெய்வம் பரவுதும்**
> **மாசில்பான் முந்நீர்ப் பரந்த தொன்னிலம்**
> **ஆளுங் கிழமையொடு புணர்ந்த**
> **எங்கோ வாழியரிடம் மலர்தலையுலகே"**
>
> **(கலி-103)**

எனவும்,

**"அங்குத்**
**தொல்கதிர் கிகிரியாற் பரவுவதும் ஏங்கா**
**உருமுறழ் முரசிற் றென்னவற்**
**கொருமொழி கொள்க விவ்வுலகுடனெனவே"** **(கலி-104)**

மேலும்,

**"பாடிமிழ் பரப்பகத் தரவணை யகைஇய**
**ஆடுகொள் நேமியாத் பரவுதும் நாடுகொண்**
**டின்னிசை முரசிற் பொருப்பன் மன்னி**
**அமைவர லருவி யார்க்கும்**
**இமையத் தும்பரும் விளங்குக வெனவே"** **(கலித்-105)**

எனவும் அறிகின்றோம்.

தம்வழிபடு தெய்வம் புறங்காப்பதாம் எனவும், நாடாளும் வேந்தனாகிய பாண்டியன் வெற்றியும் புகழும் உடையனாய் நீடு வாழ்தல் வேண்டும் எனவும் வாழ்த்துதலால் அறியப்படுகிறது.

திருமாலின் அவதாரமாகிய இராமபிரான் புகழ்பாடும் இராமாயணம் பற்றிய செய்திகளையும் சங்கத்தொகை நூல்களில் பேசப்படுகின்றன என்பது உண்மையேயாகும். இராமபிரான் தன் தேவியை இராவணனிடமிருந்து மீட்டுதற் பொருட்டுக் கோடிக்கரையிலுள்ள ஆலமரத்தினடியில் தன் நண்பர்களுடன் ஆலோசனை செய்தார் என்ற செய்தியினை இலக்கியம் சுட்டக்காண்கின்றோம். சான்றாக,

**"வென் வேற் கவுரியர் தொன்முது கோடி**
**முழங்கிடும் பெறவ மிரங்கு முன்றுறை**
**வெல்போ ரிராமன் அருமறைக் கவிந்த**
**பல்வீ ழாலம் போல**
**ஒளியவிந்தன்றிவ் வழுங்க லூரே"** **(அகம்-70)**

என்ற பாடலைக் கூறலாம். சீதாபிராட்டி, தான் கவரப்பட்டுச் செல்லும் வழியை இராமபிரான் அறிந்து கொள்ளும் பொருட்டுத்தன் அணிகலன்களைக் கழற்றி விமானம் செல்லும் வழியே நெடுகப் போட்டுச் சென்றாள் எனவும், அவ்வணிகலன்களைக் கண்டெடுத்த கிட்கிந்தையிலுள்ள குரங்குகள் அவற்றை

அணியும் முறையை அறியாததால் காண்போர் நகைக்கும்படி மாறி அணிந்து கொண்டன என்ற செய்தியையும், சங்கத் தொகை நூல்களின் வாயிலாக பெறுகின்றோம்.

**"கடுந்தெறல் இராமன் உடன்புணர் சீதையை**

**வலித்தொகை யரக்கண் வவ்விய ஞான்றை**

**நிலஞ்சேர் மதரணிக் கண்ட குரங்கின்**
**செம்முகம் பெருங்கிளை இழைப்பொழிந்தாங்கு**
**அராசு அருநகை இனது பெற்றிகுமே"** (புறம் 378)

கண்ணனும், பலராமனும் இணையாகச் சங்க காலத்தில் வழிபடு கடவுளராகப் போற்றப்பட்டுள்ளனர். ஆனால் சங்க காலத்தில் கண்ணன், திருமால் எனும் பெருந்தெய்வ வழிபாட்டில் கலந்து கோயில் வழிபாட்டிற்குரியவரானதை இங்குக் காணமுடிகிறது.

### V.1.3 *சிவன் வழிபாடு*

'பண்டைய நாளில் போர் மறவர்களால் வழிபடப் பெற்ற கொற்றவையாகிய வனதுர்க்கையும், தீயோரைச் சினந்தழிக்கும் காடுகிழாளாகிய காளியும், பின்னர் ஆருயிர்கட்கெல்லாம் அப்பனாகிய இறைவனோடு பிரிவின்றி, அவனது ஒரு கூறாகியமர்ந்து அருள்சுரக்கும் அம்மையாகிய மலைமகள் என தமிழ் மக்களால் வழிபடப்பெறும் சிவசக்தியே என்பதும் பெறப்படுகிறது.'[(29)] பண்டைத்தமிழர் இவ்வுண்மையைப் பின்வரும் பாடலால் உறுதி செய்யலாம். இது வழிபாட்டு வாழ்வியல் உணர்த்தும் உண்மையாகும்.

**"வெள்ளேறு**
**வலவயின் உரிய பலர் புகழ் திணிதோள்**
**உமையமர்ந்து விளங்கும் இடையாமுக்கன்**
**மூவெயில் முருக்கிய முரண்மிகு செல்வனும்"**
**(திரு.முரு. 151-154)**

**"நெடும்பெருஞ் சிமையத்து நீலப் பைஞ்சுனை**
**ஐவருள் ஒருவன் அங்கை யேற்ப**

அறுவர் பயந்த ஆறமர் செல்வ
ஆல்கெழு கடவுட் புதல்வ மால்விரை
மலைமகள் மகனே மாற்றோர் கூற்றே
வெற்றி வெல்போர் கொற்றவை சிறுவ
இழையாணி சிறப்பியற் பழையோற் குழவி"
(திரு.முரு. 253-59)

என முருகப் பெருமானை ஆலமர் செல்வனாகிய சிவபெருமானுக்கும் அம்முதல்வனுடைய சக்திகளாகிய உமாதேவி கொற்றவை–காடுகிழாற் (காளி) என்போர்க்கும் மகனாகவும் நக்கீரனார் போற்றியுள்ளமையால் அறியப்படுகிறது. "பண்டை நாளில் தனித்தனியே வெவ்வேறு திருவுருவு அமைத்து வழிபடப்பெற்ற சிவசக்திகளும், குறிஞ்சியின் நிலத்தெய்வமாக வழிபடப்பெற்ற முருகவேளும், சிவத்துடன் நெருங்கிய தொடர்புடைய தெய்வங்களாக அறியப்படுகின்றனர் எனவும், மக்கள் மேற்கொண்ட தெய்வ வழிபாடுகளில் இணைக்கப்பட்டுச் சிவப்பரம்பொருளே முழுமுதற்கடவுள் எனக் கருதிப் போற்றும் ஒரு தெய்வ வழிபாட்டு முறை தமிழகத்தின் சங்க காலத்திற்குப் பன்னூறாண்டுகளுக்கு முன்னரே உருவாகி நிலைபெற்று விட்டதென்பதையும் அறிய முடிகிறது."[30] இக்கருத்து மேற்குறித்த திருமுருகாற்றுப்படை தொடர்களால் உறுதிசெய்யப்படுகிறது.

பத்துப்பாட்டில் ஒன்றாகிய மதுரைக்காஞ்சியைப் பாடிய மாங்குடி மருதனார், மதுரை மாநகரில் அமைந்த தெய்வத்திருக்கோயில்களைக் (கடவுட் பள்ளியைக்) குறிப்பிடும் பொழுது, சிவபெருமானைச் சிறப்பித்துப் போற்றியுள்ளது குறிப்பிடத்தக்க உண்மையாகும்.

"நீரும் நிலனும் தீயும், வளியும்
மாக விசும்போ டைந்துட னியற்றிய
மழுவாள் நெடியோன் தலைவன் ஆக
மாசற விளங்கிய யாக்கையர் ஆழ்சுடர்
வாடாப்பூவின் இடையாநாட்டத்து
நாற்ற வுளவின் உருகெழு பெரியோர்க்கு
மாற்றரு மரபின் உயர்பலி கொடுமார்
அந்தி விழவில் தூரியம் கறங்க" (மதுரைக். 453-460)

என வரும் மதுரைக்காஞ்சித் தொடர், மதுரை மாநகரில் உள்ள திருக்கோயில்களின் மாலை வழிபாட்டினைக்குறிப்பதாகும்.

இத்திருக்கோயிலிலே பலவகை வாத்தியங்களும் முழங்கத் தொடங்கப்பெற்ற திருவிழாவிலே மாலைக்காலத்தில் மலைவாழ் மங்கல மகளிர்தம் கணவரோடும், குழந்தையோடும் பிற சுற்றம் சூழவும் கடவுட் பூசைக்கு இன்றியமையாத பொருட்களையும் மற்றும் பிற பூவுகளையும் புகையையும் ஏந்திக்கொண்டு திருக்கோயிலில் இறைவனை வழிபடச் சென்ற அன்பின் திறத்தினைச் சங்கப்பாடல்கள் கூறக்காண்கின்றோம்.

> ***"திண்கதிர் மதாரி ஒன்குறு மாக்களை***
> ***ஒப்பினர்த் தழீஇத் தாம்புணர்ந்து முயங்கித்***
> ***தாதணி தாமரைப் போது பிடித்தாங்குத்***
> ***தாமும் அவரும் ஓராங்கு விளங்கக்***
> ***காமர் கவினிய பேரிளம் பெண்டிர்***
> ***பூவினர் புகையினர் தொழுவனர் பழிச்சிச்***
> ***சிறந்து புறங்காங்குங் கட்வுட் பள்ளியும்"***
>
> **(மதுரைக் 461-468)**

என வரும் மதுரைக் காஞ்சித் தொடர் குறிப்பிட்டுள்ளது. "இத்தொடரில் சுட்டப்பெற்ற 'கடவுட்பள்ளி' என்பதற்கு நச்சினார்க்கினியார் உரையிற் 'பௌத்தப்பள்ளி' எனப் பொருள் வரையப் பெற்றுள்ளது. நீரும் நிலனும், தீயும், வளியும் விசும்பொரு ஐந்து உடன் இயற்றிய மழுவாள் நெடியோன் தலைவனாக என்ற பாடல் அடியில் பயின்று வரும் 'உருகெழு பெரியோர்க்கு உயிர்பல தருமார் அந்திவிழாவில் தூரியம் கறங்க' என்ற தொடரில் உள்ள 'கறங்க' என்னும் செயவென் வாய்பாட்டு வினையெச்சம், சிறந்து புறங்காக்கும் எனப் பின்வரும் தொடரில் அமைந்த புறங்காக்கும் என்னும் பெயரெச்சத்தின் பகுதியாயப்புறங்காத்தல் என்னும் பிற வினை முதல் வினை கொண்டு முடியக், காக்கும் என்னும் அப்பெயரெச்சம் 'கடவுட் பள்ளி' என்னும் பெயர் கொண்டு முடிந்தது. பள்ளி என்ற இத்தொடரிலுள்ள 'கடவுள்' என்பது முதற்குறித்த மழுவாள் நெடியோன் ஆகிய

சிவபெருமானைத் தலைவனாகக் கொண்ட தெய்வங்களையே குரித்தல் தெளிவு எனலாம்"[31]. "முற்காலத்தில் பேரூர்கள் தோறும் இறைவனை வழிபடுதற்கும், மக்கள் பலரும் கூட்டமாகத் தங்கியிருந்ததற்கும் ஏற்ற வண்ணம் பொதியில் எனப்படும் அம்பலங்கள் ஊரின் நடுவே அமைக்கப்பெற்றிருந்ததை அறியமுடிகின்றது. அவ்வம்பலத்தில் மக்கள் பலரும் அன்பினாலும், இறைபாட்டாலும் ஒன்று கூடி இன்னவுரு. இன்னநிரம் என்று அறிய வொண்ணாத இறைவனை மலர்தூவி வழிபடுவதற்குரிய முறையில் கந்து எனப்படும் தெய்வம் உறையும் தூணைனொன்றை நடுவே நாட்டப்பட்டிருந்ததை பட்டினப்பாலை வாயிலாகக் காணமுடிகின்றது. "[32]

> ***"கொண்டி மகளிர் உண்டுளை மூழ்கி***
> ***அந்தி மாட்டிய நந்தா விளக்கின்***
> ***மலரணி மெழுக்க மேறிப் பலர் தொழ***
> ***வம்பலர் சேர்க்கும் கந்துடைப் பொதியில்"***
>
> **(பட்.பா-246-49)**

"இவ்வாறு தறிநட்டு அவ்விடங்களைக் கோயிலாக வழிபட்ட புதுமை தமிழரிடத்து இருந்தமையை அறியமுடிகிறது. இவ்வாறு தறிநட்டுக் கோயிலாக வழிபட்ட அவ்விடங்களைப் பொதியில் என்றும் அம்பலம் என்றும் அழைத்துள்ளதை அறிகின்றோம்."[33] ஊரின் நடுவிடமாகிய மன்றம் என்றும் கூறப்பட்ட அவ்வம்பலத்தில் மாலைநேரங்களில் நடைபெறும் வழிபாடும் விளக்கப்பட்டுள்ளது. அவ்வம்பலகத்தின் அருகே, வழிபட வருவோர் நீராடிச் செல்வதற்கு ஏற்றவாறு தீர்த்தகுளம் அமைக்கப்பெற்றிருந்தது என்றும், போர்க்காலத்தில் பகைவரது நாட்டினின்றும் சிறைபிடித்துக் கொணரப்பட்ட மகளிர் பலரும் அங்குள்ள திருக்குளத்தில் நீராடியும் அவ்வம்பலத்தில் மெழுகுதல் முதலிய திருப்பணிகளைச் செய்தும் திருவிளக்கு ஏற்றி, மலர்தூவி, மாலை சூட்டி வழிபட்டனர் என்றும் இலக்கியங்கள் கூறக்காணலாம்.

“கொண்டி மகளிறற் உண்துறை மூழ்கி” எனவரும் பட்டினப் பாலையடிகளிற், பகைவர் மனைவியராய்த் போரிற் சிறைப்பிடித்துக் கொணரப்பட்ட பெண்கள், அவர்தம் கற்பியல் வாழ்வுக்கு இடர் நேராதவாறு மதித்து அவர்கள் தாம் விரும்பிய தெய்வ வழிபாட்டில் உரிமையுடன் ஈடுபட்டு அமைதியாக வாழும்படி செய்த தமிழ் முன்னோரது நாகரிகப் பண்பாடும் அரசியல் மேலாண்மையும் போற்றுதற்குரியதாகும். “பொதியினை மெழுகி விளக்கும் இட்டிருக்க வம்பமகளிரை வைத்தார், என நச்சினார்க்கினியர் தரும் உரைவிளக்கம் மேற்குறிப்பிட்ட கருத்தினை நன்கு வலியுறுத்துகிறது எனலாம்.”[34]

“நஞ்சுண்ட கண்டனாகிய சிவபெருமானைக் காரியுண்டிக் கடவுள், கறைமிடற்றண்ணல், நீலமணி மிடற்றொருவன், மணிமிடற்றந்தணன் எனச் சங்க இலக்கியங்கள் போற்றுகின்றன எனலாம். ”[35] சங்க காலத்தால் ‘நன்னன்சேய் நன்னன்’ என்னும் குறுநில மன்னனது ஆட்சிக்கு உட்பட்ட நிலப்பரப்பில் அமைந்திருந்த நவிறமலையின் உச்சியிலேயே காரியிண்டிக் கடவுளாகிய சிவபெருமானுக்குச் சிறப்புடையத் திருக்கோயில் அமைக்கப்பெற்றிருந்தது என்பதனை,

> **“பேரிசை நவிரம் மேயுறையிம்**
> **காரியிண்டிக் கடவுள தியற்கையும்”** **(மலைபடு. 81, 82)**

எனப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் என்னும் புலவர் கூறுதலால் அறியமுடிகிறது. மேலும் இக்கருத்தினை வலியுறுத்தும் வகையில்,

> **“பராவரு மரபிற் கடவுள்”** **(மலை. 280)**

என்று மலைபடுகடாம் நவிற்மலையில் கோயில் கொண்ட இறைவனைப் போற்றியுள்ளது குறிப்பிடத்தக்க செய்தியாகும்.

திருவாதிரை நாளுக்குரியத் தலைவனாகச் சிவபெருமானையும், திருவோண நாளுக்குரியத் தலைவனாகத் திருமாலையும் போற்றுதல் இந்நாட்டில் தொன்றுதொட்டு வரும் வழிபாட்டு மரபாகக் காண்கின்றோம். இருபெருந்தெய்வத்

தொடர்பாலேயே, இருபத்தியேழு விண்மீன்களுள் ஆதிரை, ஓணம் என்னும் இரண்டும் 'திரு' என்னும் அடைமொழி பெற்று வழங்கப்பெறுகின்றன. "ஆதிரை விண்மீன் கூட்டம் ஆடல்வல்லானாகிய கூத்தப் பெருமானது திருவுருவினைப் போன்று விண்ணில் ஒளிர்தலால் அத்திருமேனியிற் காட்சி நல்கும் சிவபெருமானை ஆதிரை முதல்வன் எனச் சங்கநூல்களும், ஆதிரைநாயகன் எனத் திருமுறைகளும் போற்றிப்பரவுகின்றன என்றே கூறலாம்."(36) இந்நாளுடன் தொடர்புடையதாய் வருவது மார்கழித்திருவாதிரையாகும். இந்நாள் சிவபெருமானுக்குரிய சிறப்புடைய திருவிழா நாளாகக் கொண்டாடப்பெற்று வருகிறதைக் காண்கின்றோம். இத்திருவிழாவின் சிறப்பினைப் பதினோராம் பரிபாடலில் ஆசிரியர் நல்லந்துவணார் விரித்துப் பாடியுள்ளார்.

> **"கனைக்கும் அதிர்குரல் கார்வானம் நீங்கப்**
> **பனிப்படு பைதல் விதலைப்பருவத்து**
> **ஞாயிறு காயா நளிமாரிப் பிற்குறத்து**
> **மாயிருந்திங்கள் மறுநிறை ஆதிரை**
> **விரிநூல் அந்தணர் விழவு தொடங்கப்**
> **புரிநூல் அந்தணர் பொலங்கலம் ஏற்ப**
> **வெம்பாதாக வியனில உரைப்பென**
> **அம்பா வாசலின் ஆய்தொடிக் கன்னியர்**
> **முனித்துறை முதல்வியர் முறைமை காட்டப்**
> **பனிப்புலர் பாடிப்பருமன லருவியின்**
> **ஊதையூர்தர வுறைசிறை வேதியர்**
> **நெறிநிமிர் நுடங்கழல் பேணியசிறப்பியற்**
> **றையல் மகளிர் ஈரணி புலர்த்தர**
> **வையை நினக்கு மடை வாய்த்தன்று"** **(பரி 11: 78-87)**

என்பது பரிபாடற் பாடல்பகுதியாகும்.

கன்னி மகளிர் நீரின்கண் புலன்கள் அடக்கிச் செய்யுந் தவத்தினை, முன்னைப் பிறப்புகளில் அடுத்தடுத்துச் செய்ததன் பயனாக, தம்தாயின் அருகே நின்று தவமாகிய தைந்நீராடல் நோன்பினை வையையில் மேற்கொண்டதாக வையை நோக்கி கூறும்படியாக அமைந்துள்ள பரிபாடற்பகுதியால் அறியமுடிகிறது.

"மையாட லாடல் மழபுலவர் மாறெழுந்து
பொய்யாட லாடும் புணர்ப்பினவரவர்
தீயெரிப்பாலுஞ் செறிதவமுன் பற்றியோ
தாயருகா நின்று தவத்தைந் நீராடுதல்
நீயுரெத்தி யையை நதி"

(பரி 11:88-92)

இப்பாடல்பகுதி மார்கழி மாதத்துத் திருவாதிரைத் திருவிழாவையொட்டி நிகழும் மகளிர் நோன்பாகிய அம்பாவாடலின் நிகழ்ச்சியை விரித்துரைப்பதைக் காணலாம். இப்பாடலில் குளம் என்றது, மார்கழி மாதத்தை, திருவாதிரை நிறைமதி நாளாங்கால்—ஆதித்தன் (ஞாயிறு) பூந்தடத்தின்கண் (புனர்பூசத்தின்) நிற்குமாதலின் அதனையுடைய மார்கழி மாதம் 'குளம்' எனப்பட்டது என்கிறார் பரிமேலழகர். மேலும் தாயருகே நின்று இளமகளிர் ஆடுதலின் அம்பாஆடல் எனப்பட்டது. அம்பா—தாய், தாயார் அருகே நின்று தவத்தைந் நீராடலின் என்கிறார் நல்லந்துவனார். "இத்தொடரில் தாய் என்றது உலகத்தை ஈன்ற தாயாகிய பராசக்தியை என்கிறார் பரிமேலழகர்." [37]

"'அம்பா ஆடலே' தைந்நீராடல் எனவும் வழங்கப்படுகிறது எனக் காண்கின்றோம். மார்கழித் திருவாதிரையில் தொடங்கி நிகழும் மகளிர் நோன்பாகிய 'அம்பாவாடல்' தைத்திங்களில் நிறைவு பெறுதலின் 'தைந்நீராடல்' எனவும் வழங்கப்பெறுகிறது எனலாம். பிற்காலத்தில் மார்கழி நீராடல் எனவும் வழங்கப்பட்டதைக் காண்கின்றோம். இந்நோன்பின் நிறைவு தைத்திங்களில் முற்றுப்பெறுதல் கருதிச் சங்கச் செய்யுட்களில் தைந்நீராடல் எனவும், மார்கழித் திருவாதிரையினை யொட்டித் தொடங்குதல் பற்றி திருவெம்பாவையிலும், திருப்பாவையிலும் மார்கழி நீராடல் எனவும் வழங்கப்பெறினும் இவை இரண்டும் ஒரு நோன்பினையே குறித்த பெயர்கள் என்பது பதினோராம் பரிபாடலுக்குப் பரிமேலழகர் எழுதியவுரையால் நன்கு உறுதியாகிறது." [38]

*தொகுப்புரை*

கடைச்சங்க காலத்தில் வாழ்ந்த புலவர் பெருமக்களால் பாடப்பெற்ற பாடல்களுள் அடிவரவு பற்றியும், திணைவகைப்பற்றியும் தேர்ந்து தொகுக்கப்பெற்ற பத்துப்பாட்டு, எட்டுத்தொகை எனும் சங்க இலக்கியங்களில் ஆலய வழிபாடு இடம்பெறும் திறம் பெறப்படுகின்றது.

தெய்வ வழிபாட்டின் தொடக்க நிலையாக, வழிபடு தெய்வத்திற்குத் திருவுருவமைத்து வழிபட்டனர் என்று அறிகின்றோம். இவ்வாறு வழிபட்ட தெய்வத்தினை இல்லங்களில் நல்இருப்பு செய்து வழிபட்டனர் என்றும் அறியமுடிகின்றது. வேலன் வேடம் புனைந்து வேலன் வெறியாட்டயர்கின்ற விழாக்களைச் சங்ககால மக்கள் மேற்கொண்டொழுகியுள்ளனர். இவ்வாறு தெய்வத்திருவுருவச் சிந்தனையால் திருக்கோயில்களில் வழிபடு தெய்வ உருவங்களும் பலவாறாக இடம்பெறத் தொடங்கின என்று அறியமுடிகின்றது.

சங்க இலக்கியங்களில் பல்வேறு தெய்வங்கள் உறையும் திருக்கோயில்களான திருமாலிருஞ்சோலை, திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவேரகம், திருவாவினன்குடி, திருமாலிருந்தயிருந்தையூர், கூடல்நகர், திருவரங்கம், திருவேங்கடமலை போன்றத்திருக்கோயில்களும் இத்திருக்கோயிலில் நடைபெறும் வழிபாட்டு முறைகளும் அவ்வழிபாட்டின் அடிப்படையில் தோற்றம் பெற்ற பல்வேறு திருவிழாக்களான குரவைக்கூத்து, திருவோணத்திருவிழா, திருவாதிரைத்திருநாள், மார்கழி, தைநீராடல்நோன்பு ஆகியன கொண்டாடப்பட்ட திறத்தினையும் பற்றிய பல்வேறான செய்திகள் சான்றுகளின் வழி நிறுவப்பட்டுள்ளன.

*அடிக்குறிப்புகள்*

1. க. வெள்ளைவாரணனார், சைவசித்தாந்த சாத்திர வரலாறு, ப–86.
2. மேலது, ப–163
3. மேலது, ப–249
4. மேலது, பக்–252–254
5. மேலது, பக் 252–254
6. மேலது, பக் 252–254
7. மேலது, ப.255
8. மேலது, ப.272
9. மேலது, 288
10. மேலது, பக் 315, 316
11. மேலது, ப.171
12. த. தனபாக்கியவதி, தமிழ் இலக்கியத்தில் திருமால் வழிபாடு ப–100.
13. மேலது, ப.101
14. ப.பத்து–31: 1–10
15. பரி.பா. 15:17–37
16. த. தனபாக்கியவதி, தமிழ் இலக்கியத்தில் திருமால் வழிபாடு, ப–29
17. க. வெள்ளை வாரணனார், சைவசித்தாந்த சாத்திர வரலாறு, ப–325
18. மேலது, ப–326
19. மேலது, ப–329
20. அ.ச.ஞானசம்பந்தன், பெரியபுராணம்–ஓர் ஆய்வு, ப.64.
21. க. வெள்ளை வாரணனார், சைவசித்தாந்த சாத்திர வரலாறு,–334
22. மேலது, ப–335
23. மேலது, ப–343
24. மேலது, ப–362
25. மேலது, ப–365
26. மேலது, ப–366
27. தொல்காப்பியம், பொருளதிகாரம் அகத்திணையியல்–50
28. தொல்காப்பியம் பொருளதிகாரம் செய்யுளியல் ப–127
29. தொல்காப்பியம் பொருளதிகாரம் செய்யுளியல் ப–133
30. தொல்காப்பியம் பொருளதிகாரம் செய்யுளியல் ப–134
31. ஆதி பாலசுந்தரன், சங்க இலக்கியங்கள் புலப்படுத்தும் வழிபாட்டு வரலாறு ப–89.
32. மேலது, ப–89
33. மேலது, பக்–152, 153
34. மேலது, பக்–152, 153
35. மேலது, பக்–152, 153
36. மேலது, பக்–152, 153
37. மேலது, பக்–176
38. க. வெள்ளை வாரணனார், சைவசித்தாந்த சாத்திர வரலாறு, ப–226

# இயல்-3

# திருக்கோயில்களின் அமைப்பு வளர்ச்சி நிலை

# இயல் – 3

## திருக்கோயில்களின் அமைப்பு வளர்ச்சி நிலை

*முன்னுரை*

பண்டைத் தமிழகத்தில் திருமால், சிவபெருமான், முருகன், இந்திரன், கொற்றவை போன்றவர்க்கும் மற்றும் பல சிறு தெய்வங்களுக்கும் கோயில்களை எழுப்பி மக்கள் வழிபட்டனர். இவற்றுள் திருமால், சிவன் கோயில்கள் ஆகம, சிற்பசாத்திர விதிகளின்படி அமைக்கப்பெற்று, ஆகம நூல்களில் விதித்த நெறிப்படி நித்திய நைமித்தக பூசைகள் இன்றளவும் நடைபெறுகின்றன.

இக்கோயில்கள் ஆதியில் செங்கற்களால் அல்லது மரத்தால் அமைக்கப்பட்டுக் கருவறை மட்டிலும் விமானத்தோடு அமைக்கப்பட்டது. பல்லவர்களின் காலத்தில் கற்பாறைகள் குடையப்பட்டுக் கருவறை கொண்ட குடைவரைக் கோயில்கள் தோன்றின. அடுத்து வந்த சோழர் காலத்தில் அர்த்தமண்டபம், மகாமண்டபம், நீண்ட வாயில் மற்றும் திருச்சுற்றுகளையும் சேர்த்து அமைத்து கோயிலமைப்பை விரிவுபடுத்தினர். இக்கால கட்டத்தில்தான் சிற்ப வேலைப்பாடுடன் கூடிய உயரமான கோபுரங்கள் கட்டும் கலைத்தோன்றியது. அதனால் எழுந்தருளும் திருமேனிகளான உற்சவ மூர்த்திகளும் பிரதிஷ்டை செய்யப்பட்டனர். இவ்வாறே திருக்கோயில் அமைப்பும், திருவிழாக்களும் வளர்ச்சிபெற்றன.

மக்கள் வாழ்விலிருந்து பிரிக்க முடியாத அங்கமாக விளங்கிவரும் திருக்கோயில்களின் அமைப்பு, வளர்ச்சிநிலை என்ற இத்தலைப்பில் திருக்கோயில்களின் வகைகள், திருக்கோயில்களின் பொதுவான அமைப்பு, ஆரம்பகால நிலையில் திருக்கோயில்களின் அமைப்பு, வளர்ச்சிநிலை ஆகியன பற்றியும், இவ்வடிப்படையில் ஆய்வு எல்லையாக அமைந்துள்ள

சேதுநாட்டுத்திருக்கோயில்களின் அமைப்புப் பற்றியும் வளர்ச்சி விரிவாகக் காணலாம்.

## I. *திருக்கோயில்களின் வகைகள்*

கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம் என்பது ஔவையின் அமுதமொழியாகும். திருக்கோயில்கள் மக்களின் ஆன்மீக வளர்ச்சிக்கு அளப்பரிய தொண்டாடுகின்றன. உடலும் உணர்வும் ஒன்றுபட்டு இறைவனைக்காணும் வாய்ப்பை நல்குகின்றன. மக்களிடம் அழுத்தமான நம்பிக்கையை வளர்த்தும், வாழ்க்கையில் ஏற்படும் சலிப்புகளை நீக்கி அமைதி தவழும் இடமாகத் திருக்கோயில்கள் இன்றளவும் திகழ்கின்றன.

***திருக்கோயில் இல்லாத திருஇல் ஊரும்***
***திருவெண்ணீ றணியாத திருஇல் ஊரும்***
***பருவங்கோடி பத்தியமையாற்பாடா ஊரும்***
***பாங்கினொரு பலதளிகள் இல்லா ஊரும்***
***விருப்போடு மலர் பறித்திட்டுண்ணா ஊரும்***
***அவையெல்லாம் ஊரல்ல. அடவிக்காடே!***
**- அப்பர் தேவாரம்**

என்ற அப்பரின் பாடல் வாயிலாக மன்னர்களும், சமயப் பற்றுங் கொண்ட சான்றோர்களும் கோயிலை உண்டாக்கிய பின்பே ஊரை உண்டாக்கினார்கள் என்பதனை அறியமுடிகிறது.

சங்ககால மக்கள் பல்வேறு தெய்வங்களை வணங்கினர். அத்தெய்வங்கட்குத் திருக்கோயில்களையும் எழுப்பித்தனர். இக்கோயில்கள் யாவும் செங்கல், மரம், சுண்ணாம்பு ஆகிய பொருட்களால் கட்டப்பட்டதால் சிதைந்து, அழிவுக்குள்ளாயின என்பதனையும் இக்கோயில்களில் உயர்ந்த மாடங்கள் இருந்தன என்பதனையும், பின்வரும் சங்கப்பாடல்கள் அறிவிக்கின்றன.

**இட்டிகை நெடுஞ்சுவர் விட்டம் வீழ்ந்தென**
**மணிப்புறாத் துறந்த மரஞ்சேர் மாடத்து**
**(அகம் 167)**

**குறியவும் நெடியவும் குன்றுகண் டன்ன**
**சுடுமண் ஓங்கிய நெடுநிலைக் கோட்டமும்**
**-மணிமேகலை**

திருக்கோயில்கள் சுதையாலும், செங்கல்லாலும் மட்டும் கட்டப்படாமல் மரத்தாலும் கட்டப்பட்டுள்ளன. இன்றும் கேரளத்தில் இத்தகைய கோயில்களைக் காணலாம். குருவாயூரப்பன் திருக்கோயிலும், தில்லையிலுள்ள சிற்றம்பலமாகிய சபாமண்டபமும் இத்தகையதேயாகும். அதன் மேற்கூரை சிதைவுபடாமல் தடுப்பதற்காகவே பொன் ஓடு வேயப்பட்டுள்ளது.

நாயன்மார்களும், ஆழ்வார்களும் வாழ்ந்த காலத்தில் நூற்றுக்கணக்கான கோயில்கள் உருவாக்கப்பட்டுள்ளன. அவையாவும் செங்கற்களால் உருவாக்கப்பட்டன. சங்க காலத்தின் இறுதியில் ஆண்ட கோச்செங்கணான் சிவபெருமானுக்காக எழுபதுகோயில்கள் எழுப்பித்ததாகத் திருமங்கையாழ்வார்

**"இருக்கிலங்கு திருமொழிவாய் எண்டோ ளீசற்கு**
**எழில்மாடம் எழுபதுசெய் துலக மாண்ட**
**திருக்குலத்து வளச்சோழர்"[1]**
**- ஆழ்வார் பாசுரம்**

என்ற பாடலில் பாராட்டியுள்ளார். மேலும் அப்பர் பெருமான் கோச்செங்கணான் கட்டிய கோயில்களை வரிசைப்படுத்துகின்றார்.

**"பெருக்காறு சடைக்கணிந்த பெருமான் சேரும்**
**பெருங்கோயில் எழுபதினோ டெட்டும் மற்றும்**
**கரக்கோயில் கடிபொழிசூழ் ஞாழற்கோயில்**
**கருப்பறியில் பொருப்பனைய சொகுயிக்கோயில்**
**இருக்கோதி மறையவர்கள் வழிபட் டேத்தும்**
**இளங்கோயில் மணிக்கோயில் ஆலக்கோயில்**
**திருக்கோயில் சிவனுரையும் கோயில் சூழ்ந்து**
**தாழ்ந்திறைஞ்சத் தீவினைகள் தீருமென்றே"[2]**

என்ற பாடலில் வரிசைப்படுத்துகின்றார்.

## I.1. *ஆலக்கோயில்*

"ஆலக்கோயில் என்பது ஆனைக்கோயில் என்பதன் மரூஉ என்றும், சிற்பநூல்கள் கூறும் பிருஷ்ட விமானக்கோயில் என்றும் கூறுகின்றார். யானையின் முதுகுபோல் இதன் கூரை அமைந்தது என்பார். திருக்கச்சூர், திருவொற்றியூர்,

வடதிருமுல்லைவாயில், திருவேற்காடு ஆகிய இடங்களில் உள்ள கோயில்களை இவ்வகைக்கு எடுத்துக்காட்டியுள்ளார். "[3]

### I.2. *இளங்கோயில்*

"பழைய கோயில்களைப் புதுப்பிக்கும்பொழுது அதனருகே இறைவனை எழுந்தருளச் செய்வர் என்றும் அவ்வாறு எழுந்தருளச் செய்யும் பொழுது அமையும் கோயில் இளங்கோயில் என்றும், இதற்குப் பாலாலயம் என்று பெயர் எனவும் குறிப்பிடுகின்றார். கடம்பூர், மீய்ச்சூர் கோயில்களும் மல்லையிலுள்ள திரௌபதி இடமும் இவ்வகையானவை என்கிறார். சாசனச் சான்றுகள் கொண்டு பலவிடங்களில் இத்தகு இளங்கோயில்கள் இருந்தமையை நிறுவியுள்ளார். "[4]

### I.3. *கரக்கோயில்*

"வட்டமான விமானமுடையது. விஜயம் என்னும் வகையினதென்றும் இதனைக் கரக்கோயில் என்றும் திருக்கடம்பூர் கோயிலை அப்பர் தென்கடம்பைத் திருக்கரக்கோயிலான் என்று குறிப்பதனையும், சுந்தரமூர்த்தியார் இதனைக் குறிப்பாகக் குறிப்பிட்டுள்ளதையும் கூறலாம். காட்டு மன்னார் கோயிலுக்கு அண்மையிலுள்ள மேலைக்கடம்பூர் கோயிலென்றே கூறுகின்றார். மரக்கைகள் பரப்பி அவற்றின் மீது புல், கீற்று (அ) ஓடு வேய்ந்து அமைக்கப்படுவது இக்கோயில். பெரும்பாலும் இவை கேரளத்தில் மிகுதியாகக் காணப்படுகின்றன."[5]

### I.4. *ஞாழற்கோயில்(எ.கா)*

"இதற்குச் சான்று திருப்பாதிரிப்புலியூர்த் திருக்கடை ஞாழற் கோயிலாகும் என்கிறார்[5] சிறுசிறு மரங்கள் சூழ்ந்த ஒரு கூடாரம் போன்ற இடத்தில், மரங்களின் நிழலில் வேலி சூழ்ந்த காவணத்தில் அமைக்கப்படும் இக்கோயிலே பின்னாளில் நூறுகால், ஆயிரங்கால் மண்டபங்கள் தோன்ற அடிப்படையாய் அமைந்தது."[6]

## I.5. *கொகுடிக்கோயில்*

"வட்டமான சிகரம் கர்ண கூட்டோடு அமையுமாயின் அது ஸ்ரீபோக மாகுமென்றும் அதுவே நடுவில் இலை வரிசையுடன் அமைந்தால் ஸ்ரீவிசாலம் என்றும் கூறுவர். "[7].

## I.6. *மணிக்கோயில்*

"இதன் அமைப்பு எட்டு (அ) ஆறுபட்டையையுடைய விமான அமைப்புடையது என்றும் 'ஸ்கந்தஸ்காந்தம்' வகையினதாக இருக்கலாம் என்கிறார். "[8]

இது சிற்பங்களுடன் கூடிய அழகிய சுதை வேலைப்பாடுள்ள கோயிலாகும். பெரிய கோயில்களில் உருத்திராட்சம் போன்ற மணிகளினால் அமைக்கப்பெறும் சிறிய சந்நதிகளே மணிக்கோயில் எனப்படும். இதைத் திருமுறைக்கோயில் எனவும் கூறுவர். (எ.கா) திருவதிகைக் கோயில், இராமநாதபுரம் இராமநாதசுவாமித் திருக்கோயில்.

## I.7. *பெருங்கோயில்*

"இவ்வகைக்கோயில் மாடக்கோயில் என்றும் செய்குன்றின்மேல் அமைக்கப்பட்டவை என்றும் கூறுவர். இவையானைகள் ஏறாவண்ணம் உயரமாகக் கட்டப்பட்டனவென்றும் யானை படுத்திருப்பதுபோல் தோன்றுவதால் தூங்கானை மாடம் எனப்படுமென்றும் கூறுகின்றனர். நன்னிலம், குடவாயில், வைகல், தண்டலைச்சேரி, பெண்ணாடகம் இங்கெல்லாம் இத்தகு கோயில்கள் உள்ளன. இக்கோயில்கள் விண்ணளாவிய விமானங்களும், விரிவான மண்டபங்களும், பெரிய திருச்சுற்றுகளும், திருமாளிகைப்பத்திகளும், மாடப்புரைகளும் கொண்டு விளங்குவன. (எ.கா) திருவாரூர், மதுரை, திருவானைக்கா திருவண்ணாமலை. "[9]

## II. *திருக்கோயில்களின் பொதுவான அமைப்பு*

தமிழகக் கோயில்களில் கார்ப்பக் கிருகம் எனப்படும் கருவறையே கோயில் அமைப்பில் பிரதானமானதாகும். இக்கருவறையில்தான் மூலமூர்த்தி பிரதிட்டையாகியுள்ளார். இதற்கு அங்கமாகவே அர்த்தமண்டபம், முகமண்டபம்,

மகாமண்டபம், திருச்சுற்றாலை சுற்றுக்கோயில்கள் (உட்சந்துகள் அடங்கிய சுற்று), சுற்று மதில்கள், கோபுரவாசல், பலிபீடம், கொடிமரம் ஆகியவை அமைக்கப்படுகின்றன. கருவறைக்கு முன்னதாக அமைவது அர்த்தமண்டபம், மகாமண்டபம் கருவறையைச் சுற்றி வலம் வருவதற்குரிய பிரகாரம் திருச்சுற்றாலைப் பிரகாரத்தில் உள்ளவை பரிவாரக்கோயில்களாகும்.

### II.1. *விமானம்*

திருக்கோயில்களின் மிக முக்கியமான பகுதி அதன் கருவறையே. இதன் கூரை மீது அமைக்கப்படும் உயரமான அடுக்குகளை வட இந்தியக்கோயிலில் சிகரம் என்றும் தென்னிந்தியக் கோயிலில் விமானம் என்றும் கூறுவர். தமிழகக் கோயில்கள் விமானக் கோயில்கள். தமிழகக் கோயிலில் சிகரம் என்பது விமானத்தின் உச்சியில் அமைந்த தலைப்பகுதியைக் குறிக்கும். சிகரத்தின் மீது ஸ்துாபியை (கலசம்) அமைப்பர்.

விமானம் என்பது கருவறையின் அடி முதல் முடிவரையான அமைப்பினைச் சுட்டும். கருவறையின் மேற்பகுதியை மட்டும் விமானம் என்று குறிப்பது தவறு.

### II.2. *விமானத்தில் பகுதிகள்*

1. அதிஷ்டானம்
2. சுவர்
3. பிரஸ்தரம்
4. கிரீவம்
5. சிகரம்
6. ஸ்துாபி

#### II.2.1. *அதிஷ்டானம்*

இது பாதபந்தம் (பாதக்கட்டு), பத்மபந்தம் (தாமரைக்கட்டு) என்று இரு வகைப்படும். இதன் பகுதிகளாவன; உபானம், ஜகதி, குமுதம், பத்மம், அந்தரி, வாஜனம் பட்டிகை என்பனவாகும்.

இவற்றை மாற்றி வெவ்வேறு வகையான அதிஷ்டானங்கள் உருவாக்கப்படுகின்றன. அதிஷ்டானத்தின் மீது உபபீடம் அமைக்கப்பட்டுக் கட்டிடத்தின் உயரம் அதிகமாக்கப்படும். இவ்அதிஷ்டானமே வலுவுடையதாய், கோயிலின் கனத்தைத் தாங்கும் உறுப்பாக அமைகிறது.

### II.2.2. *கால் அல்லது பாதம்*

அதிஷ்டானத்தின் மேலிருப்பது இப்பகுதி. இதனை 'பிட்பு' என்றும் அழைப்பர். இஃது வெறும் சுவராக இருந்தால் அழகாயிருக்காது என்று அதில் அரைத்தூண்களும், தேவ கோஷ்டங்களும், மகரதோரணங்களும், கும்ப பஞ்சரங்களும் அமைக்கப்படும். கோஷ்டங்களில் தெய்வ உருக்கள் வைக்கப்படும். சில கோயில்களில் இவை சித்திரமாக வரையப்பட்டிருக்கும். கோஷ்டங்களில் வைப்பதற்குரிய தெய்வ உருவங்களை ஆகமங்கள் கூறுகின்றன.

*மயமதத்தில்*

சிவாலய விமானத்து கோஷ்டங்களில், தெற்கே தட்ஷிணாமூர்த்தி, மேற்கே மகாவிஷ்ணு வடக்கே பிரம்மா ஆகிய தெய்வவுருவங்களை நிறுவுமாறு கூறப்பட்டிருக்கிறது. மேற்கே மஹா விஷ்ணு இடம்பெற்ற கோஷ்டத்தில் பிற்காலச் சோழர்கள் லிங்கோத்பவ மூர்த்தியைப் பிரதிஷ்டை செய்தனர். இவர்களையும் மேல்தளத்து கிரீவ கோஷ்டத்துத் தேவர்களையும் விமான தேவதைகள் என்பர்.

சுவரிலுள்ள தேவகோஷ்டத்தின் மீது தோரணங்கள் அழகுறபல வடிவில் செதுக்கப்படும்.

***இலை வடிவிலுள்ளது பத்திரதோரணம்***
***மகர மீன்களுடன் கூடியது மகரதோரணம்***
***ப[illegible]களுடன் சேர்ந்தது சித்திரதோரணம்***

சிற்பிகள் தம் கற்பனைகளுக்கு ஏற்ப இதில் பல தெய்வஉருவங்களை இணைப்பதுண்டு.

### II.2.3. *பிரஸ்தரம் (கூரை)*

சுவரின் மீதுள்ள கூரையே கருவறையை மூடும் அங்கம். இது பூதவரி, கொடுங்கை, யாளிவரி என்ற மூன்று பகுதிகளுடன் அழகுற அமையும். இதற்குமேல் ஒன்று முதல் பல தளங்கள் கொண்ட மேல் விமானம் அமைக்கப்படும். ஒரே தளமுள்ளது 'ஏகதளவிமானம்' இரண்டு தளமுள்ளது 'த்விதள விமானம்', மூன்று தளமுள்ளது 'தரிதள விமானம்', விமானத்தில் ஒவ்வொரு தளத்திலும் சிறு சிறு விமான அமைப்புகள் மாலைபோல் அமைக்கப்படும். நான்கு மூலைகளில் கர்ண கூடுகள் அமைக்கப்பட்டு அவற்றிற்கிடையே பத்ரசாலைகளும் நிறுவப்படும்.

### II.2.4. *கிரீவம் (கழுத்து)*

சிகரத்தின் கழுத்தான இப்பகுதி சதுரமாகவோ, எண் பட்டையாகவோ, வட்டமாகவோ அமைக்கப்படும். சிவன் கோயில்களில் இதன் ஓரத்தில் நந்திகளும், விஷ்ணு கோயில்களில் கருடனும் நான்கு மூலைகளில் நிறுவப்படும். இதன் நான்கு திசைகளில் பிரம்மா, விஷ்ணு, சிவன், இந்திரன் அல்லது முருகன் ஆகிய தெய்வ உருவங்கள் அமைக்கப்படும். (திசைமாறியும் வரும்). இந்த நான்கின் இடைப்பட்ட பகுதிகள் வெற்றிடமாயிருக்கும் அல்லது திசைக்காவலர் உருவங்களைத் தாங்கியிருக்கும்.

### II.2.5. *சிகரம்*

கிரீவத்துக்கு மேலுள்ளது இப்பகுதி. இது சதுரம், வட்டம், ஆறு அல்லது எட்டுப்பட்டை, தூங்கானை, வண்டிக்கூடு முதலிய அமைப்பில் இருக்கும். இதன் அமைப்பைக் கொண்டு ஏழுவகைச் சிகரங்களைச் சிற்பநூல்கள் கூறும்.

### II.2.6. *ஸ்தூபி*

சிகரத்துக்கு மேலுள்ள ஆறாவது பகுதி ஸ்தூபியாகும். இதனைக் கலசம் (குடம்) என்பர். இது ஒரு குடமும் அதன் மேல் செங்குத்தாக வைக்கப்பட்ட வாழைப்பூ போன்ற தோற்றமுடையது. இது கல், சுதை, அல்லது உலோகத்தால்

செய்யப்படும். செம்பினால் செய்து அத்தகட்டின் மீது தங்கரேக்கு இழைக்கப்படும். கும்பாபிஷேகத்தின் போது வேத கோஷத்துடன் இதற்குப் புனித நீராட்டுவார்கள்

### II.2.7. *அஷ்டாங்க விமானம்*

மேலே கூறப்பட்ட ஆறு பகுதிகளைக் கொண்ட விஷங்க விமானத்திற்கு ஒரு கருவறையே உண்டு. இத்துடன் ஒன்றின்மேல் ஒன்றாக மேலும் இரு கருவறைகளைச் சேர்த்தால் அஷ்டாங்க விமானம் என்பது உண்டாகும். இம்மூன்று கருவறைகளிலும் திருமாலின் நின்ற, இருந்த, கிடந்த கோலங்களை நிறுவி வழிபடுவர். மதுரை கூடலழகர்கோயில், திருக்கோட்டியூர் சௌமியநாராயணப் பெருமாள் கோயில், உத்தரமேரூர் வரதப்பெருமாள் கோயில், காஞ்சி வைகுண்டப்பெருமாள் கோயில், மன்னார் கோயில் (நெல்லை) ஆகியவை அஷ்டாங்க விமானக் கோயில்களாகும்.

*பிறபகுதிகள்*

கருவறையின் முன்பாக எழுப்பிய அர்த்தமண்டபத்தைக் கருவறையுடன் இணைப்பது அந்தராளம் (இடைநாழி) என்ற குறுகலான அமைப்பாகும். அர்த்த மண்டபத்தின் முன்னால் மகாமண்டபம் அமைக்கப்படும். அதையடுத்து வருவது முகமண்டபம், வாகனமண்டபம் முதலிய பல்வகை மண்டபங்களும் திருக்கோயிலில் அமைக்கப்படும்.

### II.2.8. *பலிபீடம்*

தாமரைப்பூக்களின் இதழ்களைக் கீழ்நோக்கி ஒடித்து நடுவிலுள்ள மொட்டுத் தெரியும்படி வைத்ததுபோல் உள்ள அமைப்பு பலிபீடமாகும்.

*கொடிமரம் (துவஜஸ்தம்பம்)*

33 கணுக்களையுடையதாய் உச்சியில் 3 திருஷ்டிப் பலகைகளை உடையதாய் இருக்கும். விழாக்காலங்களில் இதில் கொடியேற்றுவர். இது பலிபீடத்திற்கு முன்பாகவோ, பின்புறமாகவோ இருக்கும்.

### II.2.9. *நந்தி அல்லது கருடன்*

சிவாலயங்களில் கொடிமரத்தையொட்டி கருவறையை நோக்கிய வண்ணம் படுத்திருக்கும் காளையே நந்தியாகும். விஷ்ணு ஆலயங்களில் கூப்பிய கைகளுடன் கருடன் நிற்கும். சில கோயில்களில் அமர்ந்த கோலத்திலும், அமிர்த கலசத்துடனும் கருடன் காணப்படும்.

### II.2.10. *மண்டபம்*

அதிஷ்டானம், தூண், பிரஸ்தரம் என்ற மூன்று உறுப்புகளை மட்டுமே கொண்டது மண்டபமாகும். மண்டபத்தின் பரப்புக்கு ஏற்றவாறு 4, 16, 100, 100 என்று தூண்கள் அமைக்கப்பட்டிருக்கும்.

### II.2.11. *கோபுரம்*

கோயிலின் நுழைவாயிலில் கோபுரம் அமைக்கப்பட்டிருக்கும். இது நீண்ட சதுரமாக 3, 5, 7, 9, 11 எனப் பல நிலைகளைக் கொண்டதாக கட்டப்பட்டிருக்கும். சோழர்கள் விமானங்களை உயரமாகவும், கோபுரங்களைக் குட்டையாகவும் கட்டினர். பாண்டியர்கள் கோபுரங்களை உயரமாகவும், விமானங்களைத் தாழ்வாகவும் கட்டினர்.

### II.3. *திருக்கோயிலில் அமைய வேண்டிய முக்கியமான பாகங்கள்*

1. சுவாமி மூலஸ்தானம்
2. அம்மாள் மூலஸ்தானம்
3. அர்த்த மண்டபம் (சிவாச்சாரியார் நின்று பூஜை செய்யும் இடம்)
4. மஹாமண்டபம் (பக்தர்கள் தரிசனம் செய்யும் இடம்)
5. சண்டேசுவரர் கோயில்
6. நிருத்த மண்டபம்
7. பள்ளியறை
8. நடராஜர்
9. துவஸ்தம்ப மண்டபம்
10. பாகசாலை (மடைப்பள்ளி)

11. நாயன்மார்களின் திருவிடம்

12. பத்தாலயம்

13. அம்மாள் கோயிலின் கோபுரம் (இராஜகோபுரம் நீங்கலாக)

14. சந்தானக்குரவர்

15. வாகனசாலை

16. விக்னேஷ்வர், சுப்பிரமணியர், விஷ்ணு (தனி ஆலயம்)

17. சோமாஸ் கந்தர்

18. சந்திரசேகரர்

19. பிட்சாடனார்

20. வசந்த மண்டபம்

21. பைரவர்

22. சூரியன், சந்திரன்

23. கோபுரவாசல்

24. அபிஷேகத் தீர்த்தக் கிணறு

25. மடப்பள்ளிக் கிணறு

### II.4. *கோயில் நிர்மாண நியதிகளும், அளவைகளும், பூபரீட்சை (நிலத்தேர்வு)*

திருக்கோயில்களை எங்கு, எப்பொழுது, எவ்வாறு நிர்மாணிப்பது என்பதற்குப் பல நியதிகளை உருவாக்கி அவற்றை ஆகமங்கள், வாஸ்துநூல்கள், சிற்பநூல்கள் வெளியிடுகின்றன. பொதுவாகத் திருக்கோயில்களை மலைகள், குன்றுகள், ஆற்றங்கரைகள், கடற்கரைகள், தாழ்வாரங்கள், வனங்கள், சோலைகள் ஆகிய வனப்புமிக்க இடங்களில் எழுப்புவது மரபாகும். இவ்வடிப்படையில் ஆய்வு எல்லையாக அமைந்துள்ள திருக்கோயில்களான இராமேசுவரம் இராமநாதசுவாமித்திருக்கோயில், திருப்புல்லாணி ஆதி ஜெகந்நாதப்பெருமாள் கோயில் ஆகியன கடற்கரையில் அமைந்துள்ளன. திருஉத்தரகோசமங்கை திருக்கோயில், பத்ரீகாவனம் எனப்படும் வனம் நிறைந்த பகுதியில் அக்காலக்கட்டத்தில் உருவாக்கப்பட்டதாக தல வரலாறு குறிப்பிடுகிறது.

### II.4.4. *பதவிந்யாஸம் (நிலப்பகுப்புமுறை)*

நம்நாட்டு வாஸ்துமரபில் இது முக்கியத்துவம் வாய்ந்தது. இது ஒரு நிலத்தைப் பல பகுதிகளாகப் பகுத்து, ஒவ்வொரு பகுதியிலும் வெவ்வேறு தேவதைகள் வாழ்வதாகக் கொள்ளப்படும். இதனைப் 'பசுதேவா விந்யாஸம் என்றும் கூறுவர்'. நிலத்தின் எட்டுத் திசைகளிலும் அஷ்டதிக் பாலகர்கள் உறைகிறார்கள் என்பது ஐதீகம்,

கிழக்கே – இந்திரன்
தெற்கே – யமன்
தென்கிழக்கே– அக்நி
மேற்கே – வருணன்
தென்மேற்கே – நிருதி
வடக்கே – குபேரன்
வடமேற்கே – வாயு
வடகிழக்கே – ஈசானன்

அஷ்டதிக் பாலர்களின் நடுப்பகுதிக்குப் பிரம்மஸ்தானம் (இறைவன் உறையுமிடம்) என்று பெயர். மேற்கண்ட கருத்திற்கேற்ப ஆய்விற்குட்பட்ட சைவ ஆகமனக்கோயில்களில் அஷ்டதிக் பாலகர்கள் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளனர்.

"இவ்வாறு தேர்ந்தெடுத்த நிலத்தை (2 x 2 ) நான்கு அல்லது (3 x 3) ஒன்பது அல்லது (32 x 32) 1024 பகுதி வரை பகுப்பர். ஒவ்வொரு பகுதியும் ஒரு பதம் என்றும், ஒவ்வொரு பதத்திற்கும் தனிப்பெயரும் அதில் உறையும். தெய்வத்தின் பெயரும் வாஸ்து நூல்களில் குறிக்கப்பட்டுள்ளன." (10)



– ஏகபதம் – யாககுண்டம், பித்ரு காரியங்கள்



(2 x 2 ) 4 பதங்கள்
பேசகபதம் – சிறு தெய்வங்கள்

| | | |
|---|---|---|
| | | |
| | | |
| | | |

(3 x 3) 9 பதங்கள் –

பீடபதம் – பெருந்தெய்வம்

| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 32 | **33** | **34** | **35** | **36** | **37** | **38** | **39** | | 10 |
| 31 | **56** | **57** | **58** | **59** | **60** | **61** | **40** | | 11 |
| 30 | **55** | **72** | **73** | **74** | **75** | **62** | **41** | | 12 |
| 29 | **54** | **71** | **80** | **81** | **76** | **63** | **42** | | 13 |
| 28 | **53** | **70** | **79** | **78** | **77** | **64** | **43** | | 14 |
| 27 | **52** | **69** | **68** | **67** | **66** | **65** | **44** | | 15 |
| 26 | **51** | **50** | **49** | **48** | **47** | **46** | **45** | | 16 |
| 25 | | | | | | | | | 17 |
| | | 24 | 23 | 22 | 21 | 20 | 19 | 18 | |

8 x 8

64 பதங்கள் – மண்டுகபதம்

மண்டுகபதத்தில் 81 சந்நிதிகள் உண்டாகும். வலது மூலையிலிருந்து தொடங்கி சுருள் முறையில் சுற்றிகளை எண்ணினால் வரும் 81வது சுற்றதியே பிரம்மஸ்தானம். பிரம்மஸ்தானமே பெரும் தெய்வம் உறையுமிடம். இங்குதான் கருவறை அமைக்கப்பட வேண்டும்.

### II.4.4. *பிராணப்ரதிஷ்டை (உயிர்நிலை நிறுத்தல்)*

கோயில் முழுவதும் கட்டி முடித்தபின், உரிய பரிவார தேவதைகளையும், மூலமூர்த்திகளையும் உரிய இடங்களில் நிலைபெறச் செய்து ஒரு நல்ல நாளில் மறையோதிய அந்தணர்கள் வேத பாகங்களை ஓதி, பூர்ணகும்பம் முதலிய சடங்குகளுடன் மூர்த்திகளுக்குப் பிராணப் பிரதிஷ்டை செய்யப்படும். இதையே கும்பாபிஷேகம் என்றும், ஸம்ப்ரோக்ஷனம் என்றும் கூறுவர். பிராண சக்தியான தீர்த்தத்தை வேத சப்தங்களுடன் கொண்டு குடமுழுக்குச் செய்யும்போது இறைவனின் பிராண சக்தி, சிலை வடிவிலிருக்கும் மூர்த்திகளுக்கு வரவழைக்கப்படுகிறது. இதை ஆவாஹனம் செய்தல் என்பர்.

## II.5. *திருக்கோயில் வளர்ச்சியில் கோபுரங்களும் மண்டபங்களும்*

'சங்க காலத்தில் கோயிலில் மதில்களும், வாயில்களும் இருந்தன. ஆனால் வாயில் மேல் கோபுரம் இருந்ததாகத் தெரியவில்லை. இறையனார் அகப்பொருள் உரையில் "கருவமைந்த மாநகருக்கு உருவமைந்த வாயில் மாடம்போலவும்" என்ற உவமை வருகிறது உருஅமைந்த என்பதற்குப் பதுமைகள் பொருந்திய என்றும், மாடம் என்பதற்கு நிலைகள் பொருந்திய உயர்நிலை மாளிகை என்றும் பொருள் கொள்ளப்பட்டுள்ளது. '(12)

"பல்லவர் காலத்தில் நரசிம்மவர்மன் உண்டாக்கிய ஒற்றைக்கல் கோயில்களில் விமானங்கள் உள்ளனவேயன்றிக் கோபுரங்கள் காணப்படவில்லை. அவன் காலத்து வாழ்ந்த திருநாவுக்கரசர் கோலக் கோபுரக்கரணம் என்று கோபுரத்தைக் குறிப்பிடுகிறார். இராசசிம்மன் கட்டிய காஞ்சி கைலாசநாதர் கோயிலில்தான் காலத்தால் முற்பட்ட கோபுரத்தைப் பார்க்க முடிகிறது. அக்கோபுரம் விமானத்தை விடத் தாழ்ந்தே எழுப்பப்பட்டிருக்கிறது. ஒரே நிலையுள்ளதாகவும் உள்ளது." (13)

"சோழர் காலத்தில்தான் கோபுரங்கள் பெருகின. ஆரம்ப காலத்தில் விமானத்தைவிடக் குறைந்த உயரமுள்ளதாகவே அவை கட்டப்பட்டன. இராஜஇராஜசோழன் கட்டிய தஞ்சைப் பெருவுடையார் கோயிலிலும் இரண்டு கோபுரங்கள் உள்ளன. ஆனால் அவற்றைவிட விமானம் மிகவும் உயர்ந்து உள்ளதைக் காண்கின்றோம். சோழர் காலத்து இறுதியில் பாண்டியர் ஆட்சி மேலோங்கியபொழுது சுந்தரபாண்டியன் சிதம்பரத்தில் ஏழுநிலைகளையுடைய கோபுரத்தைக் கட்டினான். இது ஏறத்தாழ 100 அடி உயரமுடையது." (14)

இப்பாண்டியர்கள் காலத்தை ஒட்டியே சேதுநாட்டில் சேதுபதிமன்னர்களால் உருவாக்கப்பட்ட இராமேசுவரம் இராமநாதசுவாமித் திருக்கோயில், திருப்புல்லாணி ஆதிஜெகந்நாதப் பெருமாள் திருக்கோயில் உள்ளிட்ட சேதுநாட்டுத் திருக்கோயில்களிலும் ஏழுநிலை, ஒன்பது நிலைகளை உடையதாக உயர்ந்த

கோபுரங்கள் கட்டப்பட்டுள்ளன. நூற்றுக்கால் மண்டபங்களும் இரண்டு நிலை, மூன்று நிலை என்ற பிரகாரச் சுற்றுக்களையும் பெற்று இக்கோயில் இன்றளவும் திகழ்கின்றன.

### II.5.1. *சுற்றுக்கோயில்கள்*

கோயில் வளர்ச்சியில் கருவறை தவிரப் பிற சந்நிதிகளும் காலப்போக்கில் தோன்றின. கருடன், ஆஞ்சனேயர், சேனை முதலியார், இராமன், கிருஷ்ணன் தசாவதாரமூர்த்திகள் சன்னதிகள் என்று பெருமாள் கோயில்களிலும் சண்டிகேஸ்வரர், சண்டிகேஸ்வரி, சந்திரன், சூரியன், இராகு, இலக்குமி, முருகன், விநாயகர், நாயன்மார்கள் சன்னதிகள் என்று சிவாலயத்திலும் சுற்றுக்கோயில்கள் தோன்றின. இப்படியாக ஒரு கோயிலுக்குள்ளேயே தனிக்கோயில்கள் தோன்றி கோயில் வளாகம் பெருக்கமடையத் தொடங்கியது.

இச்சுற்றுக்கோயில்கள் திருமதில்களுக்குப் புறத்தில் அடுத்துள்ள மாட வீதிகளிலும் அமைக்கப்படுவதும் வழக்கமாயிற்று. காலையில் பிரதான பூஜை முடிந்த பிறகு சுற்றுக் கோயில்களுக்குப் பூஜை வழிபாடுகளும் நிவேதனங்களும் நடைபெறும்.

திருப்புல்லாணி ஆதிஜெகந்நாதப் பெருமாள் திருக்கோயிலில் ஒரு கோயிலுக்குள்ளேயே ஒன்றுக்கு மேற்பட்ட மூலவர்களின் கருவறைகள் கொண்ட சந்நிதிகள் உள்ளன. இவை தனித்தனியாக இருந்து ஒரு காலத்தில் ஒரே வளாகத்துக்குள் அமைக்கப்பட்டுள்ளன.

திருஉத்தரகோசமங்கை மங்களேசுவரர் திருக்கோயிலும், மூலவர் அம்பாள் சந்நிதிகள் ஒரு பகுதியாகவும், மரகத நடராஜர் சந்நிதி, சகஸ்தரலிங்கம் சந்நிதிகள் தனியாகவும் அமைக்கப்பெற்று காலப்போக்கில் ஒரே வளாகத்துக்குள் அமைக்கப்பட்டுள்ளன.

இவ்வாறு திருக்கோயில் வளர்ச்சியில் ஒரு திருக்கோயிலானது ஆஸ்தான மண்டபம், அபிஷேகமண்டபம், அலங்கார மண்டபம், வாகன மண்டபம், நிருத்தமண்டபம், நூற்றுக்கால், ஆயிரங்கால் மண்டபம், அத்தியயன மண்டபம், கல்யாண மண்டபம் என்று பெருகி வளர்ந்து விரிவடைந்துள்ளது.

**III. *சேதுநாட்டுத் திருக்கோயில்களின் அமைப்பும் வளர்ச்சியும்***

***இராமேசுவரம் இராமநாதசுவாமித் திருக்கோயில்***

***திருக்கோயில் தோற்ற அமைப்பு***

“தமிழகத்தின் கிழக்குக் கடற்கரையில் அமைந்துள்ள இக்கோயில் தேவார காலத்தில் சின்னஞ்சிறு கற்றளியாக அமைந்திருந்தது. பிற்காலத்தில் சேதுபதி மன்னர்களால் மிகவும் உயர்வாக போற்றப்பட்டுள்ளது.”(15) இதனால் இன்று பிரம்மாண்டமான மண்டபங்களையும், திருச்சுற்றுக்களையும் சிறப்பான கட்டுமானத்தையும் பெற்று சைவ வைணவ ஒற்றுமைக்கு ஓர் சிறந்த அற்புத தலமாகத் திகழ்கின்றது.

“இராமாயண காலத்திலேயே தோன்றியுள்ளது இக்கோயில். கி.பி. 12ம் நூற்றாண்டில் இலங்கை அரசர் பராக்கிராமபாகு என்பவர் இத்திருக்கோயில் மூலஸ்தானத்தைக் கட்டினார் என்பதற்குரிய சான்றுகள் உள்ளன.”(16)

“இன்று கோயில் உயர்ந்த மதிற்சுவர்களைப் பெற்று விளங்குகிறது. கிழக்கு மேற்கில் 865 அடி நீளமும் தெற்கு வடக்கில் 657 அடி அகலமும் உடையது. கிழக்கு மேற்குத் திசைகளில் இரண்டு கோபுரங்களைக் கொண்டு உள்ளது. வடக்கு தெற்கில் மிகச் சிறந்த நீண்ட பிரகாரங்கள் உள்ளன. இருபக்கங்களிலும் ஐந்தடி உயரத்தில் மேடையின் மேல் கட்டப்பட்ட தூண்களின் நடுவே இப்பிரகாரங்கள் அமைந்துள்ளன. மூன்றாவது மேற்குப்பிரகாரம் மேற்குக் கோபுரவாயிலிலிருந்து சேதுமாதவர் சந்நிதிக்குப் போகும் வழியில் “சொக்கட்டான் பலகை” போல் அமைந்துள்ளதால் இந்த மண்டபத்திற்குச் சொக்கட்டான் மண்டபம் என்றே பெயர் விளங்குகிறது.

கோயில் தெற்கு வடக்குப் பிரகாரங்கள் ஒவ்வொன்றும் 640 அடி நீளமும், கிழக்கு மேற்குப் பிரகாரங்கள் ஒவ்வொன்றும் 400 அடி நீளமும், கிழக்கு மேற்கு உட்பிரகாரங்கள் ஒவ்வொன்றும் 244 அடி நீளமும், தெற்கு வடக்கு உட்பிரகாரங்கள் ஒவ்வொன்றும் 352 அடி நீளமும் உடையன. அவற்றின் அகலம் 15 1/2 அடி முதல் 17 அடி வரையாகும். கோயிலின் முக்கிய சந்நிதியைச் சுற்றிலும் தனிப்பிரகாரங்கள் இருக்கின்றன. கிழக்கிலும், மேற்கிலும் உள்ளவை ஒவ்வொன்றும் 172 அடி நீளமும் உடையன. அவற்றின் அகலம் 14 1/2 அடி முதல் 17 அடி வரை உள்ளன. கோயிலுள்ள மொத்த பிரகாரங்களின் மொத்த நீளம் 3850 அடி. வெளிப்பிரகாரத்தில் 1212 தூண்கள் இருக்கின்றன. அவற்றின் உயரம் தரையிலிருந்து மேல்தளம் வரை 30 அடியாகும். சிற்பச் சிறப்புடைய இத்தூண்கள் மிருதுவான கற்களால் கட்டப்பட்டுள்ளன.

ஆலய அமைப்பும் அடுக்கடுக்கான பிரகாரங்களும் கட்டிடக் கலைக்கு மிகவும் சிறப்பு தருவதாக அமைந்துள்ளன. கோயிலின் மூன்றாம் பிரகாரம் 1212 தூண்களும், வெளிப்புறம் கிழக்கு–மேற்கு 690 அடி நீளமும், வடக்கு–தெற்கு 435 அடி அகலமும், உட்புறம் கிழக்கு–மேற்கு 649 அடி நீளமும், வடக்கு தெற்கு 395 அடி அகலமும் கொண்டு உலகிலேயே மிகப் பெரிய பிரகாரமாகவும் அமைந்துள்ளது. இக்கோயில் முதல் இரண்டு, மூன்று பிரகாரங்களைக் கொண்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

### III.1. *சுவாமி சன்னதி*

அக்னி தீர்த்தக் கரையிலிருந்து மேற்கே சென்று இக்கோயிலின் முகப்பு மண்டபத்தைக் கடந்து சுவாமி சன்னதிக்கு நேரேயுள்ள நுழைவு வாயிலின் வழியாக மூலவரை அடையலாம். இம்மூலவர் சந்நிதிக்கு இருபுறமும் கிழக்கு நோக்கியவாறு விநாயகர், முருகனின் சிறுகோவில்கள் இருக்கின்றன. மூலவருக்கு நேராக ஒரே வரிசையில் கொடிமரமும், பலிபீடமும், சுதையினாலான மிகப்பெரிய நந்தியும் உள்ளன.

### III.1.1.*சுவாமி சன்னதியும் பிரகார அமைப்பும்*

விநாயகர், முருகன் கோவிலை அடுத்து சுவாமி சன்னதியில் அமைந்திருப்பது முதல் பிரகாரமாகும் இதன் தென்கிழக்கு மூலையில் சூரியன், உஷா, பிரத்யுஷா, சகஸ்ரலிங்கம் ஆகிய திருவுருவங்களும், தேவார மூவரும், அறுபத்து மூன்று நாயன்மார்களும், மூலவர், உற்சவர் விக்கிரகங்களும் உள்ளன. வலப்புறத்தில் மேற்குப் பிரகாரம் உள்ளது.

*(அ) மேற்குத் பிரகாரம்*

இப்பிரகாரத்தில் வச்சிரேசுவரர், மனோன்மணி, கந்தன், சங்கரநாராயணன், அர்த்தநாரீஸ்வரர், கங்களநாதர், சந்திரசேகரர் திருவுருவங்கள் உள்ளன.

*(ஆ) வடக்குப் பிரகாரம்*

இப்பிரகாரத்தில் இராமர், சீதை, இலக்குமணன், அனுமன், விபீஷணன் சிலைகள் உள்ளிட்ட பதினொரு சிலைகள் உள்ளன. விசாலாட்சி, ஜோதிர்லிங்கம், நடராஜர் ஆகியோர் சன்னதிகள் அமைந்துள்ளன.

*(இ) கிழக்குப் பிரகாரம்*

இப்பிரகாரத்தின் வடப்புறத்தில் சந்திரன், கிருத்திகை, உரோகினி ஆகியோரின் திருவுருவங்கள் உள்ளன. இம்முதற்பிரகாரத்தின் நடுவில் கருவறை அமைந்துள்ளது. இங்கு எழுந்தருளியுள்ள மூலவர் ஸ்ரீராமநாதர். இவர் கிழக்கே கடலை நோக்கியவாறு இருக்கிறார். இம்மூலவர் சீதாபிராட்டியால் மணலில் செய்யப்பட்டு, இராமபிரானால் புனிதமாக்கப்பட்டு அமைந்துள்ளதாக ஐதீகம். இதன் மேற்குப்புறச் சுற்றில் திருக்கயிலாயக் காட்சி புடைப்புச் சிற்பமாக அமைக்கப்பட்டுள்ளது. இப்புடைப்புச்சிற்பத்தில், மேலே ஐந்து தலை நாகம் அமைந்துள்ளது. மூலவர் கருவறையில் வடபுறத்தில் காசி விசுவநாதர் சந்நிதி அமைந்திருக்கிறது. இம்மூர்த்திக்குத்தான் முதலில் பூசை முதலியவை நடைபெறுகின்றன.

மூலவர் கருவறையின் (சந்நிதியின்) தென்புறத்தில் இராமர், சீதை, இலக்குமணன், அனுமான் ஆகியோரது திருவுருவங்கள் வெகு அழகாக அமைக்கப்பட்டுள்ளன. இதில் அனுமன் சிலை இராமபிரானைக் கூப்பிய கரங்களுடன் வணங்கிய நிலையிலும், அவரது கரங்களுக்கிடையில் காசியிலிருந்து கொண்டுவரப்பட்ட இரு ஆத்ம லிங்கங்கள் அமைந்திருப்பதாகவும் சித்திரிக்கப்பட்டுள்ளன. இதனையடுத்து சுக்ரீவனது திருவுருவம் இராமரை வணங்கியபடி நிலையில் தலைகுனிந்து வாய்புதைத்த நிலையில் பணிவின் சின்னமாகக் காணப்படுகிறது. இச்சந்நிதிகளைக் கடந்து இப்பிரகாரத்தின் தென்புறத்திலுள்ள வாயில் வழியாகச் சென்றால் அம்பிகை சந்நிதியை அடையலாம்.

### III.1.2. *அம்பாள் சன்னதியும் பிரகார அமைப்பும்*

இத்தலத்தில் அம்பிகையின் பெயர் மலைவளர் காதலி என்றும், பர்வதவர்த்தினி என்றும் வழங்கப்படுகிறது. இங்குத் தாயார் ஐந்தடி உயர அளவில் சுமார் இரண்டடி உயரமுள்ள மனோன்மணி அம்ஸ ஸ்வர்ணபீடத்தில் நின்ற கோலத்தில் காட்சி தருகின்றாள். அன்னையின் வலது கையில் தாமரையும், இடது கையில் அல்லியும், ஒருகை அருளாசி வழங்கியும் ஒரு கை அபயம் அளிக்கும் முறையிலும் அமைந்துள்ளது.

அன்னை உறையும் கர்ப்பக்கிருகத்தில் வடக்குச் சுற்றல்பிறை மாடத்தில் முற்றிலும் சுத்தத் தங்கத்தினால் ஆன பூபிரஸ்தாரம் என்ற அமைப்பில் ஸ்ரீசக்கரம் உள்ளது. இச்ஸ்ரீசக்கரம் சிருங்கேரி ஸ்ரீசாரதாபீடம் ஸ்ரீநரசிம்ம பாரதி அவர்களால் பர்வதவத்தினி அம்மனுக்கு வழங்கியதாகக் கூறப்படுகிறது. இச்ஸ்ரீசக்கரம் சுமார் 4.16 கிலோ எடை உள்ளது என அறியப்படுகிறது.

ஸ்ரீசக்கரத்திற்குத் தினசரிப் பூஜையும், வெள்ளிக்கிழமைகளில் நவாவரணபூஜையும் நடைபெறுவதோடு, ஒவ்வொரு தமிழ்மாதக் கடைசி வெள்ளியன்று நவாவரண பூஜையும், 108 தீப பூஜையும் நடைபெறுகின்றன.

இத்தாயார் வெள்ளிக்கிழமைதோறும் தங்கப் பல்லக்கில் மூன்றாம் பிரகாரத்தில் பவனி வருகிறார்.

அம்பாள் சன்னதிக்குத் தென்கிழக்கு மூலையில் கல்யாண சுந்தரேசரும், இவருக்கு அருகாக வடக்கு நோக்கியவாறு பிரம்மன், திருமால் ஆகியோரது உருவங்களும் உள்ளன.

**2.*(அ) மேற்குப்பிரகாரம்***

இப்பிரகாரத்தின் தெற்கு மூலையில் சௌபாக்கிய கணபதியும், சந்தானகணபதியும், ப்ராமி மாஹேஸ்வரி கௌமாரி, வைஷ்ணவி, வராகி, மாஹேந்திரி, சாமுண்டி முதலிய சப்த மாதர் உருவங்களும் இருக்கின்றன. வடமேற்கு மூலையில் பள்ளி கொண்ட பெருமாளும் உள்ளனர்.

***(ஆ) வடக்குப் பிரகாரம்***

இப்பிரகாரத்தில் சண்டிகேசுவரியும் வடகிழக்கு மூலையில் பள்ளியறையும் அமைக்கப்பட்டுள்ளன.

அம்பாள் சன்னதிக்கு முன்னுள்ள சுக்கிரவார மண்டபத்தில் கிழக்கு நோக்கி அஷ்டலக்குமி விக்ரகங்கள் இருக்கின்றன. இவற்றிற்கு எதிரே தென்புரம் உள்ள எட்டுத் தூண்களில் துவாரபாலகர், சிவதுர்க்கா, மனோன்மணி, வாஜீசுவரி, புவனேஸ்வரி, அன்னபூர்ணா ஆகியோர்களின் உருவங்கள் அமைக்கப்பட்டு இருக்கின்றன.

**III.1.3. *இரண்டாம் பிரகாரம்***

"இப்பிரகாரம் பதினாறாம் நூற்றாண்டில் மன்னர் திருமலை சேதுபதி கட்டியுள்ளார்."[17] இப்பிரகாரத்தில் தென்புறம் நோக்கி வல்லப கணபதியின் திருவுருவம் உள்ளது. இங்குத் திருமலைச் சேதுபதியின் திருவுருவமும் இடம்பெற்றுள்ளது.

### III.1.4. *மூன்றாம்பிரகாரம்*

இப்பிரகாரத்தின் வடமேற்கு மூலையில் இராமர் இராமலிங்க பிரதிஷ்டை செய்யும் காட்சி அமைக்கப்பட்டுள்ளது. உலகப்புகழ் பெற்ற மூன்றாம் பிரகாரம்

| | | | | |
|---|---|---|---|---|
| வெளிப்புறம் | – | கிழக்கு– | மேற்கு – | 690 அடி |
| | | வடக்கு– | தெற்கு– | 435 அடி |
| உட்புறம் | – | கிழக்கு– | மேற்கு – | 649 அடி |
| | | வடக்கு– | தெற்கு– | 395 அடி |

உயரம் 22 அடி

அங்குலம் 7 1/2 அடி என்ற அளவுகளில் அமைந்துள்ளது.

“இந்த அற்புதக்கலைப்படைப்பான மூன்றாம் பிரகாரத்தை கி.பி. 1722ல் இதன் கட்டுமானத்திற்கு அடிக்கல் நாட்டியவர் சேதுமன்னர் முத்து விஜய ரெகுநாத சேதுபதி (கிபி. 1713 – 1725) இந்தக் கட்டுமானத்தைக் கி.பி. 1772ல் நிறைவு செய்த மன்னர் முத்துராமலிங்க விஜயரெகுநாத சேதுபதி (கி.பி. 1762–1795)” [18]

### III.1.5. *நந்தி மண்டபம்*

நந்தி மண்டபம் சுவாமி சந்நிதிக்கு எதிரில் அமைந்துள்ளது. மதுரையை ஆண்ட மன்னர் விசுவநாத நாயக்கரின் கீழ் குறுநில மன்னராக இருந்த சின்ன உடையான் சேதுபதி கட்டத்தேவர் நந்தி மண்டபத்தையும், சில திருப்பணிகளையும் செய்துள்ளார். இம்மண்டபத்தில் அமைந்துள்ள நந்தி (செங்கற் சுண்ணாம்பு) சுதையால் ஆக்கப்பெற்றுள்ளது. நந்தியின் நீளம் 22 அடியும், அகலம் 12 அடியும், உயரம் 17 அடியும் ஆகும்.

### III.1.6. *கோயில் தீர்த்தங்கள்*

தீர்த்தம் என்றால் பெரும்பாலும் கோயிலுக்கு முன்னால் ஒரு குளம் இருக்கும். இராமேசுவரத்திருத்தலத்தில் கோயிலுக்கு எதிரில் பெரிய கடல் அக்னி தீர்த்தமாக அமைந்துள்ளது. இராமனின் ஆணைப்படி அனுமனால் மூட்டப்பட்ட

அக்னி குண்டலத்தில் சீதாதேவி இறங்கியதும், சீதாதேவியின் கற்புகடகலைத் தாங்காமல் அக்னி தேவன் விழுந்து மூழ்கி வணங்கி எழுந்த இடமே இவ்வக்கினி தீர்த்தமாகும். இத்தீர்த்தத்தில் ஆடி, தை அமாவாசை காலங்களில் மற்றும் மகோதயம், அர்த்தோதயம் போன்ற புண்ணியதினங்களில், பக்தர்கள் நீராடி பித்ருக்கடன்களைச் செலுத்துதல் மரபாக இன்றளவும் நடைபெற்று வருகின்றது.

இத்தலத்தில் உள்ளும், புறமுமாக ஐம்பத்து மூன்று (53) தீர்த்தங்கள் உள்ளன. இராமேசுவரம் செல்லும் பாதையில் வேதாளை என்னுமிடத்திலுள்ள வேதாளைவரத் தீர்த்தத்தில் ஆரம்பித்து தனுஷ்கோடியில் முக்கடலும் சங்கமிக்கும் அக்னித் தீர்த்தம் ஈறாக 53 தீர்த்தங்கள் தல புராணங்களில் கூறப்பட்டுள்ளன. அவற்றில் சில மணல் மூடித் தூர்ந்துவிட்டன. தற்பொழுது கோயிலுக்குள் 22 தீர்த்தங்கள் உள்ளன.

### III.1.6. *(அ) திருக்கோயிலின் உள்ளே அமைந்துள்ள தீர்த்தங்கள்*

#### *1. மகாலெட்சுமி தீர்த்தம்*

இத்தீர்த்தத்தில் புனித நீராடுபவர்கள் கலிநீங்கி அஷ்ட ஐஸ்வர்யங்களையும் பெற்று சகல பாக்கியங்களையும், அரச வாழ்வும் இன்பமும் பெறுவர்.

#### *2. காயத்திரி தீர்த்தம்*

காசிபன் என்ற தவசீலன் இந்த தீர்த்தத்தில் நீராடி விதிப்படி பூசை புரிந்ததால் மாபெரும் பாவத்திலிருந்து விமோசனம் பெற்றதாக தல வரலாறு கூறுகிறது.

#### *3. சாவித்திரி தீர்த்தம்*

இத்தீர்த்தத்தில் நீராடி வழிபாடு செய்யும் மங்கையர் நித்திய சுபமங்கலத்துடனே நெடுங்காலம் வாழ்வார்கள் ஆண்கள் நீராடி வழிபாடு செய்தால் அவர்கள் செய்த சகல பாவங்களும், அவர்களைப் பற்றியுள்ள சகல தோஷங்களும் நிவர்த்தியாகி, நித்திய ஆனந்த மோட்சம் கிடைக்கப்பெறுவர்.

*4. சரசுவதி தீர்த்தம்*

இத்தீர்த்தத்தில் நீராடி முறைப்படி சிவவழிபாடு செய்பவர் பழிபாவங்களிலிருந்து விமோஷனம் பெற்று மங்களங்கள் உண்டாகப்பெறுவர்.

*5. சங்கு தீர்த்தம்*

இந்த புண்ணிய தீர்த்தத்தில் நீராடி வழிப்பட்டால் நன்றி கொன்ற, நன்றி மறந்த பழிகள் நீங்கப்பெறுவர்.

*6. சக்கரத் தீர்த்தம்*

இத்தீர்த்தில் நீராடினால் கர்பக்கோடி காலையில் வற்றியிருந்த பிரம்மஹத்தி தோஷங்களும், பூதவேதாளையைச் சாபங்களும் விலகும் அநேககோடி பாவங்களும் நிவர்த்தியாகும்.

*7. சேதுமாதவதீர்த்தம்*

எல்லா நலன்களும் கிடைக்கும்.

*8. நளதீர்த்தம்*

பல வேள்விகள் செய்த பலனும், கோடானகோடி புண்ணியமும் செய்த பலனும் பெறுவதோடு, தீர்த்தமாடியவர்கள் சூரியக்கடவுள் போன்று ஒளி வடிவமும் சுவர்க்க உலக வாழ்வும் பிறவி நோய்நீக்கமும் பெறுவார்கள்.

*9. நீலதீர்த்தம்*

இதில் நீராடி இராமநாதரை நெஞ்சாரத் துதித்தவர்கள் சொர்ணயாகம் செய்த பலனைப் பெறுவார்கள். அக்கினியாகிய நெருப்புக் கடவுளின் புண்ணிய உலகில் வாழும் தகுதி பெறுவார்கள்.

*10. சுவய தீர்த்தம்*

சுயவனால் உண்டாக்கப்பெற்ற சுவயதீர்த்தத்தில் நீராடி வழிபட்டால் இந்திரன் ஆளும் பொன் உலகில் உள்ள கற்பக விருட்சத்தின் அடியில் வாழும் பெரும் பேறு பெறுவார்கள்.

*11. கவாட்சதீர்த்தம்*

கவாட்ச தீர்த்தத்தில் நீராடியவர்கள், அவர்கள் செய்த பழிபாவ, பாதகங்களிலிருந்து விடுபடுவார்கள். நரகத்துன்பம் ஏற்பட வேண்டிய விதியிலிருந்து மீட்சி பெறுவார்கள்.

*12. கந்தமாதனதீர்த்தம்*

இதில் நீராடி வழிபாடு செய்பவர்கள் பெரும்பாக்கிய சாலிகளாகவும், பல பிறவிகளில் செய்த பாவத்தின் தொடர்ச்சியால் உண்டாகிய மகா தரித்திரமும் நீங்கப் பெறுவார்கள்.

*13. பிரம்மஹத்தி விமோசனத்தீர்த்தம்*

இதில் நீராடினால் பிரம்மஹத்தி தோஷம் நிவர்த்தியாகும்.

*14. சூரிய தீர்த்தம்*

சூரிய பகவானால் ஏற்படுத்தப்பெற்ற இத்தீர்த்தத்தில் நீராடி வழிபாடு செய்தால், முக்காலமும் உணரும் ஞான ஆற்றலும் சூரியஉலகில் வாழும் தகுதியும் பெறலாம்.

*15. சந்திர தீர்த்தம்*

சந்திர பகவானால் அமைக்கப்பெற்ற இத்தீர்த்தத்தில் நீராடி வழிபாடு செய்தால் அறிவாற்றலும் முக்காலம் உணரும் தன்மையும் கைவரப்பெற்று சந்திர உலகில் வாழும் தகுதியும் பெறுவர்.

*16. சர்வதீர்த்தம்*

இதில் நீராடினால் நரை, திரை, மூப்பு, பிணிகள் நீங்கப்பெறுவர்.

*17. சாத்திய மிர்த தீர்த்தம்*

இதில் நீராடினால் விரும்பிய வாழ்வை அடைவதுடன், பல வேள்விகள் செய்த பலனையும், மெய்ஞானத்தையும் பெறுவர்.

*18. சிவதீர்த்தம்*

இதில் நீராடுபவர்கள் உயிர்களின் துன்பத்திற்குக் காரணமான வினைப்பயனை வேரோடு களைந்தும், மெய்ஞானமும், முக்தியும் அளிக்கவல்ல ஒரு புண்ணிய தீர்த்தம் ஆகும்.

*19. கங்கைதீர்த்தம்*

இதில் நீராடுபவர் தம் அஞ்ஞானம், தீவினைகள் அகன்று; பிறவி நோயில் இருந்தும் விடுபடுவர்.

*20. யமுனைத் தீர்த்தம்*

வீடுபேறு அடைவர்.

*21. கயாதீர்த்தம்*

புண்ணிய மோட்சம் பெறுவர்.

*22. கோடி தீர்த்தம்*

இத்தீர்த்தம் காசியில் உள்ள கங்கைத் தீர்த்தத்திற்கு நிகரானதாகக் கருதி மக்கள் போற்றுகின்றனர்.

*23. தனுஷ்கோடி தீர்த்தம்*

தனுஷ், வில், கோடி, முனை, தனுஷ்கோடி எனும் இவ்விடத்தில் ஆண்கடலும், பெண்கடலும் சந்திப்பதாக ஐதீகம். இராமபிரான் தன்வில் அமைப்பின் நுனியை இங்கு ஊன்றியதால் இப்பெயர் வந்தது என்பர். இத்தீர்த்தத்தில் நீராடுவது மிகச்சிறந்த, தலையாய கடமை, புண்ணியம் என்பது இந்துக்களின் நம்பிக்கையாகும். இலங்கையினின்று மீண்ட இராமபிரான் தனுஷ்கோடியில் நீராடினார் என்பது ஐதீகம்.

### III.1.7. *திருக்கோயிலினுள் அமைந்துள்ள சந்நதிகள்*

மகாகணபதி, சுப்பிரமணியர் சந்நதிகளோடு இங்குப் பின்வரும் சந்நதிகளும் அமையப்பெற்றுள்ளன.

*(அ) தட்சிணாமூர்த்தி சந்நதி*

மகாலெட்சுமி சந்நிதி, நவக்கிரக சந்நிதி, மனோன்மணி, ஸ்கந்தர், வஜரேஷ்வரர், சுகத்தீஸ்வரர், நாயன்மார்கள், துர்க்கை, சப்த கன்னியர்கள்.

*(ஆ) பெருமாள் சந்நதி*

பர்வதவர்த்தினி அம்மன் சந்நிதியின் வடமேற்கு மூலையில் ஆகாயத்தை நோக்கும் திருமுகத்தைக் கொண்டு பள்ளி கொண்ட பெருமாள் யோக சயனத்தில் உள்ளார். பள்ளிகொண்ட பெருமாளுடன் ஸ்ரீதேவி, பூதேவி நிற்க, பாதத்தடியில் விபீஷ்ணஆழ்வார் நிற்கக் காணலாம்.

*(இ) நடராசா சந்நிதி*

உலகப்புகழ் பெற்ற மூன்றாம் பிரகாரத்தின் வடகிழக்கு மூலையில் மிகப்பெரிய அளவிலான நடராசர் (சபாபதி) அருகே சிரவகாமசுந்தரி உடனுறைய நடராசர் சந்நிதி உள்ளது. இச்சந்நிதியின் உள்பகுதி முழுவதும் ருத்ராட்சங்களால் அமைந்துள்ளது. இங்குச் சுதை வடிவில் மகாவிஷ்ணுவும் உள்ளார்.

*(ஈ) சேது மாதவர் சந்நிதி*

மூலவர் சந்நிதிக்குப் பின்புறம், இரண்டாம், மூன்றாம் பிரகாரங்களுக்கு இடையே வெண்மை நிற சேதுமாதவர் சந்நிதி உள்ளது. இதன் அருகே உள்ள சேதுமாதவ தீர்த்தத்தில் நீராடியபின் தனுஷ்கோடியில் இருந்து மண்கொண்டு வந்து இவர்கள் முன் வைத்து பூஜித்தால் காசி யாத்திரை செய்த பலன் கிட்டும் என்ற ஐதீகம் இன்றும் உள்ளது.

*(உ) ஆஞ்சநேயர் சந்நிதி*

கோயிலின் கிழக்கு நோக்கிய பிரதான வாசலில் நுழையும்பொழுது வலதுபக்கம் விசுவரூப ஆஞ்சநேயர் சந்நிதி தெற்குத் திசையினைப் பார்த்து அமைந்துள்ளார். சிவப்புச்சந்தனம், தீர்த்தம், துளசிப்பிரசாதங்கள் அளிக்கப்படுகின்றன. இவரை வழிபட்டுச் செல்லும் பக்தர்களுக்குச் சடாரி மரியாதையும் அளிக்கப்படுகிறது.

*(ஊ) ஜோதிர்லிங்கம்*

ஜோதிர்லிங்கம் விபீஷ்ணனால் பிரதிஷ்டை செய்யப்பட்டது என்று கூறப்படுகிறது. இந்த லிங்கத்திற்குப் பின்புறம் கற்பூர தீபாராதனை காட்டினால் முன்புறத்தில் சிகப்பு விளக்குபோல் ஒளி தெரிகிறது. அதனால் இவ்லிங்கம் "ஜோதிர்லிங்கம்" என அழைக்கப்படுகிறது. பாரத நாட்டிலுள்ள பன்னிருஜோதிர்லிங்கத் தலங்களுள் இத்தலமும் ஒன்றாகும். இவ்லிங்கத்திற்கு நான்கு காலப் பூஜையும், ஒரு காலம் கோடி தீர்த்த அபிஷேகமும் நடைபெற்று வருகின்றது.

*(எ) லிங்கோத்பவர்*

சுவாமி சந்நிதிக்குப் பின்புறத்தில் முதல் பிரகாரத்தில் மேற்கு பார்த்து லிங்கோத்பவர் உள்ளார். விஷ்ணு, வராக ரூபமாகவும், பிரம்மா அன்ன ரூபமாகவும் அடிமுடி காண்பதான அமைப்பில் அமைக்கப்பட்டுள்ளது.

*(ஏ) சண்டேஸ்வரர்*

சுவாமி சந்நிதிக்கு இடப்புறத்தில் சண்டேஸ்வரர் சந்நிதி தெற்கு நோக்கி அமைந்துள்ளது. இவருக்குச் சுவாமிக்குச் சாற்றிய மாலையும், நைவேத்தியமும் வைத்துப் பூஜிக்கப்படுகிறது.

சண்டேசுவரி, அம்பலவாணர், சிவகாமியம்பாள், அம்பலவாணர், சிவகாமசுந்தரி சந்நதிகளும் இக்கோயிலில் உள்ளன.

*(ஐ) நளனேசுவரர் சந்நிதி*

இராமபிரான் ஈஸ்வர பூஜை செய்வதைப் பார்த்த வானர சேனைகளில் முக்கியத் தளபதியான நளன் பூஜித்த ஈஸ்வரர்—நளனேஸ்வரர் என்ற அழைக்கப்படுகின்றன. இச்சந்நிதி திருக்கோயிலின் மூன்றாம் பிரகாரத்தில் உள்ளது. இது தவிர நீலேசுவரர், கவேசுவரர் சந்நிதிகளும் இப்பிரகாரத்தில் உள்ளன.

*(ஒ) பைரவர் சந்நிதி*

கோயிலின் இரண்டாம் பிரகாரத்தில் மேற்குத் திசையைப் பார்த்துப் பைரவர் சந்நிதி உள்ளது. பைரவருக்குத் திருவனந்தல் பூசை முடிந்தவுடன் ஒரு காலப் பூசையும், உச்சிக்காலத்தில் இரண்டாம் காலப்பூசையும், அர்த்த சாமத்தில் மூன்றாம் காலப் பூசையும் நடைபெறும்.

**III.1.8.** ***இராமநாதசுவாமி திருக்கோயிலைச் சார்ந்த பிறகோயில்கள்***

***கோதண்ட ராமசுவாமி கோயில்***

இக்கோயில், இராமநாதசுவாமி கோயில் தேவஸ்தானத்தின் பொறுப்பில் உள்ளது. இக்கோயிலில் இராமபிரான் மூலவராக உள்ளார். இக்கோயில் இராமேசுவரத்தில் இருந்து ஐந்து மைல் தொலைவில் உள்ளது. இராவணனுடைய தீயகுணங்களிலிருந்து விடுபட்டு விபீஷ்ணர் இராமபிரான் திருவடிகளில் தஞ்சம் அடைந்த இடம் இதுவென புராணங்களும், தலவரலாறுகளும் கூறுகின்றன. மேலும் இராமபிரான் சீதையை மீட்பதற்கு இலங்கை நோக்கிச் செல்லும் முன் இக்கோயிலின் அருகிலுள்ள கடற்கரையில் தங்கினார் கூறப்படுகிறது. இங்குச் சர்வேஸ்வரன், கோதண்டராமர், விபீஷ்ணர், சீதாப்பிராட்டி ஆகியோர் எழுந்தருளியுள்ளனர்.

“இக்கோயில் பழுது பார்த்து சீர்படுத்தி 21–11–1963ல் (கார்த்திகைத்திங்கள் 2ம் தேதி) வியாழன்று குடமுழுக்கு விழா சிறப்பாக நடைபெற்றுள்ளது. இராமபிரான் இலக்குவனால் விபீஷ்ணருக்குப் பட்டாபிஷேகம் செய்து வைத்த இடமும் இதுவேயாகும். ” (19)

இராமேசுவரம், இராமநாதசுவாமி திருக்கோயிலில் இராமலிங்கப் பிரதிஷ்டை விழா மூன்று நாட்கள் நடைபெறும் பொழுது, முதல் நாள் இராமேசுவரம் கடைத்தெருவில் திட்டக்குடி என்ற இடத்தில் இராவணவதம் நடைபெறுகின்றது. இரண்டாம்நாள் கோதண்டராமன் கோயிலில் வைத்து விபிஷ்ணர் பட்டாபிஷேகம்

விழா நடைபெறுகின்றது. மூன்றாம் நாள் இராமேசுவரத்தில் இராமலிங்கப் பிரதிஷ்டை விழா நடைபெறுகிறது.

*இலட்சுமணேசுவரர் கோயில்*

இராமநாதசுவாமி திருக்கோயிலின் மேற்குக் கோபுர வாசலுக்கு எதிரே உள்ள சேது சாலைப்பாதையின் தென்புறத்தில் இலட்சுமணேசுவரர் கோயிலும், தீர்த்தமும் உள்ளது. பலராமர் புராணங்களைப் போதிக்கும் சுதபுராணிகரைக் கொன்றதால் பிரம்மஹத்தி தோஷம் ஏற்பட்டபொழுது, இவ்இலட்சுமணேசுவர தீர்த்தத்தில் நீராடியே பிரம்மஹத்தி தோசம் நீங்கப்பெற்றதாக தல புராணம் குறிப்பிடுகின்றது.

## IV. *திருஉத்தரகோசமங்கை மங்களநாதசுவாமித் திருக்கோயில்*

இத்தலம் மூர்த்தி, தலம், தீர்த்தம் இம்மூன்று பெருமைகளும் ஒருங்கே வாய்க்கப் பெற்றுத் திகழ்கின்றது. முன்னொரு காலத்தில் வேதவியாசர், மிருகுண்டமகிரிஷி, பானாசரன், மயன், காகபூசண்டர் இன்னும் பல்வேறு முனிவர்களால் பூஜிக்கப்பட்ட ஷேத்திரம் என்ற சிறப்பினையுடையது.

திருவாரூரில் பிறந்தால் முக்தி, திருவண்ணாமலையை நினைத்தாற் முக்தி, சிதம்பரத் திருத்தலத்தைத் தீண்டினால் முக்தி, காசியில் இறந்தால் முக்தி ஆனால், வேத ஆகமங்களின் இரகசியத்தை ஈசன், மங்கைக்கு உபதேசம் செய்த இத்தலம் பிறக்க, நினைக்க, இருக்க, இறக்க அனைத்திற்குமே உகந்தது என்பது ஐதீகம். இதனை மாணிக்கவாசகரும், திருவாசகத்தில் முக்தி கொடுக்கும் முழுமுதற் கடவுள், வள்ளல் என்று இத்தலத்தின் மூலவரை இயம்பியுள்ளார்.

### IV.1. *இருப்பிடம்*

“தென் தமிழகத்தில், இராமநாதபுரம் மாவட்டத்தில் இத்தலம் அமைந்துள்ளது. இராமநாதபுரத்திலிருந்து சுமார் பதினாறு (16) கி.மீ தொலைவில் இத்திருக்கோவில் அமைந்துள்ளது. ஒரு காலத்தில் இத்தலம் பாண்டியரின் தலைநகராக அமைந்திருந்தது.” [20] இப்போது இஃது சிற்றூர். இவ்வூரின் மையப்பகுதியில்

மங்களநாத சுவாமிகோயில் அமைந்துள்ளது. இராமநாதபுரத்தில் இருந்து இத்தலத்திற்குப் பேருந்து வசதிகள் உண்டு.

இக்கோயிலில் நடராஜப்பெருமானுக்குத் தனிக்கோயில் அமைந்துள்ளது. இத்தலத்திற்கு மேலும் மிகப்பெறும் சிறப்பினைச் சேர்க்கின்றது நடராஜர் சந்நிதியில் அமைந்துள்ள ஐந்தரை (5 ½ ) அடி உயரமுள்ள ஒரே கல்லால் செய்யப்பட்ட மரகதக்கல் நடராஜருக்கு ஆண்டுதோறும், மார்கழி மாதம் திருவாதிரை நட்சத்திரத்தில் நடைபெறும் ஆருத்ராதரிசனப் பெருவிழா மிகவும் பிரசித்திப் பெற்றது. இந்நன்னாளில், இக்கோயிலுக்குத் தளத்தில் சிறப்புப் பேருந்துகள் முக்கிய இடங்களில் இருந்து இயக்கப்படும்.

இக்கோயில் மாணிக்கவாசகர், அருணகிரிநாதர் ஆகியோரால் பாடல் பெற்றதலமாகும். சேதுபதி மன்னர்களின் பரம்பரையினரால் இன்றளவும் பேணப்பட்டு வருகின்றது. இக்கோயிலில் தொன்றுத்தொட்டு ஆறுகால பூசைகளும் நடைபெற்று வருகின்றன. இத்தனை சிறப்புகள் உடைய இத்தலத்தில் மங்களநாதசுவாமி, மங்களேஸ்வரி அம்மை பக்தர்களுக்கெல்லாம் அருள்பாலித்து வருகின்றார்கள்.

உவமையில் பரமஞான முணர்ந்திரு நந்திமுன்னர்த்
தவமலிசற்குமரான் சாற்றுமெம்பெரும முன்னாட்
பவமறுவியாக்கிரபாதன் பதஞ்சலி கதை தொகுத்து
நவில யாங்கேட்டோ மின்னும் நவின்றமாதவர்த்தின் மேலோர்

(கு.பு.பா. 16)

### IV.2. *இக்கோயில் கட்டமைப்பு*

பக்தரெல்லாம் பார்மேல் போற்றும் ஆதி சிதம்பராகிய இத்தலத்தின் கம்பீரமான இராஜகோபுரத்தின் வானளாவிய தோற்றம் சில மைல்களுக்கு அப்பாலே, இறை பக்தர்களை ஈர்க்கும் வண்ணம் தோற்றமளிக்கிறது. ஏறத்தாழ எண்பது, தொன்னூறு ஆண்டுகளுக்கு முன் இத்திருத்தலத்தைச் சுற்றிலும் அழகிய தேரோடும் இரத வீதிகள் நாற்புறத்திலும் அமைந்து, அதனை அடுத்து நான்குபுற

மாட வீதிகளும் அமைந்திருந்தன என்று அறியப்பட்டாலும், இன்றைய கால கட்டத்தில் இரத வீதியும், மாடவீதியும் ஒன்றாகவே காட்சி அளிக்கின்றன. அடுத்தாற்போல் மிகவும் நீண்ட கோயில் திருமதில் நாற்புறமும் சூழப்பட்ட கட்டமைப்புடன் இத்திருக்கோயில் இன்றளவும் திகழ்கின்றது.

### IV.3. *கோபுரத்தின் நுழைவாயில்*

எந்த ஒரு சிவாலயத்தின் நுழைவாயிலில், இடப்புறம் விநாயகரும், வலப்புறம் முருகனும் சன்னதி கொண்டிருப்பதைக் காணலாம். ஆனால் இத்திருத்தலத்தில் விநாயகரும் முருகனும் நுழைவாயிலில் (மட்டும்) இடவலம் மாறியிருக்கின்றனர். இதன் காரணத்தை அறிய முற்படுகையில், இத்தலத்தில் இறைவன் வேதஆகமத்தின் உட்பொருளை உபதேசம் செய்யும் பொழுது நந்தியெம் பெருமானைக் காவல் காக்குமாறு கட்டளையிட்டுப் பின், இறைவன், இறைவிக்கு உபதேசம் செய்கிறார். உபதேசம் செய்கின்ற அந்த வேளையில் விநாயகரும், முருகனும் நந்தியெம்பெருமானின் கட்டளையைப் பொருட்படுத்தாது, அம்மையப்பனை அணுகியதால், சிவனின் கோபத்திற்கு ஆளாக நேரிட்டது. எனவே கோயிலின் வெளிவாயிலில் இடம் வலம் மாற நேரிட்டது. இதன் மூலம், ''தந்தை சொல் மிக்க மந்திரம் இல்லை'' என்ற முதுமொழியினை உலகத்தவர்க்கு உணர்த்தியும் வருகிறார்கள்.

### V.4. *கோயில் கோபுரங்கள் (மூலவர் சன்னதி கோபுரங்கள்)*

#### *(அ) இராஜகோபுரம்*

''கோபுரம் ஸ்தூலலிங்கமாகும்''. இவ்வாலயத்தின் பிரதான நுழைவு வாயிலான மூலவர் அம்பாள் சன்னதிகளை நோக்கியே இராஜகோபுரங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. இராஜகோபுரங்கள் பெரும்பாலும் அக்கோயிலைக் கட்டுவித்த மன்னர்களின் பக்தி, பராக்கிரமங்களை வெளிப்படுத்தும் வகையிலேயே மிகக் கம்பீரமாக அமைக்கப்பட்டுள்ளதாக அறியப்படுகிறது.

பரமபுருஷனாகிய இறைவனது வீராட்ஸ்வரூபமே கோபுரமாகும். இக்கோயில் இராஜகோபுரமானது அழகிய, நுட்பமான வேலைப்பாடமைந்த சிற்பங்களைக் கொண்ட எழுநிலை மாடங்களைக் கொண்டுள்ளது. இதற்கு மேலாக தாமிரத்தாலான ஒன்பது கலசங்கள் (கும்பங்கள்) உள்ளன. இக்கும்பம் ஷோடசாந்தம் எனப்படும். இக்கோபுரத்தின் உயரம் 125 அடி ஆகும். 9 நிலைகள் உள்ளன. கோபுரத்தின் உச்சித் தென்வடல் 56 அடி, கிழமேல் அகலம் 15 அடி.

*(ஆ) ஐந்து நிலைக் கோபுரம்*

ஐந்து நிலைக்கோபுரத்தின் ஒவ்வொரு வாயிலிலும் 1. சாந்திகலை 2. வித்யாகலை 3. பிரதிஸ்டாகலை 4. நிவர்த்திகலை 5. சாந்தியாதீதகலை என முறையே ஐந்து நிலைகளைப் பெற்றுத் திகழ்கின்றன.

*(இ) மூன்று நிலைக் கோபுரம்*

ஆத்ம தத்துவம், வித்யாதத்துவம், சிவத்தத்துவம் என்ற மூன்று நிலைகளைக் கடந்து உள்ளே ஏகாந்தமாக இருக்கக் கூடிய ஒரு நிலையாகிய இந்திர விமானம் என்று சொல்லக் கூடிய மூலஸ்தானத்தை அடைகின்றோம். இந்த மூன்றாம் நிலையில் குறிப்பாக "ஆத்ம தத்துவத்தால்" பிரம்ம பாகமும், பிரம்ம பாகத்தால் இச்சா சக்தியும், "வித்யா தத்துவத்தில்" விஷ்ணு பாகமும், விஷ்ணு பாகத்தில் கிரியா சக்தியையும், "சிவதத்துவத்தில்" ருத்ர பாகமும் ருத்ர பாகத்தில் ஞான சக்தியையும் கண்டுகளித்து இந்த மேற்கூறிய மூன்று சக்திகளும், மூன்று தத்துவங்களும், மூன்று பாகங்களும் சேர்ந்து ஒடுங்கிய இடம்தான் சிவபாகம் என்று சொல்லக்கூடிய இடமாகவும், சிவ வழிபாட்டை ஆகமமுறைப்படி நித்திய (தினப்படி பூசை) நைமித்திய (ஷசேஷபூசை) வழிபாடுகளைச் செய்து வருகிறார்கள்.

இக்கோயிலில் (நந்தி மண்டபத்தை அடுத்தநாள் போன்று மூன்றாம் நிலை ஆரம்பமாகின்றது) தற்சமயம் இந்நிலையின் மேற்புறம் கோபுரம் இல்லை. ஆனால், கோயில் திருப்பணிகள் நடைபெற்று வரும் இவ்வேளையில் இந்த மூன்றாம் நிலையில் கோபுரம் அமைக்கப்பட்டுள்ளது.

## IV.5. *சன்னதிக் கோபுரங்கள்*

### *(அ) இராஜகோபுர வரலாறு*

“08–02–1795ல் ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனியரால் கைப்பற்றப்பட்டு சேதுபதிச் சீமை என்ற, தன்னரசு நிலையை இழந்தது. இதனால் தெய்வீகத் திருப்பணிகளும் தடைப்பட்டன. அவர்களால் தொடரப்பட்ட இக்கோயிலின் கிழக்குப் பகுதியின் இரண்டாவது எழுநிலைக் கோபுரம் (அம்மன் சன்னதி இராஜகோபுரம்) முற்றுப் பெறாமல் நின்றுவிட்டது. மேலும் இந்தக் கோயிலின் வடக்குத் தெற்கு நுழைவாயில்களில் அமைக்கப்பட இருந்த இராஜகோபுரங்களும் கால் கோல் இட்ட நிலையிலேயே நின்று விட்டன”[21]. பல்வேறு நடவடிக்கையினால் இன்று இக்கோபுரத் திருப்பணிகள் மீண்டும் நடைபெற்று வருகின்றன.

### *(ஆ) ஆடி வீதி*

இந்த ஆடி வீதி சமமாகப் பிரிக்கப்பட்டு, மூலவர் இராஜகோபுரத்தின் நேராக மூலவர் சந்நிதியும், இடதுபக்கம் அம்மன் கோபுரத்தின் (மொட்டைக் கோபுரம்) நேராக அம்மன் சந்நிதியும் காணப்படுகின்றன. ஆடிவீதியின் வலப்புறமாக அம்பாள் தபசு மண்டபம். அதனை அடுத்து சற்று இடைவெளியில் அக்னி தீர்த்தமும், அதன் எதிர்ப்புறமாக கிழக்கு நோக்கி சகஸ்ரலிங்கமும் அதன் உள்ளடக்கமாக தலவிருட்ஷமும் உள்ளன. அக்னி தீர்த்தக் கரையில் மேற்கு முகமாக மாணிக்கவாசகர் சந்நிதி உள்ளது. சிறிது இடைவெளியில் நடராஜர் சந்நதியானது வடக்கு நோக்கி காட்சியளிக்கின்றது. இவையாவும் ஆடிவீதியின் வலப்புறச் சுற்றுப்பிரகாரத்தில் அமைந்துள்ளன. கிழக்குப் பிரகாரத்தில் உற்சவங்களுக்குத் தேவையான வாகனங்கள் கொளுவீற்றிருக்கின்றன.

## IV.6. *மூலவர் சன்னதி அமைப்பு*

### *வெளி நந்தி மண்டபம்*

இம்மண்டபத்தில் (முகப்புப் பக்கத்தில்) எட்டுக்கால் பத்தியுடன் கூடிய கர்ணக்கால் மண்டபம் உள்ளது. இம்மண்டபத்தில் (மூவரை நோக்கி) நந்தி,

கொடிமரம், பலிபீடம் அமைந்துள்ளன. இந்த நந்தி மண்டபத்தில் அமைந்துள்ள நந்திக்குப் பிரதோஷ காலத்தில் விசேஷ அபிஷேக ஆராதனைகள் நடைபெறுகின்றன.

### IV.6.1. *சோபன மண்டபம் (அ) சேதுபதி மண்டபம்*

சேதுபதி மன்னர்களின் இறைத் தொண்டினைப் பிரதிபலிக்கும் வகையில் இம்மண்டபத்தில் அமைந்துள்ள தூண்களில், பாஸ்கர சேதுபதி, இராமநாத சேதுபதி, இரகுநாத சேதுபதி ஆகியோரின் திருவுருவச்சிலைகள் உள்ளன. இடப்புறமாக சண்டன், வலப்புறமாக பிரசண்டன் என்ற துவாரபாலகர்கள் உள்ளனர். இம்மண்டபத்தை இடப்புறமாக சுற்றி வந்தோமானால் இடதுபுறம் சூரியனும், அதிகார நந்தியும் உள்ளனர். சற்றுத்தள்ளி அறுபத்துமூன்று நாயன்மார்களின் திருவுருவச் சிலைகள் உள்ளன. இப்பிரகாரத்தின் இடதுபுறம் கன்னிமூலக் கணபதியும், வாயு மூலையில் சுப்பிரமணியரும் உள்ளனர். அடுத்தாற்போல் மகாலெட்சுமி சந்நிதியும் உள்ளது. இம்மண்டபத்தின் வலப்புறத்தில் சந்திரன், பைரவர் உள்ளனர்.

### IV.6.2. *உள்நந்தி மண்டபம் (அ) மகா மண்டபம்*

மகா மண்டபத்தை வெளிப்புறமாகச் சுற்றி வந்தால் மூலவரைச் சுற்றிவரலாம் அவ்வாறு சுற்றிவரும்போது தட்ஷிணா மூர்த்தி, லிங்கோத்பவர், துர்க்கை ஆகியோரைக் காணலாம்.

மகா மண்டபத்தை அடுத்து அர்த்தமண்டபம் உள்ளது. இங்கு மனத்தை ஒருமுகப்படுத்தி இறைவனை வழிபடும் வண்ணம் அமைதி குடிகொண்டுள்ளது. அடுத்துள்ள கருவறையில் சிவலிங்கம் வழிபாடு நடைபெறுகிறது.

### IV.6.3. *அம்பாள் சன்னதி அமைப்பு*

இறைவியின் கோயில் பொதுவாக இறைவனின் சன்னதிக்கு வடப்புறத்தில் தெற்கு நோக்கி இருக்கும். ஆனால் இத்தலத்தில் இறைவி மங்களேஸ்வரி இறைவனைத் தவம் புரிந்து திருமணம் செய்து கொண்ட தலமாதலால், தனிக்கோயிலில் கிழக்கு நோக்கி அம்பாள் இருக்கிறாள்.

“ஆடி வீதி வழியாக” அம்மன் சந்நதி கோபுரத்தை அடுத்து, தாமிரத் தகட்டினால் வேயப்பட்ட கொடிமரம், பலிபீடம் ஆகியன உள்ளன. அவற்றின் இருபுறமும் தூண்களில் சிற்பங்கள் உள்ளன.

### IV. 6.4. *ஊஞ்சல் மண்டபம்*

இங்குள்ள ஊஞ்சல் மண்டபத்தில்தான் சித்திரை மாதம் திருக்கல்யாண வைபவம் நடைபெறும். ஊஞ்சல் விழாவும் மூன்று நாட்கள் நடைபெறும். நான் மறைகளும், தேவாரம் திருவாசகம் ஓதுதலும் இங்குதான் நடக்கின்றன. நூற்றுக்கால் மண்டபம் என அழைக்கும் படியாக சிற்பங்களுடன் கூடிய தூண்கள் இரண்டு வரிசையில் இம்மண்டபத்தில் அமைக்கப்பட்டுள்ளன.

### IV. 6.5. *சோபன மண்டபம் அல்லது மகாமண்டபம்*

இதன் மேற்கூரையில் பலவண்ணங்களில் அழகிய ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன. திருவிளையாடல் புராணச் செய்திகளும் வரையப்பட்டுள்ளன. திருவிளக்குகளால் ஒளி ஏற்றி இம்மண்டபத்தை அழகு மிளிரச் செய்யும் வண்ணம் பல எண்ணிக்கையிலான கண்ணாடிக்குடுவை விளக்குகள் மேற்கூரையில் தொங்கவிடப்பட்டுள்ளன.

இம்மண்டபத்தின் ஈசான்ய மூலையில் பள்ளியறை உள்ளது. ஐம்பொன்னாலான சோமஸ்கந்தர், அர்த்த நாரீஸ்வரர், நடராஜர் (உற்சவர்) ஆகியோரின் செப்புத் திருமேனிகள் (உற்சம மூர்த்திகள்) உள்ளன. இம்மண்டபத்தின் கன்னி மூலையில் இரண்டு விநாயகர்கள் உள்ளனர். வாயுபாகத்தில் பாலமுருகன் உள்ளார். மூலஸ்தானத்தில் மங்களேஸ்வரி பக்தர்களுக்குக் கருணை புரியும் கோலத்தில் வீற்றிருக்கின்றாள்.

நடராஜப் பெருமானுக்கென்று தனிக்கோயில் அமைந்துள்ளது, இத்தலத்திற்கு மேலும் பெருமை சேர்க்கின்றது. யாக மண்டபம், மகாமண்டபம், வெளிப்பிரகாரச் சுற்று, அர்த்த மண்டபம், கர்ப்பக்கிரகம் ஆகியன அனைத்தும் சேர்ந்து தனிக்கோயிலாக உள்ளது. சிதம்பரத்தில் உள்ள அமைப்பு போன்று இங்கும் கருவறை அர்த்தமண்டபம், மகாமண்டபத்தை அடுத்து வெளிப்பிரகாரத்திற்கும், சோபனமண்டபத்திற்கும் இடையில் மரப்பலகையினாலான பாதை அமைக்கப்பட்டுள்ளது.

ஆதியில் சிவனானவர் அறையில், அம்பிகைக்காக ஆடியதால் தனிக்கோயிலாக உள்ளது என்ற சிறப்புக் காரணமும் கூறப்படுகின்றது. எனவே இதனை "சிற்றம்பலம்" என்று சிறப்புற அழைக்கின்றனர். ஆகவேதான், சிற்றம்பலமாகிய இத்தலத்தைச் சிதாகாசம் என்றும், பொன்னம்பலமாகிய சிதம்பரத்தைத் தகரகாசம் என்றும் கூறுகின்றனர்.

**IV. 7. 1.** ***சன்னதி அமைப்பு***

நடராஜர் சன்னதி வடக்குநோக்கி அமைக்கப் பெற்றுள்ளது. நந்தி, கொடிமரம், பலிபீடம் ஆகியன முறையாக அமைக்கப் பெற்றுள்ளன. இது யாக மண்டபம் எனப்படும். (மேற்கூரை இல்லை விசேஷ காலங்களில் மேற்கூரை வேயப்படும்)

**IV. 7.2.** ***சோபன மண்டபம்***

சோபன மண்டபத்தின் மேற்கூரையில் மாணிக்க வாசகரின் முற்பிறவியின் தொடர்புடைய அக்னிதீர்த்த நிகழ்வுகள் அழகிய வண்ணங்களில் தீட்டப்பட்டுள்ளன.

**IV. 7. 3.** ***மகாமண்டபம்***

இம்மண்டபத்தில்தான் ஸ்படிகலிங்கம், சிறிய மரகதலிங்கம் ஆகியவற்றிற்கு, அபிஷேக ஆராதனைகள் நடைபெறுகின்றன. இதற்கென தனி பீடமும் அமைக்கப்பட்டுள்ளது. இவ்லிங்கங்களுக்கு அபிஷேகம் செய்யும் பொழுதே இடது பிரகாரத்தில் கூப்பிய கையுடன் திகழும் மாணிக்கவாசகரையும், வலது பிரகாரத்தில்

தனிக்கோயில் கொண்டிருக்கும் உமாமகேஸ்வரரையும், எதிர்த்தாற்போல் உள்ள மரகத நடராஜரையும், ஒரே நேரத்தில், ஒரே இடத்தில் இருந்தே இம்மூவரையும் தரிசனம் செய்யும் விதமாக இம்மண்டபம் அமைக்கப்பட்டுள்ளது. இதுவே இம்மண்டபத்தின் தனிச்சிறப்பாகும்.

அர்த்த மண்டபத்தை அடுத்துள்ள கருவறையில் ஐந்தரை அடி உயரமுள்ள அபூர்வ பச்சைக்கல்லினால் ஆன மரகத நடராஜர் காட்சி தருகின்றார்.

### IV. 8. *இந்திர விமானம்*

இந்த விமானம் இந்திரனால் அமைக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது. இது கடவுள் சந்நிதிக்கு நேர் வடக்கே, அக்கினி தீர்த்தத்தின் நேர் மேற்கே இந்த விண்ணிழி விமானம் அமைந்துள்ளது. இத்தலத்தின் ஈசான்யத்தில் தவமிருந்து கௌதமினிட்ட கடுஞ்சாபத்தினின்றும் விடுபட்டதால் இந்திரனால் இவ்விமானம் தோற்றுவிக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது. இந்த கல்த் தேரில் ஆருத்ரா தரிசனத்தன்று நடராஜப் பெருமான் (உற்சவர்) திவ்ய அலங்காரத்துடன் பக்தர்களுக்குக் காட்சிதருகின்றார்.

### IV. 9. *பள்ளியறை*

மங்களநாயகி சன்னதியின் ஈசான மூலையில் தெற்கு நோக்கி பள்ளியறை உள்ளது. தினந்தோறும் மங்களநாதர் சன்னதியில் இருந்து ஐம்பொன்னாலான விக்கிரசாமி பள்ளியறை ஊஞ்சலுக்குக் கொண்டு வரப்பெற்று அம்பிகையின் விக்கிரகத்திற்கு (ஐம்பொன் விக்கிரகம்) அருகே வைக்கப்பட்டுப் பள்ளியறை பூஜையும், சயன பூஜையும் நடைபெறும்.

### IV. 10. *தலவிருட்ஷம்*

ஆரம்ப காலத்தில் மக்கள் இயற்கையையே வழிபட்டு வந்துள்ளனர். இயற்கை வழிபாட்டில் மரங்களும் முக்கியத்துவம் பெற்றுள்ளன. மரங்கள் தெய்வத்தன்மை கொண்டவை எனும் நம்பிக்கையுடன் வழிபாடு செய்யப்பட்டன. இந்த மர வழிபாடே

பிற்காலத்தில் சமய நம்பிக்கை தோன்ற அடிப்படை காரணமாக இருந்தது. இத்தலத்தில் இருந்த மரமே சிறப்புபெற்றுத் தலவிருட்ஷம் ஆயிற்று.

இத்தலத்தின் தலவிருட்ஷம் இலந்தை (பத்ரி) மரம் ஆகும். இத்தல விருட்ஷம் சுமார் மூவாயிரத்து முன்னூறு (3300) ஆண்டுகள் பழமை வாய்ந்ததாகும். முன்னாள் முதல்வர் பக்தவட்சலம் ஆட்சியின்போது இவ்விருட்சத்தின் சிறுபகுதி ஆய்வு செய்யப்பட்டு மேற்கூறிய உண்மை கண்டறியப்பட்டுள்ளது.

இத்தல விருட்சத்தில் வேதவியாசரின் பாதஇரட்சை உள்ளது. இவ்விருட்ஷத்தின் அடியில் பதஞ்சலி முனிவரும், வியாக்கிருப்பாத முனிவரும் இன்றளவும் தவம் இயற்றி வருவதாக ஐதீகம். இவ்விருட்ஷம் அக்னித் தீர்த்தத்தின் மேற்குக் கரையில் சகஸ்தரலிங்க சந்நிதியில் உள்ளது.

### IV. 11. *மணிக்கூண்டு*

இத்தலத்தில் மூலவர் சன்னதியில் வலப்புறம், மூன்று அடுக்குகளைக் கொண்ட பெரிய மணிக்கூண்டு ஒன்று உள்ளது. இதில் பாஸ்கர சேதுபதி மன்னரால் வழங்கப்பட்ட மிகப்பெரிய மணி ஒன்று உள்ளது.

### IV. 12. *தபசு மண்டபம்*

ஆடிவீதியில் வலப்புறம் அம்மன் தபசு மண்டபம் உள்ளது. இதில் சித்திரைத் திருக்கல்யாண விழாவின் போது ஆறாம் நாள் திருவிழா நடத்தப்படும். இன்று இம்மண்டபத்தில் கோயில் தேவஸ்தான அலுவலகம் இயங்கி வருகிறது.

### IV. 13. *ஏகபாவுத்தர் சன்னதி*

நடராஜர் சந்நதியில், வெளிப்பிரகாரத்தில், வாயு பாகத்தில் இச்சன்னதி உள்ளது. இதனுள் குருந்த மரம் அடியில் சிவன் மாணிக்கவாசகருக்கு உபதேசம் செய்வது போன்ற காட்சி ஓர் கல்லில் அமைக்கப்பட்டுள்ளது.

## IV. 14. *கோயில் தீர்த்தத்தின் பெருமை*

### 14.1. *தீர்த்தம் என்பதன் பொருள்*

கோயிலுக்கு முன்னால் இருக்கும் திருக்குளத்தையே தீர்த்தம் என்று அழைப்பர். பக்தர் நீராடுவதற்கு மழை பொய்த்து விட்டாலும், இத்திருக் குளத்தில் நீர் வற்றாமல் இருந்துகொண்டே இருக்கும். தீர்த்தம் என்ற வட சொல்லுக்குத் தீவினைகள் தீர்க்கும் புனித நீர் என்று பொருள். இப்புனித நீர்நிலைகளில் நீராடினால் தம்முடைய பாவங்களிலிருந்து விடுதலை அடைந்து புனிதத்தன்மை அடைவர் என்பது ஐதீகம் ஆகும்.

### 14.2. *அக்னித் தீர்த்தம்*

அக்னித்தீர்த்த மென்பது, தீயை நினைவின்றித் தீண்டினாலும் சுடும். அதுபோல் வேறு நினைப்பின்றி புனிதத்தோடு அதனைத் தீண்டினால் அது பாவவினைகளைச் சுடும். அதில் நீராடி, அதன் கரையில் தங்கி, ஐந்தெழுத்தோதி, முன்னோர்களை நினைத்துக் கடனாற்றி பின்னே தானங்கொடுத்து, மங்களநாதனை மலரிட்டுப் பூசித்து வழிபாடு செய்தால், மனிதப் பிறவியும் வேண்டுவதாகிய மகிழ்ச்சியினை அடையலாம்.

### 14.3. *பிரமதீர்த்தம்*

மூலவன் சந்நதிக்கு நேர்கிழக்கே இத்தீர்த்தம் அமைந்துள்ளது. முன்னொரு காலத்தில் பிரம தேவனால் அமைக்கப்பட்ட தீர்த்தம் என்பதனால் இப்பெயர் பெற்றது. வைகாசி மாதம் பௌர்ணமி திதி விசாகத்தில் உச்சி நேரத்தில் அருகும் அரிசியும் சிரசிற்கொண்டு, இத்தீர்த்தத்தில் நீராடி, வேதியர்களுக்குத் தயிர்ச்சாதம் விநியோகிப்பவர், நரகத்தில் இடர்ப்படார்.

ஆனி மாதத்து வளர் பிறையில் வெள்ளிக்கிழமையில் உதயத்தில் விஷ்ணுகாந்தி என்ற பச்சிலையைக் கையிலேந்தி, பிரணவமந்திரத்தை ஓதி இத்தீர்த்தத்தில் நீராடி மங்களநாயகனையும், நாயகியையும் வீழ்ந்து

வணங்கினவர்கள் அளவில்லா செல்வம் பெறுவர். பன்னிரண்டு தலைமுறை வரை வாழையடி வாழையாய்ச் சந்ததி பெறுவர்.

ஆடிமாதத்துப் பூரணமையில் இத்தீர்த்தத்தில் நீராடி ஆவின் (பசுவின்) பாலால் மங்களநாதனை அபிஷேகித்து, பசுவின் நெய்யால், கரும்புரசம் சேர்த்துப்பாயம் நிவேதித்தால் குன்மம் என்னும் கொடிய நோய் தீரப்பெறுவர்.

### 14.4. *சீதள தீர்த்தம்*

மங்கைநாதன் ஆலயத்திற்கு ஈசான திக்கில் இரண்டு அம்பு வீழ் தூரம் கடந்தால் ஓர் நன்னீர் தடாகம் உள்ளது. அது ஆடையிலும் கோடையிலும் எந்த நேரத்திலும் சீதளமாய் இருப்பதால் சீதள தீர்த்தம் எனப் பெயர் பெற்றது. இது தேவி தீர்த்தம் எனவும் அழைக்கப்படும். (தேவியால் உருவாக்கப்பட்டது)

சித்திரை மாதம், அம்மாவாசை நாளில், நடுப்பகலில் எள்ளு, அருகு கோமயம் சிரசில் சேர்த்து இத்தீர்த்தத்தில் அன்புருக நின்று, செங்கதிரோனைச் சூரிய மந்திரத்தால் ஓதி இத்தீர்த்தத்தில் நீராடி மங்கள நாதனை வழிபட்டால் கொடிய பிரம்மகத்தி தோஷம் நீங்கும்.

சித்திரைமாதப் பூரணை நாளன்று உதயவன் உச்சியை அடையும் பொழுது வேதமந்திரமோதிக்கொண்டு அத்தீர்த்தத்தில் நீராடி, இறைவன் கோவிலின் கீழ், ஆலமரத்தின் கீழ் பிரமதேவனால் நிறுவப்பட்ட பிரமலிங்கப் பெருமானைச் சேவிப்போர் மறையவரைக் கொன்ற பாவத்தினின்று உய்யப்பெறுவர்

### 14.5. *கௌமார தீர்த்தம்*

பிரம தீர்த்தத்தின் வாயு திசையில் அந்நகரின் ஓர் அம்பு வீழ் தூரத்தில் இத்தீர்த்தம் உள்ளது. இது சூரனை வென்ற முருகக் கடவுளால் நிறுவியது. கார்த்திகை மாதத்தில் சூரியன் விருச்சிக இராசியில் சஞ்சரிக்கும் போது, இந்தக் கௌமார தீர்த்தத்தில் நீராடி, முருகப் பெருமானின் சேவடியை வணங்கி, நெஞ்சுருகிப்பாடுகின்றவர்கள் அதிமதுரக் கவிகளைப் பொழியும் ஆற்றல் பெறுவார்கள்.

இத்தீர்த்தத்தில் முறையே ஆறுமாதங்கள் தொடர்ந்து மூழ்கினால் மக்கட் பேறில்லோர், அறிவுடைய நன் மக்களைப் பெற்று நல்வாழ்வு வாழ்வர்.

### 14.6. *ஹரித்துவார்த் தீர்த்தம்*

மங்களேசுவரப் பெருமானுக்கு வடமேற்கில் வாயுதிசையில், அறுவிற்கிடை தூரத்திலும், நடராசப் பெருமானுக்கு வலப்பாகத்தில் ஐந்து வாயுகிடை தூரத்திலும் அரித்துவசன் என்ற மகதநாட்டு மன்னனால் தோற்று விக்கப்பட்டது. இன்று சேதுபதி மண்டபம் என அழைக்கப்படும் மண்டபத்தில் ஹரித்துவார்த்தீர்த்தம் என்று அழைக்கப்படுகிறது.

### 14.7. *மங்கள விநாயகர் தீர்த்தம்*

மங்கள விநாயகர் சந்நிதியில் இத்தீர்த்தம் உள்ளது. இத்தீர்த்தத்தின் மூலமே மங்கள விநாயகருக்கு அபிஷேகம் செய்விக்கப்படுகிறது.

### 14.8. *சார்வதி தீர்த்தம்*

இத்தலத்தின் கீழ்த்திசையில் இலிங்க மூர்த்தியின் எதிரே சார்வதி எனும் தீர்த்தம் உள்ளது. இது இந்திரனால் அமைக்கப்பெற்றது. இத்தீர்த்தத்தில் முதலில் நீராடி இந்திரன் அனுமதி பெற்றே மேற்கூறிய தீர்த்தங்கள் யாவற்றிலும் புனித நீராட வேண்டும்.

### IV. 15. *மூர்த்தியின் சிறப்பு*

தென்பாண்டித்தலங்கள் பதினான்கும் தோன்றும் முன்னரே ஓர் இலந்தைத் தருவினடியில் சுயம்புவாய் முளைத்த தூய மூர்த்தியே மங்கைப் பெருமான். (சுயம்+பு=சுயம்பு, சுயம்—தானாக, பு—புவியிலே) தானாகவே தோன்றிய லிங்கமூர்த்தியே மூலவராக உள்ளார். எல்லாம் வல்ல இறைவன் பார்க்குமிடமெல்லாம் ஒரு நீக்கமர நிற்பினும், பசுவின் மடுவிலேயே பால்தோன்றுவது போல, லிங்க மூர்த்தத்திலேயே இறைவன் எளியோனாக காட்சி தருகின்றார்.

இவ்விலிங்க மூர்த்திகள் பற்பலவாகும். மானிடலிங்கம், ஆரிடலிங்கம், காணலிங்கம், தெய்வலிங்கம், சுயம்புலிங்கம் என்பனவே அவையாம். முனிவர் முதலியவர்களால் வைத்துப் பூசிக்கப்படுவது ஆருடலிங்கம். நந்தி முதலிய கணநாதர்களால் அமைத்துப் பூசிக்கப்படுவது கணலிங்கம், திருமால் முதலிய தேவர்களால் வைத்துப் பூசிக்கப்படுவது தெய்வலிங்கம் மனிதர் முதலியவர்களால் வைத்துப் பூசிக்கப்படுவது மானிடலிங்கம். சுயமாகவே தோன்றியது சுயம்புலிங்கமாகும். இவைகள் ஒன்றுக்கொன்று நூறுமடங்கு மேற்பட்ட தெய்வத்தன்மை சேர்ந்தது என்று தெய்வமதைப் பேசுகிறது. தராதலத்தில் கோடிமடங்கு உயர்ந்தது புராதனலிங்கமாகும். இத்தலத்தில் புராதன சுயம்புவே ஸ்தலமூர்த்தியாக உள்ளார் என்பது குறிப்பிடத்தக்க சிறப்பாகும்.

லிங்கம் என்பதற்கு எல்லாம் ஒடுங்கி மீண்டும் வெளிப்படுவதற்குரிய இடம் என்பதே பொருள். பிரம்மா, விஷ்ணு, உருத்திரன் என்ற மும்மூர்த்திகளின் உள் அடக்கமே சிவலிங்கமாகும். இறைவன் கொண்ட அருவுருவத் தோற்றமே சிவலிங்க வடிவமாகும். மங்கைநாதனின் ஊர் திருவுத்தரகோசமங்கை என்று மாணிக்கவாசகர் திருவாய் மலர்ந்தருளியுள்ளதால் இத்திருத்தலத்தின் மகிமையை அறியலாம்.

### IV. 15. *(அ) வழிபடப்பெறும் திருவுருவங்கள்*

#### *மங்கள விநாயகர்*

மூலவருக்கும், அம்பாள் சன்னதிக்கும் இடையில் மங்கள விநாயகர் சந்நிதி உள்ளது. இடையில் மங்கள விநாயகர் என்ற நாமத்துடன் கணபதி திகழ்கின்றார். மங்களகரமான செயல்களை முன்னின்று நடத்துவதில் ஈசனுக்கு ஈடாகவே விளங்குகின்றார் என்பது ஐதீகம்.

வல்லபகணபதி (அம்பாள் சன்னதி) கன்னிமூலக்கணபதி (மூலவர் வெளிச்சுற்றில்) சகஸ்தலிங்க ஆலயத்தில் வியாஸ முனிவரால் வழிபடப்பெற்ற

வலம்புரிவிநாயகர் ஆகியோரும் இத்தலத்தில் வழிபடப்பெறும் திருவுருவில் உள்ளனர். கோபுர நுழைவாயிலின் இடப்புறம் நர்த்தன கணபதி வீற்றிருக்கின்றார்.

*(ஆ) சண்முகர்*

அம்பாள் சந்நிதி வெளிப்பிரகாரத்தில் சண்முகர் வள்ளி தெய்வானையுடன் காட்சியளிக்கின்றார். இவ்விடத்தில் அருணகிரிநாதர்,

1. வெற்பெனவே எழுந்து
2. கற்பக ஞானக்கடவுள்

எனத்தொடங்கும் இரு திருப்பாடல்கள் பாடியுள்ளார்.

மூலவர் சன்னதியின் வெளிச்சுற்றிலும் சண்முகர் வள்ளி தெய்வானையுடன் வாயு மூலையில் காட்சி தருகின்றார்.

*(இ) மாணிக்கவாசகர்*

அக்னித்தீர்த்தத்தின் மேற்குக்கரையில் கையில் ஏடுடன் கூடிய மாணிக்கவாசகர், இறைவனின் கட்டளையைச் சிரசின் மேற்கொண்டு ஈசனுக்காக ஏங்கி நிற்பது போன்று காட்சியளிக்கின்றார்.

நடராஜர் சந்நதியின் இடதுபுற வெளிச்சுற்றில், பாண்டியனின் அமைச்சரான பின் இறைவனால் தடுத்தாளப் பெற்று, இறைவனை விடாது சிக்கெனப் பிடிப்பதற்காக, கைகூப்பிய வண்ணம் காட்சி அளிக்கின்றார்.

*(ஈ) சகஸ்தரலிங்கம்*

பத்ரிநாத்ஷேத்திரமாக விளங்கிய இத்தலத்தில் தவம் புரிந்து அக்னி தீர்த்தத்தில் உண்டான நெருப்புப் பிழம்பில் தன்னை ஐக்கியமாக்கிக் கொண்ட தவ முனிவர்களைத் தன்னுள் அடக்கி ஆயிரத்து எட்டு லிங்கங்களும் ஓரே லிங்க மூர்த்தத்தில் காட்சி தந்து சகஸ்தரலிங்கமாக நமக்கு அருள்பாலிக்கின்றது.

இந்நடராஜப் பெருமான் ஓய்வின்றி எப்போதும் திருநடனம் புரிகின்றார் இவனது ஆட்டத்தால் அண்டங்கள் அனைத்தும் ஆடுகின்றன என்பதைத் திருமூலர் திருமந்திரத்தில்,

**"வேதங்களாட மிகு ஆகம்மாட**
**கீதங்களாட கிளரண்டம் ஏழாடப்**
**பூதங்களாடப் புவன முழுதாட**
**நாதங்கொண்டாடினான் ஞானானந்தக் கூத்தே**
**தத்துவம் ஆடச்சதாசிவம் தான் ஆட**
**சித்தமும் ஆட சிவசக்தி தானாட**
**வைத்த சராசரம் ஆட மறையாட**
**அத்தனும் ஆடினான் அம்பலக்கூத்தே"**[22]

**(திருமந்திரம்)**

என்று பாடியுள்ளார். நடராஜர் பஞ்சாக்கரத்தில் நடனஞ் செய்கிறார். இவரது திருவடியில் நகரமும், உதரத்தில் மகரமும் தோளில் சிகரமும், திருமுகத்தில் வாவும், திருவடியில் யவும் விளங்குகின்றன. இதனை

**"ஆடும்படி கேணல் அம்பலத் தானையா**
**நாடுந்திருவடியிலே நகரம் கூடும்**
**மகரம் உதரம் வளர்தோல் சிகரம்**
**பகரு முகம் வாமுடியப்பார்"** [23] **(திருமந்திரம்)**

என்ற பாடல் உணர்த்துகிறது.

*(உ) மரகத நடராஜரின் உருவஅமைப்பு*

ஆனந்தத்தாண்டவமாடும் திருமேனியாய், வட்டவடிவமான பிரபையுள்ளது. சடையானது பின்புறம் தொங்கிய நிலையில் உள்ளது. வலப்பக்கச் சடையில் கங்கையும், இடப்பக்கச் சடையில் பிறையும், காணப்படுகின்றன. நடராஜரின் அபயக்கரத்தில் படமெடுத்த பாம்புச்சுற்றிக் கொண்டுள்ளது. இடது உள்ளங்கையில் பிறையும் உள்ளன. வலக்கை விரல்களில் உடுக்கையைப் பிடித்துள்ளார். வேழ முத்திரைக்கை உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகன் வலக்காலை மடித்துத் தூக்கியும் இடக்கையை ஊன்றியும் படுத்துள்ளான். பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது. வலக்கையால் தூக்கியத் திருவடியைச் சுட்டுகிறான். சிவகாமி பிரபையின்றியுள்ளாள்.

வலப்பக்கம் சிறிய உற்சவ நடராஜர் திருமேனி உள்ளது. இத்திருமேனியின் பிரபையில் நாற்பத்து மூன்றுத் தீப்பிழம்புகள் காணப்படுகின்றன. பிரபையானது வட்ட வடிவமாகவும், இறுதியில் நீண்டும் உள்ளது. சடையானது மும்மூன்றாக

இருபக்கமும் விரவியுள்ளது. வலப்பக்க சடையில் கறுகையும், இடப்பக்கச் சடையில் பாம்பும் காணப்படுகின்றன. சடமடத்தில் பாம்பு, சூரியன், சந்திரன் ஆகியன இடம்பெற்றுள்ளது. நடராசனின் அபயக்கரத்தில் படமெடுத்த பாம்பு சுற்றிக்கொண்டுள்ளது. இடக்கை விரல்களில் தீயை ஏந்தியுள்ளார். வலக்கை விரல்களில் உடுக்கையைப் பிடித்துள்ளார். வேழமுத்திரைக்கை தொங்கிய நிலையில் உள்ளது. தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. அத்திருவடியில் முட்டிக்குக் கீழே பாம்பு சுற்றிக் கொண்டுள்ளது. முயலகன் வலக்காலை நீட்டியும், இடக்காலை மடித்து நீட்டியும் படுத்துள்ளான். பார்வை தூக்கிய திருவடியை நோக்கியுள்ளது. சிவகாமி பிரபையின்றி உள்ளாள்.

ஆதியும் அந்தமுமில்லா அருட்பெரும் ஜோதியாகிய அரூபசிவம், சதாவிசமுமாகிய அருவுருவத்திருமேனியைக் கொண்டது. அதுவே ஐந்தொழில் நடத்த ஆனந்தத் தாண்டவம் புரியும் அற்புத நடராஜர் ஆகியது. அண்டங்கள் அனைத்தும் இயங்கிக் கொண்டிருப்பதனாலேயே அனைத்துயிர்களும் இன்ப வாழ்வு நடத்துகின்றன. ஈஸ்வரன் எல்லா உலகங்களையும் படைத்து அவற்றுள், ஐம்பெரும் பூதங்களையும் அமைத்து அவற்றைத் தனது திருவுருவிற்கொண்டு விளங்குகின்றான்.

அவனது வலக்கையில் உள்ள உடுக்கை படைத்தல் தொழிலை உணர்த்துகின்றது. உடுக்கையின் ஒலி ஓம் என முழங்குகிறது. ஓம் எனும் பிரணவமே படைப்பின் மூலகாரணமாகும். மற்றொரு வலக்கை அபயகரம், அது எல்லாவற்றையும் நானே காத்துக்கொள்கிறேன் எதற்கும் அஞ்ச வேண்டாமெனக் காட்டுகின்றது. இடக்கை ஒன்றில் தீ அமைந்துள்ளது. அது உயிர்கள் இளைப்பாறுவதன் பொருட்டு அழித்தல் தொழிலையும் நானே செய்கின்றேன் என்பதனை உணர்த்துகின்றது. மற்றொரு இடக்கை உயிர்களுக்கு முக்திப்பேற்றை அருளும் திருவடியைக் காட்டுகின்றது.

வலதுகால் அபஸ்மரம் என்னும் முயலகனை மிதித்துக்கொண்டு நிற்கின்றது. அது உயிர்கள் செய்த நல்வினை தீவினைகளுக்குத் தக்கவாறு இறைவன் ஊட்டும்

மறைத்தல் தொழிலை அறிவுறுத்துகின்றது. இடதுகால், தூக்கிய திருவடி ஆன்மாக்களுக்கு இறைவன் முக்தியை அளிக்கும் அருளால் தொழிலைக் காட்டி அருளுகின்றது. இதனை,

> "தோற்றந் துடியதனில் தோடியுந்தீயமைப்பில்
> சாற்றிருப் அங்கியிலே சங்காரம் ஊற்றமாய்
> ஊன்று மலர்பாதத்தில் உற்ற திரோதம் முத்தி
> நான்ற மலர் படித்தே நாடு" (24)

என்ற உண்மைப்பாட்டால் அறியலாம்(39). ஐம்பெரும் பூதங்களிலும் அவன் திருநடனம் புரிகின்றான் என்பதனைப் பின்வரும், திருவாசகப் பாடல் உணர்த்துகின்றது.

> "பாரிடை ஐந்தாய் பரந்தாய் போற்றி
> நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
> தீயிடை மூன்றாய் திகழ்ந்தாய் போற்றி
> வளியிடை யிரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி
> யளயபவ ருள்ளத் தமுதே போற்றி"(25)

அண்ட சராசரங்களையும் ஆட்டி வைக்கும் ஆற்றல் வாய்ந்த அம்பலவன். அடியார்க்கு எளியவனாய் வந்தருள்புரியும் அருமையும் உடையவன் என்பதனை நந்தனார், பெற்றான் சாம்பான் இவர்களுக்குக் காட்டிய பேரன்பினாலும், சேரமான் பெருமானுக்கு சிலம்பொலி காட்டி அருள் செய்தமையானும் அறியலாம். இத்தலத்திலும் பதஞ்சலி, வியாக்கிரபாத முனிவர்களின் வேண்டுகோளுக்கு இணங்க ஒவ்வொரு நாள் இரவும் திருநடனஞ்செய்வது ஐதீகமாகக் கருதப்படுகிறது.

*(ஊ) நடராஜர் சன்னதிக்குள் வழிபடப்பெறும் திருவுருவங்கள்*

*பதஞ்சலி வியாக்கிரபாதர் திருவுருவங்கள்*

1. பதம் + அஞ்சலி = பதஞ்சலி

   பதம் = பாம்பு

   அஞ்சலி = வணங்குதல்

2. வியாக்கிரபாதர் – புலிக்கால் முனிவர்

   வியாக்கிரம் = புலி

பாதம் = கால்

(சி.கு) எம்பெருமானின் அர்ச்சனைக்காக நந்தவனத்தில் மலர்ந்திருக்கும் (மலர்களில் உள்ள தேனை உறிஞ்சுவதற்காக வண்டுகள் வந்து அமரும். அதனால் அப்பூக்கள் எச்சில்பட்டதாய் போய்விடும்) மலர்களை வண்டுகளும் தீண்டாது பரிசுத்தமாய் பறித்து அர்ச்சிக்க வேண்டும் என்ற உயரிய நோக்கத்தால், பாம்பு, புலிகள் போன்ற தோற்ற அமைப்பினைப் பெற்று விரைவாக மலர்பறிக்க வேண்டியதால் இவ்விரு முனிகளும் இச்சிறப்புபெயர் பெற்றுள்ளனர். இவ்விருவரின் திருவுருவங்களும் நடராஜர், கருவறையினுள் வலப்புறம் உள்ளது. இத்திருவுருவங்களுக்கு அபிஷேக, தூபதீப ஆராதனைகளும் நடைபெறுகின்றன.

### *(எ) காரைக்கால் அம்மையார்*

'அறவா நீ ஆடும்போதுன் அடியின் கீழ் இருக்க வேண்டும்', என்று காரைக்காலம்மையார் வேண்டி இவ்வரம் பெற்றதாகப் பெரியபுராணம் குறிப்பிட்டுள்ளது. இதனடிப்படையில்தான் காரைக்கால் அம்மையாரை நடராசருடன் அமைக்கும் முறை தோன்றியிருக்க வேண்டும். இத்தலத்தில் காரைக்காலம்மையாரின் திருவுருவம் வலப்புறம் இடம்பெற்றுள்ளது. அன்றாட அபிஷேக ஆராதனைகளும், தூபதீப ஆராதனைகளும் நடைபெறுகின்றன.

### ***நடராஜர் சன்னதியின் வெளிப்புறச் சுற்றில் உள்ள வழிபடப்பெறும் திருவுருவங்கள்***

### *(ஏ) உமாமகேஸ்வரர்*

வலப்புறச்சுற்றில் உமாமகேஸ்வரர் சந்நிதி உள்ளது. இடப்புறம் விநாயகரும், வலப்புறம் முருகனும் வீற்றிருக்கின்றனர். மூலவராக உமாமகேஸ்வரர் வழிபடப்பெறுகின்றார். வழிபடப்பெறும் லிங்கங்கள் (மூலவர் தவிர) ஸ்படிகலிங்கம், மரகதலிங்கம் சிறிய வடிவிலான ஸ்படிக மரகத லிங்கங்கள் வழிபடப்பெறுகின்றன. இவை நடராஜர் சந்நிதியில் உள்ளன. உச்சிக்காலப் பூசையாய் சிறப்பாக அன்னாபிஷேகம் நடைபெறும்.

*(ஐ) தட்ஷிணாமூர்த்தி*

இத்தலத்தில் தட்ஷிணாமூர்த்தி (விசேஷமாக) யோக தட்ஷிணாமூர்த்தியாக, பத்மா சனத்தில் தெற்கு நோக்கி வீற்றிருக்கின்றார்.

*(ஒ) லிங்கோத்பவர்*

மூலவர் கருவறை விமானத்தின் மேற்குப் பக்கத்தில் லிங்கோத்பவர் உள்ளார்.

*(ஓ) துர்க்கை*

மூலவர் கருவறை விமானத்தின் வடக்குப் பக்கத்தில், துர்க்கை வடக்கு நோக்கி வீற்றிருக்கின்றார்.

*(ஔ) மஹாலெட்சுமி*

சுப்ரமணியன் சந்நிதியை அடுத்துள்ள சந்நிதி மஹாலெட்சுமி சன்னதியாகும். வேண்டுவோர் வேண்டியபடி அருள்புரிந்து வருகின்றார்.

*(க) சண்டேசுவரர்*

இத்தலத்தில் சண்டேசுவரர் சன்னதி மேற்கு நோக்கி உள்ளது. சிவபெருமானின் அனுக்கிரகம் பெற விரும்புவோர் சண்டேசுவரயையும் முறையாக மூன்று முறைக் கைகளைத்தட்டி வழிபட வேண்டும் என்பது மரபு.

*(கா) பைரவர்*

பைரவர் ஷேத்ரபாலர் ஆலயத்தை இரவும், பகலும் அசுரர், இராக்கதர் முதலியவர்களால் பீடை ஏற்படாது பாதுகாத்து வருவதாக நம்பிக்கை நிலவுகின்றது.

*(கி) அறுபத்து மூன்று நாயன்மார்கள்*

மூலவர் சன்னதியின் வெளிப்பிரகாரத்தின் (சேதுபதி மண்டபத்தின் தென்புறம்) தெற்கே அறுபத்து மூன்று நாயன்மார்கள் உள்ளனர். அவரவர்களுடைய நட்சத்திரத்தின்படி நித்திய பூசைகளும், விசேஷ பூசைகளும் நடைபெறும்.

*(கீ) சண்டிகேசுவரி*

அம்பாள் சன்னதியின் வலப்புறம், மேற்கு நோக்கி சண்டிகேசுவரி சன்னதி உள்ளது.

*(கு) நந்தி*

அம்மன் சன்னதியின் மகாமண்டபத்திலும், மூலவர் சன்னதியின் மகாமண்டபத்திலும் காவல் புரிபவராக நந்தியெம்பெருமான் உள்ளார். இவருக்கு நித்தியப் பூசையின்போது அபிஷேக ஆராதனைகளும், தூபதீப ஆராதனைகளும் நடைபெறும். பிரதோஷக்காலங்களில் சிறப்பு அபிஷேக வழிபாடுகள் நடைபெறும்.

*(கூ) பலிபீடம்*

மூலவர்திருமுன்னும், அம்மன் சன்னதியிலும், நடராஜர் சன்னதியிலும், கொடி மரத்தருகே பலிபீடம் உள்ளது. மனிதன் தன் இச்சைகளாகிய விலங்குகளைப் பலிகொடுக்குமிடமே பலிபீடம் என்பர். கோவிலில் எட்டு மூலைகளிலும் எட்டு பலிபீடங்கள் உண்டு. இவை இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் எனும் எட்டுத்திக்குப் பாலகர்களை உணர்த்துகிறது. இவைகளுக்கு எல்லாம் தலைமைப் பீடமே நந்தி தேவருக்குப் பின்னுள்ள பலிபீடமாகும்.

*(கெ) கொடிமரம்*

கொடிமரம் சூக்ஷலிங்கமாகும். மூலவர் சன்னதியெனும், அம்பாள் சன்னதியிலும் தாமிரத் தகடு வேயப்பட்ட கொடிமரமும், நடராஜர் சன்னதியில் மரத்தாலான கொடிமரமும் உள்ளன. கொடிமரத்தின் அடிப்பாகம் சதுரமாக உள்ளது. இது (இறைவனின் படைப்பை உணர்த்துகிறது). இது பிரப பாகமாகும். அதன் மேலுள்ள பாகம் எண் கோணமாயிருக்கிறது. இது விஷ்ணு பாகமாகும். (இது காத்தலைக் குறிக்கிறது). மேல் உருண்டு நீண்டபாகம் உள்ளது. இது உருத்திரனைக் குறிக்கும். (இது சம்காரத்தைக் குறிக்கிறது). கொடிமரம் மும்மூர்த்திகளையும், முத்தொழில்களையும் உணர்த்துகிறது.

## V. *திருப்புல்லாணி ஆதிஜெகந்நாதப் பெருமாள் திருக்கோயில் அமைப்பு*

### V.1. *வைணவ ஆகமம் கோயில் அமைப்பு-ஓர் அறிமுகம்*

வழிபடும் கடவுளின் பெயராலேயே ஆகமங்கள் எழுதப்பட்டுள்ளன. சிவனுடைய வழிபாடைப்பற்றிக் கூறுவது சிவாகமம் எனவும், திருமாலின் வழிபாட்டைப் பற்றிக் கூறுவது சாக்தேய ஆகமம் எனவும், சக்தியின் வழிபாட்டைப் பற்றிக் கூறுவது சாக்தேய ஆகமம் எனவும் வழங்கப்படுகிறது. வைணவ ஆகமங்கள் இரண்டு வகைப்படும்.

1. பாஞ்சராத்ரம் 2. வைகாணசம்

பாஞ்சராத்ரம் என்றால் பிரம்மம், முக்தி, போகம், யோகம், பிரபஞ்சம் ஆகிய இவ்வைந்து தத்துவங்களின் ராத்ரம் (அறிவு) ஏற்பட வழிகாட்டுவதாகும் என்பர் (42)

வேதங்களை மீட்ட இறைவன் அவ்வேத முறையில் தன்னையாரும் வழிபடாமல் எல்லோரும் பாஞ்சராத்ர முறையிலேயே வழிபடக்கண்டார். திருமறை வழியில் யாவரும் வழிபட முன்வரவில்லை. அப்போது இறைவன் தானே விகனஸ் என்ற முனிவரின் உருவமெடுத்துத் திருமறை முறையைப் பின்பற்றி இறைவனை வழிபட்டார். இவ்விகனஸ் முனிவரால் பின்பற்றப்பட்ட இம்முறைக்கு ‘வைகாணசம்’ எனப் பெயர் ஏற்பட்டது. இது மந்திர முறையிலான வழிபாடாகும்

வைணவத்திருக்கோயில்கள் வைணவ ஆகமங்களின் முறைப்படியே கட்டப்பட வேண்டும். அதன் அடிப்படையிலேயே நித்திய, நைமித்திக பூசைகள் நடைபெற வேண்டும். அப்பொழுதுதான் முழுப்பலன் பெறமுடியும் என்பது ஐதீகமாக உள்ளது. இம்முறையில்தான் திருப்புல்லாணி ஆதி ஜெகந்நாதர் ஆலயமும் அமைந்துள்ளது. கோயிலின் நுழைவுவாயிலில் இராசகோபுரமும், அதையடுத்துக் கொடிமரம், பலிபீடம், பெரிய திருவடி ஆகிய அமைய வேண்டும். இரண்டாவது திருச்சுற்றின் தென் கிழக்கில் அக்னி மூலையில் மடப்பள்ளியை அமைக்கவேண்டும். முகமண்டபம், மகாமண்டபம், அம்மண்டத்தினுள், வாயிற் காவலர்கள் இவர்களையடுத்து அந்தரானம் அமைய வேண்டும். கிழக்கே மூலவர் அமைய வேண்டும்.

இரண்டாவது திருச்சுற்றின் தென்மேற்கு மூலையில் கிழக்கு நோக்கி தாயார் சந்நிதி அமைக்க வேண்டும். வைணவக் குரவர்களுக்குண்டான திருமேனிகளின் சந்நிதியை முறைப்படி மூலவருக்குத் தெற்கு நோக்கி அமைக்க வேண்டும். கிழக்கில் திருமண மண்டபம், வடக்கில் வைகுண்ட வாசல் அமைக்க வேண்டும்.

கொடிமரத்திற்குத் தெற்கில் ஊர்தி மண்டபமும், வடக்கில் ஊஞ்சல் மண்டபமும், அமைய வேண்டும்.

இராச கோபுரத்திற்கு நேர் எதிரில் இறைவன் திரும்புதல் மண்டபமும் அதனையடுத்து எதிரில் சிறிய திருவடியான அனுமன் சந்நிதியும் அமைக்க வேண்டும் என்று ஆகமம் கூறுகிறது.

## V.1. *ஆதிஜெகந்நாதப்பெருமாள் திருக்கோயில் அமைப்பு*

இத்திருக்கோயிலில் மூன்று பெருமாள்கள் தனித்தனிச் சுற்றுக்களுடன் எழுந்தருளி இருப்பதால் இம்முதல் பிரகார அனுபவத்தைத் தனித்தேதான் பார்க்க வேண்டும். ஆதலால் முதல்படியாக மூலவர் எழுந்தருளியுள்ள முதல் பிரகாரத்தை, முதல் சுற்றை ஆரம்பமாகக் கொண்டு திருக்கோயிலின் அமைப்பு விளக்கப்படுகிறது.

### V.1.1. *முதல் சுற்று*

*ஸ்ரீநிதி ஜெகந்நாதப் பெருமாள்*

*கருட மண்டபம்*

பெருமாள் சந்நிதிக்கு எதிரில் பெரிய கருடமண்டபமும், வீற்றிருந்த திருக்கோலத்துடன் பெரிய திருவடி (கருடன்) சந்நிதியும் உள்ளன.

*(அ) வடக்குப் பக்கம்*

வடக்குப்பக்கத்தில் நடுவில் பகற்பத்து உத்ஸவத்தில் ஸ்ரீவைகுண்ட ஏகாதசி அன்று சயனத் திருக்கோலத்துடன் எழுந்தருளி சேவை தரும் "ஏகாதசி மண்டப" மேடை உள்ளது. பின்பக்கம் உள்ள சிறு சந்நிதியில் ஸ்ரீயோக நரசிம்மன் மூலவராகவும், உத்ஸவராகவும் இரு பரிக்கிரஹங்களுடன் காட்சி தருகிறார்.

*(ஆ) தெற்குப் பக்கம்*

தாயார் கோயில் பக்கம் செல்லும் வாயில் உள்ளது.

*(இ) தென்மேற்கு மூலை*

வெள்ளி வாகனங்கள் வைக்கும் அறை உள்ளது.

*(ஈ) மணி மண்டபம்*

பெருமாள் சந்நிதி மணிமண்டப வாசலில், துவாரபாலகர்கள் சேவை தருகின்றார்கள். இம்மண்டபத்தின் தென்கிழக்கு மூலையில் ஒரு சுரங்கம் இருக்கிறது. இம்மணிமண்டபத்தைத் தாண்டி மேலே சென்றால் பெருமாள் கர்ப்பக்கிரக விமானச்சுற்று (கருவறைச்சுற்று) வரும்.

*(உ) விமானச்சுற்று*

இதன் தென் பிரகாரத்தில் விமானத்தின் சுவற்றில் சற்று உயர்ந்த பகுதியில் ஸ்ரீலக்குமி நரசிம்மன் எழுந்தருளி இருக்கின்றார். இதன் வடக்குப்பிரகாரத்தில் ஸ்ரீவிஷ்வக்ஸேனர் என்ற சேனை முதலியார் காட்சி தருகின்றார்.

*(ஊ) அர்த்த மண்டபம்*

அர்த்த மண்டபத்திற்குள் பெருமாள் ஸ்ரீஆதிஜெகந்நாதன்–ஸ்ரீ பூமிநிலை என்ற தேவிமாருடன் வீற்றிருந்த திருக்கோலத்துடனும், பொற்கவசத்துடனும் தரிசனம் தருகின்றார்.

> **“ஊரைக்காக்க “துருவபேரம்”**
> **அருச்சனைனை செய்ய “கௌது கபேரம்”**[26]
> **நீராட்டம் கண்டருள“ஸ்நான பேரம்”**
> **பலிக்காக “பலிபேரம்”**
> **திருவிழாவிற்காக “உத்ஸவபேரம்”**

என்ற “வைகானஸ” ஆகம விளக்கத்திற்கு ஏற்றபடி துருவ, கௌதுக, யாக, பலி, நித்யோத்ஸவர் என்ற பேரங்களும் பெருமாளுடைய ஆஸ்தான மங்கள பீடத்தில் எழுந்தருளியுள்ளார்கள்.

## V.2. *முதற்சுற்று*

### *(அ) ஸ்ரீதருப்பசயன இராமன்*

இப்பெருமாள் புஷ்பக விமானம் எனப் பெயர் கொண்ட விமானத்தின் நடுவே பள்ளி கொண்டிருக்கிறார். தருப்பப்புல்லில் சயனத்திருப்பதால் இவருக்குத் தருப்பசயனஇராமன் திருப்பெயர் வழங்கப்படுகிறது.

### *(ஆ) துவார பாலகர்கள்*

இச்சந்தியின் வாசலில் துவார பாலகர்களின் தோற்றம், முகத்தில் தடித்த மீசையுடன் அச்சம் தரும் தோற்றத்துடனும் ஆஹ்வான முத்திரை கொண்ட விளங் தங்களுடன் (அழைக்கும் கைகளுடன்) இருபக்கங்களிலும் சேவை புரிகின்றார்கள்.

### *(இ) வடக்குப் பிரகாரம்*

இப்பிரகாரத்தில் விமானத்தின் நடுவில் பள்ளிகொண்ட பெருமாளின் திருவடிகளிலிருந்து களைந்து வைக்கப்பட்ட த்திவிய பாதுகைகள் உள்ளன. இத்திருச்சுற்றை வலம் வந்து உள்ளே சென்றால் சயனஇராமனுடைய அர்த்த மண்டபம் தென்படும்.

### *(ஈ) அர்த்தமண்டபம்*

இவ்அர்த்த மண்டபத்தில் வீரசயனக் கோலத்தில் சேவை தருகின்றான். தருப்பசயன இராமனின் நாபீகமலத்திலிருந்து எழுந்து மேல் நோக்கிச் செல்லும் மூன்று தண்டுகள் கற்கமலம் உள்ளது. நடுக்காம்பில் உள்ள மலரில் பிரம்மனும், மற்ற இரண்டிலும் தலையணியுடன் கூடிய சந்திர சூரியர்களும், மதுகைடபர்கள், கௌஸ்துபம், இலக்குமி, அந்தோப அந்தர்கள் முதலியவர்களும் மேற்சுவற்றில் தென்படுகின்றார்கள்.

கீழே பெருமான் திருமுடிக்குப் பக்கத்தில் கருடனும் மார்க்கண்டனும் சிலை வடிவத்தில் அமர்ந்துள்ளனர். சுகன், சாரணன் மற்றும் பிற முனிவர்களும் உள்ளனர்.

இத்திருவடியின் பக்கத்தில் சற்று ஒதுங்கிப் பெருமானின் திருவடியினையே நோக்கியவாறு நிற்கும் நிலையில் வீரஹனுமான் காட்சி தருகின்றார்.

*(ஈ) தென்பக்கம்*

அர்த்த மண்டபத்தின் தென்பக்கத்தில் தண்டும் கையுமாய் விபீஷ்ணாழ்வாரும்.

*(உ) வடக்குப்பக்கம்*

அர்த்த மண்டபத்தின் வடக்குப் பக்கத்தில் மஹோததி என்ற பெயருடன் வருணனும், வாருணியுமாய் கடலரசன், கடலரசியாகி அமர்ந்துள்ளனர்.

இலக்குமணன் ஆதிஷேசன் வடிவாய் இப்பெருமானின் திருமேனிக்குப் படுக்கையாய் விரிந்து பணிபுரிந்து கொண்டும், தலையை விரித்த குடையுமாகத் தாங்கி பணிபுரிகின்றார்.

**V.3.** *முதற்சுற்று*

*ஸ்ரீ பட்டாபிராமன்*

தருப்பசயன இராமன் சந்நிதிக்கு முன்பக்கம் துவஜஸ்தம்பத்துடனும், பலிபீடத்துடனும் இச்சந்நிதி அமைந்துள்ளது. துவாரபாலகர்களுடன், அர்த்த மண்டபத்துடன் விளங்கும் கருவறையில் பட்டாபிராமன் எழுந்தருளியிருக்கிறார். இராமன், இராவணனை மாய்த்து, வெற்றி பெற்றுப் புஷ்பக விமானத்தில் சீதையுடன் அயோத்தி திரும்புகையில், இவ்விடத்தில் உடன் பயின்று வந்த அனைவரின் விருப்பத்திற்கிணங்க பட்டாபிஷேகம் செய்து கொண்டு இங்கு அமர்ந்துள்ளார்.

**V.4.** ***இரண்டாவது சுற்று-தாயார் சந்நிதி***

இந்தப் பிரகாரத்தில் தாயார் சந்நிதியின் நுழைவாயிலின் மேலே மொட்டைக்கோபுரம் எனப் பெயர் கொண்ட கோபுரம் உள்ளது. தென்கிழக்கு மூலையில் மடைப்பள்ளி நாச்சியாருடன் கூடிய பெரிய திருமடைப்பள்ளி அமைந்திருக்கிறது. அதையொட்டி வெளிப்பக்கத்தில் தென்வரிசையில் உக்கிராண

அறையும், ஆழ்வார் சந்நிதிகளும் விளங்குகின்றன. இதனையொட்டியே கட்டளை விநியோகம் செய்யும் சிவகங்கைச் சமஸ்தானத்தைச் சார்ந்த உக்கிராண அலையும், ஸ்ரீ ஆதிஜகன்னாதப் பெருமாளின் யாக சாலையும் அமைந்துள்ளன.

இப்பகுதியைத் தாண்டியதும் தெற்குப்பிரகாரத்தில் தாயார் சந்நிதி உள்ளது. இச்சந்நிதியில் ஸ்ரீ பத்மாஸனித் தாயார், வரதாபய ஹஸ்தங்களுடன் அமைதியான தோற்றத்துடன் அருள்பாலிக்கின்றாள்.

இச்சுற்றில் மேல்பிரகாரத்தின் நடுவில் தாயார் சந்நிதியின் மேல் பக்கத்திற்கு அடுத்து, இத்தலத்தின் தல விருட்ஷமான அரசமரம் அமைந்துள்ளது.

வடமேற்குத் திசையில் ஸ்ரீகோதைநாச்சியார் சந்நிதி உள்ளது. வடக்குப் பிரகாரத்தில் பெருமாள் சந்நிதிக்கு வடகிழக்கே சயனஇராமன் மற்றும் பட்டாபி இராமன் சந்நிதிகள் உள்ளன.

### V.5. *மூன்றாம் சுற்று*

கோயில் சந்நிதிக்குள், வாயிற்கோபுரத்தின் வழியாக உள்ளே நுழைந்ததும் கொடைமுறை வாசல் என்ற பகுதி உள்ளது. இங்கு ஸ்ரீ ஆதிஜகந்நாதன் துவஜ ஸ்தம்பமும் பலிபீடமும் உள்ளன.

#### V.5.1. *ஸப்தாவரண மண்டபம்*

இந்த மண்டபத்தில் பெருமாள் பஞ்சபருவோத்ஸவம் கண்டருளுகிறார். இம்மண்டபத்தில் தாயார் சந்நிதிக்கு நேர் எதிரில், கோடியில் சுவற்றை ஒட்டித் திருக்கண்ணாடி அறை உள்ளது. பெருமாள் உத்ஸவ காலங்களில் திருவீதி அலங்கரிக்கப் புறப்படும்பொழுது வெளியே புறப்படும் மன்னர்களைப் போல் தமக்கு அருச்சகர்கள் செய்த அலங்காரம், சரியாக இருக்கிறதா? என்று பார்த்துக் கொள்வதற்காகவே இக்கண்ணாடி அறை அமைந்திருக்கிறது என்ற ஐதீகம் உள்ளது.

இம்மண்டபத்தின் தெற்குப் பிரகாரத்தில் யாகசாலை அமைந்துள்ளது. வடக்குப் பிரகாரத்தில் திருவத்யயன உத்ஸவப்பார்த்தி உலாவு மண்டபம் அமைந்திருக்கிறது. பெருமாள் இங்கு ஸ்ரீவைகுண்ட ஏகாதஸி உத்ஸவத்தில்

எழுந்தருளி வேத திவ்வியப் பிரபந்த விண்ணப்பங்கள் கண்டருளுகிறார். இதே வடக்குப் பிரகாரத்தில் தென் சரகில் பரமபதவாசல் வெளிப்பக்கமாகத் தென்படும். இந்த வடக்குப் பிரகாரத்தில் கீழ்ப்பகுதியில் ஸ்ரீபட்டாபிராமன் சந்நிதி வாசலும், துவஜஸ்தம்பமும் பலிபீடமும் உள்ளன. பெருமாள் சந்நிதி வாயிலுக்கும் ஸ்ரீராமன் சந்நிதி வாயிலுக்கும் நடுவே உள்ள மேடையின் மேல் அவற்றை ஒட்டி ஸ்ரீஇராமனுடைய பள்ளி அறையும், யாகசாலையும் உள்ளன.

### V.6. *நான்காம் சுற்று*

இத்திருக்கோயிலின் நான்காம் சுற்று உள்மாடவீதியாகும். வடகிழக்கு மூலையில் திருமதிலை ஒட்டி உள்ள தீபஸ்தம்ப மண்டபத்தின் மேலே மதிலில் கருடன் இருபக்கத்திலும் சிங்கங்களுடன் எழுந்தருளி இருக்கிறார். இந்த இடத்தில் மட்டும்தான் மதிலில் கருடன் தென்படுகிறார். சேதுபதிகளின் ஆட்சிக்குட்பட்ட கோயில்களின் மதில் உச்சியில் இத்தகைய யாளிகளுடன் கூடிய கருடன் பதுமை பெரும்பாலும் காணப்படும்.

இச்சுற்றின், கீழ் உள்மாட வீதியின் நடுவில் பெருமாள் சந்நிதி இராஜகோபுரமும், இராஜகோபுர வாசலும், எதிரில் அகன்ற திருவந்திக்காப்பு நடக்கும் கல் மண்டபமும், மண்டபத்திற்குக் கீழ்பகுதியில் தீர்த்த மண்டபமும் அமைந்துள்ளன.

இத்தீர்த்த மண்டபத்தில் சில முக்கிய திருவிழாக்காலங்களில் பெருமாள் தாருமஞ்சனம் கண்டருளுகிறார். திருக்கார்த்திகையன்று, இம்மண்டபத்திற்குப் பெருமாள் எழுந்தருளுவார்.

இம்மாட வீதியின் தென்கோடியில், கீழ் சரகில், ஸ்ரீபரகால மடத்திற்கு அதீனமான ஸ்ரீநாகமாந்த மஹாதேசிகன் தனிக்கோயிலும் உள்ளது. கோயிலுக்குள் ஸ்ரீ தேசிகன் (மூலவர், உத்ஸவர்) எழுந்தருளியுள்ளார். இத்தேசிகன் சன்னிதியின் தென்பக்கத்தில் தனுஷ்கோடியில் இருந்து எழுந்தருளப்பண்ணப்பட்ட ஸ்ரீ சதுர்புஜ இராமனையும், வரதராஜப் பெருமாளையும்

பிரதிஷ்டை செய்துள்ளார்கள். இத்தேசிகன் கோயிலுக்கு எதிரில் ஏழாந்திருநாள் மண்டபம் உள்ளது.

*ஐந்தாம் சுற்று*

இந்த ஐந்தாம் சுற்று, தேரோடும் வீதியாக உள்ளது. இதனை வெளிமாடவீதி என்று அழைக்கிறார்கள். இந்த ஷேத்திரத்தில் கோயிலுக்கு எதிரில் சக்கர தீர்த்தப்புஷ்கரிணி அமைந்திருக்கிறது. இத்திருக்குளத்தின் கீழ்க்கரையில் உள்ள நான்காம் திருநாள் மண்டபம் உள்ளது. கீழவீதியில் வடகிழக்குப் பகுதியில், மேல் சரகில் புருஷோத்தம இராயர் சத்திரம் உள்ளது. மூன்றாம் திருநாள் மண்டகப்படி நடைபெறுகிறது. இரவில் இங்கு தேசாந்தரிக் கட்டளையும் நடைபெறுகிறது. இதற்குத் தென்புறம் இராமநாதபுரம் சமஸ்தானத்தைச் சேர்ந்த நான்காம் திருநாள் மண்டபம் உள்ளது. தெற்கு வீதியில், வடக்கு வரிசையில் திருத்தேர் மண்டபமும், திருத்தேரும் உள்ளன.

இவ்வீதியின் தென்மேற்குக் கோடியில் பிரமோத்ஸவத்தில், இரண்டாம் திருநாள் பெருமாள் எழுந்தருளும் சிவகங்கை இராஜாமண்டபம் உள்ளது. வடக்கு வீதியில், வடமேற்கில் வெள்ளையன் சேர்வையின் எட்டாந்திருவிழா மண்டபம் உள்ளது. வடகிழக்குக் கோடியில் மதகுகுட்ட தீர்த்தம் உள்ளது. இக்குளத்திலிருந்துதான் நாள்தோறும் பெருமாளுக்குத்திருமஞ்சனத் தீர்த்தத்தைக் கொண்டு வருகிறார்கள்.

*தொகுப்புரை*

திருக்கோயிலின் பொதுவான அமைப்பான விமானம், விமானத்தின் பகுதிகள் ஆகியனவும், பிறபகுதிகளான பலிபீடம், மண்டபம், கோபுரம் ஆகியன பற்றியும் விளக்கப்பட்டுள்ளது. திருக்கோயில் நிர்மாண நியதிகளும், அளவைகளும் என்ற தலைப்பின் கீழ் திசையறிதல், நிலத்தேர்வு, நிலப்பகுப்புமுறை (பதங்கள் வாரியாக) ஆகியன சுட்டப்பட்டுள்ளன. திருக்கோயில் வளர்ச்சியில் கோபுரங்கள், மண்டபங்கள், சுற்றுக்கோவில்கள் ஆகியனவற்றின் நிலைபற்றியும் கூறப்பட்டுள்ளது.

மேற்குறிப்பிட்ட பொதுவான அமைப்பு, வளர்ச்சியின் அடிப்படையில் ஆய்வு எல்லையாக அமைந்துள்ள சேதுநாட்டுத்திருக்கோயில்கள் ஆகம விதிப்படி கருவறை, அர்த்தமண்டபம், முகமண்டபம், மகாமண்டபம், திருச்சுற்றாலை, சுற்றுமதில்கள், கோபுரவாசல், பலிபீடம், கொடிமரம், பரிவாரக் கோயில்கள் ஆகியன அமைக்கப்பெற்று எவ்வாறு கட்டமைப்பும், வளர்ச்சியும் பெற்றுத்திகழ்கின்றன என்ற செய்திகளும் பெறப்பட்டுள்ளது.

## அடிக்குறிப்புகள்


1. அ. தட்சிணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப–315.
2. அ. தட்சிணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப. 316
3. அரங்கநாதன், தமிழகக் கோயிற்கலை, ப.66
4. மேலது, ப. 66
5. அருள்மிகு இராமநாதசுவாமி திருக்கோயில்–மகாகும்பாபிஷேக சிறப்புமலர் இராமேசுவரம் ப–164, டாக்.எஸ்.எம். கமால்
6. நாராயணவனம் அருள்மிகு கல்யாண செங்கடேசுவரசுவாமி திருக்கோயில் திருவிழாக்கள் : மு. இராமலிங்கம், ப–54, முதற்பதிப்பு, டிச: 1991
7. மேலது, ப–54
8. மேலது, ப–55
9. திருப்புல்லாணி ஆதிஜெகந்நாதப் பெருமாள் தலவரலாறு ப–29
10. மே.கு.நூல், ப–19
11. ஆறுமுக நாவலர், இந்துமத இணைப்பு விளக்கம், ப–48, பதிநான்காம் பதிப்பு டிசம்: 2002
12. மேலது, ப–49
13. டாக்டர். எஸ்.எம். கமால், சேதுபதி மன்னர் வரலாறு, பக்–70, 71
14. தி.உ.ம. தலபுராணம், பதினோறாம் பதிப்பு 2001, ப–88
15. மேலது,. ப–110
16. மேலது,. ப–109
17. மேலது, ப–111
18. மேலது,. ப–117
19. மேலது,. ப–93
20. மேலது, ப–108
21. திருமாற்கரம் பா. எண் 2729, 2789
22. இ.ம.இ. விளக்கம் ப–55
23. மேலது, ப–55
24. தமிழ்நாட்டில் நடராஜர் வழிபாடு முனைவர் மு.அ. மாணிக்கவேலு அம்பலவாணர் பதிப்பகம், முதற்பதிப்பு ஜூலை–1994, ப–145
25. இ.ம.இ.வி.ப–54
26. இ.ம.இ. விளக்கம் ப–47

# இயல் - 4

## திருக்கோயில்கள் வளர்த்த வாழ்வியற் கலைகள்

தமிழகம் மொழி வளர்ச்சி, நாகரிகம், கலாச்சாரம், பண்பாடு, இறையாண்மை, கலை, இலக்கியம், வரலாறு ஆகியனவற்றை தன்னகத்தே கொண்ட நற்பேறு வாய்க்கப் பெற்றுள்ள மாநிலமாகும். இத்தமிழகம் திருக்கோயில்களின் தாயகமாகத் திகழ்கின்றது. இத்திருக்கோயில்கள் ஆயக்கலைகள் எனப் போற்றப்படும் அக்கர இலக்கணம் (எழுத்துக்களின் இலக்கணம்), அசுவப்பரீட்சை (குதிரைகள் இலக்கணம் அறிதல்), அத்திரப் பரீட்சை (அம்புவிடுதிறன் அறிதல்), சத்தப்பிரம்மம் (இசையறிவு), சிற்பசாத்திரம் (சிற்ப அறிவு), நிருத்தம் (இசையுடன் ஆடல்), வேதப்பயிற்சி, வைத்திய சாத்திரம் உள்ளிட்ட அறுபத்து நான்கு கலைகளின் இருப்பிடமாகத் திகழ்கின்றன. இவ்வாயக் கலைகள் தமிழர் நாகரிகத்தின் அடையாளங்களாக உள்ளன எனலாம். பூத்தொடுத்தல் முதல் அருங்கலைகள் அனைத்தையும் திருக்கோயில்கள் தொன்றுதொட்டு வளர்த்து வருகின்றன என்பதனை இன்றளவும் நடைமுறையில் காண முடிகின்றது.

கலைநயம் மிக்க வாழ்க்கையில் அன்பு, அமைதி, இன்பம், இறையாண்மை ஆகியன நிறைந்திருக்கின்றன. இக்கலைகளுள் முதலில் தோன்றியது கூத்து எனலாம். மக்கள் தங்களுடைய உணர்வுகளை முதன் முதலில் அங்க அசைவுகளால்தான் புலப்படுத்தினர் என்பர். இக்கூத்தினைவைத்துதான் இசை, நாட்டியம், நாடகம் முதலானவை தோன்றின எனலாம். தமிழர் வழிபாட்டுத் திருவுருவங்களில் பழமை சான்றதும் இன்பம் அளிப்பதும் ஆடல்வல்லான் திருவுருவமேயாகும்.

கலை, நாகரிகம் அடைந்த சமுதாயத்தின் படைப்புகளுள் ஒன்றாகத் திகழ்கின்றது. தமிழர்தம் சமய வாழ்க்கையில் பண்ணிசையும் பரதக் கலையும் நிலையான இடம்பெற்றுள்ளன எனலாம். இவை மட்டுமன்றி சிற்பம், சித்திரம், சாத்திரம், உற்றுநோக்கல், சமையற்கலை, கூடிவாழும் ஒப்புரவு, நட்பு, காதல்,

திருமணவாழ்வு, நோயற்ற வாழ்வு என வாழ்வின் அனைத்து அடிப்படைத் தேவைகளும் திருக்கோயில்கள் சார்ந்த கலைகளாகவே வளர்ந்தன. இதனால் திருக்கோயில்கள் மக்கள் வாழ்வியலில், அவர்களின் சமுதாயத்தில் ஓர் உன்னதமான இடத்தைப் பெற்றுள்ளன என்பதனை உணர முடிகின்றது.

திருக்கோயில்கள் வளர்த்த வாழ்வியற் கலைகள் என்ற இத்தலைப்பில் "ஆலயங்கள் சமுதாய மையங்கள்" என்ற தலைப்பிலும் திருக்கோயில்களோடு நேரடி தொடர்புடைய கலைகளான கட்டடக்கலை, சிற்பக்கலை, ஓவியக்கலை, கூத்துக்கலை, பரதக்கலை இசைக்கலை மற்றும் கட்டடக்கலை ஆகியன பற்றியும் "அழகுக்கலைகள்" என்ற இருபெறும் உட்தலைப்புகளின் வாயிலாக இங்கு விரிவாக விளக்கக் காணலாம்.

## I. *ஆலயங்கள் சமுதாய மையங்கள்*

### *1.1. வாழ்வியலும் சமயமும்*

வாழ்க்கை அருமையானது, வாழ்க்கை வாழ்வதற்கே அதிலும், வாழ்வாங்கு வாழ்தல் வேண்டும் என்பது தமிழர் கோட்பாடாக உள்ளது எனலாம். வாழ்வாங்கு வாழ்வதற்குச் சிந்தனையும், தெளிந்த அறிவும் தேவையாகும். "சிந்தையும் தெளிவுமாகித், தெளிவினுள் சிவமுமாகி " என்கிறது திருமுறை. தன் அறியாமையை அறிதலே அறிவைப் பெறுவதற்குரிய வாயில் எனலாம். மானிடன்தன் புலன்களின் அழுக்கை அகற்றி, பொறிகளால் தூய்மை காத்து, தன்னைப் பக்குவப்படுத்தி உயர்வதற்கும், உய்வடைவதற்கும் உதவுவது சமயநெறிகளாகும். மனித வாழ்க்கை அகநிலையினும், புறநிலையினும் வளம்பெறச் சமயம் சார்ந்த வாழ்க்கை இன்றியமையாதது எனலாம். சமயமானது தனிமனிதனை நல்வழியில் வளர்த்து; சமுதாயத்தில் கட்டுப்பாடுகளும், ஒழுக்கமும் நிறைந்த வாழ்வுடையவனாக்கி உயரிய குறிக்கோளை (வீடு பேறு, முக்தி) அடைவதற்கு வழிவிடுகின்றது. இதற்குத் துணை செய்வது வழிபாடேயாகும். வழிபாடு என்பது உயிர்ப்புள்ள ஒரு முயற்சியாகும். அறிவார்ந்த அகநிலைப் பயிற்சிகள் மூலம்

ஆன்மா தன்னை உயர்த்திக் கொள்வதற்குத் துணை செய்வது வழிபாடேயாகும். வழிபாடு கடவுளை முன்னிறுத்திச் செய்யப்படினும், வழிபாட்டின் பயன் கடவுளுக்கன்று, மனிதனுக்கேயாகும்.

மனித வாழ்வென்பது அடிப்படையில் மனம், மொழி, மெய் என்னும் மூவகையில் அமைவது. இம்மூன்றும் மானிட உயிரினங்களுக்கு இறைவன் அளித்தப் பெருங்கொடைகளாகும். சிந்திக்கும் திறனும், நாவினால் நவிலும் திறனும் வாய்க்கப்பெற்ற மனிதன் இறைவனுக்கு நன்றி செலுத்த இயலாது. எனினும், இறைவன் மனிதர்களிடம் விரும்புவது அன்புதான். அன்பு செய்பவர் மனதில் இறைவன் உவந்து எழுந்தருள்வார். திருமூலர் போன்ற சித்தர்களும், மாணிக்கவாசகர் போன்ற இறைத்தொண்டர்களும் உள்ளத்தையே பெருங்கோயிலாக்கி இறையருள் பெற்றவர்களாவர். இவர்களைப் போன்றோர்களுக்கு இறைவனைத் தொழ உருவம் தேவைப்படாது. எனினும் பற்றுக்கோடு ஒன்றின்றி சிந்திக்க இயலாதவர்களுக்குப் பற்றுக்கோடாக விளங்குவது திருவுருவ வழிபாடே என்பது உண்மையாகும். இத்திருவுருவ வழிபாடு வளரும் சமுதாயத்திற்குத் தவிர்க்க இயலாத ஒன்றாக அமைந்துவிட்டது. மக்கட் சமுதாயத்தில் திருவுருவ வழிபாடு தோன்றிய பிறகுதான் திருக்கோயிலில் நாகரிகம் கால் கொண்டது என்பது வரலாறு கூறும் உண்மையாகும். இந்நாகரிகம் தொடங்கிய காலந்தொட்டு மனிதகுல வாழ்வில் ஒரு புதிய ஆற்றல் மிக்க சமுதாய உணர்வு தோன்றியது எனலாம்.

> ***“வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி***
> ***ஊனாகி உயிராகி உண்மையுமாய் இனிமையுமாய்க்***
> ***கோனாகி யான் எனதென்று அவரவரைக் கூத்தாட்டு***
> ***வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே ”***

என்பது, இறைவனின் தன்மை பற்றிய மாணிக்கவாசகரின் கூற்றாகும். இறைவன் எங்கும், எவ்வுயிரிலும் நீக்கமர நிறைந்துள்ளான் என்ற மாணிக்கவாசகரின் கூற்றினைப் பின்வரும் காப்புப் பாடலும் சுட்டுகின்றது.

**"மைப்பிறந்த கண்ணாளும் தானும் கச்சி**
**மயானத்தான் வார்சடையான் என்னி னல்லான்**
**ஒப்புடைய னல்லன் ஒருவ னல்லன்**
**ஓரூர னல்லன் ஒருவமன் இல்லி**
**அப்படியும் அந்நிறமும் அவ்வண்ணமும்**
**அவனருளே கண்ணாகக் காணின் அல்லால்**
**இப்படியன் இந்நிளத்தன் இவ்வண்ணாத்தான் இவனிறைவன்**
**என்றெழுதிக் காட்டொணாதோ"**

இறைவன் இன்ன இடத்தனன், இன்ன ஊரினன் என்று எடுத்தியம்ப இயலாது இருப்பினும், அவன் திருக்கோயில்களில் எழுந்தருளியே அருட்பாளிக்கின்றான் என்பதே உண்மையாகும். பசுவின் உடம்பெங்கும் உதிரமாக வியாபித்திருப்பினும், மடுவிலேயே பாலை நாம் பெறமுடியும். இதனைப் போன்றே, இறைவன் திருக்கோயில்களில் வீற்றிருந்து அருள்பாலிக்கும் தன்மையை மாணிக்கவாசகர் எடுத்தியம்புகின்றார்.

மனிதகுலம் இறைவனைக்காண, இறைத்தன்மையுடன் கலந்துறவாட, இறைநலன்களைப் பெறத் துணையாய் அமைவது திருக்கோயில்களாகும்.

**"அப்பன் நீ அம்மை நீ ஐயனும் நீ**
**அன்புடைய மாமனும் மாமியும் நீ**
**ஒப்புடைய மாதரும் ஒன்பொருளும் நீ**
**ஒருகுலமும் சுற்றமும் ஒரூரும் நீ"**

என்ற பாடல் அடிகள், இறைவனை உள்ள அன்புடைய உறவாகவும், சுற்றமாகவும் கொண்டு போற்றும் பண்பினை குறிப்பிடுகின்றது. இத்தகைய உறவானது நிலை நிறுத்தப்பட ஏதுவான நிலைக்களமாக விளங்குவன திருக்கோயில்களாகும். தேவாரமும், மும்மூர்த்திகளும், மாணிக்கவாசகரும் தடுத்தாட்கொள்ளப்பட்டதும், முக்தி அடைந்ததும் திருக்கோயில்களிலேயே என்பதனை அவர்களது திருப்பதிகங்கள் மூலம் அறிகின்றோம்.

**கூற்றாயினவாறு விலக்ககலீர் கொடுமை**
**பல செய்ததனை நானறியேன்**
**ஏற்றாயடிக்கே இரவும் பகலும் பிரியாது**

**வணங்குவன் எப்பொழுதும்**
**தோற்றா தென்வயிற்றிகைம் படியே குடரோடு**
**தூக்கி முடக்கியிட**
**யாற்றே னடியேனதிகைக் கெடில வீரட்டானத்**
**துறை யம்மானே!**

**- அப்பர் தேவாரம்**

என்று தடுத்தாட் கொள்ளப்பெற்ற நிலையில் அப்பர் வீரட்டாணம் என்ற திருத்தல இறைவனைப் பாடுகின்றார்.

திருவெண்ணெய் நல்லூர் திருக்கோயிலில் சுந்தரர் இறைவனால் தடுத்தாட் கொள்ளப்பெற்றதனைப் பின்வரும் அவரது முதல் தேவாரப் பதிகம் குறிப்பிடக் காணலாம்.

**"பித்தா பிறைசூடி பெருமானே அருளாளா**
**எத்தாள் மறவாதே நினைக்கின்றேன் மனத்துன்னை,**
**வைத்தாய் பெண்ணைத் தென்பால் வெண்ணெய்நல்லூர்**
**அருட்டுறையுள்**
**அத்தா உனக்காளாயின் அல்லேன் எனலாமே"** - என்கிறார் சுந்தரர்

தில்லைச் சிற்றம்பலத்தில் நடராசப் பெருமானைக் கண்குளிரக் கண்ட மாணிக்கவாசகர் 'கோயில் திருப்பதிகம்' பாடினார் என்பதனைப் பின்வரும் அவரது பாடல் குறிப்பிடுகிறது.

**தந்தகன் தன்னைக் கொண்டாதென றன்னைச்**
**சங்கரா! யார் கொலோ சதுரர்?**
**அந்தமொன் றில்லா வானந்தம் பெற்றேன்**
**யாதுநீ பெற்ற தொன்றன் பாற்?**
**சிந்தையே கோயில் கொண்ட வெம்பெருமான்!**
**திருப்பெருந்துரை யிறை சிவனே**
**எந்தையே! ஈசா! வுடலிடங் கொண்டாய்**
**யானிதற்கில னோர் கைம்மாதே!**

**- கோயில் திருப்பதிகம்**

இப்பாடலைப் பாடிய பின் திருச்சிற்றம்பலத்தானை மறையவரும், வானவரும் வணங்கிடக் கண்டார் என்றும், அன்றே தம்முடைய ஆவியினையும் உடலையும் அவருடையதாகத் தந்தார் என்றும் அவர் வரலாறு குறிப்பிடக் காணலாம்.[1]

சைவசமய குரவர்களன்றி சாமானிய மனிதர்களும் வாழ்வினில் உய்வடையவும் இறைபேற்றினைப் பெற்றிடவும் திருக்கோயில்கள் மூலக்கலனாக விளங்கியுள்ளன என்பதனைத் திருநீலகண்டநாயனார் புராணம் குறிப்பிடுகின்றது. திருநீலகண்டரும் அவர் மனைவியும் சிவபக்தியினால் முதுமை நீங்கப்பெற்றதையும், முக்தியடைந்ததையும் தில்லை நடராசர் கோயிலுக்கு மேற்கில் உள்ள இளமையாக்கினார் கோயில் புலப்படுத்துகிறது. இவர்களின் திருவுருவங்கள் அங்குள்ள திருக்குளத்தின் உட்சுவரில் அமைந்திருப்பதைக் காணலாம்.[2]

திருநாளைப் போவார், நந்தனார், நாயனார் புராணம் சேந்தனார் வரலாறு முதலியனவும் திருக்கோயில்கள் மானுட வாழ்வில் பெறும் முக்கியநிலையைப் பற்றி எடுத்தியம்புகின்றன. தமிழர் நோக்கில் குறிப்பாகச் சைவ, வைணவ சமய நோக்கில் திருக்கோயில்கள் கடவுள் எழுந்தருளும் இடங்கள் மட்டுமல்லாமல், அவை சமுதாய மையங்களாகவும், சமுதாயத்தை இயக்குபவைகளாகவும் திகழ்ந்துள்ளன.

### *1.2. ஒப்புரவு நெறி*

தமிழ்நாட்டில் நகர அமைப்பு – சிற்றூர் அமைப்பு முறையில் வளர்ந்த ஒன்றாகும். ஊரின் நடுவே திருக்கோயில் உயர்ந்து விளங்கிடவும், இத்திருக் கோயிலைச் சுற்றி நான்கு புறமும் மக்கள் சூழ்ந்து வாழ்வும், நான்கு திசைகளிலிருந்தும் மக்கள் திருக்கோயிலுக்குள் வந்து குழும, கோயிலின் நான்கு திசைகளிலும் பெரியவாயில்களை மன்னர்கள் உண்டாக்கினர் எனலாம். ஊர் மக்கள் அனைவரையும் ஒருங்கே அழைக்கும் வண்ணம், ஒலித்து அடிக்கும் மணி ஓசையும், பூசை நேரத்திலும், விழாக்காலங்களிலும் ஊர்மக்கள் அனைவரும் தத்தம் குடும்பத்தினருடன் அணி பெற ஆலயத்திற்கு வருதலும், வணங்கி மகிழ்தம் சிறப்பம்சமாகும் என்பதை அறியமுடிகின்றது. திருக்கோயில்களில் ஒருமைப்பாட்டுடன் மக்கள் கூடுவதால், அவ்விடத்தில் அன்பு செறிந்த அருள்நலம்

கனிந்த மனித உறவு வளர ஏதுவாகின்றது. மனித நேயம் மேம்படுகின்றது. அவ்விடத்திலேயே கூட்டம் கூட்டப்படுவதால் சிற்றூர்கள் பொதுநிகழ்வுகள் கலந்து பேசப்படுகின்றன.

தமிழக மக்கள் இறைவனிடத்தில் வேண்டியவை அருளும், அன்பும், அறனுமேயாகும். நாடாளும் அரசனைக் கண்டால் ஆண்டவனையே கண்டதுபோல் இன்பம் எய்தினர். எல்லாம் வல்ல இறைவனை நாயகனாகவும் தம்மைத் நாயகி தலைவியாகவும் கருதி அன்புரிமையானால் கடவுளை வழிபடும் மரபு தொல்காப்பியர் காலந்தொட்டு நிலவி வருகிறது என்பதனைப் பின்வரும் தொல்காப்பிய அடிகள் உணர்த்துகின்றன.

> ***"காமப் பகுதி கடவுளும் வரையார்***
> ***ஏனோர் பாங்கினும் என்மனார் புலவர்"*** **(3)**

கோயில் வழிபாட்டுமுறை என்பது மக்களிடம் சமுதாயம் சார்ந்த கட்டுப்பாடு, ஒழுக்கம், சமுதாயத்தின் மீதான பற்று ஆகியவற்றை ஏற்படுத்தியது எனலாம். இதனால் சமுதாயம் ஒருங்கமைவு பெறுகிறது. மேலும், ஓர் அருமையான கூட்டு வாழ்க்கை கால்கொள்ள இவ்விழாக்கள் மையமாக அமைகின்றன எனலாம்.

> ***"முன்னவனார் கோயிற் பூசைகள் முட்டிபின்***
> ***மன்னர்க்குத் தீங்குள வாரி வளங்குன்றும்***
> ***கன்னம் களவு மிகுந்தவரும் காசினிக்கு***
> ***என்னருள் நந்தி எடுத்துரைந்தானே"*** - ***திருமந்திரம்***

மேற்குறிப்பிட்ட பாடல், கோயில் வழிபாட்டின் இன்றியாமையை நன்கு எடுத்தியம்புகின்றது. மன்னன் எனப்படும் தலைவனிடத்தும், நாட்டினிடத்தும், தாங்கள் சார்ந்துள்ள சமுதாயம் குறித்தும், மக்களிடத்திலுள்ள பற்றினையும், அறத்தின் வழியே தங்கள் வாழ்வை நிர்ணயித்து வாழும் தன்மையையும் நன்கு படம்பிடித்துக் காட்டுகின்றது. நாள்வழிப்பாட்டு முறைகள் மட்டுமின்றி, இதனைத் தொடர்ந்து ஆலயங்களில் பத்து அல்லது பன்னிரெண்டு நாட்கள் மிகச்சிறப்பாக பெருந்திருவிழா நடத்தி; அங்குள்ள மூர்த்திகளின் திருவுருவங்களைப் பலவித வாகனங்களில் எழுந்தருளச் செய்து; மக்களிடத்தில் சமயம் சார்ந்த பற்றினைப்

பேணிப்பாதுகாத்தனர் என்றும் அறியமுடிகின்றது. கோயில் திருச்சுற்றுகளிலும், தேரோடும் தெருக்களிலும், சுவாமிகளை எழுந்தருளச்செய்து கோயில் திருவிழாக்களைக் கொண்டாடி மகிழ்ந்துள்ளனர். இதனைப் 'மகோத்ஸவம்' என்று கூறுகின்றனர். இக்கால கட்டங்களில் சிற்றூரார் மண்டகப்படி உள்ளிட்ட பல்வேறு மண்டகப் படிகளிலும் சுவாமியை எழுந்தருளச் செய்வர். இதனால் சமுதாயத்தின் அனைத்துத்தர மக்களிடையேயும் இறையான்மையும், சமுதாயக் கட்டுப்பாடும், நடைமுறைச் சட்டத்திட்டங்களும் ஒருங்கே வலியுறுத்தப்பட்டு நடைமுறைப்படுத்த ஏதுவாக அமைகின்றது என்பதனை உணர முடிகின்றது. மானுடத்தின் மகோன்னத வெற்றிக்கு ஒப்புரவு நெறியைவிடச் சிறந்த வாழ்க்கை நெறி ஏதுமில்லை.

> **"புத்தேள் உலகத்தும் ஈண்டும் பெறலரிதே**
> **ஒப்புரவின் நல்ல பிற"**

என்பது திருக்குறள். திருக்கோயில் மனித சமுதாயத்திடம் சிறந்த ஒப்புரவு நெறியை வளர்த்தது. திருக்கோயில் அமைப்பு முறையில் பற்பல பணிகளை இணைத்து நிற்பதும் ஒவ்வொரு பணியையும், அவ்வப்பணிக்குத் தகுதியுடையவர் உயர்வு தாழ்வு மனப்பான்மையின்றி, கடமையுணர்வோடு செய்து முடிப்பதும் திருக்கோயில் பணிகளில்தான் என்பது அறியப்படுகின்றது.

### *1.3. கல்விப்பணி*

மனிதன் உன்னத வளர்ச்சியடைய உதவுவது கல்வியாகும். கல்வியும் கேள்வியும் பெறும் சமுதாயமே மேம்பாடடைய முடியும். 'கற்றல் கேட்டல் உடையார் பெரியார்' என்றும் திருஞானசம்பந்தர் அருளிச் செய்துள்ளார். கல்வி என்பது தனிமனிதனைப் பக்குவப்படுத்துவதாகவும் கட்டுப்பாடும், ஒழுக்கமும் நிறைந்தவனாகவும் உருவாக்க வேண்டும். இத்தகைய ஒழுக்கமுள்ள தனிமனிதனை உருவாக்குவதிலிருந்து, கட்டுப்பாடுடைய சமுதாயத்தை உருவாக்குவது வரை சிறந்ததொரு கல்வியை வழங்கும் நிறுவனமாக திருக்கோயில்கள் திகழ்ந்துள்ளன என்பதைக் கோயில் வரலாறு மூலம் நாம் அறியலாம். திருவாவடுதுறை திருக்கோயிலில் இலக்கணம் கற்றுத்தரும் கல்விச்சாலை இருந்ததாக அக்கோயில்

கல்வெட்டு கூறுகிறது.[4] திருவாடாத்தூர்த் திருக்கோயிலில் திருமுறை பயிற்றுவிக்கும் கல்விச்சாலை இருந்ததாக இக்கோயில் கல்வெட்டு கூறுகிறது[5] பல்லவர்கள் திருக்கோயிலான ஏகாம்பரேசுவரர் திருக்கோயிலில் பல்வேறு கடிகைகள் ஏற்படுத்தப்பட்டுத் தமிழும், சமஸ்கிருதமும் கற்பிக்கப்பட்டதென அக்கோயில் வரலாறு குறிப்பிடுகின்றது. திருக்கோயில்கள் கடவுட் கோயில்களாக மட்டுமின்றிக் கல்வி கற்கும் அமைப்புகளாகவும் விளங்கியுள்ளன என்பதைக் கோயில்கள் உணர்த்துகின்றன.

*1.4. மருத்துவச் சாலை*

திருக்கோயிலைச் சார்ந்த வாழ்க்கை முறையில் மருத்துவம் சிறந்த முறையில் விளங்கியிருந்ததைக் கோயில் கல்வெட்டுக்களும் செப்பேடுகளும் குறிப்பிடக் காணலாம். திருக்கோயில் தத்துவத்தைக் கண்ட சித்தர்கள் திருக்கோயில்களில் நிலை கொண்டு சித்த மருத்துவத்தினை வளர்த்துள்ளனர் எனலாம். இறைவனையே மருத்துவனாகக் கண்டதால் 'மருந்திரன்', வைத்தியநாதன், 'வைத்தீஸ்வரன்' போன்ற நாமங்கள் நடைமுறையில் தோன்றின. திருவாவடுதுறையில் ஒரு வைத்தியக் கல்லூரி இருந்தது என்று வடக்கிரமச் சோழன் கல்வெட்டுக் கூறுகிறது. காலம் கி.பி. 1131[6] குந்தவைப் பிராட்டியரால் அவர் தந்தை முதல் இராசராசன் நினைவாக தஞ்சை, திருவிசனூர், திருப்புகளூர், திருச்சி மாவட்டம் கோவந்தபுத்தூர், குன்றத்தூர் போன்ற இடங்களில் எல்லாம் திருக்கோயில்கள் ஆதுரச் சாலைகளாக அமைத்து மக்கட் பணி புரிந்தமையை கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன[7].

காஞ்சிபுரம் அருகிலுள்ள திருமுக்கூடல் கல்வெட்டு (கி.பி. 1067ல்) திருக்கோயில் வருமானத்தால் அத்திருக்கோயிலை ஆதுரச்சாலையாகவும் வீரசோழன் என்ற பெயரால் மருத்துவச் சாலையும் மருத்துவம் கற்பிக்கும் கலா சாலையும் நிர்வகிக்கப் பெற்றன என்றும் குறிப்பிடுகின்றது. [8]

### *1.5. கலைக்கூடம்*

ஆன்மாவை மகிழ்விப்பது அழகுணர்வு என்று கூறலாம். ஆன்மாவை இறைநாட்டத்துடன் அழகுணர்வு நிறைந்த திருக்கோயில்கள் களிப்புறச் செய்கின்றன. இத்திருக்கோயில்கள் கலைகளின் உறைவிடமாகத் திகழ்ந்து வருகின்றன. சிற்பக்கலை, ஓவியக்கலை, இசை, நடனக்கலை போன்ற நுண்கலைகளைப் பயிற்றுவிக்கும் இடமாகவும், வளர்மிடமாகவும் திகழ்ந்துள்ளன. உதாரணமாக சேதுநாட்டில் சிறப்புப் பெற்றுள்ள திருக்கோயில்களான இராமேஸ்வரம், இராமநாதபுரம் சுவாமி திருக்கோயில்கள், திருஉத்திரகோசமங்கை மங்களநாத சுவாமித்திருக்கோயில், திருப்புல்லாணி ஆதி ஜெகந்நாதப் பெருமாள் (சமணக்கோலம்) திருக்கோயில் போன்றவற்றைக் குறிப்பிடலாம். தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலும் குறிப்பாகவும் சிறப்பாகவும் மதுரை, கிருஷ்ணாபுரம், திருப்பெருந்துரை, தாராசுரம், கங்கைகொண்டசோழபுரம், பேரூர், காஞ்சிபுரம், (சேதுநாடு) மாமல்லபுரம், தஞ்சை, திருநெல்வேலி, கும்பகோணம், போன்ற ஊர்களில் உள்ள திருக்கோயில்களைக் குறிப்பிட முடியும். இக்கோயில்களில் உள்ள சிற்பங்கள் சிறந்த வேலைப்பாடமைந்தவையாகும். கருங்கல்லில் அமைத்துள்ள திருக்கோலங்கள் போற்றத்தக்கனவாகும். மேற்புரச் சுவர்களில் பல்வேறு வண்ணங்களில் தீட்டப்பெற்ற ஓவியங்களும் திருக்கோயில்களை அழகுறச் செய்கின்றன. சேதுநாட்டுத் திருக்கோயில்களின் மேற்புரக் கூரைகளிலும், பக்கச் சுவர்களிலும், இராமாயண நிகழ்ச்சிகளும், நாயன்மார்கள் வரலாறும் அழகுறத் தீட்டப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கனவாகும். நுண்கலைகளான ஆடல், பாடல், நாடகக்கலைகள் திருக்கோயில்களின் அன்றாட நடைமுறைப் பூசைகளிலும், கோயில் திருவிழாக்களிலும் வளர்க்கப்பெற்றன எனலாம். இசையினாலேயே இறைவனை வழிபட்டுள்ளனர். சேதுநாட்டுத்திருக்கோயில்களில் பெரியமேளம் எனப்படும் நாதஸ்வரக் குழுக்களும் சின்ன மேளம் எனப்படும் நாட்டியக் குழுக்களும் கோயில் விழாக்களைச் சிறப்புற நடத்தத் துணைபுரிந்துள்ளன. சிவாச்சாரியார்களும் கோயிலை அழகுபடுத்த கைவித்தாளம் அலங்காரப்பட்டர்

என்ற அழகுக்கலைஞர்களும் சேதுபதி மன்னர்களால் நியமிக்கப்பட்டுள்ளனர்.[9] திருக்கோயிலைச் சார்ந்து வளர்த்த பண்ணிசைபண்பாடும், நாடகக்கலையும், மேன்மையுறும் வகையில் திங்கள்தோறும் நிறைமதி நாளன்றும், கோயில் பெருந்திருவிழாக்களிலும் மன்னர்களைப் பற்றிய நாடகங்களும், இறைசார்ந்த மற்ற நாடகங்களும் அரங்கேற்றப்பட்டன என்பதையும் காணமுடிகிறது. இவ்வாறு மக்கள் கண்டு கேட்டு மகிழ திருக்கோயில்கள் வழிவகை செய்துள்ள தன்மை குறிப்பிடத்தக்கதாகும். இறைவன் ஏழிசையாய், கூத்தின் வடிவமாய் விளங்குகின்றான் என்பது தமிழர் நம்பிக்கையாகும். தமிழோடு இசைபாடி, நெஞ்சு நெகிழ்ந்தே இறைவனை வழிபட்டனர். மக்கள் இசையில், கலையில் எளிதாக ஈடுபட வாய்ப்பேற்பட்டதனால் வன்முறை இருக்கவில்லை, மேலும் ‘வண்கன்மை’ கூட ஏற்படவில்லை. இவ்வாறு சமுதாயத்திற்கு மிக இன்றியமையாததாகிய அமைதியைத் தந்ததோடு மட்டுமல்லாமல் அமைதியைத்தரும் பல்வேறு கலைகளும் தோன்றி வளர ஏதுவானதொரு இடமாகவும் திருக்கோயில்கள் திகழ்கின்றன என்பது பெறப்படுகின்றது.

### *1.6. நீதிசபை*

“மானிட வாழ்க்கையில் அவ்வப்பொழுது மனக்குறைவு, இன்னல்கள், சிக்கல்கள், சோதனைகள் ஏற்படுவது இயல்பானதாகும். பிரச்சனைகளே இல்லாத வாழ்க்கை சாரமற்றது என்றும், காண்பதற்கே அரிது எனவும் கூறலாம். அவற்றையெல்லாம் சந்திக்கின்ற பொழுது மனிதன் நிதானமாக சிந்தித்து நீதியின் வழியில் செயல்பட வேண்டுமேயன்றி ஆத்திரத்தினால் அறிவிழந்து விடக்கூடாது என்பதற்காகவும், எந்தச் சூழ்நிலையிலும் வாழ்க்கையின் செயற்பாடுகள் நீதியோடு தொடர்புடையதாக அமைதல் வேண்டும் என்பதற்காகவும் சமயத்தையே மாணிக்க வாசகர் நீதியென்றே அமைத்துள்ளார்”[10] என்பதை அவர் பாடலின் மூலம் அறியலாம்.

***“மங்கலக் தயனுமால்***
***நீதியே செல்வத் திருப்அறியா பெருந்துறையில்***
***நிறைமலர்க் குருந்தமே வியாசீர்***
***ஆதியே” - திருவாசகம்***

திருக்கோயில்களில் நீதி வழங்கும் சபைகளிருந்தன எனவும், திருக்கோயில் தத்துவத்தில் கடவுளும் நீதிக்குக் கட்டுப்பட்டவர் எனவும், கடவுளும் தனக்கு ஏதாவது வழக்கு இருப்பின், திருக்கோயிலால் விளங்கும் பஞ்சாயத்தோர் முன்னே நீதி கேட்டு நிற்கத்தான் வேண்டும் என்பதனையும் அறிய முடிகின்றது. திருவெண்ணெய் நல்லூரில் எழுந்தருளியிருக்கும் இறைவனுக்கும் சுந்தரருக்கும் இடையேயிருந்த வாக்கைக் கூறி இறைவன் திருவெண்ணெய் நல்லூர் பஞ்சாயத்தார் முன்னே நீதிகேட்டு நின்றதே இதற்குச் சான்றாகும்.(11) செட்டிப்பெண்ணுக்கு நலம் செய்ய நினைத்து திரும்புளம்பியத்தில் எழுந்தருளியுள்ள இறைவன், அத்திருக்கோயிலில் விளங்கிய நீதிசபையின் முன்னால் சாட்சி கூறி உதவி செய்ததும் குறிப்பிடத்தக்கது. மதுரையில் எழுந்தருளியுள்ள ஆலவாயண்ணல் மாமனாக வந்து வழக்குரைத்து நின்றமையும் குறிப்பிடத்தக்கதாகும்.(12) திருக்கோயில்கள் கடவுள் உறையும் கோயில்களாக மட்டுமில்லாமல் நீதிதேவதை குடியிருக்கும் நீதி மன்றமாகவும் விளங்கியுள்ளன என்பதனை அறியலாம். பழங்காலத் தமிழராட்சி முறை, அதிகாரம் ஓரிடத்தில் மையப்படுத்தப்பட்ட ஆட்சி முறையாக அமையாமல் அதிகாரங்கள் முறைப்படுத்தப்பெற்று, தகுதிக்கேற்றவாரும், பகிர்ந்தளிக்கப்பட்டிருந்தது. ஊராட்சிமன்றங்கள் ஊராட்சியின் மேலாண்மைக்குப் பொறுப்பேற்றிருந்தன. இம்மன்றங்கள் திருக்கோயில்களிலேயே நிறுவப்பட்டிருந்தன. திருக்கோயிலைச் சுற்றி வளர்ந்து வந்துள்ள ஆட்சி முறையில் நிறைவான மக்களாட்சித் தேர்வு முறை இடம் பெற்றிருந்தது. குடவோலைமுறை மூலம் மக்கள் ஊராட்சி உறுப்பினர்களைத் தேர்வு செய்தனர். இம்மன்றங்கள் மூலம் சிறப்பான பணி மேலாண்மையும், நிறைவான ஆட்சி முறையினையும் மக்கள் பெற்றுள்ளனர். இதற்கு அடிப்படை மூலக்கலன்களாகத் திருக்கோயில்கள் வித்திட்டன.

இத்திருக்கோயில்கள் அற்றார்க்கும் உதவும் நிறுவனமாகவும் இருந்துள்ளன. குறிப்பாக அறியோர்க்கு உதவுவனவாக அமைந்துள்ளன. ஞானசம்பந்தர் நாவுக்கரசர், சுந்தரர் ஆகியோர் கொடிய துன்பத்திற்கு ஆளாகிய பொழுது ஆங்காங்கிருந்த திருக்கோயில்களும், திருக்கோயில் மாடங்களுமே நீரும், சோரும் தந்து உதவின என்பதனைப் பெரியபுராணம் தெரிவிக்கின்றது.

### *1.7. இல்லறவாழ்வின் மாண்புகள்*

தமிழர்கள் வாழ்வாங்கு வாழ்ந்தவர்கள். இல்லறமே நல்லறம் என்ற மேன்மையை உலகிற்குணர்த்தியவர்கள். தமிழர்களின் இவ்வுயரிய உணர்வுக்கு ஏற்றவாறு திருக்கோயிலும் திருக்கோயிலை ஆட்கொண்டிருக்கும் கடவுள் தத்துவமும் தொழிற்படுகின்றன எனலாம். பெண்களைப் பெருமைப்படுத்தும் அகத்திணை வாழ்க்கை தமிழர்க்கே உரியதாகும், இது தமிழர்களின் சிறந்த மேம்பாடுடைய சிந்தனையாகும். மதுரையம்பதியில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள இறைவன், ஆணும், பெண்ணுமாக இணைந்து வாழ்கின்ற இல்லற வாழ்வின் (காதல் வாழ்வின்) அகப்பொருள் இலக்கணத்தையே அருளிச் செய்துள்ளான். இந்நூல் இறையனார் அகப்பொருள் என்று அழைக்கப்படுவதை இதற்குச் சான்றாகக் கூறலாம். இறைவன் பெண்பால் உகந்து வாழ்ந்து போகியானால். அகனமர்ந்த அன்புடைய காதல் உருவாகவே திருக்கோயில்கள், திருக்கோயில் சார்ந்த வழிபாட்டு முறைகள், திருவிழாக்கள் முதலியன ஏதுவாக அமைந்தன எனலாம். சான்றாக,

> **"கற்பகத்தின் பூங்கொம்போ காமன்தன் பெருவாழ்வோ**
> **பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ புயல் சுமந்து**
> **விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக் கொடியோ**
> **அற்புதமோ சிவனருளோ அறியேன்"**
>
> **- பெரிய புராணம்**

என்று சுந்தரர் பரிவாரப்பூசையின் போது பாவையரக் கண்டு அதிசயத்தைக்கூட சிவனருளோ என்று பாடுவதனைக் குறிப்பிடலாம்.[13]

அறியாமலோ ஊடலும், ஊடல் முற்றிய நிலையில் புலவியம் (பிரிந்து போதனும்) தோன்றி கருத்தொருமித்து வாழவேண்டிய இருவர் உள்ளத்தால், உணர்வால் பிரிந்து வாழவும் முற்படுவதால் பிரிதல் வாழ்க்கை என்பது அதிகரித்து விட்டது எனலாம். திருக்கோயில் அடைப்பில் வளர்ந்தவை திருமணங்கள் மட்டுமன்று, ஊடல் தணிதலுக்கும், புலவி தீர்தலுக்கும் உரிய வழியினை, முயற்சியை மேற்கொள்வதற்கு வழிவகை செய்யக்கூடிய முக்கிய இடமாகத், திருக்கோயில் அமைப்பு விளங்கியது எனலாம். இருபாலரின் சுற்றத்தாரும் உள்ளோர் உறவினரும் திருக்கோயிலின் நடைமுறை வழக்கங்களுக்கு உட்பட்டு நடந்தனர் எனலாம். அக்கோயிலில் வீற்றிருக்கும் இறைவனையே தங்களின் தன்னிகரற்றத் தலைவனாக ஏற்றுக்கொண்டனர் என்பதனையும், இதனால் வெகுளியால் ஏற்படும் விளைவுகளைக் களைந்து, மனத்தில் முடிவெடுக்காமல் திருக்கோயிலின் மன்றங்களை நாடி நல்லதோர் முடிவைத் தேடியதனால் புலவி தீர்த்தல் என்ற நிலைப்பாடும் திருக்கோயில் வளாகத்தில் நிகழ்ந்துள்ளது.

இன்றைய நடைமுறைச் சூழலில் திருக்கோயிலும் நடைமுறைப் பழக்கங்களும் சற்றே பின்தள்ளப்படதனால் நாகரிகம் என்ற பெயரில் கற்பியல் வாழ்க்கையில் அறிந்தோ

**சான்றாக**

அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவரான திருநீலகண்ட நாயனாரின் வரலாற்றினையும், தில்லையம்பதியில் நடந்த நிகழ்ச்சியினையும் குறிப்பிடலாம். திருநீலகண்டர் வாழ்க்கையில் அவருக்கும் அவர் மனைவிக்கும் புலவி தோன்றி மனத்தளவில் பிரிந்தாராயினும், இல்லறக் கடன்களைச் செய்து வந்தனர். திருநீலக்கண்டர் தன் தவறை உணர்ந்து, இறைவனிடம் மன்னிப்புகோரி மன்றாடுகின்றார். தவற்றிற்கான தண்டனையையும் மனத்தளவில் ஏற்று இல்லறத்தில் வாழ்கின்றார். தன் தவறை உணர்ந்த நாயனாரின் வேண்டுகோளை ஏற்று, இறைவன் உரிய காலத்தில் தில்லையம்பதியில் திருவிளையாடல் புரிந்து நாயனாரின் புலவி வாழ்க்கையை முற்றுப் பெறச் செய்கின்றான் என்று சேக்கிழார்

திருநீலகண்ட நாயனார் வரலாற்றைக் குறிப்பிடுகின்றனர். இவ்வாறு திருக்கோயில்களிலும், அதனைச் சார்ந்த புராணங்களும், வரலாறும் கற்பு வாழ்வின் நிலைப்பாட்டையும் இல்லறத்தின் இன்றியமையாமையையும், எடுத்தியம்பி வந்துள்ளன.

### *1.8. திருத்தொண்டுப்பயிற்சிகள்*

திருக்கோயில்கள் உயர்ந்து விளங்கியது திருத்தொண்டு என்ற உயரிய எண்ணத்தினாலே விளைந்தவைகளாகும். எனினும் திருநெறியே திருத்தொண்டைக் காலங்காலமாக வளர்த்தது. திருக்கோயிலே எனலாம். திருக்கோயிலைச் சார்ந்து; திருமாலை தொடுத்தல் முதல் சுவைமிக்க திருவமுது படைத்தல் வரை பல்வேறு தொண்டுகள் நடைபெற்று வந்தன என்பதனை பெரியபுராணம் குறிப்பிடுகின்றது.

> **"ஆய அன்பர்தாம் அணிமதில்**
> **சண்பையில் அமர்பெருந் திருத்தோணி**
> **நாயனார்க்கு நற்றிருப்பணி ஆயின**
> **நாளும் அன்பொடு செய்து**
> **மேய அத்திருத் தொண்டினில்**
> **அவர்தமைத் துறைதொறும் மயில்விப்பார்"**
>
> **(பெரி. கணநாதல்-2)**

இதன் மூலம், திருக்கோயில் தொண்டு இயக்கத்தின் மையம் என்பதனை அறியமுடிகிறது. இதனைத் திருத்தொண்டு பயிற்சியாக மட்டுமின்றி, திருக்கோயிலைச் சார்ந்து வாழ்கிறவர்கள் வளமாக வாழத் துறை தோறும் வாயில் அமைத்துத் தந்தவை திருக்கோயில் என்பதே உண்மையாகும். ஆரம்ப காலங்களில் ஆற்றங்கரைகளிலும் பெரிய திருக்குளங்களின் கரைகளிலும் திருக்கோயில்கள் விளக்கமுற்றன என்பதை அறிந்துள்ளோம். இவை மட்டுமின்றி திருக்கோயிலைச் சார்ந்த தீர்த்தத் திருக்குளம் அகலமாகவும், ஆழமாகவும் தீர்மானம் செய்யப்பட்டது. பொதுக்குளத்தில் நீர் வற்றிய பொழுது, இக்கோயில் தீர்த்தங்கள் மக்களுக்குப் பயனளிக்கும் வகையில் இத்திருக்குளங்களைப் பாதுகாத்தல், தூய்மையாகப் பேணுதல், அந்தத் திருக்கோயிலின் கடமையாக இருந்ததால் அவ்வப்பொழுது தூர்வாருதல் போன்ற செப்பனிடும் பணிகளையும் திருத்தொண்டாகவே கருதி

பணியாற்றி வருகின்றனர். சான்றாக, திருவாரூக் கமலாயம் என்ற புகழ்பெற்ற திருக்குளத்தை, கண்ணிரண்டுமில்லாத குருடராக வாழ்ந்த தண்டியடிகள் தூர்வாரி தூய்மைப்படுத்தி திருத்தொண்டு புரிந்ததனை சேக்கிழார் பெரிய புராணத்தின் வாயிலாக நாம் அறிய முடிகின்றது என்பர் (14)

### *1.9. விழவுமலி வாழ்க்கை*

திருக்கோயில் நாகரிகம் மிகவும் சிறப்புற்று விளங்கியது மருத நிலத்திலேயாகும். மருத நிலத்து மக்களுக்கு இயல்பாகவுள்ள பழக்கம் விழா உயர்த்தால் எழும் தமிழ் மக்கள் விழவு நிறைந்த வாழ்க்கையையே வாழ விரும்புகின்றவர்களேயாதலால் திருக்கோயில் சார்ந்த விழாக்கள் மக்களிடம் பெரும் வரவேற்பைப் பெற்றுள்ளன. திருவீதியுலா, மார்கழித்திங்கள் பெருவிழா, திருக்கோயில் திருமூர்த்தியின் திருக்கல்யாணத் திருவிழா. உற்சவ விழா, வசந்தவிழா போன்றவற்றைக் குறிப்பிடலாம். குறிப்பாகத் திருத்தேர் திருவிழா சமுதாயம் ஒருங்கிணைந்து வலிமையுடனிருப்பதை எடுத்துக் காட்டும் விழாவாகும். சமுதாயத்தின் அனைத்துத் தரப்பு மக்களும் ஓரணியில் நின்று தேர் இழுக்கும் காட்சி, ‘சமுதாயம் ஓர் உருவாக உருப்பெற்றுள்ள காட்சியையேப் புலப்படுத்தும்’. திருத்தேர் விழாவிற்குப் பேர்பெற்ற திருவாரூரில் இவ்விழா நிகழ்ந்த விதத்தினைத் திருப்பல்லாண்டு பின்வருமாறு குறிப்பிடுகின்றது.

***குழல்ஒலி யாழ்ஒலி கூத்தொலி ஏத்தொலி***
***எங்கும் குழாம் பெருகி***
***விழாவாலி விண்ணளவும் சென்று விம்மி***
***மிகுதிரு வாரூரின்***
***மழவிடை யாற்கு வழிவழி ஆளாய்***
***மணம் செய் குடிப்பிறந்த***
***பழஅடி யாரொடும் கூடி, எம்மானுக்கே***
***பல்லாண்டு கூறுதுமே!***

- ***திருப்பல்லாண்டு***

திருவொற்றியூரில் சங்கிலியாரை மணந்தி இருந்த நாளில், திருவாரூர் வசந்த விழாவை நினைத்துத் திருப்பதிகம் பாடினார் என்பதனை அவர் வரலாறு

குறிப்படுகின்றது. விருந்தோம்பலுக்குப் பேர் பெற்ற தமிழ் மக்களின் மனமகிழ்ச்சியை எடுத்தியம்பும் வகையில், இத்திருவிழாக்காலங்களில் தத்தம் இல்லங்களில் சூழ்ந்து நிறைந்தவர்களை மகிழ்வித்து தாமும் அகமகிழ்ந்து இவ்விழாக்களைச் சிறப்புறச் செய்கின்றனர். வாழ்க்கை சோர்ந்து போகாமல் தடுக்க இத்திருக்கோவில் திருவிழாக்கள் பயன்படுகின்றன, நல்ல முறையில் விழாவெடுக்கும் சமுதாயம் விழா வாழ்க்கையைப் பெறும்.

*1.10. சுகாதார வாழ்வியல்*

உடம்பே நடமாடும் திருக்கோயில் என்று திருமூலர் குறிப்பிடுகின்றார்.

**"உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்**
**வள்ளற் பிறானார்க்கு வாய் கோபுரவாசல்**
**தெள்ளத் தெளிந்தார்க்கு சீவன் சிவலிங்கம்**
**கள்ளப் புலனைந்தும் காலா மணிவிளக்கே"**
**(திருமந்திரம்)**

என்பது பாடல். தூய்மையான காற்று, தூய்மையான உணவு, தூய்மையான தண்ணீர், தூய சிந்தனை இவற்றைக் குறித்த காலங்களில் வழங்கும் நிலைகளாகத் திருக்கோயில்கள் விளங்கின. திருக்கோயில் வளாகத்தில் உடற்பயிற்சியோடு, தூய்மையான காற்றைச் சுவாசிக்கவும் ஏதுவாகவும் அமைகின்றது. திருக்கோயில் மட்டுமின்றி அதன் வளாகமும், சுற்று வட்டாரமும் தூய்மையாக இருத்தல் வேண்டும் என்ற நடைமுறை வழக்கத்தை மக்கள் கையாண்டதனால் சுகாதாரமான வாழ்வை எளிதில் பெற முடிந்தது. சாமானியமக்களும் இதனை மேற்கொண்டொழுக வேண்டும் என்பதற்கு அப்பரடிகள் உழவாரப்படை தரித்தவராகவே மக்களிடையே உலாவினார் என்பதனைப் பெரியபுராணப்பாடல் மூலம் நாம் அறியமுடிகின்றது. (15)

**"மார்பாரப் பொழிகண்ணீர் மழைவாரும்**
**திருவடியும் மதுரா வாக்கால்**
**சேர்வாகும் திருவாயில் தீந்தமிழின்**
**மாலைகளும் செம்பொற் றாளே**
**சார்வான திருமணமும் உழவாரத்**

**தனிப்படையும் தாமும் ஆதுப்**
**பார் வாழத் திருவீதிப் பணிசெய்து**
**பணிந்தேத்ததப் பரவிச் செல்வார்"**
**- பெரியபுராணம்**

இவ்வாறே திருக்கோயிலைச் சார்ந்து, ஒரு தூய்மை வளர்ந்ததனால் சுற்றுப்புறச் சூழல் பாதுகாக்கப்பெற்றது. திருக்கோயில்களின் தூய்மையே இறைமை என்ற கொள்கையை உணர்த்தி வந்தன எனலாம்.

### *1.11. தமிழாய்வில் திருக்கோயில்கள்*

மானிட நாகரிகத்தின் ஊற்று தாய்மொழியாகும். தாய்மொழிச் சிந்தனையில் வளர்ந்த சமுதாயமே வளர்ச்சி பெறும். தமிழரின் தாய்மொழியாகிய தமிழ் வளர திருக்கோயில் வளாகமும் பங்காற்றியது என்பது வரலாறு. திருக்கோயில் வளாகத்திற்குள்ளேயே தமிழ்ச்சங்கம் தோன்றி தமிழை வளப்படுத்தியதும் அச்சங்கப்புலவர்களின் தலைவனாக இறைவனே அமர்ந்து தமிழாய்வு செய்தான் என்பது அடிப்படையிலேயே முருகப்பெருமானைத் தமிழ்க்கடவுளாகத் தமிழ்ச் சங்கமும், தமிழ்ச் சமுதாயமும் ஏற்றுக்கொண்டுள்ளது.

**"......... கலை வல்லோர் தமிழ் எல்லாம்**
**சித்தங்கொடு தெருட்டுஞ்சிறு வணிகன் தெருள்கீரன்**
**முத்தண்டமிழ் கபிலன்தமிழ் பிரணன் தமிழ் மூன்றுப்**
**அதிதன்மையன் அறியும்தொறும் அறியும்தொறும் - எல்லாம்**
**பல்காசொடு கடலிற்படு பவளம்சுடர் தரளம்**
**எல்லாம் நிறுத்து அளப்பான என இயல் வாணிகன் குமரன்**
**சொல்லழகும் பொருளாழமும் துலைநாவெனத் தூக்க**
**நல்லாறுஅறி புலவோர்களும் நட்டார்; இகல் விட்டார்; "**

என்கிறது திருவிளையாடற்புராணம். திருக்கோயிலில் தமிழறிஞர்கள் கூடித் தமிழை வளர்த்ததையும், நக்கீரர், கபிலர், பரணர், மூவரைப் பற்றியும் இப்பாடல் சுட்டியுள்ளது. திருக்கோயில் வளாகத்தில் தமிழோடு இசை உள்ளிட்ட கலைகளும் வளர்ந்துள்ளன. மானிட இயக்கத்தின் ஊற்றாக இருக்கிற சிந்தனை, கருத்து,

இலக்கியம், தத்துவம் ஆகிய அனைத்தும் இங்கு படைக்கப்பெற்றன என்பதும் உண்மையாகும்.

திருக்கோயிலைச் சார்ந்து மொழி உலகம் இருந்த வரையில் மட்டும் தமிழ்மொழியும், தமிழ்கூர் நல்லுலகமும் தூய்மையாக இருந்தது, தனித்து இயங்கியது. சுருங்கக்கூறின் திருக்கோயிலைத் தமிழ் வளர்த்தது, தமிழைத் திருக்கோயில் வளர்ச்சியூட்டியது என்பதனை அறிய முடிகின்றது.

*1.12. அனைத்து உயிர்களுக்கும் அடைக்கலம்*

திருக்கோயில் தத்துவத்தில் விலங்குகள், பறவைகள் முதலியனவும் உயரிய இடத்தைப் பெற்றுள்ளன எனலாம். மனித வாழ்க்கைக்கு அவையின் துணை இன்றியமையாதது என்பதனால் உரியவாறு பேணப் பெற்றுள்ளன. உதாரணமாக யானையும் பூசித்ததனாலேயே திருவானைக்காத் திருத்தலம் அப்பெயரைப் பெற்றுத் திகழ்கின்றது. இத்தலத்தில் சிலந்தியும் பூசித்ததாக வரலாறு உண்டு. திருவெறும்பூர் என்ற திருத்தளத்தினை இதற்குச் சான்றாகக் கூறலாம். திருவான்மியூர் திருக்கோயிலில் பசு பூசித்திருக்கிறது.

திருக்கோயில் வளாகத்தில் இறைவன் தாய், தந்தையாகத் திகழ்வதனை உமையொரு பாகனான அர்த்த நாரீஸ்வரர் தத்துவம் உணர்த்துகின்றது. "பால் நினைத்து ஊட்டும் தாயினும் சாலப் பரிந்து" அருள் செய்யும் காட்சி குறிப்பிடத்தக்கதாகும். இதற்குச் சான்றாகத் திருச்சிராப்பள்ளி திருக்கோயில் இறைவனைக் குறிப்பிடலாம். இத்திருக்கோயிலில் வீற்றிருக்கும் இறைவன் பேறுகாலத்தில் அல்லற்பட பெண்ணிற்கு ஈன்ற தாயாக நின்று உதவியதனால் 'தாயுமானவன்' என்றே அழைக்கப்படுகின்றார்.

*1.13. நீதி*

திருக்கோயில் தத்துவத்தில் 'நீதி' வாழ்க்கைக்கு இன்றியமையாததேயன்றி, வெறுக்கத்தக்கன அல்ல என்பதனை, "முனிவரும் மன்னரும் முன்னுவருபொன்னால் முடியும்" என்ற மாணிக்கவாசகரின் திருவாக்கு

உணர்த்துகின்றது. இப்பொருளையும் நீதியையும் திருக்கோயில் அமைப்பு மற்றவர்களிடமிருந்து பெறுகின்றது என்பதனையும் அதுபோன்றே நேரடியாகவும், மறைமுகமாகவும் பிறருக்கு நிதி தந்தும் உதவுகின்றது என்பதனையும் நாம் உணரலாம். திருக்கோயில் உருவாக்கப்படுவதிலிருந்து தினந்தோறும் பராமரிக்கப்படுவது வரையிலும் பல்வேறு தரப்பட்ட மக்களும் திருக்கோயில் பணியில் பங்கேற்றும் வருவாய் பெறுகின்றனர். திருக்கோயில்களின் வருவாய் அதிகரிக்கின்றபொழுது திருக்கோயில் மடங்களின் மூலமாகவும், திருக்கோயில் சார்ந்த அறக்கட்டளைகள் மூலமாகவும் அன்னதானம், கல்விச்சாலை அமைத்தல், மருத்துவ வசதி ஏற்பாடு செய்தல். நீர்நிலைகளைப் பராமரித்தல் போன்ற பொதுநலப் பணிகளையும் செய்து வருகின்றன. இன்றைய தினங்களில் இவையாவும் திருக்கோயில் அமைப்புகளால் நடைபெற்று வருகின்றன என்பது குறிப்பிடத்தக்கது. முன்நாட்களில் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவனே நிதியுதவி செய்ததாக அப்பர், சம்பந்தர் வரலாறு குறிப்பிடுவதன் மூலம் நாம் அறிய முடிகின்றது. திருவாவடுதுறையில் திருஞானசம்பந்தருக்கு அத்தல இறைவன் பொற்கிழி தந்தருளினான் என்பதும், சுந்தரருக்குச் சித்தவடமடத்தில் பொற்கட்டி தந்தருளினான் என்றும், திருவீழி மழலையில் வறட்சியினால் பாதிக்கப்பட்ட மக்கள் துயர் நீங்காதிரு ஞானசம்பந்தரும் அப்பரடிகளும் பணிசெய்ய நாள்தோறும் படிக்காசு தந்தருளினான் என்பதும் திருக்கோயில் வரலாறு கூறும் செய்திகளாகும்.

**கால நிலைமை யால் உங்கள்**
**கருத்தில் வாட்ட முறீர் எனினும்**
**ஏல உம்மை வழிபடுவார்க்**
**களிக்க அறிக்கின்றோம் என்று**
**கோலம் காண எழுந்தருளிக்**
**குலவும் பெருமை இருவருக்கும்**
**ஞாலம் அறியப் படிக்காசு**
**வைத்தார் மிழலை நாயகனார்**
**-பெரியபுராணம்**

### 1.14. வரலாற்று ஏடுகள்

மனித குலத்தின் நிகழ்வே வரலாறாகும். காலத்தால் அழியாத, அழிக்கப்படாத நிகழ்வுகளே வழிகாட்டியாகவும், வரலாற்றுச் சுவடாகவும் நிலைத்து நிற்கின்றன எனலாம். தமிழ்நாட்டில் நிலவிய கலை, பண்பாடு, சமூகம், அரசியல், பொருளியல், சமயம், மொழி வளர்ச்சி முதலியன பற்றிய செய்திகளை ஒருங்கே தன்னகத்தே கொண்டுள்ள திருக்கோயில்கள் மாபெரும் வரலாற்று ஏடுகளாகத் திகழ்கின்றன எனலாம். திருக்கோயில் சுவர்களும், அவற்றில் இடம்பெற்றுள்ள வண்ண ஓவியங்களும், திருக்கோயில் சிற்பங்களும், அவ்வவ் காலநிகழ்வுகளை உணர்த்தும் காலக்கண்ணாடி என்றேக் குறிப்பிடலாம். திருக்கோயில் கல்வெட்டுகளும், பட்டயங்களும் அவை நிறுவப்படும் காலத்தில் கடைப்பிடிக்கப்பட வேண்டிய நெறிமுறைகளையும், அக்கால மொழி வளர்ச்சியையும், மன்னர்களின் இறைப்பற்றையும், கொடைத்திறனையும் உலகோருக்கு என்றென்றும் எடுத்தியம்பும் வரலாற்று ஆதாரங்களாகவே உள்ளன. திருக்கோயில் சமுதாயத்தின் ஆற்றல்மிக்க மையமாக விளங்கியதையும், கோயிலைத் தழுவிய குடிகளும், குடிகளைத் தழுவிய கோயிலுமாகப் பழந்தமிழ்ச் சமுதாய அமைப்பு மேலோங்கியதையும், திருக்கோயில் வரலாறு நமக்கு உணர்த்துகின்றது.

## II. திருக்கோயில்களும் அழகுக்கலைகளும்

### II.1. அழகுக்கலைகள் ஓர் அறிமுகம்

மனிதனுடைய நல்வாழ்வுக்கு உதவுகிற எல்லாத் தொழில்களும் கலைகளேயாகும். பொதுவான இக்கலைகளுக்கு வேறுபட்டவையே அழகுக்கலைகள் எனலாம். இக்கலைகள் மனதினுடைய மனத்திற்கு அழகையும் இன்பத்தையும் அளிக்கவல்லன. மனிதன் தன்னுடைய அறிவினாலும் மனோபாவத்தினாலும், கற்பனையாலும் அழகுக் கலைகளை அமைத்து, அவற்றின் மூலமாக உணர்ச்சியையும், அழகையும், இன்பத்தையும் காண்கின்றான். இவ்வழகுக் கலைகள் ஐந்து அவை, கட்டடக்கலை, சிற்பக்கலை, ஓவியக்கலை, இசைக்கலை, கூத்துக்கலை என்பனவாகும். இவற்றுள்,

கண்ணால் கண்டு இன்புறத்தக்கது கட்டடக்கலை, பருப்பொருளாக உள்ளபடியால் கட்டடக்கலை (கட்டடத்தை) தூரத்தே இருந்தும் கண்டு மகிழலாம். சிற்பக்கலை தேவர், அரசர், மனிதர், விலங்கு, பறவை, தாவரம் முதலான உலகத்திலுள்ள பொருட்களின் வடிவத்தையும் கற்பனையாகக் கற்பித்து அமைக்கப்பட்ட பொருட்களின் உருவத்தையும் அழகுபட அமைப்பதாகும். இச்சிற்பக்கலை கட்டடக்கலையை விட நுட்பமானதாகும். இதனையும் கண்ணால் கண்டுணர்ந்து மகிழலாம்.

ஓவியக்கலை சிற்பக்கலையைவிட நுட்பமானது எனலாம். உலகத்தில் உள்ள, இல்லாத பொருட்களின் உருவத்தையும், வடிவத்தையும் பலவித நிறங்களினாலே அழகுபட எழுதப்படுகின்ற படங்களே ஓவியக்கலையாகும். இதனை சற்றே அருகில் இருந்து பார்த்து மகிழலாம். இசைக்கலையைக் கண்ணால் காணமுடியாது, அதைக் காதினால் கேட்டே இன்புற முடியும். கூத்து எனப்படும் கலை இசையோடு தொடர்புடையதாகும். எனவே கூத்துக்கலையான நடனம், நாட்டியம், நாடகம் என்பன கண்ணால் பார்த்தும், காதால் கேட்டும் மகிழத்தக்கதாகும்.

நாகரிகம் பெற்ற உலகில் மக்கள் எங்கெல்லாம் வாழ்கின்றார்களோ, அங்கெல்லாம் இக்கலைகள் வளர்ச்சி பெற்றுள்ளன எனலாம். ஒவ்வொரு நாட்டின் இயற்கையமைப்பு, தட்பவெப்பநிலை, சுற்றுச்சூழல், மக்களின் பழக்கவழக்கங்கள், மனோபாவம், சமயக்கொள்கை ஆகியவற்றிற்கு ஏற்றபடி இக்கலைகள் வளர்ச்சியும், வீழ்ச்சியும் பெறுகின்றன. தமிழர் நாகரிகத்தால் இக்கலைகள் யாவும் கோயில் அமைப்பு, வழிபாட்டு முறைகள், சடங்கு போன்றவற்றுடன் இயல்பாகவே இணைந்து வளர்ந்த காரணத்தால் ஏற்றதொரு வளர்ச்சியையும், சிறப்பையும் பெற்றுத்திகழ்கின்றன. கண்ணையும், கருத்தையும் கவரும் வகையில் பல்வேறு நிலைகளாக இக்கலைகள் வளர்ச்சி பெற்றிருந்தாலும், திருக்கோயில் சார்ந்த நிலைப்பாட்டிலேயே இவை சிறப்புப் பெறுகின்றன.

*கட்டடக்கலை அறிமுகம்*

கட்டடக்கலை என்பது வீடுகள், அரண்மனைகள், மண்டபங்கள், வழிபாட்டிடங்கள் ஆகியவற்றின் அமைப்புப் பற்றிய பொதுவான ஒரு கலைச்சொல் கோயில் ஆய்வில் கோயிற்கட்டடக்கலை என வழங்கப்படுகிறது. இன மரபுகளும், காலங்களும் கடந்து சென்றுவிட்ட வரலாற்றைக் காணும் நிலையிலும், அவ்வின மரபின் கலைப்பதிவுகள் உலக மானுடம் வியந்து காணும் கோயிற்கலையாக இன்றளவும் திகழ்கின்றன. இக்கோயிற் கலையில் கட்டடக்கலை குறிப்பிடத்தக்கது.

கால வெள்ளத்தில் கோயிற் கட்டடக்கலை பல்வேறு பரிணாமங்களைப் பெற்றுள்ளதை அறியமுடிகின்றது. ஒவ்வொரு காலகட்டத்திலும் அல்லது ஒவ்வொரு அரச பரம்பரையின் ஆட்சிக்காலத்திலும் கோயில் கட்டடக்கலையின் அலங்காரக் கூறுகளில் சில மாற்றங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. பல்லவர், சோழர் காலம் தொடர்ந்து விசய நகரநாயக்கர் காலத்தில் இம்மாற்றங்கள் மேலும் அதிகரித்துள்ளன. இதனைப் போன்றே பாண்டிய மன்னர்களின் கட்டடக்கலையிலும் அலங்கார மாற்றங்கள் ஏற்பட்டுள்ளதை அறியமுடிகின்றது.

*கட்டடக்கலை கூறுகள்*

கோயில் வளாகத்தின் முக்கியக் கூறுகளாக விமானம், மண்டபங்கள், கோபுரம், தெப்பக்குளம் முதலியவற்றைக் கூறலாம். இதில் விமானமே முக்கியக் கூறாகக் கொள்ளப்படுகின்றது. விமானத்தில்தான் கட்டடக்கலைக் கூறுகள் பொதிந்து காணப்படுகின்றன. இப்பகுதியில் ஆய்விற்குட்பட்ட திருக்கோயில்களின் விமான அமைப்பு, கட்டடக்கலை சிறப்புகள் ஆய்வின் வழி அறியப்படுகின்றன.

ஆய்விற்குட்பட்ட திருக்கோயில்களில் இராமேசுவரம் இராமநாதசுவாமித் திருக்கோயில், திருஉத்தரகோசமங்கைத் திருக்கோயில் ஆகியன சைவாகமத்தைத் தழுவியே அமைக்கப்பட்டுள்ளன. இவ்விருகோயில்களின் விமான அமைப்பு ஒரே மாதிரியான கட்டடக்கலைப்பாணியைப் பெற்றுத்திகழ்கின்றன. எனினும் திருஉத்தரகோசமங்கை மங்களநாத சுவாமித்திருக்கோயிலின் மூலவர் கருவறை விமானம் கட்டடக்கலையின் நுணுக்கங்களை பெற்று அழகுற அமைந்துள்ளதைக்

காணமுடிகின்றது. இராமேசுவரம் இராமநாதசுவாமித்திருக்கோயிலில் கட்டடக்கலை நுணுக்கங்கள் அவ்வளவாக இடம்பெறாமல், விமானத்தின் அங்கங்கள் மட்டும் இடம்பெற்றுள்ளதை காணமுடிகின்றது.

திருப்புல்லாணி ஆதிஜெகந்நாதப்பெருமாள் திருக்கோயில் வைணவ ஆகமத்தைப் பெற்றுத் திகழ்கின்றது. இத்திருக்கோயிலின் மூலவர் கருவறை விமானம் கட்டடக்கலையின் அங்கங்களை, நுணுக்கங்களை அழகுற பெற்று அமைந்துள்ளது.

**II. *விமானம்***

தமிழகத்துக்கோயில் விமானம் பொதுவாக ஆறு அங்கங்களைப் பெற்றுத் திகழ்கின்றன. எனவே "ஷடங்க" விமானம் என அழைக்கப்படுகின்றன. இவ்வகை விமானத்தில் மேலும் இரண்டு அங்கங்கள் இடம்பெற்றால் அவ்விமானம் அஷ்டாங்க விமானம் எனப்படும். ஷடங்க விமானத்தின் ஆறு அங்கங்களாவன, அதிட்டானம், பித்தி, பிரஸ்தரம், கீரிவம், சிகரம், கலசம் என்பனவாகும்.

இவ்ஆறு அங்கங்களும் மனிதனுடைய பாதம், கால், தோள், கழுத்து, தலை, முடி (கிரீடம்) ஆகிய உறுப்புகளுக்கு இணையாகக் கொள்ளப்படுகின்றன. இந்த ஆறு முக்கிய அங்கங்களுக்குள்ளே மேலும் பல கட்டடக்கலைக் கூறுகள் இடம்பெறுகின்றன. அவற்றை விரிவாகவும், ஆய்வுக்குட்பட்ட கோயில்களில் அவை பெற்றுள்ள திறத்தையும் இங்கு விரிவாகக் காணலாம்.

**I. *கருவறை அமைப்பு***

ஆய்விற்குட்பட்ட திருக்கோயில்களில் இராமேசுவரம் இராமநாதசுவாமித் திருக்கோயில், உத்தரகோசமங்கை மங்களநாதசுவாமித் திருக்கோயில் கருவறை அமைப்பானது சதுர வகையாகும். திருப்புல்லாணி ஆதி ஜெகந்நாதப் பெருமாள் திருக்கோயிலானது வைணவத்தலமாகும். வைணவக் கோயில்களில் திருமால் நின்ற, இருந்த, கிடந்த எனும் மூன்று நிலைகளில் இடம்பெறுகின்றார்.

திருப்புல்லாணியில் ''சதுரக்கருவறைகளில்'' நின்ற, இருந்த கோலத்திலும், நீள் சதுர அமைப்பில் கிடந்த கோலத்திலும் இடம்பெறுகின்றார்.

கோயில்களின் அமைப்பை வைத்து அவற்றைச் சாந்தார, நிரந்தரமென இருவகையாகப் பிரிக்கலாம். கோயில் கருவறையினைச் சுற்றி மூடிய திருச்சுற்று அமைந்திருக்குமானால் அவ்வகைக் கோயில்கள் சாந்தாரவகைக் கோயில்களாகும். மூடிய திருச்சுற்றுக்கள் இல்லாத கோயில்கள் நிரந்தர வகைக்கோயில்கள் எனப்படும்.

ஆய்விற்குட்பட்ட திருக்கோயில்களில் இராமேசுவரம் இராமநாதசுவாமித் திருக்கோயில் மூடிய திருச்சுற்றுக்களைப் பெற்று சாந்தார வகையாகவும், பிற இரண்டு கோயில்களும் நிரந்தர வகை சார்ந்த திருக்கோயில்களாகவும் அமைந்துள்ளன.

**II.2.** ***அதிட்டானம்***

விமானத்தின் ஆறு அங்கங்களில் முதலாவதாக அமைவது அதிட்டானமே. அதிட்டானம் என்பது அடித்தளமாகும். இவ்அடித்தளத்தின் மீதே ஏனைய ஐந்து அங்கங்களையும் அமைத்துள்ளனர். இவ்வதிட்டானம் பற்றிய செய்திகள் கட்டடக்கலை நூலான மானசாரத்தில் இடம்பெற்றுள்ளன. இந்நூலில் அதிட்டானத்தின் வகைகள் பதினெட்டாகக் கொடுக்கப்பட்டுள்ளது.

''கோயில் ஆய்வில் அதிட்டான அமைப்பு பற்றி இரண்டு விதமாகக் கூறப்படுகிறது ஒன்று அதிட்டானப் பகுதியில் வேதிவரையிலான பகுதிகளை அதிட்டானம் என்று கொள்வது, மற்றொன்று கருவறையில் இறைவன் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ள உயரத்திற்கு இணையாகக் கருவறைச் சுவரில் வெளிப்பகுதியில் இடம்பெற்றுள்ள உறுப்புகளை மட்டும் அதிட்டானம் எனக்கொள்வதாகும்''.

ஆய்விற்குட்பட்ட திருக்கோயில்களில் இராமேசுவரம் இராமநாதசுவாமித் திருக்கோயில், உத்தரகோசமங்கை மங்களநாதசுவாமித்திருக்கோயில் அதிட்டானம், ''பிரதிபந்த அதிட்டானமாகும்'', பிரதிபந்த அதிட்டானம் என்பது ஜகதி, குமுதம்,

கண்டம், பட்டிகை, கண்டம், வேதி முதலான உறுப்புகளைக் கொண்டு அமையும். தூண்களின் கால்ப்பகுதி காட்டப்படாது இருக்கும்.

மேற்குறிப்பிட்டுள்ள கோயில்களில் உத்தரகோசமங்கை கோயில் அதிட்டானமானது குத்து ஜகதி, கண்டம், குழவு, குமுதகம், கம்பு (உள்நாட்டிய கண்டம்) கபோதகம் (கூடு) வியாளவரி, கண்டம் (உள்நாட்டிய கண்டம்) பட்டிகை (மேல் கீழ் கம்பு உள்ளது) ஆகிய உறுப்புகளைப் பெற்று அமைந்துள்ளது.

இராமேசுவரம் இராமநாதசுவாமித் திருக்கோயில் அதிட்டானம் குத்தி, ஜகதி, பட்டைக்குமுதகம், வியாளவரி, பட்டியல் (பட்டிகை), கண்டம், வேதி (வேதியல்) ஆகிய உறுப்புகள் உள்ளன.

திருப்புல்லாணி ஆதிஜகந்நாதப் பெருமாள் திருக்கோயில் அதிட்டானம், "கபோதபந்த அதிட்டானமாகும்" இவ்வகை அதிட்டானமென்பது உபானம், பத்மஜகதி, விருத்தகுமுதம், கண்டம், கபோதம், கண்டம், வேதி ஆகிய உறுப்புகள் இடம்பெறும். இதில் கீழ்க்கண்டத்தின் மேல்பட்டிகைக்குப் பதிலாகக் கபோதகம் இடம்பெற்றிருப்பின் கபோத பந்த அதிட்டானமெனப்படும். (பார்க்க. நி.ப. எண்) இக்கோயில் அதிட்டானத்தில் உபானம், பத்மஜகதி, விருத்தகுமுதகம், கண்டம், சிம்மமுக நுனியையுடைய கூடுகளுடன் கூடிய கபோதகம், ஆகிய உறுப்புகள் இடம்பெற்றுள்ளன. மேற்குறிப்பிட்ட மூன்று கோயில்களிலும் "பத்ம பீட வுபானம்" அமைந்துள்ளது.

### II.1. *உபபீடம்*

திருக்கோயில்களில் விமானத்தின் உயரத்தைக் கூட்டிக் கோயிலைக் கம்பீரமாகத் தோன்றச் செய்யவேண்டி அதிட்டானத்தின்கீழ் உபபீடம் அமைப்பதுண்டு. ஆய்விற்குட்பட்ட திருக்கோயில்களில் இன்று உபபீடங்களை காணஇயலவில்லை. எனினும் திருஉத்தரகோசமங்கை கோயிலில் உபபீடத்தின் சித்திரவான வர்க்கம் என்னும் உபபீடப்பகுதியினை மட்டும் காணமுடிகின்றது. உபபீடத்தின் மீதே அதிட்டானம் அமைப்பது கட்டடக்கலை மரபாகும்.

### II.2. *பிரநாளம்*

இறைவனுக்குச் செய்யப்படும் அபிஷேக திருமஞ்சனநீர் வெளியேறுவதற்காக அமைக்கப்படும் ஓர் கூறாகும். இது கருவறையின் புறத்தில், விமானத்தின் வடக்குப்பக்கம் அதிட்டானத்தின் உறுப்புகளில் எது கருவறையின் தளத்திற்கு இணையான உயரத்தில் உள்ளதோ அதில் பிரநாளம் அமைக்கப்படும். கருவறையின் உள்ளே ஆரம்பித்து கருவறைச் சுவற்றின் வெளியே பிரகாரத்தில் நீட்டியபடி அமைக்கப்படும்.

ஆய்விற்குட்பட்ட கோயில்களில் இராமநாதசுவாமித் திருக்கோயில், மங்களநாதசுவாமித் திருக்கோயில்களில் "பட்டிகையில்" அமைந்துள்ளது. திருப்புல்லாணி திருக்கோயிலில் மூலவர் சிற்பம் சுண்ணாம்புக்காரையால் ஆன சுதைசிற்பம் என்பதனால் மூலவருக்கு அபிஷேகம் கிடையாது. எனவே இத்திருக்கோயிலில் பிரநாளம் அமைக்கப்படவில்லை.

### II. *பித்தி*

பித்தி என்பது கருவறையின் சுவர்ப்பகுதியாகும். இது அதிட்டானத்திற்கு மேலும் எழுத்தகத்திற்கு கீழுமான பகுதியில் இடம்பெறும் பகுதியாகும். இது கால் என அழைக்கப்படும். இச்சுவர்ப்பகுதியில், கட்டடக்கலைக் கூறுகளான அரைத்தூண், தேவகோட்டம், கோட்டபஞ்சரம், சாளரம், கும்பபஞ்சரம், கம்பபஞ்சரம் முதலானவை இடம்பெறுகின்றன.

### II.1. *அரைத்தூண்*

அரைத்தூண் என்பது சுவர்ப்பகுதியில் இடம்பெறும் அலங்கார வேலைப்பாட்டுடன் கூடிய கட்டடக்கலைக் கூறாகும். விமானத்தின் ஆறு அங்கங்களில் ஒன்றான சுவர்ப்பகுதி, கால் எனப் பெயர் பெறுவது, இந்த அரைத்தூண் சுவர்ப்பகுதியில் இடம்பெறுவதாகும். இவ்வரைத்தூண் சதுரம், அரைவட்டம் என அமைவதோடு பதினாறு பட்டை வரை மடிப்புகளுடன் அமையும் இவ்வரைத்தூண் பின்வரும் உறுப்புகளுடன் திகழும் 1. சதுரப்பகுதி, 2. நாகபந்தம், 3.

கம்புப்பகுதி, 4. மாலசுதானம், 5. பத்மபந்தம், 6. கலசம், 7. தாடி, 8. குடம், 9. பத்ம இதழ், 10. பலகை, 11. வீரகண்டம், 12. போதிகை என்பனவாகும்.

ஆய்விற்குட்பட்ட திருக்கோயில்களில் மேற்குறிப்பிட்டுள்ள உறுப்புகள் அனைத்தும் இடம்பெற்றுள்ளதைக் காணமுடிகின்றது. இவற்றில் சிறப்பாக இராமேசுவரம் இராமநாதசுவாமித் திருக்கோயிலில் அரைத்தூணின் கீழ் பத்மபீடம் இடம்பெற்றுள்ளது. கம்புப்பகுதி சதுரமாக அமைந்துள்ளது. இக்கம்புப் பகுதிக்கு மேலாக கண்டம், பத்மம், கம்பு, நாகபந்தம் ஆகியன இடம் பெற்றுள்ளன. இதற்கும் மேலாக மாலசுதானம் பத்மபந்தம், முச்சுடர் கலசம், பத்ம இதழ், பூ வேலைப்பாட்டு, சூர்மையாகவும் கீழ்நோக்கி குடம் பத்ம இதழ், பலகை வீரகண்டம் பூமுனைப் போதிகை முதலியன இடம் பெற்றுள்ளன.

திருஉத்தரகோசமங்கைத் திருக்கோயிலும் மேற்குறிப்பிட்டுள்ளவாறே அரைத்தூண் பகுதி அமைந்துள்ளது.

திருப்புல்லாணித் திருக்கோயிலில் அரைத்தூண்களின் கீழ்ப்பகுதி சதுர அமைப்பும், அதன்மேல் நாகபந்தமும் கொண்டு விளங்குகின்றன. மேலும் இச்சதுரப்பகுதியில் கொடிக்கருக்கு வேலைப்பாடுகள் அமைந்துள்ளன. மாலசு தானத்தில் யுத்தகாட்சிகள் பகுதியில் சிற்றுருவச்சிற்பங்களாக இரணிய நரசிம்மர் இடம்பெற்றுள்ளனர். இதற்குமேலாக பத்மபந்தம், கலசம், தாடி, குடம், பத்ம இதழ், பலகை, வீரகண்டம், பூமுனைப் போதிகை ஆகியன இடம்பெற்றுள்ளன.

### 2.2 *தேவகோட்டம்*

தேவகோட்டம் என்பது மையத்தில் இடம்பெறும் பத்ராபகுதியில், கருவறையின் சுவர்ப்பகுதியின் தெற்கு, மேற்கு, வடக்கு ஆகிய மூன்று பக்கங்களிலும் இடம்பெறும்.

ஆய்விற்குட்பட்ட திருக்கோயில்களில் இராமநாதசுவாமித் திருக்கோயிலில் தெற்கே யோக தட்ஷிணாமூர்த்தியும், மேற்கே லிங்கோத்பவரும், வடக்கே பிரம்மனும் இடம்பெற்றுள்ளனர்.

உத்தரகோசமங்கை மங்களநாதசுவாமித் திருக்கோயிலில் தெற்கே பத்ம தட்ஷிணாமூர்த்தியும், மேற்கே லிங்கோத்பவரும், வடக்கே துர்க்கையும் இடம்பெற்றுள்ளனர்.

திருப்புல்லாணி ஆதி ஜெகந்நாதப் பெருமாள் திருக்கோயிலில் இறையுரு வைப்பதற்கான பள்ளத்துடன் கூடிய தேவகோட்டமே அமைந்துள்ளது இறையுரு இடம்பெறவில்லை.

**II. 2.3.** ***பஞ்சரம்***

பஞ்சரம் என்பது சுவர்ப்பகுதியில் இடம்பெறும் ஓர் அலங்கார வேலைப்பாடாகும். இப்பஞ்சரம், கும்ப பஞ்சரம், கம்ப பஞ்சரம், கோட்டப் பஞ்சரம் என மூவகைப்படும். இவை தேவகோட்டத்தை ஒட்டி அதன் இருபுறமும் உள்ள அகாரை மற்றும் கர்ணப்பகுதியில் இடம்பெறும்.

ஆய்விற்குட்பட்ட திருக்கோயில்களில் இராமேசுவரம் இராமநாதசுவாமித் திருக்கோயில், உத்தரகோசமங்கை மங்களநாதசுவாமித் திருக்கோயில் போன்ற வற்றில் கும்ப பஞ்சரம் இடம்பெற்றுள்ளது. கும்ப பஞ்சரம் என்பது அடிப்பகுதியில் கலசமும், அதன் மேல் கால்ப்பகுதியும், அதற்குமேல் பஞ்சரமும் இடம்பெறுவதாகும். திருப்புல்லாணி ஆதிஜெகந்நாதப் பெருமாள் திருக்கோயிலில் கம்புப் பஞ்சரமும் இடம்பெற்றுள்ளது.

உத்தரகோசமங்கை மங்களநாத சுவாமித் திருக்கோயிலின் கும்ப பஞ்சரத்தில் தண்டுப்பகுதியின் துவக்கத்தில் இருபுறமும் தோரண அமைப்பும், கம்புப் பகுதியின் மேலே கலசம், தாடி, கும்பம், பலகை ஆகிய உறுப்புகளும் இடம்பெற்றுள்ளன. கண்டத்திற்கு மேல் கபோதம் இடம்பெறுகிறது. இப்பகுதியில் கூடுகள் இடம்பெற்றுள்ளது.

**II.2.4.** ***சாளரங்கள்***

கோயிற்கட்டடக் கலையில் சாளரங்கள் அலங்கார வேலைப்பாட்டிற்காகவும், பயன்பாட்டுத் தேவைக்காகவும் இடம்பெறும் ஒரு கூறாகும். சாளரம் கருவறையின் வெளிச்சுவரிலும் அர்த்த மண்டபச் சுவரிலும் இடம்பெறும். சாந்தார வனசுக்

கோயில்களின் கருவறையானது மூடிய திருச்சுற்றுடன் விளங்கும் இத்திருச்சுற்றுகளுக்குள் காற்றும் வெளிச்சமும் வேண்டியே சாளரங்கள் அமைக்கப்படுகின்றன. திருச்சுற்று இல்லாத கருவறைச் சுவரில் சாளரம் இடம்பெறாது.

ஆய்விற்குட்பட்ட திருக்கோயில்களில் இராமநாதசுவாமிக் கோயில் சாந்தார வகைத்திருக்கோயிலாகும். இக்கோயிலில் கருவறை வெளிச்சுவரிலும் அர்த்தமண்டபச் சுவற்றிலேயும் நான்கு சாளரங்கள் இடம்பெற்றுள்ளன. இவை மூன்று பகுதிகளாக பிரிக்கப்பட்டுள்ளன. உத்தரகோசமங்கை திருக்கோயிலில் அர்த்தமண்டபத்தில் சாளரங்கள் இடம்பெற்றுள்ளன. இவை இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

திருப்புல்லாணி ஆதிஜெகந்நாதப் பெருமாள் திருக்கோயிலில் ஒரு பகுதியினைக் கொண்ட சாளரங்கள் அர்த்தமண்டபத்தில் இடம்பெற்றுள்ளன.

### II.3. *பிரஸ்தரம்*

பிரஸ்தரம் என்பது எழுதகம், கபோதம், யாளிவரி என்ற அமைப்புகளைக் கொண்டு விளங்கும். இப்பரஸ்தர யாளி வரிசைக்குமேல் விமான தளங்கள் இடம்பெறுகின்றன.

### 3.1 *எழுதகம்*

ககோதத்தின் கீழ் இடம்பெறும் புடைப்புப்பகுதியே எழுதகம் எனப்படும். ஆய்விற்குட்பட்ட கோயில்களில் இராமேசுவரம், கோயிலில் எழுதகம், அலங்கார வேலைப்பாடின்றியே அமைந்துள்ளது. உத்தரகோசத் திருக்கோயிலில் மதலை எழுதகம் அமைந்துள்ளது. திருப்புல்லாணித் திருக்கோயிலில் வளைந்த கட்டை வரிசை இடம்பெற்றுள்ளது.

### 3.2 *கபோதகம்*

கபோதகம் பயன்பாட்டுத் தேவைக் கருதி எழுதகத்தின் மேல் அமைகிறது. கவிழ்ந்திருப்பதால் இது கபோதகம் எனப்பெயர் பெறுகின்றது. இது மழை நீரானது கருவறைச் சுவரின் வெளிப்பகுதியில் படாமலிருப்பதற்காக அமைக்கப்படுவதாகும். ஆய்விற்குட்பட்ட திருக்கோயில்களில் இராமநாதசுவாமித் திருக்கோயிலில் கபோதகம் தாழ்வார அமைப்பின்றி சாதாரணமாக காணப்படுகின்றது.

உத்தரகோசமங்கையில் சிம்மமுக நாசியுடன் கூடிய கூடுகளுடன், கபோதகத்தின் மேல் ஆலியை வேலைப்பாடும் இடம்பெற்றுள்ளது. கொடுங்கை அமைப்பு இடம்பெற்று அதன் கீழ் தாழ்வாரக்கட்டையும் அமைந்துள்ளது.

திருப்புல்லாணியில் கபோதகம் சிம்மமுக நாசியுடனும், கொடுங்கையின் முனைகளில் ஆலிலை வேலைப்பாடும், நடுவே பத்ம இதழ் வேலைப்பாடும் அமைந்துள்ளன.

### 3.3 *கூடுகள்*

கூடு என்பது அலங்கார வேலைப்பாடாகும். சிறிய அளவினதாய் கபோதத்தில் அலங்கார வேலைப்பாட்டின் அங்கமாகத் திகழ்கின்றது. சிம்மமுக நுனியுடன் அமையும் கூடுகளின் ஓரங்களில் உள்ள முகப்பட்டி அலங்காரத்துடனோ, அலங்காரம் இன்றியோ அமையும். கூடுகளின் உட்பகுதி பள்ளமாக வெட்டப்பட்டு அதில் இறையுருவங்கள், மனிதத்தலைகள், சிறுகோயில் அமைப்பு என ஏதேனும் ஒன்றை அமைப்பர்.

ஆய்விற்குட்பட்ட திருக்கோயில்களில் இராமேசுவரம் கோயிலில் கூடுகள் சிம்மமுக நுனியுடன் இடம்பெற்றுள்ளன. முகப்புப்பட்டி அலங்காரமின்றிக் காணப்படுகின்றன. கூடுகளின் உட்பகுதி பள்ளமாக வெட்டப்படாமல் அமைந்துள்ளன.

உத்தரகோசமங்கைத் திருக்கோயிலில் கூடுகள் சிம்மமுகநுனியுடன் இடம்பெற்றுள்ளன. முகப்புப்பட்டி சிற்ப அலங்காரத்துடன் இடம்பெற்றுள்ளன. கூடுகளின் உட்பகுதி பள்ளமாக வெட்டப்பட்டுள்ளன.

திருப்புல்லாணித் திருக்கோயிலில் கூடுகள் சிம்மமுக நுனியுடன் இடம்பெற்றுள்ளன. முகப்புப்பட்டி அலங்காரமின்றிக் காணப்படுகின்றன. உட்பகுதி பள்ளமின்றி காணப்படுகிறது.

### 3.4 *யாளிவரி*

கபோதத்திற்கு மேல் இடம்பெறும் கட்டடக்கலை உறுப்பு யாளி வரியாகும். இந்த யாளினாது முழுமையாகவோ பாதியாகவோ காட்டப்படும். இது அலங்கார வேலைப்பாடாக அமைகிறது. ஆய்விற்குட்பட்ட திருக்கோயில்களில் இராமநாதசுவாமித் திருக்கோயிலில் அலங்காரமற்ற உத்திரம் அமைந்துள்ளன. உத்தரகோசமங்கைத் திருக்கோயிலில் உத்தரக்கட்டை முனைவரிசை அமைந்துள்ளது. திருப்புல்லாணிக் கோயிலில் யாளிவரி இடம்பெறவில்லை. இந்த யாளி வரியுடன் பிரஸ்தரப்பகுதி முடிவடைகிறது.

## II. 4. *விமானம்*

### 4.1 *விமானதளங்கள்*

விமானம் என்பது அதிட்டானம் முதல் ஸ்தூபி முடிய உள்ள பகுதிகளாகும். கருவறைக் கூரையின் மேல், யாளி வரிசை முதல் கண்டம் வரையிலான பகுதி மட்டும் விமானத்தளமாகும். ஒரு தளட் கொண்ட விமானம் "ஏகதளவிமானம்" என்றும், இரண்டு தளங்களைக் கொண்ட விமானம் துவிதளவிமானம், மூன்று தளங்களைக் கொண்ட விமானம், திரிதள விமானம் என்றுப் பெயர்பெறும்.

ஆய்விற்குட்பட்ட திருக்கோயில்களில் இராமேசுவரம் இராமநாதசுவாமித் திருக்கோயில் "திரிதள விமான அமைப்பாகும்" உத்தரகோசமங்கை மங்களநாதசுவாமித்திருக்கோயில் துவிதள விமான அமைப்பாகும். திருப்புல்லாணி ஆதிஜெகந்நாதர் கோயில் விமானம் "ஏகதள விமான அமைப்பாகும்".

### 4.2. *விமான தேவதைகள்*

விமான தளங்கள் ஒவ்வொன்றிலும் நான்கு திசைகளிலும் அந்தந்த திசைக்கென இறையுறுவங்களை அமைப்பர். இவ்இறையுருவங்களே விமான தேவதைகள் எனப்படுகின்றன. ஆய்விற்குட்பட்ட திருக்கோயில்களில் இராமேசுவரம் திருக்கோயிலில்,

| | | |
|---|---|---|
| தெற்கே | – | தட்ஷிணாமூர்த்தி |
| மேற்கே | – | திருமால் |
| வடக்கே | – | பிரம்மன் |
| கிழக்கே | – | சுப்பிரமணியர் இடம்பெற்றுள்ளனர். |

உத்தரகோசமங்கை திருக்கோயிலில்,

| | | |
|---|---|---|
| தெற்கே | – | தட்ஷிணாமூர்த்தி |
| மேற்கே | – | நரசும்மர் |
| வடக்கே | – | பிரம்மா |
| கிழக்கே | – | சுப்பிரமணியர் இடம்பெற்றுள்ளனர். |

திருப்புல்லாணித் திருக்கோயிலில்,

| | | |
|---|---|---|
| தெற்கே | – | நரசிம்மர் |
| மேற்கே | – | திருமால் |
| வடக்கே | – | வராகர் |
| கிழக்கே | – | திருமால் இடம்பெற்றுள்ளனர் |

### *5. கிரீவம்*

பிரஸ்தரத்திற்கு மேல் அமையும் பகுதி கிரீவம் எனப்படும். இப்பகுதி சிகரத்தை விடச்சற்று உள்ளடக்கி இருக்கும். இக்கிரீவப்பகுதி சிகரத்தின் அமைப்பினையே பெற்றிருக்கும். இக்கிரீவமானது சதுரம், வட்டம், நீள்சதுரம், எண்பட்டை என நான்கு வகையான அமைப்புகளில் இடம்பெறும். இக்கிரீவப் பகுதியில் திசைக்கு ஒரு கோட்டம் அமைந்துள்ளது. இதில் இடம்பெற்றுள்ள

சிற்பங்களை கிரீவக் கோட்டச்சிற்பங்கள் என்பர். கிரீவத்தின் நான்கு மூலைகளிலும் அந்தந்தக் கோயிலின் பிரதான இறையுருவின் வாகனம் இடம்பெறும்.

ஆய்விற்குட்பட்ட கோயில்களில் மூன்று கோயில்களிலும் சதுரமாகவே கிரீவம் அமைந்துள்ளது. அம்பாள் கோபுரங்கள் வட்டமாகவும் உத்தரகோசமங்கையில் அம்பாள் மட்டும் எண்பட்டையாகவும் உள்ளது.

ஆய்விற்குட்பட்ட திருக்கோயில்களில் இராமேசுவரம், உத்தரகோசமங்கையில்

தெற்கே – தட்சிணாமூர்த்தி

மேற்கே – திருமால்

வடக்கே – பிரம்மன்

கிழக்கே – இந்திரன்

என அமைக்கப்பட்டுள்ளன. திருப்புல்லாணித் திருக்கோயிலில்,

தெற்கே – நரசிம்மர்

மேற்கே – திருமால் தேவியருடன்

வடக்கே – திருமால்

கிழக்கே – இலட்சுமி வராகர்

*சிகரம்*

சிகரத்தின் அமைப்பை வைத்து நாகரம், வேசரம், திராவிடம் எனப்பெயர் பெறும். சிகரம் வட்டமாக இருந்தால் “வேசரவிமானச்சிகரம்” என்றும், சதுரமாக இருந்தால் “நாகரவிமானச்சிகரம்” என்றும் எண்பட்டை அமைப்பில் இருந்தால் திராவிட விமானச் சிகரம் என்றும் அழைக்கப்படும். விமானத்தின் தரை அமைப்பை சதுரமாக இருப்பின் சிகரம் சதுரம் அல்லது எண்பட்டை அல்லது இருப்பின் சிகரம் சதுரம் அல்லது எண்பட்டை அல்லது விட்டம் என அமையும். தரையமைப்பு வட்டமாக இருந்தால் சிகரம் வட்டமாக அமையும். தரையமைப்பு நீள் செவ்வகமாக இருந்தால் வண்டிக் கூடு அமைப்பு இடம்பெறும்.

ஆய்விற்குட்பட்ட திருக்கோயில்களில் இராமேசுவரம் இராமநாதசுவாமித் திருக்கோயிலில் திராவிட விமானமும், உத்தரகோசத் திருக்கோயிலில் திராவிட விமானமும், திருப்புல்லாணி ஆதி ஜெகந்நாதப்பெருமாள் திருக்கோயிலில் திராவிட விமான அமைப்பும் இடம்பெற்றுள்ளன.

*கலசம்*

சிகரத்தின் மேல் ஆறாவது அங்கமாக இடம்பெறும் உறுப்பு கலசம் எனப்படும். இது கல், சுதை, மற்றும் உலோகம் ஆகியவற்றால் அமையும். ஆய்விற்குட்பட்ட திருக்கோயில்களில் இராமநாதசுவாமித் திருக்கோயிலில், கலசம் கல்லால் செய்யப்பட்டு, தங்ககவசம் அணிவிக்கப்பட்டுள்ளது.
உத்தரகோசமங்கையில் சுதையாலும், திருப்புல்லாணியில் சுதையாலும் அமைக்கப்பட்டுள்ளது. இதற்கு தங்க கவசம் பூணப்பட்டுள்ளது.

### II. 3. *அதிட்டான அங்கங்கள்*

அதிட்டானத்தின் அங்கங்களின் வடிவங்கள் அளவுமுறைகளாலும், இடம்பெறும் வரிசைத் தொடர்களாலும் அதிட்டானத்தின் வடிவமைப்பு வேறுபாடுகளாலும் அதிட்டா கலைப்பாணியின் நுட்பத்தைக் காட்டும் உத்தியாகவும் அமைகின்றன. அத்தகைய கட்டுமான உத்திக்குரிய வடிவங்களாகக் கீழ்க்கண்ட வடிவங்கள் அதிட்டானத்தில் இடம்பெறும் பொது வடிவங்களாகும்.

| வ. எண் | அதிட்டான வடிவங்கள் | பெயர் விளக்கம் |
|---|---|---|
| 1. | உபானம் | விமானத்தின் தொடக்கநிலை அங்கமாகும் அதிட்டானம். உபபீடம் ஆகியவற்றின் முதல் அங்கமாகும். பாதுகம், வப்ரம், ஜன்மம் என்னும் பெயர்கள் உபானத்திற்குரிய இணைச்சொற்களாகும். இது உபோபானம், பத்மோபானம் என இருவகைப்படும். |
| 2. | ஜன்மம் | உபானத்தின் மற்றொரு சொல்லாகும். ஜன்ம நிர்கமம் (அடித்தள நீட்சி) பகிர் ஜன்மம் (வெளி உபானம்) என இரு |

வகைப்படும், சிறு உபானம், உப உபானம் என்னும் வடிவங்களும் உண்டு.

3. பாதுகம் — உபானம், உபபீடம் என்னும் கலைச்சொற்களுக்குரிய இணையான பெயராகவும் அங்கமாகவும் கருதப்படும். மனிதனுக்கு பாதுகையாகவும், கட்டுமானத்தால் பாதுகமாகவும் அமைவது.

4. ஜகதி — பூமி என்று பொருள். விமானக் கட்டுமானத்திற்கு பாதம் அல்லது கால் போன்றது. முழுக்கட்டுமானத்தின் எடையையும் தாங்கி நிற்கும் கட்டமைப்பாகும். வப்ரம் என்னும் பெயரும் ஜகதியைக் குறிக்கும்.

5. குமுதம் — தாமரைக் குளத்து அல்லிமலரின் வடிவமாகும் முப்பட்டை குமுதம், வட்டக்குமுதம், கடகவிருத்த குமுதம் என்னும் வடிவங்களால் ஆகியது. கடகம் என்பது வளையல் வடிவத்தைக் குறிக்கும். வட்ட வரிகளாகிய வளையல் அலங்காரம் கொண்ட அதிட்டானம்.

6. கும்பம் — கும்பம் என்பது மங்கள வடிவமாகிய கலசம் என்பதாகும். கும்பந்தம், தாரகும்பம், பூரண கும்பம், வஜ்ரகும்பம் எனப் பெயரிட்டழைக்கப்படும் அங்கங்களைக் கொண்டது. அலங்காரங்களில் ஒன்றாகவும் (கம்ப அலங்காரம்) திகழ்கின்றது. இக்கும்ப அலங்காரம் கோயிற்கலையில் மிகச் சிறந்த இடத்தைப் பெறும்.

7. பத்மம் — தாமரை மலர் வடிவம் முதன்மைப்படுத்தப்படுகின்றது. அதிகப் பதிமம் (மேல்நோக்கிய மலர்த்தோற்றம்)

ஊர்துவபத்மம் (கவிழ்ந்த மலர்த்தோற்றம்) ஆகிய இரண்டு வகையின் வடிவமைப்புடையன மகாபத்மம் என்று அழைக்கப்படும் அங்கம் உண்டு. அப்ஜம், சூத்ராப்ஜம், அம்புஜமத், அம்சுகம் என்னும் பெயர்களில் பத்ம வடிவங்கள் உள்ளன. பத்மமே கோயிலாகக் கருதும் மரபுண்டு, ஏனெனில் மகாபத்மம் என்பது விமானத்தையும் குறிக்கும். பத்மதளம் என்பது மலரிதாழ்விரிப்பு என்பது போல் அமையும் அதிட்டான அலங்காரமாகும்.

8. கம்பம் — கம்பம் என்பது இருவகைக் கட்டுமானத்தின் இடையே பிரித்துக்காட்டும் அங்கமாகவும் தாங்கி நிற்கும் கால், பாதம் போல் அமையும் கட்டுமான உறுப்பாகவும் திகழ்து. சதுரம், வட்டம் (விருத்த கம்பம்) என இருவடிவங்களில் அமைகின்றது. இவ்வடிவமைப்பு அரைத்தூண்களுக்கும் பின்பற்றப்பட்ட மரபும் உண்டு. இவ்வாறு பிரித்துக் காணும் நெறிமுறையால் அந்தரிதம் (அ) ரத்னகம்பம் உத்திதம், உத்தரம், அர்கலம் என்றும் அழைக்கப்படும். வாஜனம், ஷேபனம், வேத்ரம், பட்டிகை, உத்திரம், பட்டம், திரிகம், மண்டபம் ஆகிய இடங்களில் அந்தரிதமாகக் கம்பு என்னும் கம்பம் கால் இடம் பெறும் மரபாகியது பத்ரபட்டம், வஜ்ரபட்டம் ஆகிய இரண்டும் இலை, ரத்தின வடிவங்கொண்டவை.

9. கர்ணம் — இரண்டு வகை அதிட்டான, உப்பீட, விமான கட்டமைப்பாகிய சந்திப்பு நிலைகளைப் பிரித்துக் காட்டும் அங்கமாகும். கம்பு பயன்படுத்துவதுபோல் கர்ணமும் பயன்படுத்தப்படும் கலைப்பாணி அமைந்துள்ளது.

| | | |
|---|---|---|
| 10. | நிர்கமம் | நிர்கமம் என்பது பிதக்கம் அல்லது நீட்சியாகிய தோற்றம் கொண்டுள்ள அங்கமாகும். நீட்சியை நிர்கமம் என்றும் உள்ளடக்கமாகிய அடக்கத்தை நிம்னம் என்றும் கூறப்படுகின்றதும் பொதுவாக அடக்கத் தொழில்நுட்பம் கொண்டதாகும். இது இணக்க அங்கமாகவும் கருதப்படும். |
| 11. | கண்டம் | கழுத்து என்று பொருள். கண்டம் என்பதற்கு தலையை உடலுடன் இணைக்கும் அங்கமாகக் காண்பதாகும். தோளுக்கு மேலும் தலைக்குக் கீழாகவும் உள்ள அங்கம் இருபெரும் அங்கமானங்களுக்கு இடையே அமையும் இணைப்புகாலம், கிரீவம், கந்தம் என்னும் பெயர்களும் கண்டம் அங்கப்பணி குறித்தனவாகும். |
| 12. | பட்டிகை | குறும்பட்டிகை மகாபட்டிகை, சுக்ர பட்டியல் என்னும் வடிவங்கள் இருவகை அளவுகளுடன் உள்ளவை. கம்பு, சட்டம், பட்டி, பட்டம் எனவும் அழைக்கப்படும். நீட்சியாகவும் இணக்கமாக உள்வாங்கியும் காணும் இணைப்பு அலங்கார வடிவதம். புற இறுதிப் பாகங்களிலும் பட்டையாக வடிவம் பெறுவது பிரதிப்பட்டம் என்பது அலங்காரப் பிதக்கம் கொண்ட நீட்சிப்பகுதியாகும். |
| 13. | வாஜனம் | கம்பு போன்ற அங்கம், சதுரம் அல்லது செவ்வக வடிவம் கொண்ட பகுதியாகின்றது. பெரிய அளவில் உள்ள மகாவாஜனம் என்றழைக்கப்படுகின்றது. |
| 14. | கபோதம் | கபோதம் என்பது புறாவாகிய பறவை குறித்த பெயராகும். கபோத பாலகா என்பது புறாக்கூடு என்னும் கட்டுமான |

| | | வடிவமாகும். உள்ளடக்கிய பகுதியாக அமையும் வடிவம். உபபீடம் அதிட்டானம் ஆகிய அங்கங்களின் மேல்நிலைமானங்களாகிய வரிகளில் இடம்பெறுவது. |
|---|---|---|
| 15. | சேஷபனம் | உபபீடத்தில் அல்லது அதிட்டானத்தில் இடம்பெறும் அலங்காரமாகிய நீட்சிப் பகுதியாகும். உபபீடத்தில் இடம்பெறும் கண்டப்பகுதியில் ஷேபனம் அமையும் இப்பகுதியே கருவறையின் கோமுகம் அல்லது நாளம் அமையும் அங்கமாகும். |
| 16. | பிரதி | பிரதி என்பது இலை அல்லது பிறை வடிவம் கொண்டது நீட்சி அல்லது மட்டம் செய்வதற்குரிய காரணத்திற்குரிய இடத்தில் அமைவது. இதனை அடுக்குப்படி எனக் கூறலாம். பிரதிமம், பிரதிமுகம், பிரதிவக்த்ரம், பிரதிவாஜனம் என்னும் அங்கங்களும் வடிவங்களைப் பெற்று இடம்பெறும். |
| 17. | பத்ரம் | பத்ரம் என்னும் சொல் நீட்சி அல்லது பிதுக்கமாகிய அலங்கார அங்கமாகும். பத்ரம் முகபத்ரம், சர்வதோபத்ரம் என இரண்டு வகைப்படும். |
| 18. | மஞ்சம் | பீடம் என்ற வகையைச் சார்ந்த வடிவமாகும். |

*ஸ்ரீபந்தம்*

குட்டிமம் அதிட்டானத்தில் இடம்பெறும் சிறிய பட்டை அலங்காரத்துடன் உள்ளதாகும். மேலே கூறப்பெற்ற அதிட்டானம், உப்பீட அங்க வடிவங்களும் அலங்கார வடிவங்களும் கோயிற் கட்டடக்கலையில் இடம்பெறும் தனிச்சிறப்பிற்குரியதாகும்.

## III. *சிற்பக்கலை - அறிமுகம்*

தமிழக கோயில்களிலே சிற்பக்கலை முக்கியதொரு இடம் பெற்றுள்ளதை நாம் காணலாம். சிற்பஉருவங்கள் அமையாத கோயில் கட்டடங்கள் இல்லை என்றே கூறலாம். கோயிலின் தரை, சுவர், சிகரம், கோபுரம், மண்டபம், தூண்கள், வாயில் நிலைகள் என கட்டடங்களின் எல்லா அமைப்புகளிலும் சிற்ப உருவங்கள் இடம்பெற்றிருப்பதைக் காணலாம். நமது நாட்டுச் சிற்பக்கலை சமயத்தை அடிப்படையாகக் கொண்டே வளர்ச்சிப் பெற்றது எனலாம். சைவ, வைணவச் சிற்பங்களை ஆதி காலத்தில் மரத்தினாலும், சுதையினாலும், செய்துள்ளனர். பின்னரே பஞ்சலோகங்களில் செய்து திருக்கோயில்களில் நிலையாக இடம்பெறச் செய்தனர் என்பதனை இதன் மூலம் அறிய முடிகின்றது.

### III. 1. *சிற்பக்கலை; கால நிர்ணயம்*

கட்டிடக்கலை போன்றே சிற்பக்கலையிலும் காலநிர்ணயம் செய்யும் பொழுது தமிழக சிற்பக்கலையின் தொடக்கம் பல்லவர் காலம் என்றும் சங்ககாலம் முதல் பல்லவர் காலம் வரையிலும் அறியப்படுகின்றது. ஆறாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பல்லவர் பாண்டியர் வரலாற்றில், பாண்டியர் முன்னனிக்கு வரும் வரையிலும், கி.பி. 600க்குப் பின்னர் குடைவரை மற்றும் கற்றளிகள் தமிழக மண்ணில் தோன்றும் வரையிலுமான காலகட்டத்தில் கட்டடம் மற்றும் சிற்பக்கலையின் பாணியைப் பற்றிய அடிச்சுவடுகள் இருந்த இடம் தெரியவில்லை. கி.மு. 300 முதல் கி.பி. 250 வரையிலான சங்க இலக்கியங்களில் கோவில் மற்றும் தெய்வச் சித்திரங்களைப் பற்றிய குறிப்புகள் காணக்கிடக்கின்றன.(21)

இலக்கியங்களில் நிலவும் சங்கம், மனுவின் கால இலக்கியம், எனவும் எழுதப்படும் சிலப்பதிகாரம் வாயிலாக தமிழக வரலாற்றில் கல்லால் வடிவமைக்கப்பட்ட முதற்படிமம் பத்தினி (கண்ணகி) சிலையே என்று அறியப்படுகிறது. பெண்மையின் சிறப்பைப் பறை சாற்றும் சிலம்பில் சிவனார் கொற்றவையினுள் அடக்கம் என்று எடுத்தியம்பப்படுகிறது. கலைமானை

வாகனமாகக் கொண்ட இவளே, சிவனைத் தன் வலப்பாகத்தில் கொண்டவள். மாதொருபாலும் மாலொருபாலும் எனப் பிற்காலப் பக்தி இலக்கியம் இதனை வலியுறுத்துகிறது. பாதி பெண்ணும் பாதி ஆணுமாகிய அர்த்தநாரி வடிவில் முதலிடம் பெறுபவள் பெண்ணே என ஆதிசங்கரர் தம் வடமொழிப்பாடலாகிய சௌந்தர்யலகரியில் (பா. 19.23) குறிப்பிட்டுள்ளதற்கு வழி இட்டுச் செல்பவர் இளங்கோ அடிகளாவார். (22)

சங்ககாலச் சமய வழிபாடு மற்றும் தெய்வத்திரு திருமேனிகளின் கோட்பாடுகள் சங்கமிக்கும் இடம் சிலம்பே தொல்காப்பியம் முதற்கொண்டு பத்துப்பாட்டும் எட்டுத் தொகையும் தாம் கண்ட நிலப்பாகுபாடுகள் அவற்றிற்கே உரிய கரு, உரிய பொருட்கள் சிலம்பில் 'படிம உருப்' பெறுகின்றன என்பதனை நாம் அறிகின்றோம்.

இருண்ட காலத்திற்குப் பின் பல்லவ–பாண்டியர் முயற்சியில் கடைசியில் புத்துயிர் பெற்றன. கோயில் சிற்பக்கலை வளர்ச்சியில் பக்தி இலக்கியம் பெரும்பங்காற்றியது எனலாம். இப்புதிய முயற்சியில் தேவாரம் பாடிய நாயன்மார்களும், பிரபந்தம் பாலய ஆழ்வார்களும் முக்கியப் பங்கேற்றனர் என்றும் இதனால் அறிய முடிகின்றது.

### III. 2. *பிற்காலப் பாண்டியர்கலை*

பாண்டியர்கள் கோயில் கலைகளைச் சிறப்பாகப் பேணி வளர்த்தனர். இவர்கள் காலத்தில் கட்டட சிற்பக்கலையானது புதுமையானதொரு நிலையை எட்டியது. சோழர் காலத்தில் கருவறையின் மீது எழுப்பப்பட்ட விமானத்திற்கு முதன்மையிடம் வழங்கப்பட்டது போல் அல்லாமல் உயர்வான கோபுரங்கள், பிரகார முகப்புக்களிலும் கட்டப்பட்டன எனவும், பெரிய பிரகாரச் சுற்றுச் சுவர்களும் விசாலமான மண்டபங்களும், துணைக்கோயில்களும் எழுப்பப்பட்டன என்பதனையும் இப்பிரகாரச் சுற்றுச்சுவர்களில் நான்கு திசைகளிலும் உயர்வான கோபுரங்கள் ஏற்படுத்தப்பட்டன என்றும் பாண்டியர் காலக் கோபுர வாசல்களில், நூற்றுக்கால்,

மண்டபத் தூண்களிலும் மன்னர்களின் திருவுருவங்கள் ஏற்படுத்தப்பட்டன என்றும் அறியப்படுகின்றது.

இக்காலத்திய கோயில் சிற்பங்கள் பெரும்பாலும் சமயக் கோட்பாடுகளைப் பிரதிபலித்தன. இராமாயணம், மகாபாரதம் மற்றும் புராணங்கள் கூறுகின்ற செய்திகள் யாவும் முழுச் சிற்பங்களாகவும் படைப்புச் சிற்பங்களாகவும் வடிவம் பெற்றன. நாடெங்கிலும் தெய்வத்திருமேனிகளாக இராமர், கிருட்டிணர், அனுமர், இலட்சுமணன், சீதாதேவியின் உருவங்களை சிற்பங்களாக வடித்தனர் எனவும், சமயத் தொடர்புடைய சிற்பங்களை உருவாக்குவதில் அதிகக் கவனம் செலுத்தினர் எனவும் மன்னர்கள் தங்கள் உருவத்தினை சிற்பமாக, சிலையாக வடிவம் பெறச் செய்தனர் என்பதும் வரலாற்று உண்மையாகும். மதுரை நாயக்கர்களின் சிலைகள் புதுமண்டபத்தில் உள்ளன என்பதையும், இராமேசுவரம் இராமநாதசுவாமித் திருக்கோயிலில் சமயத் தொண்டாற்றிய சேதுபதி மன்னர்களின் உருவங்கள் சுற்றுப்பிரகாரத் தூண்களில் அமைக்கப்பட்டுள்ளன என்பதையும் இதற்குச் சான்றுகளாகக் கூறலாம்.

### III. 3. *திருக்கோயிலும்-சிற்பக்கலையும்*

இந்து சமயத்தின் மேன்மை, தத்துவம், அதனுடைய பரந்த சிந்தனை ஆகியவற்றை விளக்கும் கோயில் புராணங்கள் அதிகமாகத் தோன்றிய காலம், விஜயநகர, பாண்டிய மன்னர்கள் மற்றும் அவர்கள் ஆட்சிக்குட்பட்ட நிலப்பகுதிகளை ஆண்ட சேதுபதி மன்னர்கள் போன்ற குறுகிய மன்னர்கள் காலத்திலேயுமாகும். இக்காலத்தே கோயில் கலைகள் யாவும் வேறு எந்தக் காலத்திலும் இக்காலத்தே காணாத வகையில் சிறப்பாக ஊக்குவிக்கப்பட்டன எனலாம். மக்களின் பக்தி நெறிக்கும், அவர்கள் பின்பற்றிவரும் மதச்சடங்குகள், விழாக்கள் போன்றவற்றிற்கும் ஏற்றார்போல் திருக்கோயில்கள் நூற்றுக்கால், ஆயிரங்கால் மண்டபங்கள் அமைக்கப்பெற்று பொலிவு பெற்றுத் திகழ்ந்துள்ளன. பெரிய கட்டிடத்தை தாங்கும் வகையில் பருத்ததூண்களும், அதனையொட்டி அமைக்கப்பட்ட அலங்காரமான தூண்களும் பலவிதமான சிற்ப வேலைப்பாடுகளுடன் அமைக்கப்பட்டன எனலாம்.

தூண்களின் தண்டுப்பகுதிகளில் சீறும் வியாழங்களின் உருவங்கள் இடம்பெற்றுள்ளதைக் காண முடிகிறது. தூண்களின் மேல் அமர்ந்த வண்ணம் சிங்கங்களின் உருவங்கள் அமைக்கப்பட்டுள்ளன. குதிரைமேல் அமர்ந்த வீரர்களின் சிற்பங்களும் அழகிய வடிவில் செதுக்கப்பட்டுள்ளதையும் காணமுடிகிறது. அத்தூண்களின் நான்கு பக்கங்களிலும் புடைப்புச் சிற்பங்கள் செதுக்கப்பட்டன. மேலும் சிற்பக்கலையை வளர்க்கும் விதமாக கோபுரங்களுக்கு முன்பாக அமைக்கப்பட்ட பதினாறுகால் மண்டபம், கல்யாண மண்டபம், ஊஞ்சல் மண்டபம், நீராழி மண்டபம், அரங்க மண்டபம், உற்சவ மண்டபம், நந்தி மண்டபம், நவக்கிரக மண்டபம், திருத்த மண்டபம், வியாகரண மண்டபம், அலங்கார மண்டபம், ஆகம மண்டபம், இரத மண்டபம், மதிற்சுவரை ஒட்டிய பிரகார மண்டபம், கோயில்களுக்கு வெளிப்புறம் அமைந்த தேர்முட்டி மண்டபம் ஆகிய மண்டபத்தூண்களை உருவாக்கியும், அவற்றில் புடைப்புச் சிற்பங்களை உருவாக்கி கல்லால் இலக்கியங்களைப் படைத்துள்ளனர் என்ற உண்மையையும் நாம் இங்கு அறிகின்றோம்.

கோயில் கோபுர உட்சுவர்களின் படிகளிலும் கோபுரத்தின் உட்சுவர்களிலும் அழகிய பெண் உருவங்களையும், பரதநாட்டிய உருவங்களையும் சிற்பமாக வடித்துள்ளனர். கோயிலின் மேற்கூரையின் உட்புறங்களில் தாமரை மொட்டுக்கள், அழகிய வேலைப்பாடு கொண்ட கற்சங்கிலிகளும் உருவாக்கப்பட்டுள்ளன. கோபுரங்களின் அதிட்டானம் கருங்கற்களிலும், மேல் உள்ள சிகரமானது செங்கற்களினாலும் கட்டப்பட்டு நூற்றுக்கணக்கான சுதைச் சிற்பங்கள் வடிக்கப்பட்டு அழகுபடுத்தப்பட்டுள்ளன. மேல் விதானங்களிலும், சுற்றுச் சுவர்களிலும், நந்தி மற்றும் கருடன் உருவங்களை வீற்றிருக்கச் செய்துள்ளதையும் இங்கு காண்கின்றோம்.

*சிற்பக்கலை*

கோயில்களில் இடம்பெறும் சிற்பங்களை அவை அமைந்துள்ள இடங்களைப் பொறுத்து விமானச் சிற்பங்கள், கண்டச்சிற்பங்கள், கோபுரச்சிற்பங்கள், மண்டபச் சிற்பங்கள் என வகைப்படுத்தலாம். இச்சிற்பங்கள் புராண அமைப்படையிலமைந்த இதிகாசச்சிற்பங்கள். அரச, அரசி சிற்பங்கள், நடனச் சிற்பங்கள் என பிரித்தறியப்படுகிறது.

*ஆய்விற்குட்பட்ட திருக்கோயில்களில் சிற்பத்திறம், இராமேசுவரம் இராமநாதசுவாமித் திருக்கோயில்*

இக்கோயில் கட்டுமானப்பணியும் கருங்கல் திருப்பணி என்பதனால் இக்கோயிலில் விமானச் சிற்பங்கள், கண்டச் சிற்பங்கள், கோபுரச்சிற்பங்கள் முதலியன இங்கு இடம்பெறவில்லை. மண்டபங்களில் மட்டுமே சுதைச்சிற்பங்களும், மண்டபத்தூண்களில் அரசர்களின் சிற்பங்களுமே இடம்பெற்றுள்ளன. இச்சிற்பங்கள் புராண இதிகாசங்களின் அடிப்படையிலேயே அமைந்துள்ளன. மூலவர் சன்னதியில் அலங்காரமண்டபத்தில், கபோதத்திற்கு மேல் இவ்சுதைச் சிற்பங்கள் இடம்பெற்றுள்ளன.

அலங்கார மண்டபத்தில் வலதுபுறமாக ரிஷிகள் இலக்குமி, இராமர் வேட்டையாடுதல் (முதல் பாந்து) விநாயகர், சிவன், முருகன் போன்றோரும் சிவனின் சூரசம்ஹாரம் நிகழ்வுகளும் இடம்பெற்றுள்ளன. (இரண்டாம் பாந்து) நடராஜரின் ஊர்த்துவ தாண்டவம், தம்புருவர், சக்தி காளியாக சூரசம்ஹாரம் செய்தல் போன்றவை அமைந்துள்ளன. (மூன்றாம் பாந்து) மார்க்கண்டேயருக்கு சிவன் அருள்புரிந்து, யமனைக் காலால் எட்டி உதைத்த புராண நிகழ்வு சுதை சிற்பமாக அமைக்கப்பட்டுள்ளன. (நான்காம் பாந்து) கல்லால மரம் இப்பகுதியில் (ஐந்தாம் பாந்தில்) சுதையினால் அற்புதமாக வடிவமைக்கப்பட்டுள்ளது மேலும் இப்பகுதியில் தட்ஷிணாமூர்த்தி மஹாவிஸ்ணு, இலக்குமி, சக்தி ஆகியோரின் உருவங்களும் அமைக்கப்பட்டுள்ளன. அடுத்ததாக (ஆறாம் பாந்தில்) மீனாட்சி சொக்கநாதர் திருக்கல்யாண கோலம் இடம்பெற்றுள்ளது. வாலிவதக்காட்சியில் இராமன்,

இலக்குமணன் ஆகியோரும் மரங்களுக்கு ஊடாக இராமன், அம்பு செலுத்தி வாலியை வதம் செய்வது போன்ற காட்சியும் மிகவும் அற்புதமாக கலை நுணுக்கத்துடன் வடிக்கப்பட்டுள்ளது. (ஏழாம் பாந்தில்) அடுத்தபடியாக இராமாயண யுத்தகள காட்சியானது தத்ரூபமாக செதுக்கப்பட்டுள்ளது. (எட்டாம் பாந்தில்) அடுத்தபடியாக மரத்தின் மேல் பெண் அமர்ந்திருப்பது போன்றும், அம்மரத்தின் இருபுறம் பல வித கோலங்களில் பெண்கள் இடம்பெற்றிருப்பதும் போன்றதுமான காட்சிகளும் இடம்பெற்றுள்ளன. (ஒன்பதாம் பாந்து) ஆஞ்சனேயர், இராமர் இத்தலத்தில் பிரதிஷ்டை செய்த இலிங்கத்தை வாலால் கட்டி இழுப்பது போன்ற காட்சி இடம்பெற்றுள்ளது. (பத்தாம் பாந்து) நடராஜர் நாட்டியம் (பதினொன்றாம் பாந்து) மஹாவிஸ்ணு சீதேவி, பூதேவியுடனும் இடம்பெற்றுள்ள காட்சி (பனிரெண்டாம் பாந்து) ஆகியன இடம்பெற்றுள்ளன.

இடப்புறமாக விநாயகர் பூதங்களுடனும் இடம்பெற்றுள்ள மஹாவிஸ்ணு தேவிகளுடன் இடம்பெற்றுள்ளார். இராமர் ஆஞ்சநேயருக்கு ஆசி வழங்கும் காட்சியில் இலக்குமணன் உடனுறைந்து இடம்பெற்றுள்ளார். இச்சுதையாவும் வரிசையாக நான்கு நிலைகளிலும் (பாந்துகளிலும்) இடம்பெற்றுள்ளன. ஐந்தாம் நிலையில் இரண்டு ரிஷபங்கள், கோபுரம்தாங்கி, கிருஷ்ணன், கிருஷ்ணனுக்கு இருபுறமும் அம்மன் உருவம், ராதா, ருக்மணி, பக்கத்தில் துவாரபாலகர் சிற்பங்கள் இடம்பெற்றுள்ளன. அடுத்தபடியாக இராமண, இராவண யுத்தக்காட்சியில் இராவணனின் தோற்றம் பத்துத் தலைகளுடன் சிறப்புற அமைக்கப்பட்டுள்ளன.

இதற்கடுத்தாற்போல் கிருஷ்ணர், தாருகாவணத்து ரிஷிபத்தினி, ஈசுவரர் பக்கத்தில் பூதம், பிட்சாண்டிசுவரர் அருகே மான் சிற்பங்கள் அழகுற அமைக்கப்பட்டுள்ளன.

இம்மூன்றாம் பிரகாரத்தில் அணிவொட்டித் தூண்களில் மேல்புறம் உள்ள சிம்மம், நாணுதல், அலவுத்திரம் சுதைச் சிற்பங்களும் இடம்பெற்றுள்ளன.

இராமன் அம்மன் சந்நிதியில் மூலஸ்தானம் இருப்பதற்கு அடுத்த மண்டபத்தில் பஞ்ச கருணைக்கால்கள் உள்ளன. சிங்கம் போன்ற காட்சி தரும் இந்த ஐந்து தூண்களும் ஒற்றைக்கற்களால் ஆன தூண்கொடிக் கற்களாகும். இவற்றில் அஸ்வதங்களும், பஞ்சரதங்களும், தாரை மதலையும் செதுக்கப்பட்டுள்ளன.

கல்யாண மண்டபத்தில் சிவன், பார்வதி கல்யாணம், சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை கல்யாணம், திருமால், மகாலெட்சுமி கல்யாணம் ஆகிய கல்யாண காட்சிகள் சித்தரிக்கப்பெற்றுள்ளன. கல்யாண மண்டபத்தில் தூண் சிற்பங்களாக சேதுபதி மன்னர்களின் சிற்பங்கள் இருபுறமும் அமைக்கப்பட்டுள்ளன. இவை தவிர கல்யாணசுந்தரர், பைரவர், பிட்சாடனார், சக்தி சிற்பங்களும் இடம்பெற்றுள்ளன.

இரண்டாம் பிரகாரத்தில் மேற்குப் பகுதியில் சிம்மம், முட்டிபண்டம், பூதம் நாணுதல், அளஉத்தரம், ஆகியன செதுக்கப்பட்டுள்ளன. ஒரே கல்லில் ஒரு சங்கிலியும் ஐந்து வளையங்களும் செய்திருப்பது அபூர்வமான வேலைப்பாடாகும். ஒரு கல்லில் மூன்று சன்னல்களும் மேலே பசுவின் முகமும் செதுக்கப்பட்டிருப்பதும் குறிப்பிடத்தக்கது.

***உத்தரகோசமங்கை மங்களநாதசுவாமித்திருக்கோயில்***

**IV.16.1.** ***மூலவர் சன்னதி தூண் சிற்பங்கள்***

சேதுபதி மண்டபத்தில் இடதுபுறம் உள்ள மூன்றாவது தூணில் மாணிக்கவாசகர் இறைவனிடம் தீட்சை பெறுவது போன்ற தோற்றம் உள்ளது. இச்சிற்பத்தில் இலந்தை மரத்தின் அமைப்பும், அதன்கீழ் ஈசன் அமர்ந்திருந்து உபதேசம் செய்வதும், அவ்வுபதேசத்தினை மாணிக்கவாசகர் மெய் ஒடுங்கி, வாய் மூடி, பணிந்து கவனிப்பார் போன்றும் மிக நுட்பமாகச் செதுக்கப்பட்டுள்ளது.

இதனை அடுத்தாற் போன்றுள்ள தூணில், இறைவனின் அடியினைக் காண விழையும், திருமாலின் கூர்ம வடிவம் இறைவனின் கீழ்புறத்திலும், முடியைக் காண விழையும் பிரமனின் அன்னபட்சி தோற்றம் இறைவனின் மேற்புறத்திலும் மிக அழகாக செதுக்கப்பட்டுள்ளது. பிரம்ம தேவனின் சார்பில் பொய் சாட்சி கூற

முன்வந்த தாழம்பூ வானில் இருந்து, பூமியை நோக்கி வரும் கருத்தின் வெளிப்பாடாகத் தாழம்பூவின் உருவம் இடையிலும் உள்ளன.

இம்மண்டபத்தின் வலப்புறத்தூண்கள் ஒவ்வொன்றிலும், சைவசமயகுரவர்களான உழவாரப்படையுடன் கூடிய அப்பர், சுந்தரர், சம்பந்தர் ஆகியோரின் உருவங்களும் தூண்சிற்பங்களாக உள்ளன.

இம்மண்டபத்தில் நுழைவு வாயிலில் உள்ள தூண்களில் முன்பு, மயில் வாகனத்தில் வள்ளியுடன் சண்முகர் வலப்புறத்திலும், இடப்புறத்தில் சித்தி, புத்தியுடன் கூடிய வல்லப விநாயகர் சிற்பமும் மிகவும் அற்புதமாக செதுக்கப்பட்டிருக்கின்றன.

இம்மண்டபத்தில் வெளிப்புறச்சுற்றின் இடது புறத்தூணில் உள்ள யாழியின் சிற்பமும், அதனுள் உள்ள கல்லால் செதுக்கப்பட்ட கல் உருண்டையும் மிகவும் நுட்பமான வேலைப்பாட்டிற்கு உதாரணமாக உள்ளது.

இம்மண்டபத்தின் வலப்புறத் தூணில் சமயக்குரவர்களுக்கு அடுத்தப் படியாக அருணகிரி நாதரின் உருவமும் தூணில் சிற்பமாகப் பொறிக்கப்பட்டுள்ளது. இவை தவிர சேதுபதி மண்டபத்தூண்களில் இடதுபுறம் முத்து இராமலிங்க சேதுபதி சிற்பமும், வலது புறத்தில் பாஸ்கர சேதுபதி, நாகநாத சண்முக இராஜேஸ்வரர் சேதுபதி போன்றோரின் சிற்பங்களும் இடம் பெற்றுள்ளன.

### IV.16.2. *அம்மன் சன்னதி*

#### *தூண் சிற்பங்கள்*

வெளிநந்தி மண்டபத்தில் உள்ள தூண்களில் இட வலமாக சிற்பங்கள் உள்ளன. முதலில் உள்ள தூணில் இடப்புறமாக இரதியின் சிற்பமும் எதிர்த்தாற்போல் வலப்புறம் மன்மதனின் சிற்பமும் உள்ளது.

இரண்டாம் தூணில் இறைவன் "பிட்சாடனார்" மற்றும் பராசக்தியின் சிற்பங்களும் உள்ளன.

மூன்றாவது தூணில் வலப்புறம் நடராஜப் பெருமாள் ஊர்த்துவதாண்டவம் ஆடிய விதத்தில் உள்ள சிற்பமும், இடப்புறம் உள்ள தூணில் போட்டியில் தோல்வி அடைந்ததால் தோல்வியை ஒப்புக்கொள்ளும் பாவனையில் தலை குனிந்த பத்ரகாளியின் தோற்றமும் சிற்பங்களாக உள்ளன.

நான்காவது தூணில் வலப்புறமாக அர்ஜுனன் சிற்பமும் எதிர்த்தாற்போல் அல்லியின் சிற்பமும் உள்ளன. அதற்கடுத்தாற்போல் உள்ள தூணில் வலப்புறம் வல்லபகணபதியும், இடப்புறம் சண்முகர் சிற்பமும் உள்ளன. இன்று இச்சிற்பங்கள் யாவும் சிதலமடைந்த நிலையில் உள்ளன. ஊஞ்சல் மண்டபத்தின் நூற்றுக்கும் மேற்பட்ட தூண்களில் அழகிய வேலைப்பாடமைந்த சிற்பங்கள் செதுக்கப்பட்டிருந்தபோதிலும், இச்சிற்பங்கள் இன்று சிதலமடைந்தே காணப்படுகின்றன.

### IV.16.3. *இக்கோயிலில் காணப்படும் நடராஜ சிற்பங்கள்*

#### *(அ) பிரகாரச் சிற்பம்*

கருவறையின் வெளிப்புறம், பிரகாரம் எனப்படும், பகுதியில் இடம்பெற்றுள்ள சிற்பங்கள் பிரகாரச் சிற்பங்கள் எனப்படும்.

சன்னதியின் இத்தலத்தில் மங்களநாத சுவாமி பிரகாரத்தில் நடராசர் சிற்பம் உள்ளது. பிரபை உண்டு, சடை உண்டு, தூக்கிய திருவடி உயர்த்திக் தூக்கப்பட்டுள்ளது. இடது உள்ளங்கையில் தீ உள்ளது. முயலகன் இடக்காலை ஊன்றி, வலக்காலை மடித்துப்படுத்துள்ளன.

#### *(ஆ) தூண்சிற்பம்*

சுவாமி சந்நிதிக்கு முன்னுள்ள மண்டபத்தில் ஐந்தாவது தூணில் ஆனந்தத் தாண்டவச் சிற்பம் உள்ளது. சடை உண்டு, பிரபை உண்டு, சிவகாமி இல்லை. இடது உள்ளங்கையில் தீயுள்ளது. தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. வலக்கால் சற்று வளைந்து ஊன்றப்பட்டுள்ளது. முயலகன் உருவம் உள்ளது.

*(இ) கோபுரச்சிற்பம்*

மூலவர் சன்னதியின் உள்கோபுரத்தில் இரண்டு ஆனந்தத் தாண்டவச் சிற்பங்கள் உள்ளன. இரண்டிலும் சிவகாமி உண்டு. பிரபை உண்டு. சடை இல்லை. தூக்கிய திருவடி உயர்த்தித் தூக்கப்பட்டுள்ளது. முயலகண் தூக்கிய திருவடியை நோக்கிப்படுத்துள்ளன.

*ஆதிஜெகந்நாதப்பெருமாள் திருக்கோயில்*

இத்திருக்கோயிலில் விமானச்சிற்பங்கள், கண்டச்சிற்பங்கள், கோபுரச்சிற்பங்கள், மண்டபச்சிற்பங்கள் போன்றவை இடம்பெறவில்லை. சுதை சிற்பங்களும் அருகிலேயே காணப்படுகின்றன. மூலவர் சந்நிதியில் கருவறை அதிட்டானத்தை இராமவதார காட்சிகளும், அனுப்பு மண்டபத்தில் சுதை சிற்பங்களாக தசாவதார சிற்பங்களும் காணப்படுகின்றன. இவையும் பொலிவிழந்து தெளிவற்ற நிலையிலேயே காணப்படுகின்றன. திருப்பணி செய்த பொழுது சுண்ணாம்புக் காரைகளையும், சிமெண்ட் போன்றவற்றையும் பயன்படுத்தியதால் பிற சுதை சிற்பங்களும் கண்ணுக்கு புலப்படாதவண்ணம் மறைந்துவிட்டன.

*செப்புத் திருமேனிகள்*

***இராமேசுவரம் இராமநாதசுவாமித் திருக்கோயில்***

இத்திருக்கோயிலில் இராமர் செப்புத் திருமேனிகள் உள்ளன. இவற்றிற்கு நாள்தோறும் முறைப்படி வழிபாடுகள் நடத்தப்படுகின்றன. கோயிலில் உள்ள சிறப்பான ஆறு செப்புத் திருமேனிகள் இராமர், சீதை, இலக்குவணன், அனுமன், துர்க்கை, விநாயகர் திருமேனி இவை சோழ நாட்டில் கி.பி. 10ம் நூற்றாண்டில் வார்க்கப்பட்டவையாக அறியப்படுகின்றது.

இராமேசுவரத்திற்கு வருகை வந்த முதலாம் பராந்தக சோழமன்னனால் இச்செப்புத்திருமேனிகள் வழங்கப்பட்டிருக்கவேண்டும் என்பது வரலாற்று யூகம். நான்கு கரங்களும் வலம்புரி துதிக்கையை கொண்ட விநாயகப்பெருமான், இராமர், சீதை, இலக்குவணன், அனுமன் ஆகிய செப்புத்திருமேனிகள் சோழர் மன்னர்களது கலைப்பாணியைச் சார்ந்தவை என அறியப்படுவதோடு சோழர்கள் ஆட்சியின் கீழ்

இருந்த தொண்டைமண்டலத்தில் வடக்குப் பருத்திக்குடி, பகாயூர் ஆகிய ஊர்களில் கண்டெடுக்கப்பட்ட இராமர், சீதை, இலக்குவன் சிலைகளை ஒத்தனவாக உள்ளன என தொல்பொருள்துறை இயக்குநரான டாக்டர். நாகசாமி அவர்கள் கூறியுள்ளார்கள்.(1)

குதிரையினில் ஏறிவரும் தோற்றத்தில் சேதுபதி மன்னரின் செப்புத்திருமேனி இக்கோயிலில் உள்ளது. (விஜயரகுநாத சேதுபதி) சோழர் காலத்தோற்றத்தை நினைவூட்டும் காளியின் செப்புத்திருமேனி (ஒன்பதாம் நூற்றாண்டு) உமையுடன் மகேசுவரர் வீற்றிருக்கும் செப்புத்திருமேனிகள். இத்தல செப்புத்திருமேனிகளில் கையில் லிங்கத்தை ஏந்தியிருக்கும் அனுமன் செப்புத்திருமேனியினை சிறப்பாக கூறலாம்.

*உத்தரகோசமங்கை மங்களநாத ஜெகந்நாதப்பெருமாள் திருக்கோயில்*

ஐம்பொன்னாலான சோமாஸ்கந்தர், அர்த்த நாரீஸ்வரர், நடராஜர் (உற்சவர்) ஆகியோரின் செப்புத்திருமேனிகள் உள்ளன. இவை தவிர மாணிக்கவாசகர், முருகன் செப்புத்திருமேனிகளும் உள்ளன.

*திருப்புல்லாணி ஆதி ஜெகந்நாதப்பெருமாள் திருக்கோயில்*

இராமர், இலக்குவண், சீதை மற்றும் அனுமன், பரதன் செப்புத்திருமேனிகளும், உற்சவத்திருமேனிகளும் உள்ளன.

***ஓவியக்கலை ஆய்விற்குட்பட்ட திருக்கோயில்களில்***

***இராமேசுவரம் இராமநாதசுவாமித் திருக்கோயில்***

இக்கோயிலின் சோபன மண்டபத்தின் மேற்கூரையில் கணபதி சுப்பிரமணியர், நந்திகேசுவரர் ஓவியங்கள் அழகுற தீட்டப்பட்டுள்ளன.

அனுப்பு மண்டபத்தின் மேற்கூரையில் ஊர்த்துவ தாண்டவம், ஆனந்தத்தாண்டவம், கால்மாறி ஆடியது (மதுரை) காளிகோ தாண்டவம், திரிபுரத்தாண்டவம் என நடராஜரின் தாண்டவ ஓவியங்கள் சிறப்பாக வரையப்பட்டுள்ளன.

அம்பாள் சந்நிதி கல்யாண மண்டப முகப்புக் கூரையில் சிவபெருமானின் கைலாயக் காட்சியும், இருமருங்கிலும் பூத கணங்களும் இடம்பெற்றுள்ள காட்சியும் சிறப்புள தீட்டப்பட்டுள்ளன.

*உத்தரகோசமங்கை மங்களநாத சுவாமித் திருக்கோயில்*

அம்மன் தபசு மண்டபத்தின் மேற்கூரையில் பலவகை வண்ணங்களால் தீட்டப்பட்ட ஓவியங்கள் உள்ளன. இதில் குறிப்பிடத்தக்க ஓவியங்கள் அம்மனின் தபசு ஓவியம் மற்றும் இறைவனின் சொரூப காட்சி ஓவியமாகும்.

அம்மனின் தபசு ஓவியத்தில் அம்பாளின் திருமேனி, தத்ரூபமாக வரையப்பட்டுள்ளது. அம்பாள் வலது காலின் கட்டை விரலை, (பூரண கும்பத்தின் மீது தேங்காயும், அதன்மேல் எலுமிச்சைப் பழத்தையும் வைத்து) பழத்தினுள் செருகியுள்ள ஊசியால் அழுத்தி ஒற்றைக் காலில் தபசு செய்வது போன்ற ஓவியம் இயற்கை:யான கலவைப் பொருட்களையும் பயன்படுத்தி வண்ணமயமாகத் தீட்டப்பட்டுள்ளது.

நடராஜர் சந்நதியின் சோபன மண்டபத்திலும் பல நிறத்தில் ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன. குறிப்பாக ஒரிரு ஓவியங்களை இவ்விடம் காண்போம்.

நடராஜரின் ஆனந்தத் தாண்டவ ஓவியம் காணப்படுகிறது. சடை உண்டு, பிரபை உண்டு, சிவகாமி உண்டு, முயலகன் பிடித்துள்ள பாம்பின் தலையின்மேல் தூக்கிய திருவடியுள்ளது. இருபக்கமும் பதஞ்சலியும் வியாக்கிரபாதரும் வணங்கிய நிலையில் உள்ளனர்.

மாணிக்கவாசகரின் முந்தைய பிறவியின் வரலாற்றை உணர்த்தும் வகையில் ஓவியம் தீட்டப்பட்டுள்ளது. அக்னி தீர்த்தமும், அக்னி தீர்த்தக் கரையில் இலந்தை மரமும் தீட்டப்பட்டுள்ளன. அதன் அருகில் மாணிக்கவாசகர் ஏடு தாங்கியகையுடன் காட்சியளிக்கின்றார். அவரின் எதிர்புறமாக சிவபெருமான் சடாமுடியுடன் புலித்தோலுமாகக் காட்சியளிக்கின்றார். அக்னி தீர்த்தத்தில் நெருப்புப் பிழம்பு தோன்றிய நிகழ்ச்சியும் அழகுறத் தீட்டப்பட்டுள்ளன.

வலதுபுறத்தில் கண்ணப்ப நாயனாரின் வேட்டுவ வடிமும், இறைவனுக்காகக் கண் விழிகளைத் தோண்டுவார் போன்ற காட்சியும், இலிங்கத்தின் மீது அடையாளமாகத் தன் காலை ஊன்றியுள்ள காட்சியும் சிறப்பாகத் தீட்டப்பட்டுள்ளன.

அம்மன் சன்னதியில் மகா மண்டபம் முழுவதும் பல வண்ணங்களில் மலர் போன்ற வட்டவடிமான ஓவியங்களைப் பிரதானமாகத் தீட்டப்பட்டுள்ளன. இவை மண்டபம் முழுவதும் ஒரே சீராகத்தீட்டப்பட்டு, இம்மண்டபத்தை அழகுறச் செய்கின்றன. திருவிளையாடல் புராணச் செய்திகளும் தீட்டப்பட்டுள்ளன.

நடராஜர் சன்னதியிலும், தபசு மண்டபத்திலும் உள்ள ஓவியங்கள் சுமார் ஐந்நூறு ஆண்டுகள் பழமை வாய்ந்தவை. ஆனால் இன்றைய நிலையில் சில இடங்களில் அழிந்துள்ள நிலையில் காணப்படுகின்றன.

*திருப்புல்லாணி ஆதிஜெகந்நாதப்பெருமாள் திருக்கோயில்*

இத்திருக்கோயிலில் கடந்த 2002ம் ஆண்டில் மஹாகும்பாபிஷேகம் நடைபெற்ற பொழுது வரையப்பெற்ற ஓவியங்களே இன்றைய நாளில் இத்திருக்கோயிலில் இடம்பெற்றுள்ளன. அவை பின்வருமாறு:

மூலவர் கருவறையில் வெளிப்புறம், வலதுபக்கம் தைத்தியசூத(ன்) மஹாவிஷ்ணு (குஜராத்) ஆலிலைக்கண்ணன், ஸ்ரீலட்சுமி நரசிம்மர் ஓவியங்கள் வரையப்பட்டுள்ளன. பட்டாபிஇராமன் சந்நிதியின் பின்புறம், சந்தான கோபாலக்கிருஷ்ணன் சந்நிதியில் இடப்புறச் சுவற்றில் ஸ்ரீ இராமர் பட்டாபிஷேக ஓவியம், வெண்ணைத்தாழி கண்ணன், வசுதேவர் கண்ணனை கோகுலத்திற்கு மீட்டல் ஓவியத்தில் கடல் அலைகளுக்கு இடையே தலையில் குழந்தைக்கிருஷ்ணனை சுமந்தும் ஆதிசேசன் குடைபிடித்தும் வருகின்ற காட்சியும் தத்ரூபமாக வரையப்பட்டுள்ளன. அடுத்ததாக கீதா உபதேசக் காட்சியும் தீட்டப்பட்டுள்ளன. இவையே இக்கோயிலில் இடம்பெற்றுள்ள சிறப்பான ஓவியங்களாகும்.

*இசைக்கலை*

ஆய்விற்குட்பட்ட திருக்கோயில்களில் இராமேசுவரம் இராமநாதசுவாமித் திருக்கோயில் உத்தரகோசமங்கை மங்களநாதசுவாமித் திருக்கோயில்களில் நித்தியப் பூசையின் போது ஆறுவிதமான இராகங்கள் விசேஷமாக இசைக்கப்படுகின்றன.

| *பூசை வேளை* | | *இசைக்கப்படும் இராகங்கள்* |
|---|---|---|
| 1. திருவனந்தல் | – | பூபாளம், பிளகரி |
| 2. காலசந்தி | – | சாவேரி, அசாவேரி, சுத்தசாவேரி |
| 3. உச்சிக்காலம் | – | மணிரங்கு, மத்தியமாவதி |
| 4. சாயரட்சை | – | பூர்வ கல்யாணி, கல்யாணி, வசந்த இராகம், மோகனம் |
| 5. அர்த்தசாமம் | – | கானடா, ஆபேரி |
| 6. பள்ளியறை பூசை | – | ஆனந்த பைரவி இராகம். |

ஆய்விற்குட்பட்ட சைவ சமய கோயில்களில் "சாரங்கி வாத்தியம்" இருந்ததாகவும் மாலைநேரத்தில் சிவசந்நிதியில் தேவாரம் பாடி சாரங்கி வாசித்தால் சிவபக்தி விளையும் என்ற கருத்திற்கிணங்க இக்கோயில்களில் இது நடைமுறையில் இருந்ததாக அறியப்படுகிறது. நாளடைவில் மறைந்துபட்டு இன்று இப்பழக்கம் இல்லாமல் போய்விட்டது என்பதனை ஆய்வின் வழி அறியமுடிகின்றது.

*திருப்புல்லாணி ஆதி ஜெகந்நாதப்பெருமாள் திருக்கோயில்*

| | | |
|---|---|---|
| 1. காலசந்தி | – | தன்னியாசி, கேதாராகவல்லி |
| 2. உச்சிக்காலை | – | மத்திமாவதி, ஸ்ரீஇராகம் |
| 3. சாய இரட்சை | – | கல்யாணி, சங்கராபரணம் |
| 4. அர்த்தஜாமம் | – | இங்கு கிடையாது |
| சாமிப்புறப்பாடு | – | நாட்டை, மல்லாரி |
| தேரோட்டம் | – | ஓடம், கப்பல் இராக ஆராதனை |

### III.4. *சிற்பம் அமைக்கப் பயன்படும் பொருட்கள்*

மெழுகு, அரக்கு, சுதை, மரம், தந்தம், கல், பஞ்சலோகம் முதலியவைகளினால் சிற்ப உருவங்கள் அமைக்கப்பட்டுள்ளன என அறிய முடிகிறது.

> **"கல்லும் உலோகமும் செங்கலும் மரமும்**
> **மண்ணும் சுதையும் தந்தமும் வண்ணமும்**
> **கண்ட சருக்கரையும் மெழுகும் என்றிவை**
> **பத்தே சிற்பத் தொழிற் குறுப் பாவன"**
>
> **-திவாகர நிகண்டு 12-வது பல்பொருட்**
> **கூட்டத்தொரு பெயர்த் தொகுதி.**

> **"வழுவறு மானும் மண்ணத்து கல்லும்**
> **எழுதிய பாவையும்....................."**

என்றும்,

> **"மண்ணினும் கல்லினும் மரத்தினும் சுவரினும்**
> **கண்ணிய தெய்வதம் காட்டுநர் வகுக்க"**
>
> **-மணிமேகலை**

என்றும் இலக்கியங்கள் குறிப்பிடுவதன் மூலம் இவை நிரூபணமாகின்றன.

### III.4.1. *இரண்டு வகை சிற்பங்கள்*

சிற்ப உருவங்களை முழு உருவங்கள் என்றும் புடைப்புச் சிற்பம் என்றும் இரண்டு விதமாகப் பிரிக்கலாம். முழுஉருவச் சிற்பம் என்பது, பொருட்களின் முன்புறம் பின்புறம் என முழு உருவமும் தெரிய அமைக்கப்படுவது. புடைப்புச் சிற்பம் என்பது பொருட்களின் ஒரு புறம் மட்டும் தெரியும்படி சுவர்களிலும் பலகைகளிலும் அமைக்கப்படுவது. இவ்விரண்டு சிற்பங்களும் திருக்கோயில்களில் அமைக்கப்படுகின்றன.

### III.4.2. *சிற்பத்தில் மறைபொருள்*

திருக்கோயில் தெய்வத்திரு உருவங்கள் மறைபொருளாகக் கருத்துக்களை வெளிப்படுத்துபவையாகும். கடவுள் எங்கும் நீக்கமற நிறைந்திருக்கின்றார் என்பது அனைவரின் ஏகோபித்த கருத்தாகும். இதனைச் சைவரும் வைணவரும் தமது

கடவுள் திருவுருவத்தில் அமைத்துக் காட்டுகிறார்கள். கடவுளின் உருவங்களில் நான்கு, எட்டு, என கைகள் அமைத்திருப்பது எட்டுத்திக்கு திசைகளையும் குறிப்பதற்காகவே. இதனை 'காமிகா ஆகமம்' என்ற நூல் தெளிவுபடுத்துகின்றது.

### III.4.3. *படிம நூல்கள்*

சைவ, வைணவ ஆகம நூல்கள் படிமங்களைப் பற்றிய பல்வேறு செய்திகளைத் தருகின்றன. தமிழ்நாட்டில் வழக்கத்திலுள்ள சிற்பநூல்கள் படிமங்களை வார்க்கும் முறை, இலக்கணம் முதலியவற்றைக் கூறுகின்றன[23].

### III.4.4. *மானசாரம்*

மானம்–அளவு 20 அதிகாரங்களுடைய நூல் இலங்கம், மும்மூர்த்திகள், சக்தி, சமய பௌத்த உருவங்கள், பீடங்கள், வாகனங்கள், பக்தர்கள், முனிவர்கள், இயக்கர்கள், உத்தம மத்திம, அதம தசதலங்கள், தேன் மெழுகுமுறை, கண்திறத்தல் முதலியவை வருணிக்கப்படுகின்றன.[24]

### III.4.5. *சகளாதிகாரம்*

இஃது அகத்தியரால் இயற்றப்பட்டது. சகளம்–அவயங்களுடன் கூடிய உருவம், மூர்த்திகளின் உருவ இலக்கணங்கள், கண் திறத்தல், நாயன்மார் ஆழ்வார் உருவங்கள் செய்யும் வகை முதலியன கூறப்பட்டுள்ளன. இவையாவும் வடமொழியில் இயற்றப்பட்டவையாம்[25].

### III.4.6. *செய்முறை*

சிற்ப இலக்கணங்களின்படி தேன்மெழுகினால் உருவத்தை முதற்கண் செய்து கொள்கின்றனர் எனவும், பிறகு பாதப்பகுதியில் நீண்ட குழலைச் செய்கிறார்கள் எனவும், மெழுக்கு உருவம் கருவாகுபொழுது இதன்மீது களிமண் கலவை பூசப்படுகின்றது என்பதனையும் இங்கு அறிகின்றோம். களிமண், உமிக்கருக்கு, பஞ்சு, உப்பு சேர்த்து அரைக்கப்பட்ட கலவையாகவும் தயாரிக்கப்படுகின்றது. இக்கலவையைக் காய வைத்து மூன்று முறைக்கு உருவின் மீது பூசுகின்றனர். குழல்வாயை மூடக்கூடாது என்றும் அறியப்படுகிறது. தேன்

மெழுகு உருவத்தால் எடைபோல் எட்டு மடங்கு எடையுள்ள உலோகம் இவ்விடம் தேவைப்படுகின்றது எனலாம். கருவை நெருப்பிலிட்டுச் சுட வேண்டும். அப்போது மெழுகு குழல் வழியாக வெளிப்படுகின்றது. இம்மெழுகு முற்றிலும் வெளிப்படுத்தப்பட வேண்டும் என்ற செய்முறை இங்கு அறியப்படுகிறது. மேலும்,

ஒரு புடக்குடுவையில் உலோகத்தையிட்டு உருக்க வேண்டும். உருக்கியின் புடக்குடுவையை வெளியே எடுக்க வேண்டும். அதன் உச்சியில் இரும்புக் கம்பியால் துளை செய்ய வேண்டும். களிமண் அச்சின் வாயினை எரிகின்ற திரியை வைத்துச் சுத்தமாக்க வேண்டும். நீர்போல் உருகியிருக்கும் உலோகத்தை ஒரே சீராகக் குழலின் வாய் நிரம்பும் வரை ஊற்ற வேண்டும் தானாகவே அச்சு நன்கு ஆறியவுடன் சுட்ட மண்ணைக் கவனத்துடன் பெயர்த்து எடுக்க வேண்டும். தேன் மெழுகினால் ஆகிய உருவம் அங்க அவயங்களுடன் எப்படி இருந்ததோ அப்படியே உலோகத்தினால் ஆகிய படிமம் கிடைக்கும் பிசிர்களைச் செதுக்கி அப்புறப்படுத்த வேண்டும். இவ்வாறு கனமான படிமம் கிடைக்கப்பெறுகின்றது.

பொன்னாலான உருவைச் செய்ய முதலில் மண்ணைப் பிடித்து அதன் மீது மெழுகினால் உருவத்தைச் செய்ய வேண்டும். பிறகு மண்பற்று போட்டுச் சுடவேண்டும். மெழுகு உருகி வெளிவந்ததும், உலோகத்தை உருக்கிச் செலுத்தி குளிரவைக்க வேண்டும். பிறகு மண்பற்றை அப்புறப்படுத்தினால், பொன்னாலான உலோகப்படிமம் கிடைக்கும். இவ்வாறு செய்யப்படும் உருவத்தைத் தெய்வத்திருமேனியாக மாற்ற கண்திறப்பு என்ற சடங்கினை செய்விக்கின்றனர். ஸ்தபதி தங்க ஊசி அல்லது உளியால் கண்ணைத் திறந்ததும் தெய்வ சக்தி நிரம்புகிறது என மக்களால் நம்பப்படுகிறது.

*தொகுப்புரை*

இத்தலைப்பில் ஆலயங்கள் சமுதாய மையங்கள என்ற தலைப்பிலும், திருக்கோயில்களோடு நேரடி தொடர்புடைய கலைகளான கட்டடக்கலை, சிற்பக்கலை போன்ற நுண்கலைகள் இடம்பெறும், இடம்பெற்றுள்ள திறமும் ஆய்வு செய்யப்பட்டு பல்வேறான செய்திகளை பெறமுடிகின்றது.

திருக்கோயிலில் உறையும் இறைவன், இறைவியை அம்மையப்பனாக, அன்புடைய சுற்றமாக, உறவாக பாவித்து போற்றிய பக்தி நிலையை அறியமுடிகின்றது. திருக்கோயில்கள் மானுட வாழ்வின் பல்வேறு நிலைகளிலும் இடம்பெறும் ஒப்புரவு–கூட்டுவாழ்க்கை, இல்லற மாண்பு, விழவுமலி வாழ்க்கை போன்றவற்றின் அடிப்படைத் தத்துவத்தை உணர்த்தும் வகையில் விளங்கியமையை சான்றுகளுடன் இப்பகுதியில் பெற முடிகின்றது.

கல்விப் பணியாற்றுவதிலும், கலை வளர்க்கும் கூடமாகவும், மருத்துவ சாலையாகவும், நீதி, நிதி வழங்கிய சபையாகவும், தமிழாய்வில் பங்கு பெற்றத்திறமும், திருத்தொண்டுப்பயிற்சி அளிக்கும் மையமாகவும், வரலாற்று ஏடாகவும் திகழ்ந்துள்ள அருமைப்பாட்டினை நன்கு அறிகின்றோம். இவ்வாறு ஆலயங்கள் சமுதாய மையங்களாக திகழ்கின்றதை சான்றுகளின் வழி அறியமுடிகின்றது.

திருக்கோயில்களும், அழகுக்கலைகளும் என்ற தலைப்பில் அழகுக்கலைகள் போதுமான அளவு அறிமுகம் செய்யப்பட்டுள்ளது. ஆய்விற்குட்பட்ட திருக்கோயில்களில் கட்டடக்கலையின் கூறுகளான அதிட்டானம், பித்தி, பிரஸ்தரம், கிரீவம், சிகரம், கலசம் போன்ற உறுப்புகள் இடம்பெற்றுள்ள திறம் நன்கு விவரிக்கப்பட்டுள்ளது. சிற்பக்கலையும் பற்றி கூறப்பட்டுள்ளன. கட்டடக்கலையில் அதிட்டான அமைப்புகள், இருவகை அதிட்டானமும் உயரமும், அமைப்பும் அளவுகளும், அதிட்டான அங்கங்கள், அதிட்டான வகைப்பாடும் நெறிமுறைகளும், அதிட்டான அலங்கார மரபு உள்ளிட்ட செய்திகள் வரைபடங்களின் உதவியுடன் நன்கு விவரிக்கப்பட்டுள்ளது.

சிற்பக்கலையில் கால நிர்ணயம், பிற்கால பாண்டியர் கலை ஆகியன ஆய்வு செய்யப்பட்டு சான்றுகளுடன் விளக்கப்பட்டுள்ளது. ''திருக்கோயிலும் சிற்பக்கலையும்'' என்றத் தலைப்பின் வாயிலாக சிற்பம் அமைக்கப் பயன்படும் பொருட்கள், இரண்டு வகைச் சிற்பங்கள், செய்முறை ஆகியன பற்றியும், ஆய்விற்குட்பட்ட திருக்கோயில்களில் சிற்பக்கலையின் திறம், சிற்பத்திருமேனிகள்

பற்றிய செய்திகள் விளக்கப்பட்டுள்ளன. மேலும் ஆய்விற்குட்பட்ட திருக்கோயில்களில் ஓவியக்கலை, இசைக்கலை இடம்பெற்ற திறமானது சான்றுகளுடன் எடுத்தாளப்பட்டுள்ளன. அவற்றை விளக்கும் விதிமுறைகள், சூத்திரங்கள் அடங்கிய நூல்கள் பற்றியும் அறியமுடிகின்றது.

## அடிக்குறிப்புகள்

1. கே.கே. இராமலிங்கம், சிதம்பரம் நடராசர் திருக்கோயில், ப–76
2. மேலது, ப–87
3. தொல்காப்பியம் புறத்திணையியல் : 83
4. தவத்திரு குன்றக்குடி அடிகளார், ஆலயங்கள் சமுதாய மையங்கள்,ப–15.
5. மேலது, ப–15
6. மேலது, ப–17
7. மே.கு.நூ. ப–18
8. மேலது, ப–17
9. டாக். எஸ்.எம். கமால், சேதுபதியின் வரலாறு, ப–61.
9. ஆலயங்கள் சமுதாய மையங்கள், ப–20.
10. திருவாசகம்
11. பெரியபுராணம்
12. ஆல.சமு.மை, ப–21
13. ஆல.சமு.மை : ப–29
14. பெரியபுராணம் (விழவு–விழா)
15. திருமூலர் திருமந்திரம்
16. திருவிளையாடற்புராணம்
17. நெடுதல் வாடை (75–78)
18. அகம் : 167–13
19. பெரும் (405)
20. புறம் 378:5–7
21. நெடுநல்வாடை 109–112

# இயல் - 5

## சேதுநாட்டுத் திருக்கோயில்களின் சிறப்புகள்

*முன்னுரை*

சேது என்பதற்கு செல்கறை, தீர்த்தக்கம்பம், இராமேசுவரம், சிவப்பு எனப் பல பெயருண்டு. 'சேதுபதி மன்னர்களின் ஆட்சிக்குட்பட்ட பகுதியே சேதுபதிநாடு. சேது சீமை என வழங்கப்படுகிறது. இச்சேதுசீமையின் மன்னர்களது ஆட்சி கி.பி. 15ம் நூற்றாண்டுத் தொடக்கம் முதல் இருந்ததாக அறியமுடிகிறது'[1]. ஆன்மீகச் செம்மல்களாக விளங்கிய சேதுபதி மன்னர்களின் ஆட்சியில் இருந்த சேதுநாட்டில் புராண, இதிகாச முக்கியத்துவம் பெற்றத் திருக்கோயில்களும், பாடல் பெற்ற சிவத்தலங்களும் மங்களாசாசனம் பெற்ற வைணவ ஆலயங்களும் நிறைந்துள்ளன.

பாண்டிய நாட்டுச் சைவத்தலங்கள் பதினான்கு என்பர். "இவர்கள் ஆட்சிக்குட்பட்டிருந்த நாட்டில் பாண்டி பதினான்கு பாடல் பெற்ற சிலத்தலங்களில் திருப்புனல்வாயில், திருவாடானை, திருப்பூவணம், திரு.இராமேசுரவம், திருஉத்தரகோசமங்கை, திருப்பெருந்துறை, தென்மருதூர் (நயினார் கோயில்) என்ற சிவாலயங்களும், திருமால் திவ்ய தேசங்களில் திருக்கோஷ்டியூர், திருப்புல்லாணி என்ற வைணவத் திருத்தலங்களும் சேதுசீமைக்குப் புகழ்சேர்க்கும் வகையில் இன்றும் நின்று நிலவுகின்றன"[2] என்பர்.

இச்சேதுநாட்டுத் திருக்கோயில்கள் இவ்வாய்வேட்டின் ஆய்வு எல்லையாக அமைந்துள்ள (1) இராமேசுவரம் இராமநாதசுவாமித் திருக்கோயில், (2) திருஉத்தரகோசமங்கை மங்களநாதசுவாமித் திருக்கோயில், (3) திருப்புல்லாணி ஆதி ஜெகந்நாதப் பெருமாள் திருக்கோயில் ஆகியவற்றின் பல்வேறான சிறப்புச் செய்திகள் இவ்வியலில் சுட்டப்படுகின்றன.

## I. *இராமேசுவரம் இராமநாதசுவாமித் திருக்கோயில்*

இராமபிரானும் சீதாப்பிராட்டியும் ஈஸ்வரனாகிய சிவனை, லிங்க வடிவில் பிரதிஷ்டை செய்து வழிபட்ட இடம் இராமேசுவரம் என்பதால் புராணங்களும் தொன்மையான வழக்குகளும் பொருந்தி நிற்கின்றன. ஆன்மீக ஒருமைப்பாட்டை வலியுறுத்தும் இந்நிகழ்ச்சி மகா விஷ்ணுவின் அவதாரமாகிய இராமன் மகா தேவராகிய சிவனை வழிபட்டமை காலங் காலமாக மக்கள் மனத்தில் பதிந்து இடம்பெற்றுள்ளன. இத்திருத்தலத்தைச் சைவ, வைணவ ஒருமைப்பாட்டுக்குச் சிறப்பான பெருமைமிக்க பெருந்தலமாக விளங்கச் செய்துள்ளது அரியும், சிவனும் ஒன்றே என்ற சைவ, வைணவ சமரச சித்தாந்தத்திற்கு இத்தலத்தை விட சிறந்த சான்று வேறு கிடையாது.

### *மூர்த்தி, தல, தீர்த்த சிறப்புகள்*

இத்திருத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் மூர்த்தி, ஸ்ரீராமநாதர், உருவம், அருவம் ரூபாரூபம், என்றும் மூவிலக்கணங்களால் பேசப் பெறும் இறைவன் வடிவத்தில், "ரூபாரூபம்" என்ற சிவலிங்கத் திருமேனி கொண்டு, அருள்பாலிக்கிறார். இந்த சிவலிங்க வடிவத்தைச் சிவாகமங்கள் நாத பிந்து வடிவங்கள் எனப் பேசப்பெறுகின்றன. சிவம், சக்தி என்ற இரண்டு தத்துவங்களை உருவகப்படுத்திக் காணுமிடத்து இந்த வடிவமே கிடைக்கின்றது. நாதம் என்பது ஒலி வடிவம். பிந்து என்பது ஒளி வடிவம், ஒலி நீண்டுகொண்டே போவதும் ஒளிவட்டமிட்டு விரிவடைவதும் நாம் நமது உலக வழக்கில் கண்ட உண்மையாகும். இவ்வாறு ஒலியும் ஒளியுமாகிய நாத பிந்துக்களின் வடிவத்தைப் போகக் காட்சியிற்கண்ட ஆன்றோர் நமக்கு அவைகளை உருவகப்படுத்திச் சிவலிங்கத் திருமேனியாக அமைத்தனர் போலும். முகம், கண், காது முதலிய உருவமில்லாத ஒரு நீண்ட வடிவம் நாதவடிவமான லிங்கமாகவும் வட்டம் என்ற அமைப்பில் விரிவடைந்து உலகப் பொருள் யாவையும் தன் ஒளியால் தோன்றுதல் செய்யும் சக்திவடிவமான பிந்துவை உருவகப்படுத்தும் உருவ நிலையிலும் இவ்விரண்டும்

சேர்ந்த வடிவம், ரூபாரூபம் என்ற பெயரில் உலகெங்கும் போற்றிப் புகழ சிவலிங்கத் திருவுருவங்களை ஆசேதுஹிமாசலம் காணக்கிடைக்கிறது. கடல் கடந்தும் நமது சமய உண்மை விளக்கும் பழமையான சின்னமாக ஆங்காங்கே காணப்படும் விபரங்கள் நாளிதழ்கள் வாயிலாக அறிகிறோம்.

***திரிவிதம் வ்யக்தமவ்யக்தம் வ்யக்தாவ்யக்தம் ததைவச***

***வ்ய்க்ததந்து ஸகளாகாரம் அவ்யக்தம் லிங்கமுச்யதே***

என்று காரணகமத்தில் காணப்படுகிறது. இந்த மூர்த்தி, 'ஸைகதம்' உலக மாதாவாகிய சீதாப்பிராட்டியாரின் திருக்கரத்தால் ஆக்கிய மணல் லிங்கம் என்று சேதுபுராணம் பேசுகிறது. ஆனந்த ராமாயணம் என்ற காவியத்தில்,

***"சேதுமாரபா மாணஸ்து விக்நேசம் ஸ்தாப்ய ராகவ:***
***நவக்ரஹாணாம் பூஜார்த்தம் பாஷாணாந்நவ ஸாதராத்!***
***நளஹஸ்தேந ஸம்ஸ்தாப்ய பூர்வம் தத்ரமஹேதநெள***
***தத; ஸாகரஸம்யோகே த்வநாம்நா லிங்கமுத்தமம்!!***
***ஸ்தாபயாமீதி நிச்சித்ய மாருதிம் வாக்ய மப்ரவீத்! "***

எனவும், அத்யாத்ம ராமாயணம் என்ற காவ்யத்தில்

***"சேதுமாரபா மாணஸ்து தத்ர ராமேசுவரம் சிவம்***

***ஸம் ஸ்தாப்ய பூஜயித்வாஹே ராமோலோக ஹிதாயவை!!"***

சேதுவைக் கட்ட ஆரம்பபம் செய்த ராமர் உலக நன்மைக்காக சிவலிங்க பூஜை செய்தார் எனவும் காணப்படுகிறது. ஆகவே இந்த மூர்த்தி சிவாகமங்களில் காணப்படுகிற ஸ்வாயம்புவம், தைவிகம், திவ்யம், ஆர்ஷம், பாணம், ராக்ஷஸம், மாறுஷம் என்ற ஏழுவகையில் மகாவிஷ்ணுவினால் பிரதிஷ்டை செய்யப்பெற்ற திவ்யலிங்கம் ஆகும். ஸ்வாயம்புவம், தானே முளைத்தது. தேவியினால் பிரதிஷ்டை செய்யப்பெற்றது. தைவிகம், விஷ்ணு முதலான தேவர்களால் பிரதிஷ்டை செய்யப்பெற்றது. திவ்யலிங்கம், ரிஷிகளால் ஸ்தாபனம் செய்தது. ஆரிஷம், பாணாசுரனால் பூஜித்து நர்மதை முதலான நதிகளில் கிடைப்பது பாணலிங்கம், அசுரர்கள் பூஜித்தது, ராக்ஷஸம். மனிதர்களால் பிரதிஷ்டை செய்யப்பெற்றது, மாறுஷலிங்கம் என சிவாகமங்கள் பேசுகின்றன,

நினைத்தமாத்திரத்தில் முக்தி தரக்கூடிய மூர்த்திகளில் இராமேசுவரம் லிங்கமூர்த்தி முதன்மையானவர்.

*தலம்*

தலம் தோன்றிய காலம் என இராமாயணக் காவியத்தை நோக்குமிடத்து, திரேதாயுகத்தில் நடந்ததாகத் தெரியவருகிறது, நமது சம்பிரதாயங்களின்படி எக்காரியத் தொடக்கத்திலும் தேச காலஸ்மரணங்கள் செய்து துவங்குவது வழக்கமாகக் காணப்படுகிறது. அந்தக் கணக்கின்படி இரண்டு பரார்த்த காலத்தை ஜீவிதமாகவுள்ள பிர்மகற்பத்தில் பிரம்மாவிற்கு இரண்டாயிரம் சதுர்யுகங்கள் ஒரு பகல் எனவும் அதன் முதற் பகுதியில் இரண்டாவது ஜாமத்தில் மூன்றாவது முகூர்த்தத்தில் ஏழாவது மறுவாகிய வைவஸ்வத மறுவின் ஆட்சிக்காலத்தில் இருபத்தி எட்டாவது சதுர்யுகம் தற்போது நடைபெறுவதாகப் பேசப்படுகிறது. வால்மீகி ராமாயணத்தில் காணப்படும் வருஷம் காணப்படாத மாத நக்ஷத்திரதிதி லக்னங்களையும் கிரக நிலைகளையும் ஜோதிட முறையில் கணித்ததில் வால்மீகி மகரிஷி குறிப்பிட்ட நாள் பதினெட்டாவது சதுர்யுகத்தில்தான் அமைகிறது. சித்திரை மாதத்தில் புனர்வசு கூடிய கடகலக்னத்தில் பஞ்சமியில் ஸேநாதிபதியாக்குவிக்கும் சூர்யன் உச்சமும் ராஜபதவி தரும் செவ்வாய் உச்சமும் சக்ரவர்த்தியாக்கும் குரு உச்சமும் லக்ஷமிசம்பன்னறாகச் செய்யும் சுக்ரன் உச்சமும் ராஜ ராஜாக்களையும் அடிபணியச்செய்யும் சனி உச்சனாகவும் குரு சந்திரசமாயோகமும் கூடிய தினம் ஏற்படுகிறது. (இதனை பிரபல ஜர்மானியர் ஒருவரும் கணக்கிட்டு சரி என ஒப்புக்கொண்டு எழுதியுள்ளார்) ஆகவே இராமபிரானால் ஏற்படுத்தப்பட்ட இந்தத் தலம் தோன்றி பத்து சதுர்யுகங்கள் கடந்து விட்டன என்று இதன் தொன்மை புலனாகிறது. இதனை காந்த புராணம் பாடிய பெரியார், “ஏதிலாக் கற்பகம் எண்ணிலா சென்றன் ஆதலால் இக்கதை அனந்தமாம்” என்று கூடியபடி இராமகாதை, கடல் கடந்த சுமத்ரா, ஜாவா, முதலிய இடங்களிலும் பல பல மாறுபாடுகளுடன் பேசப்படுவதன் உண்மை விளங்குகிறது.

*தீர்த்தம்*

சேதுவில், ஆடி, தை, மாத, அமாவாசை தினங்களிலும் கிரகணபுண்ய காலங்களிலும் மற்றும் மகோதய அர்த்தோதய புண்ய காலங்களிலும் ஸ்நானம் செய்பவர்கள் மீட்டிங்குவந்து வினைப்பிறவி சாராது சிவமாந்தன்மை பெற்று நலமாம் பெறுவாழ்வு பெறுவர் என்பது திண்ணம். இதனை,

"சேதுஸ்நானம் கீர்த்திம் சத்க தாயா:

பூஜாம் சம்போ: ஸ்ரீபாதே ஸத்வ் ரதானி!

தானம் சிரார்த்தம் கர்ம நாகப்ரதிஷ்டம்

சூர்யாதே தௌப்ராப் நூயாத் ஸந்ததிமஸ:!!"

என்ற பாடல் தெளிவுபடுத்துகின்றது.

## I.1. *புராணங்களில் இத்திருத்தலம்*

மனிதவர்க்கம் உயர்வதற்கும் நன்னெறியைப் உய்ப்பதற்கும் உறுதுணையாக அமைந்து விளங்குவன. நான்கு வேதமும், ஆறு சாஸ்திரமும், பதிணென் புராணங்களுமாகும். இப்புராணங்கள் ஏறத்தாழ ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு இருந்த இந்திய சமுதாய மக்களது ஆன்மீக, அறிவு வளர்ச்சிக்கு ஏற்ப இயற்றப்பட்டவை. அவை பெரும்பாலும் அன்று வடமாநிலங்களில் வழக்கில் இருந்த சமஸ்கிருத மொழியில் வரையப்பெற்றவை. இத்தலம் பற்றிய குறிப்புகள் இலக்கியங்களில் காணப்படுகின்றன. இப்புராணங்களில் இராமேசுவரம் திருத்தலம் பற்றிய விரிவான தகவல்களை அளிப்பது ஸ்கந்தபுராணம்.

## 1.1. *ஸ்கந்தபுராணம்*

"இந்தப் புராணத்தின் மூன்றாவது தொகுதியில் உள்ள ஐம்பத்திரண்டு அத்தியாயங்கள் 'பிரம்ம காண்டம்' எனப் பெயர் சூட்டப்பட்டுள்ளது"(3).

"இதில் சேதுவின் பெருமை, இராமலிங்கப் பிரதிஷ்டை கந்தமாதனம், இராமேசுவரம், இராமேசுவரத்திற்கு அண்மையில் உள்ளதுமான இராமாயண இதிகாசப் பாத்திரங்களுடன் தொடர்புடைய இருபத்தைந்து புனித தீர்த்தங்கள்

பற்றியும் செய்திகள் கொடுக்கப்பட்டுள்ளன. அத்தீர்த்தங்களாவன (1) சக்கரத்தீர்த்தம் (2) வேதாளவரத்தீர்த்தம் (3) பாபவிமோசன (அ) கந்தமாதன தீர்த்தம், (4) சீதா தீர்த்தம் (5) மங்கலதீர்த்தம் (6) அமிர்த வாபி (7) பிரம்மகுண்டம் (8) அனும குண்டம் (9) அகஸ்திய தீர்த்தம் (13) இலக்குமி தீர்த்தம் (14) அக்னி தீர்த்தம் (15) சக்கரவாள தீர்த்தம் (16) கபாலதீர்த்தம் (17) சிவதீர்த்தம் (18) சங்கு தீர்த்தம் (19) யமுனா தீர்த்தம் (20) கங்கா தீர்த்தம் (21) காயத்ரீ தீர்த்தம் (22) கோடி தீர்த்தம் (23) சத்யா அம்ருததீர்த்தம் (24) மனவ்தீர்த்தம் (25) தனுஷ்கோடி தீர்த்தம்'' (4)

'இந்தப் புராணம் இப்புனித தீர்த்தங்கள் ஏற்படுத்தப்பட்ட வரலாற்றினையும் விரிவாகக் கூறுகின்றது. மேலும் இத்திருக்கோயிலையும் இங்குள்ள இறைவன் இராமநாதரையும், இராமபிரானால் பிரதிட்டை செய்யப்பட்ட லிங்கத்தையும், தண்டகமுனிவரது ஆலோசனைப்படி இராவண வதத்தினால் ஏற்பட்ட கரையைப் போக்குவதற்கு அனுமன் கைலாசம் சென்று லிங்கத்தைக் கொண்டு வரப் படைத்தது. அதனைக் கொண்டு வருவதற்குள் குறித்த சுபவேளை நெருங்கியதால் சீதாப்பிராட்டி கடற்கரை மண்ணினால் ஒரு லிங்கத்தை அமைத்து வைத்து அதனை இராமர் பிரதிஷ்டையும் பூஜையும் நடத்தினார்.

ஷேஸ்ட மாதம் சுக்கிலபட்சம், தசமி திதியில் அனுமன் லிங்கம் கொண்டு வந்தது. இராமலிங்கப் பிரதிஷ்டை அறிந்து அனுமன் வருத்தப்பட்டதும், இராமபிரான் அவனுக்கு ஆறுதல் கூறி, அனுமன் கொண்டு வந்த லிங்கத்தையும் அங்கேயே சற்று வடக்கே பிரதிஷ்டை செய்யுமாறு பணத்துப் பிரதிஷ்டை செய்தது ஆகிய செய்திகளை விரிவாகத் தெரிவிக்கின்றது' (5).

இத்துடன் 'இராமநாதர் ஆலயத்தின் மூலவர் இராமநாதரது புனிதத்தை, பெருமை சாற்றும் வகையில் இராமபிரான், சீதாப்பிராட்டி, லட்சுமணன், சுக்கரீவன் மற்றவர்களும் பாடிய நூறு செய்யுட்களும் இந்தப் புராணத்தில் கொடுக்கப்பட்டுள்ளது. சேது யாத்திரை பற்றியும், அவ்வேளையில் தேவிபட்டிணம்,

திருப்புல்லாணி (தர்ப்பசயனம்) மற்றும் தீர்த்தங்களில் செய்ய வேண்டிய தானம் ஆகியவைகளையும் இராமநாத தரிசனத்தையும் குறிப்பிடுகிறது.' [6]

### 1.2. *சிவமகாபுராணம்*

சிவமகாபுராணம் என்பது இராமேசுவர சிவத்தலம் பற்றிய இன்னொரு நூல். பாரத நாட்டின் பன்னிரு தலங்களில் உள்ள ஜோதிர் லிங்கங்களின் பட்டியல் அதில் கொடுக்கப்பட்டுள்ளன. இப்பன்னிருதல வரிசையில் ஏழாவது தலமாக திரு இராமேசுவரத் திருத்தலம் சுட்டப்பட்டுள்ளது. இதில் கூறப்பட்டுள்ள இக்கோயில் பற்றிய செய்தியாவது:– 'இலங்கைப் படையெடுப்பிற்கு முன்னதாக இராமபிரான் லிங்க வழிபாடு செய்ததாக இந்தப்புராணம் தெரிவிக்கிறது. இராமர் சீதையைத் தேடிவரும் பொழுது இராமேசுவரம் கடற்கரைக்கு வருகிறார். அவருக்குக் களைப்புடன் தாகமும் மிகுதியாகவே, நீரினைப் பருகும் முன்னர், சிவவழிபாடு செய்யாமல் நீரினைப் பருகலாகாது என்று தோன்றவே இவ்விடத்தில் சிவனை வழிபாடு செய்கிறார். சிவபக்தனான இராவணனை வெற்றி கொள்ள அருள்பாலிக்குமாறும் வேண்டி, ஈசுவரன் அருள்பெற்று, இராமர் கடல் கடந்து இலங்கை சென்றதாக இப்புராணம் குறிப்பிடுகின்றது. ஆதலால் புனித கங்கை நீரினைக் கொண்டு வந்து இத்தலமூர்த்தி இராமநாத லிங்கத்தை வழிபடுவது பற்றியும் விரிவாகக் கூறப்பட்டுள்ளது'.[7] என்பது நோக்கத்தக்கது.

### 1.3. *மத்ஸ்ய புராணம்*

'இப்புராணத்தில் பாரத நாட்டின் பழம்பெரும் புனித தீர்த்தத் தலமாக இராமேசுவரம் குறிக்கப்பெற்றுள்ளது'.[8]

### 1.4. *சேதுபுராணம்*

இப்புராணம் இராமேசுவரம் திருத்தலத்தைப்பற்றி விரிவாகச் சொல்லுகின்றது. இந்நூல் கி.பி. 15, 16ம் நூற்றாண்டுகளில் வாழ்ந்த நிரம்ப வழகிய தேசிகர் என்ற

சைவத் துறவியினால் பாடப்பெற்றது. சேதுபுராணம் என்றும் இப்புராணமும் வடமொழியில் எழுதப்பட்டது. இதனைத் தமிழில் மொழி பெயர்த்தவர் தேசிகர். இப்புராணத்தில் இத்தலத்தைப் பற்றிய, தீர்த்தங்களைப் பற்றிய மிகுதியான செய்திகள் கூறப்பட்டுள்ளன.

### 1.5. *கூர்ம புராணம்*

இராவணனை வெற்றி கொண்ட இராமர், மகாதேவலிங்கத்தைச் சேதுவின் மத்திய பகுதியில் பிரதிஷ்டை செய்து வழிபட்டதும் சிவபிரான் தன் தேவியுடன் இராமருக்கு காட்சி கொடுத்ததுடன் இராமரது பிரதிஷ்டை லிங்கத்தைத் தரிசித்து சேதுவில் தீர்த்தமாடியவர்களை விட்டு அனைத்துப் பாவங்களும் விட்டோடும் என்பதும் இப்புரணத்தின் வழி அறியலாகிறது.

### 1.6. *பத்மபுராணம்*

இந்த நூலில் இராமேசுவரமும் சேதுவும் சொல்லப்படுகின்றன. இராமர் சேதுவை மூன்று பகுதிகளாகத் தமது வில்லின் நுனியினால் பிரித்தார் என்றும் இங்குச் சிவனை இராமர் வழிபட்டார் என்றும் பத்ம புராணத்தில் குறிக்கப்பெற்றுள்ளது.

### 1.7. *சௌராபுராணம்*

இத்திருத்தலத்தைப் பற்றி சௌராபுராணத்தில், “இந்த நூலில் இராமாயணக் கதை சொல்லப்பட்டு இராமபிரான் இராமேசுவரத்தில் லிங்கப்பிரதிஷ்டை செய்ததையும் இதன் காரணமாக இங்கு ஆலயத்திற்கு ஏற்பட்டுள்ள மகத்துவத்தையும், சேது ஆராதனையினால் ஏற்படும் பாவ விமோசனத்தையும் சிறப்பாகக் குறிப்பிடுகிறது” (11) என்பர்.

### 1.8. *நாரதிய புராணம்*

“இந்த நூலின் உத்தரகாண்டம் பகுதியில், இராமேசுவரத்தின் பெருமைகளைச் சிறப்பாக விவரிக்கும் பொழுது, சேதுவில் இராமர் பிரதிஷ்டை செய்த சிவலிங்கத்தைத் தரிசனம் செய்தாலே பாபவிமோசனம் பெற்று வாழ்வின்

வளங்கள் அனைத்தும் வாய்க்கப்பெறும் என்று குறித்து இருப்பதுடன் இங்குள்ள பல தீர்த்தங்களையும் சிறப்பாகக் குறிப்பிடுகிறது'' (12) என்பர்.

பழமை வாய்ந்த இத்திருத்தலத்தின் வரலாறு பலவாறு கூறப்பட்டுள்ளது. “ஏறத்தாழ 1500 ஆண்டுகளுக்கு முன்னர் வரையப்பட்ட இந்த புராணங்களின் அடிப்படை நோக்கம் இராமேசுவரத் திருத்தலத்தின் புனிதத்தையும் பெருமையையும் பறைசாற்றுவதாகும். இந்நூல்கள் இன்றும் மக்களிடையே பக்தி நெறியையும் மானிட வாழ்க்கையின் இலக்காக புண்ணியச் செயல்களில் ஈடுபட்டு வாழவேண்டும் என்ற இலட்சியத்தை அறிவித்துக் கொண்டிருப்பதால் அவை மக்களிடையே இன்றும் பின்பற்றப்பட்டு வரப்படுகின்றன.'' (13) என்று குறிப்பிடுகின்றார்.

### I.2. *இலக்கியங்களில் இராமேசுவரம் திருக்கோயில்*

“இராமகாதையின் நாயகனான இராமபிரானைப் பற்றிய செய்திகள் கடைச்சங்க காலத்தை அடுத்த நூற்றாண்டுகளிலும் இடம்பெற்றுள்ளன. கி.பி.ஐந்து, ஆறாவது நூற்றாண்டில் மொத்த இலக்கியமான மணிமேகலையில் இலங்கை செல்வதற்கு இராமனது வானரப்படைகள் கற்களைக் கொண்டு கடலில் அணை கட்டியமைத்தது குறிப்பிடப்பட்டுள்ளது'' (14).

இராம சரித்திரத்தில் இறுதிக்களமாகிய யுத்த காண்டத்தில் இராமபிரான் இலங்கைப் படையெடுப்பிற்குக் கடலடைத்து அணைக்கட்டியது. இலங்கையில் இராவண சம்ஹாரத்தை முடித்துத் தாயகம் திரும்பிய வழியில் இராமேசுவரம் கடற்கரையில் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து மகாதேவைச் சீதாப்பிராட்டியுடன் வழிபட்டது, ஆகிய இத்திருத்தல நிகழ்ச்சிகளும் தமிழ் இலக்கியங்களில் இடம்பிடித்துள்ளன. சான்றாக சைவ, வைணவ நாயன்மார்கள், ஆழ்வார்களின் படைப்புகளில் உள்ளனவற்றைக் கூறலாம்.

### 2.1. *திருஞான சம்பந்தர், அப்பர் தேவாரப் பதிகங்கள்*

> **“கடலிடை மலைகள் தம்மாலடைத்து மால் கரும முற்றி**
> **திடலிடைச் செய்த கோயில் இரு இராமேச்சுரத்தை”**

**"தேவியை வவ்விய தென்னிலங்கைத் தசமுகன்**

**புவியிலும் முடியொன்று வித்த பழி போயற**

**ஷேயனுந் சிலை யண்ணல் செய்த கோயில்"**

**எனக் குறிப்பிடப்பட்டுள்ளது (15)**

ஆழ்வார் பெருமக்கள் தங்களது பாசுரங்களிலும் இந்நிகழ்ச்சியையும், இத்திருக்கோயிலையும் குறிப்பிட்டுள்ளனர். பெரியாழ்வாரது பாசுரத்தில்,

**"குரங்கு இனத்தாலே குரைகடல் தன்னை**

**நெருக்கி அணைகட்டி நீள் நீர் இலங்கை**

**அரக்கர் அவிய அழுகணையாலே**

**நெருக்கிய கைகளால்........................"**

என்றும்,

**"சிலையால் மராமரம் எய்ததேவனைச் சிக்கெனநாடுதிரேல்**

**தலையால் குரங்கினம் தாங்கிச்சென்று தடவரை -**

**கொண்டு அடைப்ப**

**அலைஆல் கடற்கரை வீற்றிருந்தானை................"** (16).

என்றும் குறித்துள்ளார். அவரது மகளும், கோதை நாச்சியாருமாகிய ஆண்டாள்

**"சேதுபந்தம் திருத்தினாய் எங்கள்**

**சிற்றில் வந்து சிதையேல்.................."** (17).

என்றும் பாடியுள்ளார்.

"பதினொன்றாம் நூற்றாண்டில் கச்சியப்ப சிவாச்சாரியரால் புனையப்பெற்ற கந்த புராணத்தில் இராமேசுவரத்து கந்தமாதனம் குறிப்பிடப்படுகிறது. முருகனது தானைத் தலைவர் வீரபாகு கந்தமாதனத்தில் இருந்த சூரபத்மனிடம் தூது சென்றதாகப் பாடப்பெற்றுள்ளது" (18).

பதின்மூன்றாம் நூற்றாண்டு இலக்கியமான வில்லிபுத்தூரரது பாரதத்தில் பாரதப்போர் முடிந்த பிறகு அர்ச்சுனன் தீர்த்த தலயாத்திரையாகச் சேதுவிற்கு வந்ததாகப் பாடியுள்ளார்.

**"...................... வாய்த்த திரு துணைவரோடும்**

**சென்றவழி இன்றளவும் துளவம் நாறும்**

**சேது தரிசனம் செய்தான்"** [19].

என்கிறது அவர்தம் பாடல்.

## 1.3. *கடந்த கால வரலாற்றில் இராமநாதசுவாமித் திருக்கோயில்*

### *இத்திருக்கோயில் அமைப்பு பற்றிய வரலாற்றுக்குறிப்பு*

"இராமநாதர் ஆலய அமைப்பு பற்றி ஆங்கில நாட்டுக் கட்டடக்கலை வல்லுநரும், வரலாற்று அறிஞருமான ஜேம்ஸ்பெர்கூசன் என்பவர் வரைந்த குறிப்புகளில் கி.பி. 1875ல் இராமேசுவரம் திருக்கோவிலுக்கு வருகை தந்து இந்தக் கோயிலின் கட்டுமான அமைப்பு, கோபுரங்களின் அமைப்பு, சிலைகள், கல்வெட்டுகள் ஆகியவற்றை விரிவாக ஆராய்ந்து தமது கருத்தினை ஒரு நூலில் பதிவு செய்துள்ளார்"[20] என்பர்.

"..................... அழகான மிக நேர்த்தியான கட்டமைப்பும் எந்தக் குறையும் கூற முடியாத மிக நுணுக்கமாக வடிவமைக்கப்பட்ட திட்டத்துடன் திராவிடக் கட்டடக் கலைக்கு எடுத்துக்காட்டாக விளங்கும் பெருமை இராமேசுவரம் திருக்கோவிலைச் சாரும்.

வேறு எந்தக் கோயிலிலும் காண முடியாத அளவு மிகச் சிறப்பான கட்டடக்கலையை இங்கு மட்டும்தான் காண முடியும். தஞ்சைக் கோயிலுடன் இந்தத் திருக்கோயிலை, ஒப்பிடுகையில் இக்கோயில் பத்து மடங்கு மிகப் பெரியதாக நுணுக்கமாக அழகான கட்டிடக் கலையுடன் கூடியது. இக்கோயிலின் ஒவ்வொரு பகுதியும் உள்பக்கத்தோற்றத்திலும், வெளிப்பக்கத் தோற்றத்திலும் வெவ்வேறு விதமான உணர்வுகளைத் தரக்கூடியது.

மேற்கு நுழைவு வாசலில் இருந்து கோயிலின் உள்ளே பார்வையாளர் நுழையும் போது நந்தவனத்தின் வலது கோடியில் அமைக்கப்பட்டுள்ள விமானமான கந்தமானஸ்வர விமானம் காலத்தாலும், கட்டடக்கலையிலும் மாறுபட்ட வடிவம் கொண்டதால், இக்கோயிலும் மாமல்லபுரம் கடற்கரைக் கோயிலைப் போல்

கடற்கரையில் அமைந்துள்ள மிகப்பெரிய கோயிலாகும். கடற்காற்றால் வெளித்தோற்றம் அரிக்கப்பட்டள்ளதால் இக்கோயில் எந்தக் காலத்தைச் சார்ந்தது என்று முடிவு செய்ய இயலவில்லை. இருந்த போதிலும் பதினொன்று, பனிரெண்டாம் நூற்றாண்டைச் சார்ந்ததாக இருக்கலாம். இவ்விமானத்தின் அளவு ஐம்பது அடி உயரமும், முப்பத்திநான்கு அடி அகலமும் இருக்கலாம். மேலும் பக்கத் தோற்றத்தில் பார்த்தால் இது மிகப்பெரிய கோயிலாகும்.

மைய மண்டபத்தின் முன் உள்ள மேடையில் அமைந்துள்ள மிகப்பெரிய நந்தியை வைத்துப் பார்க்கும் பொழுது இக்கோயில் சிவனுக்காகக் கட்டப்பட்டது என்றும், பெயரை வைத்துப் பார்க்கும்பொழுது ராமபிரானின் பெருமையை வெளிப்படுத்துவதற்காகக் கட்டப்பட்டது என்றும் உணரலாம்.

வெளிப்பிரகாரம் முழுவதும் இருபது அடி உயரமுள்ள சுவர்களால் கட்டப்பட்டு நான்கு திசைகளிலும் நான்கு கோபுரங்கள் கட்டப்பட்டு, அவை அனைத்தும் கீழ்மட்டத்தில் இருந்து கருங்கற்களால் கட்டப்பட்டவை என்றும் தெரியவருகிறது. மேலவாசல் கோபுரம்மட்டம்தான் முழுவதும் கட்டுமானம் முடிக்கப்பட்டுச் சாந்து பூசினால் வடிவமைக்கப்பட்ட சிலைகளை உடையதாய், எழுபத்தி எட்டு அடி உயரம் கொண்டதாய் இருக்கிறது. வடக்கு மற்றும் தெற்கு வாசல் கோபுரங்கள் மதில் சுவற்றைக் காட்டிலும் சற்று உயரமாய்க் கற்களால் கட்டப்பட்டு சிதிலமடைந்த நிலையில் இருக்கின்றன.

ஆலயத்தின் கிழக்குப்பகுதி இருபெரும் வாசல்களைக் கொண்டது. கிழக்குப்பகுதியில் தெற்கில் உள்ள பார்வதி கோவிலுக்குச் செல்லும் பாதையாகும். இது நன்கு கட்டி முடிக்கப்பட்டது. பெரிய பாதையுடன் கிழக்கு வாசல் வெளிப்பிரகார மண்டபத்தைக் கட்டிய பெருமை 1640ல் இரண்டாம் சடைக்கத்தேவர் தளவாய் சேதுபதி அவர்களைச் சாரும். இதன் நீள அளவு 500 அடிக்கு மேல் 600 அடிக்குள் அளவு கொண்டது. இவ்வெளிப்பிரகார மண்டபம், இருபக்கமும்

திறந்தவெளி மண்டபத்துடன் கூடிய 700 அடி நீளமுள்ள நேர்த்தியான பிரகார மண்டபம் ஆகும். இவ்வளவு பெரிய அளவுள்ள மண்டபம் இந்தியாவில் வேறு எங்கும் காணமுடியாது.

மைசூர் மாநிலத்தில் உள்ள ஹளைபீடு ஆலயத்தின் கலை நுணுக்கத்தைவிடக் குறைவாக இருந்தாலும் அதன் சுற்றளவு 700 அடிதான். ஆனால் இராமேசுவரம் கோயிலின் சுற்றளவோ 4000 அடிக்கு மேல் இருபுறமும் வரை வடிவாக அமைக்கப்பட்டுள்ளது. இந்தப் பிரகார அமைப்பின் பின்னால் உள்ள தொழிலாளர்களின் உழைப்பு, பொறுப்பு, கலைநுணுக்கம் ஆகியவை இந்தியாவில் உள்ள மற்ற எல்லாக் கோயில்களைக் காட்டிலும் மிகச் சிறந்தது. இப்படிப்பட்ட கோயில்கள் ஒரு சிலவே உள்ளன.

இக்கோவிலின் சிதிலமடைந்துள்ள கல்வெட்டுக்களைக் கொண்டு ஆலயத்தின் முழு வரலாற்றையும் அறிந்து கொள்ள இயலும். மத்திய கருவறையானது கடுமையான சுண்ணாம்புக்கல் கொண்டு, பதினைந்தாம் நூற்றாண்டைச் சேர்ந்த உடையான் சேதுபதி என்பவரால் கட்டப்பட்ட பெருமை உடையது. மேற்குக் கோபுரமும், அதைச் சார்ந்த திருமதில்களும், பதினேழாம் நூற்றாண்டைச் சார்ந்த கடைக்கத்தேவர் உடையான் என்பவரால் உருவாக்கப்பட்டுள்ளன.

முதற்பிரகாரமானது 190 அடி அகலமும் 307 அடி நீளமும் கொண்டதாகவும், இதற்கு அடுத்ததாக உள்ள விமானங்கள், பிரகாரம், மதில்சுவர்கள், அதற்குட்பட்ட கருவறைகள் ஆகியவை சேதுமன்னர்களின் பெருமை 17–ஆம் நூற்றாண்டில் மிகச் சீர்பெற்று ஓங்கி இருந்த பொழுது, மன்னர் திருமலைநாயக்கரால் மதுரை கோபுரக் கட்டிடக் கலைக்கு இணையாகக் கட்டப்பட்டதாகும்.

இரண்டாம் பிரகாரமானது 1658ல் மன்னர் திருமலை ரெகுநாத சேதுபதியால் தெற்குப்பாதிபூர்த்தி செய்யப்பட்டது. முத்து விஜய ரெகுநாதத் தேவர் (கி.பி. 1712–1725) அவரது தகப்பனார் கடம்பத்தேவர் ஆகியோர் அம்மன் சன்னதியில் முன்புறமுள்ள மண்டபத்தைக்கட்டினர். கி.பி. 1742ல் முத்து விஜய ரெகுநாதசேதுபதி மூன்றாம் பிரகார வேலையைத் துவங்கினார். மையக் கருவறைகள் 15, 16ம் நூற்றாண்டில் கட்டப்பட்டது. மொத்தக் கோயிலின் கட்டுமானமும் முடிவுற 170 ஆண்டுகள் ஆகியுள்ளன. 18ம் நூற்றாண்டின் இறுதியில் முடிவுற்றது. இந்துக்களின் மிக முக்கியமான புனிதத்தலமான இக்கோயில் சேது மன்னர்களுக்குச் சொந்தமான சிறந்த வழிபாட்டுத்தலமாகும்."[21] என்று எஸ்.எம்.கமால் குறிப்பிட்டுள்ளார்.

1. கி.பி. 864 : இராஷ்டிரகூட மன்னன் மூன்றாவது கிருஷ்ணன் வருகையும் கண்டமார்த்தாண்ட ஆலய அமைப்பு

2. கி.பி. 970 : பராந்தக சோழன் வருகை துலாபார தானம்

3. கி.பி. 1458 : சுவாமி அருணகிரிநாதர் இராமேசுவரம் வருகை

4. கி.பி. 1497 : விஜயநகா மன்னர் நரசிம்மர் இராமேசுவரத்தில் பதினாறு தர்மங்களையும் செய்தல்.

5. கி.பி. 1517 : பேரரசர் கிருஷ்ண தேவராயர் தம் இரு மனைவிகளுடன் முப்பத்திரண்டு தர்மங்களையும் செய்தல்.

6. கி.பி. 1659 : இந்துக்களால் மிகவும் புனிதமாகக் கருதப்படும் பசுவின் உருவத்தைப் பொன்னால் செய்து அதன் வயிற்றில் இருந்து பிறப்பது போன்ற வைதீக நிகழ்ச்சி ஒன்றை இத்திருக்கோயிலில் இரகுநாத திருமலை சேதுபதி மன்னர்

அவர்கள் மேற்கொண்டார். இதற்கு 'ஹரண்ய கர்ப்பதானம்' என்று பெயர். இந்த நிகழ்ச்சி முடிந்தவுடன் அந்த பசுவின் உருவத்தைச் சிதைத்து அப்பொன் தகட்டை அந்தணர்களுக்குத் தானமாக வழங்கினார். இந்நிகழ்ச்சி ஆதி சேதுவான (12–01–1659ல்) தனுஷ்கோடியில் நடைபெற்றுள்ளது.

7. கி.பி. 1659 : தஞ்சை மன்னர் ரெகுநாத நாயக்கர் இராமேசுவரம் திருக்கோயிலில் ஹரண்ய கர்ப்பதானம் நிகழ்ச்சியை மேற்கொள்ளல்.

8. கி.பி. 1661 : தாயுமான அடிகள் வருகை

9. கி.பி. 1677 : மஹாராஷ்டிர மன்னர் சிவாஜி வருகை

10. கி.பி. 1759 : தஞ்சை மன்னர் பிரதாப சிம்மன் இராமேசுவரம் வருகை

11. கி.பி. 1795 : பாஞ்சாலங்குறிச்சி பாளையக்காரர் வீரபாண்டிய கட்டபொம்மன் இத்திருக்கோயிலுக்கு வருகை.

12. கி.பி. 1808 : மைசூர் திவான் பூர்ணையா வருகை

13. கி.பி. 1893 : சுவாமி விவேகானந்தர் தலயாத்திரையாக இத்திருத்தலம் வருகை.

14. கி.பி. 1894 : சிருங்கேரி மடாதிபதி சுவாமி அபிரவரசிம்ம பாரதி வருகை.

15. கி.பி. 1897 : அமெரிக்க நாட்டு சிகாகோ நகரில் நடைபெற்ற சர்வ சமய மாநாட்டில் கலந்து கொண்டு தாயகம் திரும்பும் வழியில்

சுவாமி விவேகானந்தர் இத்தலத்திற்கு வருகை.

16. கி.பி. 1898 : மைசூர் மன்னர் தலயாத்திரையாக வந்தது.

17. கி.பி. 1911 : கல்கத்தா ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்சரது துணைவியார் சாரதா அம்மையார் இராமேசுவரம் வருகை.

18. கி.பி. 1928 : ராயல் இந்திய ஆர்மியை சேர்ந்த கேப்டன் மியுவெல் என்பவர் இராமேசுவரத்திற்கு வருகை தந்து திருக்கோயிலின் சிறப்பான நிகழ்ச்சிகளைத் தொகுத்து Rameswaram the Sacred Island என்ற புத்தகத்தை வெளியிட்டார்.

## II. *திருஉத்தரகோசமங்கை மங்களநாதசுவாமித் திருக்கோயில்*

மூர்த்தி, தலம், தீர்த்தம் இம்மூன்று பெருமைகளும் ஒருங்கே வாய்க்கப் பெற்றுத் திகழ்கின்றது இத்தலம். முன்னொரு காலத்தில் வேதவியாசர், மிருகுண்டமகிரிஷி, பானாசரன், மயன், காகபூசண்டர் இன்னும் பல்வேறு முனிவர்களால் வணங்கப்பட்ட தலம் என்ற சிறப்பினை உடையது.

திருவாரூரில் பிறந்தால் முக்தி, திருவண்ணாமலை நினைத்தாற் முக்தி, சிதம்பரத் திருத்தலத்தைத் தீண்டினால் முக்தி, காசியில் இறந்தால் முக்தி என்பர். வேத ஆகமங்களின் இரகசியத்தை ஈசன், மங்கைக்கு உபதேசம் செய்த இத்தலம் பிறக்க, நினைக்க, இருக்க, இறக்க அனைத்திற்குமே உகந்தது என்பது நம்பிக்கையாகும். இதனை மாணிக்கவாசகரும், திருவாசகத்தில் முக்தி கொடுக்கும் முழுமுதற் கடவுள், வள்ளல் என்று இத்தலத்தின் மூலவரை இயம்பியுள்ளார்.

### II.1. *இருப்பிடம்*

தென் தமிழகத்தில், இராமநாதபுரம் மாவட்டத்தில். இராமநாதபுரத்திலிருந்து சுமார் பதினாறு (16) கி.மீ தொலைவில் இத்திருக்கோவில் அமைந்துள்ளது. “ஒரு காலத்தில் இத்தலம் பாண்டியரின் தலைநகராக அமைந்திருந்தது”[22]. இப்போது இஃது ஒரு சிற்றூர். இவ்வூரின் மையப்பகுதியில் மங்களநாத சுவாமிகோயில்

அமைந்துள்ளது. இராமநாதபுரத்தில் இருந்து இத்தலத்திற்குப் பேருந்து வசதிகள் உண்டு.

இக்கோயிலில் நடராஜப்பெருமானுக்குத் தனிக்கோயில் அமைந்துள்ளது. இத்தலத்திற்கு மேலும் மிகப்பெறும் சிறப்பினைச் சேர்க்கின்றது (வேறெங்கும் நடராஜருக்கென்று தனிக்கோயில் கிடையாது). நடராஜர் சன்னதியில் அமைந்துள்ள ஐந்தரை (5 ½ ) அடி உயரமுள்ள ஒரே கல்லால் செய்யப்பட்ட மரகதக்கல் நடராஜருக்கு ஆண்டுதோறும், மார்கழி மாதம் திருவாதிரை நட்சத்திரத்தில் நடைபெறும் ஆருத்ராதரிசனப் பெருவிழா மிகவும் பிரசித்திப் பெற்றது.

"இக்கோயில் மாணிக்கவாசகர், அருணகிரிநாதர் ஆகியோரால் பாடல் பெற்றத்தலமாகும்".[23] சேதுபதி மன்னர்களின் பரம்பரையினரால் இன்றளவும் பேணப்பட்டு வருகின்றது. இக்கோயிலில் தொன்றுத்தொட்டு ஆறுகால பூசைகளம் நடைபெற்று வருகின்றன. இத்தனை சிறப்புகள் உடைய இத்தலத்தில் மங்களநாதசுவாமி, மங்களேஸ்வரி அம்மை பக்தர்களுக்கெல்லாம் அருள்பாலித்து வருகின்றார்கள். உத்தரகோசமங்கைக் கோயிலைப் பற்றி,

> **"உவமையில் பரமஞான முணர்ந்திரு நந்திமுன்னர்த்**
> **தவமலிசற்குமரான் சாற்றுமெம்பெரும முன்னாட்**
> **பவமறுவியாக்கிரபாதன் பதஞ்சலி கதை தொகுத்து**
> **நவில யாங்கேட்டோ மின்னும் நவின்றமாதவர்த்தின் மேலோர்" (24)**
>
> **(த.பு.பா. 16)**

இத்தலபுராணம் விளக்குகிறது.

### II.2. *தல விஷேசம்*

> **"முளைத்தது மறைவலான்முன் முயன்ற நற்றவத்தான் மேரு**
> **வளைத்தவிற்றடக்கைவீரன் மற்றதனடு வட்டோன்றி**
> **யளித்தனன் சிவஞானத்தோ டயர்வில்சாத்துவிகமெய்திக்**
> **களித்தனன வனுமந்தண் கடிபொழிறுடுத்தமுதூர்." (25)**
>
> **(த.பு.பா. 20)**

*வேறு*

**"பின்னஞ்சடைமுடிப் பிராணைவேண்டின**

**னென்னநுபெயரினா லிந்தவான்பதி**

**மன்னியவருள்கென வரதநல்கா**

**லந்நகர் வியாக்கிர புரமென்றாயதே." (26)**

**(த.பு.பா. 26)**

இத்தலத்தின் சிறப்பினை மேலும் ஆராயும் பொழுது "ம"கர வரிசையுடன் கூடிய தொடர்பினை அறியலாம்.

| | | |
|---|---|---|
| மூலவர் | – | மங்களநாதர் |
| அம்பாள் | – | மங்களேஸ்வரி |
| நடராஜர் | – | மரகத நடராஜர் |
| விநாயகர் | – | மங்கள விநாயகர் |
| சிதம்பர தில்லைக்காளி இங்கு | – | (வராகி என்ற) மங்கையம்மாள் |
| புராண காலச்சிறப்பு | – | மண்டோதரி தவம் இயற்றியத்தலம் |
| தலட்சிறப்பு | – | மாணிக்கவாசகரால் பாடல் பெற்ற தலம் |

***கோயில் தலம்***

*திருஉத்தரகோசமங்கை-பெயர்க்காரணம்*

"திரு என்றால் அழகு, உயர்ந்த"

"உத்தரம் என்றால் – உபதேசம்"

"கோசம் என்றால் – வேதம், இரகசியம்"

"மங்கை – பெண்"

ஈஸ்வரன், பார்வதியாகிய மங்கைக்கு வேதாகாமத்தின் இரகசியத்தை உபதேசம் செய்த தலம் என்பதனால் திருஉத்தரகோசமங்கை என்ற நாமத்தைப் பெற்றுத் திகழ்கின்றது.

## II.3. இத்திருத்தலத்தின் பெருமைகள்

“மண் முந்தியோ? மங்கை முந்தியோ” என்ற பழமொழி இத்தலத்தின் பெருமையை இன்றும் எடுத்தியம்புகிறது. உத்தரகோசமங்கை என்ற பெயரைக் கேட்டவர் உயர்ந்தப் பலன்களைப் பெறுவர். உத்தரகாசி முதலிய புண்ணியத்தலங்களெல்லாம் வாழ்வின் இறுதிக் காலத்தில்தான் உயர் நற்கதியினை அளிக்கும். ஆனால் இத்தலமோ, இம்மையிலேயே நன்மையனைத்தையும் நல்கி மறுமையில் பரமமுக்தியைப் பயக்க வல்லது.

“படைக்கும் தொழிலைச் செய்கின்ற பிரம்மன் தவம் புரிந்து ராசசம் நீங்கி சாத்துவீகம் ஓங்கி நற்பயன் பெற்றதால் இப்பகுதியைச் சாத்துவீகத் தானம் என்றும், பிரம்மபுரம் என்றும் சாற்றுவர் மேலோர்” (27). பத்ரிகாவனஷேத்திரமாகிய “இத்தலத்தில், ஓர் இலந்தை மரத்தின் அடியில், வியாசன் தவம் புரிந்து, மங்களேசுவரன் அருளால், நான்கு வேதங்கள் முழுமையும் ஓதியுணரப் பெற்றான். அன்று முதல் வெறும் வியாசன் வேத வியாசன் ஆனான்” (28)

“வியாக்கிரபாத முனிவரும், பதஞ்சலி முனிவரும் இத்தலத்தில் தவ மேற்கொண்டு, இறைவன் அருளிய ஐந்தெழுத்துண்மையும், பிரணவப் பெருமையையும் உய்த்துணர்ந்தனர். அன்று தொடங்கி இத்தலம் வியாக்கிரபுரம் என்றும் விளங்கலாயிற்று” (29).

“அம்பிகைக்கு நடராஜப் பெருமாள் இங்கு அறையில் ஆடியதால் இது ஆதி சிதம்பரம் என்றும் அழைக்கப்படும்” (30).

அம்பிக்கை மட்டும் கண்டு மகிழும் வகையில் இடத்தில் நடராஜ பெருமாள் அறையில் ஆடியதால் அறையில் ஆடியது என்றும், இத்தலம் ஆதி சிதம்பரம் என்றும் வழங்கப்பட்டுவருகின்றன. தில்லையில் அம்பலத்தில் அனைவரும் கண்டு மகிழும்

வகையில் ஆடியதால் தில்லை (பொன்) அம்பலம் எனவும் பெயர் காரணம் கொண்டும் வழங்கப்படுகிறது.

“பாதாள இலிங்கமென்று பார் முழுதும் பரவப்படும் (இலிங்கம் இயற்கையில் (சுயமாக) பாதாளந் தொடங்கி மண்வரை அடிமுடியுடையன) இரண்டுலிங்களில் ஒன்று உத்தரகாசியில் உள்ளது. மற்றொன்று உத்தரகோசமங்கையில் உள்ளது. எனவே இதனைத் தென்கயிலாயம் என்பர்”[31]

“இத்தலமானது மங்களபுரி, பார்பதிபுரி, சித்தகேந்திரம், தெக்கணகாசி, பிரதி கோசபுரம், கல்யாணபுரி, என்றத் திருநாமங்களைப் பெற்றுத் திகழ்கின்றது”.[32] (சி.கு)

மேலும் இத்தலத்தில் வேத வியாசரும், பதஞ்சலி முனிவரும் இன்றும் இத்தலத்தின், தலவிருஷத்தின் கீழ் தவம் மேற்கொண்டு வருவதாக ஐதீகம்.

### II.4. *இராமாயணக் காலத்துடன் தொடர்புடைய உத்தரகோசமங்கை*

‘திருஉத்தரகோசமங்கை புராணத்தில் மாணிக்கவாசகரின் முன்னைய பிறப்பின் வரலாறு குறிப்பிடப்படுகின்றது. திருஉத்தரகோசமங்கைத் திருக்கோயிலின் தென்மேற்குத் திசையில் முற்றுணர்வுடைய முனிவர் ஆயிரவர் சிவபெருமானை நோக்கி தவம் புரிகின்றனர். இறைவன் அவர்கட்கு முன்தோன்றி நாம் மண்டோதரிக்கு அருள்செய்தற் பொருட்டு தென்இலங்கை செல்லுகின்றோம். நீவிர் இவ்விடத்திலேயே இருப்பீர் என்று கூறி தம்மிடம் இருந்த அரும்பெறும் நூலாகிய திருமுறையை முனிவர்களிடம் தந்தருள்கின்றார். முனிவர்கள் இறைவனை நோக்கி தாங்கள் இரக்கம் இல்லாத அரக்கர்கள் வாழும் இடத்திற்குச் செல்லுதல் தகுமோ ? என்று வினவுகின்றனர் அதற்கு இறைவன் இராவணன் நம் திருமேனியைத் தீண்டும்பொழுது இங்குள்ள பொய்கையின் நடுவே ஒருத்தீப்பிழம்பு தோன்றும் எனக் கூறி இலங்கை செல்லுகின்றார். அங்கு மண்டோதரியின் மாளிகைக்கு இராவணன் வருகின்றான். சிவபெருமான் இளங்குழவியாக உருமாறிகின்றார். இராவணன் வனப்புமிக்க அக்குழந்தையை வாரி எடுத்து அன்புடன் அழைத்துக்கொள்கின்றான்.

இந்நிலையில் உத்தரகோசமங்கைத் திருக்குளத்தில் இறைவன் முற்கூறிய வண்ணம் தீப்பிழம்பு தோன்றுகிறது. முனிவர்கள் மனநடுக்கமுற்று தீயில் பாய்ந்து மறைகின்றனர். ஆண்டில் இளையவரும் அறிவில் முதியவருமான மாணிக்கவாசகர், இறைவன் தந்தருளிய திருமுறையைக் காட்கும் பொருட்டு அப்பொய்கைக் கரையிலேயேத் தங்கியிருக்கின்றனர்.

பார்வதி தேவியார் ஓர் தவமுதுமகள் வடிவத்துடன் மண்டோதரி மாளிகையை அடைந்து குழந்தையைப் பெற்று திரும்புகின்றாள். இறைவன் இக்கோயில் பொய்கைக் கரையை அடைந்து தீயில் புகுந்த முனிவர்களுக்கு அருள்பாலிக்கின்றார். திருமறையைப் பாதுகாத்து நிற்கும் மாணிக்கவாசகரை நோக்கி நாம் அளித்த சிவகாம திருமறையை உன் உயிரினும் இனிதாகக் கருதினாய் எனவே நீ நாம் கோயில் கொண்டிருக்கும் தலங்கள் தோறும் சென்று எம்மைப்பாடி போற்றுக. யாமே ஒரு தலத்தில் உன்னை ஆட்கொண்டு மும்மலங்களை (ஆணவம், கன்மம், மாயை) களைந்து நினக்கு ஈடில்லா பேரின்பமாகிய வீடு பேற்றினை அளிப்போம் என்று அருள்செய்து மறைகின்றார். இஃது இப்புராணத்தில் கூறப்பட்டுள்ள மாணிக்கவாசகரின் முன்னை பிறப்பின் வரலாறு. மேற்கூறிய வரலாற்றினை உத்தரகோசமங்கைத் தலபுராணமும் உறுதி செய்கின்றது' [33]

## II.5. *மாணிக்கவாசகரும் திருஉத்தரகோசமங்கையும்*

சம்புபாதஇருதயருக்கும் சிவஞானவதியருக்கும் திருவாதவூரர் என்ற நாமத்துடன் பிறக்கின்றார் மாணிக்கவாசகர். "திருப்பெருந்துறையில் சிவபெருமானால் குருந்தமரத்தடியில் தடுத்தாட் கொள்ளப்படுகின்றார்"[34]. திருவிளையாடற்புராணம் சுட்டும் நரிகளைப் பரிகளாக்கிய நிகழ்ச்சி. அதற்குப்பின் பாண்டியனிடம் விடைபெற்று "தம்மை ஆட்கொண்ட குருநாதரைக் கண்டிறைஞ்ச விரும்பித் திருப்பெருந்துறையை அடைகின்றார். அடியார்கள் சூழ எழுந்தருளியிருந்த குருநாதர் அடிகளுக்குத் திறுநீரு தரித்து அருட்பார்வை நல்குகின்றார். மீண்டும்

கயிலை திரும்ப முற்படுகையில் தொண்டர்கள் யாவரும் குருநாதர் திருவடிகளில் வீழ்ந்து இறைஞ்சித் தோத்திரம் செய்து, எம்பெருமானே நினது பிரிவைத் தாங்கிக் கொள்ளும் ஆற்றலுடையோம் அல்லோம். எம்மைக் கைவிடுவாயோ? என்று அழுதரற்றுகின்றனர்.

அவர்கள் மீது அருளுடைய இறைவனும், நீங்கள் வருந்த வேண்டா, இக்குருந்த மரத்து நிழலில் தெய்வ பீடம் அமைத்து அதன் மீது நம் திருவடிகளை வைத்து வழிபட்டிருப்பீராக. ஒருநாள் இந்தப் பொய்கையின் நடுவில் ஒரு தீப்பிழம்பு (திருப்பெருந்துறை) தோன்றும் நீங்கள் யாவரும் அத்தழலில் மூழ்கி நம்மை அடை வீராக என்று கூறித் தம்முடன் தொடரும் அடியார்களை நில்லுமின் என நிறுத்திக் கயிலையை நோக்கிப் புறப்படுகின்றார். அவரைப் பிரிந்திருக்க முடியாத மணிவாசகப் பெருமான் அவரை மீண்டும் தொடர்கின்றார். அடிகளின் வருத்தத்தைப் போக்கக் கருதிய இறைவன் அங்குள்ள கொன்றை மரத்தின் நிழலில் சிறிது நேரம் தாமதித்து, வாதவூராரை அருகே அழைத்து நாம் எங்கும் நிறைந்திருப்பினும், இப்பெருந்துறையில் குருந்த மரநிழலில் எப்பொழுதும் எழுந்தருளியிருப்போம். அடியார்களுடன் நீ குருந்த மரத்தடியில் தம்மை வழிபட்டிருப்பாயாக. பொய்கையில் தீப்பிழம்பு தோன்றுங்கால் அடியார்கள் அதனுள் புகும் பொழுது நீயும் உடன்புகாது இத்திருத்தலத்தை விட்டு நீங்கித் திருவுத்தரகோசமங்கையை அடைந்து அங்குச் சித்திகளெல்லாம் பெறுக. என்று, திருவாய் மலர்ந்தருள்கின்றார்" [35].

"தம் குருநாதராகிய சிவபெருமான் பணித்த வண்ணம் வாதவூரடிகள் திருவுத்தரகோச மங்கையை அடைகின்றார். திருக்கோயிலில் புகுகின்றார். குருநாதர் கூறிய வண்ணம் தம்மை ஆட்கொண்டருளிய ஆசிரியத் திருமேனியைக் காணப்பெறாதவராய்ப் பெரிதும் வருந்துகின்றார். உத்தரகோச மங்கைக்கு அரசே அடியேனைக் கைவிட்டு விடுவாயோ? என்று நெஞ்சம் நெக்குறுகி நின்று "**நீத்தல் விண்ணப்பம் என்னும் பனுவலைப் பாடிப்போற்றினார்**" என்பதும். இந்நிலையில் உத்தரகோசமங்கைப் பெருமான் அடிகட்கு ஆசிரியத்

திருக்கோலங்காட்டி அருள்புரிந்தான் என்பது வரலாறு. இது திருவாதவூரடிகள் புராணத்தால் அறியப்படுகிறது"[36]. இங்குப் பல சித்திகளையும் பெறுகின்றார். இத்தலத்தில் மாணிக்க வாசகர் பாடிய நீத்தல் விண்ணப்பம் பின்வருமாறு அமைந்துள்ளது. அதன் முதல்பாடல்,

> ***"கடையவ னேனைக் கருணையி***
> ***னாற்காலந் தாண்டுகொண்ட***
> ***விடையவ னேவிட் டிடுகண்***
> ***டாய் விறல் வேங்கையின் றோல்***
> ***உடையவ னேமன்னு முத்தர***
> ***கோசமாங் கைக்கரசே***
> ***சடையவ னேதளர்ந் தேனம்பிரா***
> ***னென்னைத் தாங்கிக் கொள்ளே"***
>
> **(திருவாசகம்-நீத்தல் விண்ணப்பம்)**

நீத்தல் விண்ணப்பம் என்ற தொடருக்கு உலகப் பற்றை நீத்தல் பொருட்டு இறைவனிடத்து வேண்டிய வேண்டுகோள் எனவும், என்னை நீத்துவிடாதே என இறைவனை நோக்கிச் செய்து கொண்ட வேண்டுகோள் எனவும் இருவகையாக நம் முன்னோர் பொருள் கொண்டுள்ளனர். நீத்தல் விண்ணப்பம் கட்டளைக் கலித்துறையாக ஐம்பது திருப்பாடல்களைக் கொண்டுள்ளது. இதன்முதல் இருபது பாடல்களிலும், 48ம் பாடலிலும் உத்தரகோச மங்கைக்கு அரசே! என இறைவனை அடிகள் போற்றுவதால் இப்பதிகம் திருஉத்தரகோச மங்கையில் அருளச் செய்யப்பெற்றதென்பது புலனாகிறது.

"வாதவூரடிகள் உத்தரகோசமங்கை வந்ததும் அட்டமா சித்திகள் என்ற கலைகளில் இறையருளால் வல்லுநராகின்றார்" [37]. அடிகள்

> ***"பட்ட மங்கையிற் பரங்கா யிருந்தங்***
> ***கட்டமா சித்தி அருளிய வதுவும்"***
>
> **(கீர்த்தி 62-63)**

என்று குறிப்பிடுவதால் இறைவனே இவற்றை அடிகட்டு உபதேசித்தார் என்பதை அறியமுடிகின்றது. அன்றியும் அடிகளின்,

> *"உத்தர கோச மங்கையுள் ளிருந்து*
> *வித்தக வேடம் காட்டிய இயல்பும்"*
> **(கீர்த்தி 48-49)**

என்று குறிப்பினால் திருப்பெருந்துறையில் தம்மை ஆட்கொண்டபோது காட்டிய குரு வடிவத்தையே காட்டினமையையும் அறிய முடிகின்றது.

மாணிக்கவாசகர் பாடிய திருப்பொன்னூஞ்சலும் இத்தலத்தின் நிலை வாயிலிலேயே பாடப்பட்டது என்பதனைப் பின்வரும் பாடல் வலியுறுத்துகிறது.

> *"கோல வரைக்குடுமி வந்து குவலயத்துச்*
> *சால அமுதுண்டு தாழ்கடலின் மீதெழுந்து*
> *ஞான மிகப்பரிமேல் கொண்டு நமையாண்டான்*
> *சீலந் திகழும் திருவுத்தரகோசமங்கை*
> *மாறுக் கரியானை வாயார நாம்பாடிப்*
> *னீலித் தகங்குழைந்து பொன்னூசலா டலாமா"*

என்பது எட்டாம் பாடல்(38) இதில் அழகிய வெள்ளி மலையின் கண் நின்று திகழ்பவன் சிவன். அவன் திருவுத்தரகோசமங்கைக்கண் உமையம்மையுடன் எழுந்தருளியிருந்து அமுதுண்டருளினர் தாழ்ந்த கடலின் மீது வலைவாணனாகக் காட்சியளித்தருளினன் நிலவுலகம் எங்கனும் சிவவிளக்கம் மிகும் படியாகத் திருவுத்தரகோசமங்கைப் பகுதியினுள்ளான். அவன் திருவடியினை வாயாரப் பாடி அகம் உருகி உள்ளும் புறமும் பொலிவுற்றுப் பொன்னூசல் ஆடுவோமாக என்கின்றனர். இங்கு வெள்ளி மலையால் குறிஞ்சியும், திருஉத்தரகோசமங்கையால் முல்லையும், தாழ்கடலால் நெய்தலும், பலிமேர்வதத்தால் மருதமும் ஆகிய நானிலமும் குறிப்பில் புலனாவதைக் கண்டு மகிழலாம்.

"ஆட்சிபுரியும் தலைவன் ஒருவனுக்குச் சிறப்பாகச் சொல்லத்தக்க பத்து அங்கங்களையும் எடுத்துரைத்துப் போற்றும் பனுவல், தசாங்கம் எனப் பெயர் பெறும். வாதவூரடிகள் தன்னேரில்லாத் தலைவனாகிய சிவபெருமான்மேல் பாடிய திருத்தசாங்கத்தில் கூறும் பத்து அங்கங்கள்.

| | | |
|---|---|---|
| பேர் | : | ஆரூரன், எம்பெருமான், தேவர்பிரான் |
| நாடு | : | தென்பாண்டிநாடு |
| ஊர் | : | உத்தரகோசமங்கை |
| ஆறு | : | ஆனந்தமாகிய ஆறு |
| மலை | : | இன்பரும் முத்தியருளும் அருளாகிய மலை |
| ஊர்தி | : | வான்புரவி |
| படை | : | கழுக்கடை (சூலம்) |
| முரசு | : | நாதப்பறை |
| தார் | : | தாளி அறுகு |
| கொடி | : | ஏறு (காளை) |

இத்திருதசாங்கம் பாடாண்திணையில் கடவுள் வாழ்த்தின் பாற்படும்" [39]

## II.6. *அருணகிரி நாதரால் பாடல் பெற்ற தலம்*

அம்பாள் சன்னதியின் வெளிப்பிரகாரத்தில் வாயு மூலையில் சண்முகர் வள்ளி தெய்வானை சன்னதியில் அருணகிரிநாதர் திருப்புகழில் இரண்டு பாடல்களைப் பாடியுள்ளார்.

**"வெற்பென வேயெழுத்து செப்பென வேதிரண்டு"**

எனத் தொடங்கும் பாடலின் இறுதியில்

**உத்தம மாவளங் கொள் உத்தரகோசமங்கை**
**உற்றாணி தாவிருந்த பெருமானே**

என்ற பாடலையும்

**கற்பக ஞானக் கடவுண்மு னண்டத்**

எனத் தொடங்கும் பாடலின் இறுதியில்

**உட்பொருள் ஞானக் குறமக ளும்பற்**
**சித்திரை நீடப் பரிமயில் முன்பொற்**
**றுத்தர கோசத் தலமுறை கந்தப்பொருமானே"**

என்று இங்குக் குடி கொண்டிருக்கும் முருகனைப் பாடியுள்ளார் [40]

## II.7. *இக்காலச் சிறப்புகள்*

### *7.1. 1936ம் ஆண்டு நிகழ்ந்தது*

“வேலுச்சாமி என்பவர், யாழ்ப்பானத்தில் வல்வெட்டித் துறையில் வாழும் இலங்கைவாசி. தன் 16 வயதில் வயிற்றுவலியினால் துவண்டார். மருத்துவ நிபுணர்களால் காலமும், பணமும் விரையம் ஆனதேயன்றி பயன் ஒன்றும் இல்லை. பெரியார் ஒருவரின் வாய்மொழிக்கேற்ப 1936ம் ஆண்டு ஏப்ரலில் இத்தலத்தை வந்து சேர்ந்தார். அவருக்கு அப்பொழுது வயது 45. வலியால் துடித்து மங்களநாதனை வேண்டி தினமும் ஓலமிட்டார். பதினைந்து நாட்கள் சென்று மங்களநாதனின் திருவருளால் நோய் தீர்ந்து நலமாய் ஊர்போய்ச் சேர்ந்தார். ” (41)

### *7.2. 1961ம் ஆண்டில் நிகழ்ந்தது*

“நாகரத்தினம் என்பவர் ஆலயத்தின் கல்தச்சராக பணிபுரிந்து வந்தார். இத்தலத்தைவிட்டு நீங்கி ஆவல் பூந்துறை சென்றார். உருவ வழிபாட்டை நிந்தித்துப் பேசுவதைக் கடமையாகக் கொண்டார். அப்போது அவருக்கு வயது 35. 1961ம் ஆண்டு உத்தரகோசமங்கை வந்தவர், தன் தோட்டம் சென்றார், திரும்பவேயில்லை. மூச்சு மட்டும் ஓடிக்கொண்டிருந்தது, மூளை குழம்பிக்கொண்டிருந்தது. கையும், காலும் செயலிழந்தன. மங்களநாதா! என்ற ஒலியை மட்டும் இடையறாது ஒலித்தார். மருத்துவத்தால் பயன் ஒன்றும் இல்லை. மங்களநாதனைச் சரணடைந்தார். நாளடைவில் கோலூன்றி நடக்கத் தொடங்கினார். இப்பொழுது இவ்வாலயத்தில் தேவாரம், திருவாசகம் பாடி மங்களநாதனை வழிபட்டு வருகின்றார்” (42).

### *7.3. 1964ம் ஆண்டு நிகழ்ந்தது*

“இவ்வாண்டில் டிசம்பர் மாதம் நிகழ்ந்தது. சாத்தக்காள் என்ற மூதாட்டி கடம்படை என்னும் கிராமத்தைச் சேர்ந்தவள். வயதான போது கண்பார்வை இழந்து

தவித்தாள். மங்களநாதனைத் தஞ்சம் என்று சரண் புகுந்தாள். 15ம் நாள் ஒளிப்பெற்று ஊர் திரும்பினாள்'' [43].

"குன்றக்குடி மடாலயத்தின் முதல்வராக ஆதினமாக பண்டார சன்னதி (மகாசன்னிதானம்) கடமையாற்றிய காலத்தில் நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் மடத்தின் மீது பெரும் வழக்குத் தொடர்ந்தார்கள். மனம் உருகி முருகனை வேண்டி உண்ணாநோன்பு கொண்டார். அயற்சியில் உறங்கிட கனவில் தோன்றிய பெரியார் உத்தரகோசமங்கை நர்த்தன கணபதியை வேண்டுமாறு கூறி மறைந்தார். இவரும் இத்தலம் வந்து வழக்குத் தீர்த்திட உதவிடுமாறு நர்த்தன கணபதியை மனமுருகி வேண்டினார். வழக்கும் வெற்றியடைந்தது. எம்பெருமானையும் பெருமாட்டியையும் உளமாற உருகி நூற்றுக்கணக்கான ஏழைகளுக்கு அன்னம் அளித்து கணபதிக்கு ஆயிரம் தேங்காய் சிதர்காய் இட்டார்'' [44].

இவைமட்டுமின்றி இன்றும் மங்களநாதனை வேண்டுவோர்க்கிணங்க வேண்டுவோர் விரும்பியபடி அருள்பாலிக்கின்றார் என்பது இத்தலத்தின் நம்பிக்கையாக உள்ளது பெறப்படுகிறது.

### III. *திருப்புல்லாணி ஆதிஜெகந்நாதப் பெருமாள் திருக்கோயில்*

"இத்தலம் மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற முச்சிறப்புகளையுமுடையது. புராணப்புகழ் பெற்றும், சரித்திரப் புகழ் வாய்ந்தும் சிறந்த திவ்ய தேசமாகவும் விளங்குகிறது. விஷ்ணுவின் அவதாரமான இராமபிரான் ஆதிஜகந்நாதனை வணங்கி, அவரால் கொடுக்கப்பெற்ற வில்லைப் பெற்று, இராவண சம்ஹாரம் செய்து, சீதாப்பிராட்டியை மீட்டி அடைய அனுக்கிரகிக்கப்பட்ட ஸ்தலம்'' [45] என்பதும் "இராவணன் தம்பி விபீஷணன், இராமபிரானை சரணம் புகுந்து இலங்கைக்கு அரசனாக முடிசூடப்பெற்ற இடம், கடற்கடவுள் தன்தேவியோடு ஸ்ரீராகவனைச் சரணடைந்து தன் குற்றத்தை மன்னிக்கப் பெற்ற இடம்'' [46] என்பதும் இத்தலத்தின் சிறப்புகளாக விளங்குகின்றன.

"கண்ணுவர் போன்ற ரிஷிகள் ஆதி ஜகந்நாதரைச் சரணமடைந்து பரமபதம் பெற்ற இடம். ஆகவே இத்தலம் சரணாகதி தருமத்தை அனுஷ்டிக்கக்கூடிய விசேஷத்தலம்" (47) என்றுரைப்பர்.

"தசரசக்கரவர்த்தி புத்திரகாமேஷ்டியாகம் செய்து, ஆதி ஜெகந்நாதரை பிரார்த்தித்து இராமபிரான் உள்ளிட்ட நான்கு புதல்வர்களையும் வரமாகப் பெற்றத்தலம் இதுவேயாகும். புத்திரப்பேறு இல்லாதவர்கள் இத்தலத்திலுள்ள மூர்த்தியை வணங்கி பகவான் தன் அடியிலுள்ள அரச விருஷத்தின் நிழலில் நாகப்பிரதிஷ்டை செய்த, பாயசத்தை அருந்தினால் புத்திரப்பேறு கிடைப்பது பிரசித்தம்" (48) என்பதை விளக்குகிறார்.

"திருமாலின் அவதாரமான இராமபிரானே இத்தலத்துப்பெருமாளை ஆராதனம் செய்ததாகத்தலபுராண நூல் கூறுவதால் திருவரங்கம் அரங்கநாதனைப்போல், இம்பெருமானும் பெரியதிருமால் என அழைக்கப் பெறுகிறார்" (49) என்பர்.

இவ்வாறு புராண, இதிகாசங்களில் இத்தலம், இத்தலமூர்த்தி, தீர்த்தம், பெற்றுள்ள சிறப்பான செய்திகள் ஆய்வின் வழி அறியலாகிறது.

### III. 1. *தலம்*

ஹரி என்ற திவ்விய நாமம் படைத்தவராய் உள்ள ஸ்ரீமத் நாராயணனே இத்தலத்தில் அருச்சை வடிவத்தில் எழுந்தருளியிருக்கிறான். சுபாஸ்ரயத் திருவுருவமாகிய அருச்சையில் பெரிய பிராட்டியாருடன் திருப்புல்லாணை என்றும் திருப்பதியில் எழுந்தருளி இருக்கும் தெய்வச்சிலையார் என்ற ஆதிஜகந்நாதன் மக்கள் துயர், தேவர்துயர் தீர்க்கும் பொருட்டு அருச்சாவதார (உருவ வழிபாடு– விக்ரக வழிபாடு) அனுபவ மூர்த்தியாய் இத்தலத்தில் எழுந்தருளியுள்ளார்.

> **"புல்லாணிமாலே புறத்தோர் புகழ்இருப்பு**
> **வல்லாணி என் செவிக்குமாறு(50) "**

தலத் தியானச் சுலோகம்

**“புல்லாரண்யம் சக்ரதீர்த்தம் ஆதிலேதும் ஸீதர்சனம்!**
**கருத்மந்தம் அதாச்வத்தம் ராமம் தர்பாதி சாயினம்!!**
**ஜகன்னாதம் திவ்யசாபம் ஸ்வர்ண பத்மாஸநிப்ரபும்!!!”(51)**

ஸ்ரீ ஆதிஜகந்நாதன் தியானச் சுலோகம்

**“புல்லாரண்ய முபேத்யுபுஷ்பிதமிதம்**
**புல்லர்ஷிமாநந்தயந்,**
**ஸல்லாபேன சிரம் நிவாஸம் அகரோத்**
**யோ நஸ்ஸபாயாத் ஹரி!” (52)**

மஹாபாரதம் தீர்த்தயாத்திராபர்வத்திலும், சுக்ரீவன் வாக்க வால்மீகி ராமாயணத்திலும் இரு மாபெரும் முனிவர்களால் புகழ்ந்துரைக்கப்பட்ட நாகு பாண்டிநாடாகும். காளிதாஸன் ரகுவமிசம் என்ற காவியத்தில் பதின்மூன்றாவது (13) சருக்கத்தில் ஆறாவது (6) செய்யுளில் தருப்பசயன ராமனை, இத்தலத்தைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது.

இராமபிரான் இத்தலத்தில் ஸ்வஸ்திக விமானத்தின் நிழலில் ஒதுங்கி இத்தலப் பெருமானை வழிபட்ட வேளையில், இங்குத் தவம் செய்து கொண்டிருந்த கண்வர் முதலான முனிவர்கள் இராமனை வந்தடைந்தனர். இராமனை மனம் குளிர மங்களாசாஸனம் செய்தனர்.

**“தேவ தேவ ஜகன்னாத கோத்ரவ்ருத்திகரப்ரபோ!**

**தேஹிமே தனயம் சீக்ரம் ஆயுர்வ்ருத்தியசஸ்விநம்!! ”(53)**

**“தாவராக அக்கணை என்றால் கடல் தெய்வம் தான் என்றிருந்**
**தவராகம் தீர்த்துத் தொழக்கண்ட நீ தர்ப்பை மேல் கிடந்து**
**தவராகப் பாவித்து என்னோ தொழுதாய்? தன் அரங்கத்து அம்மா**

**தவராகவா கண்ணனே எண்ணொணா அவதாரத்தானே”**

(திருவரங்கத்து அந்தாதி.76)

"ஸ்ரீவேதவியாசரால் வடமொழியில் கூறப்பட்ட ஆக்கினேய புராணத்தில் புவனகோச வருணைனையால் ஒன்பது அத்தியாயங்களில் இத்தலத்தைப் பற்றிய விரிவுரை கூறப்பட்டுள்ளது" (54).

"பெரிய திருமொழி (கும்பத்து–3, 4–வது பதிகங்களில் திருமங்கை மன்னனால் பாடப்பட்ட 20 பசுரங்களில் இத்திருத்தலம் சிறப்புப்புற பாடப்பெற்றுள்ளது" (55)

## III.2. *மூர்த்தி*

தன்னை வழிபடும் அடியவர்க்கு மெய்யனாய், அமலனாய் எழுந்தருளியிருக்கும் பெருமான், அடியார்களின் நிலைக்கேற்பத் தன்னை பரம், வியூகம், விபவம், அந்தர்யாமி, அருச்சை என்ற ஐந்துநிலைகளுள் உள்ளடக்கிச் சேவை தருகிறான். வேதமும் அம்பஸ்யபாரே என்ற மந்திரப் பகுதியினால் வியூகம் என்ற நிலையையும், "புவனஸ்ய மத்யே" என்ற பகுதியினால் விபவத் தோற்றத்தையும் "நாகஸ்யப்ருஷ்டே" என்ற பகுதியினால் "ப்ரம்" என்ற ஸ்ரீவைகுண்டநாதனின் தோற்றத்தையும் "ஜ்யோதீம் ஷிஸமனுப்ர விஷ்ட" என்பதனால் அருச்சாவதாரத்தையும், "ப்ரஜாபதிச்சரதிகர்பே "அந்த என்ற பகுதியினால் "அந்தர்யாமி" நிலையையும் விளக்குகிறது.

(1) பரம் என்பது ஸ்ரீவைகுண்ட நாதனான பரவாஸ்தேவன்நிலை (2) வ்யூகம் என்பது ஸங்கர்ஷண, ப்ரத்யும்ன, அனிருத்த வாஸீதேவ என்ற திருநாமங்களுடன் பலாழியிற் பள்ளி கொண்ட நிலை (3) வபவம் என்பது இராமன், கிருஷ்ணன் முதலிய அவதாரத் தோற்றங்கள் (4) அந்தர்யாமீ என்பது ஜ்யோதி ஸ்வரூபமாக எழுந்தருளியுள்ள நிலை (5) அருச்சை என்பது நம் போன்றவர்கள் எளிதில் அணுகி அனுபவித்து உற்வதற்காகவே நம்முடைய நிலைகளுக்கெல்லாம் ஏற்பத்தம்மை

ஆளாக்கிக்கொண்டு (இரத்தினம், பொன், வெள்ளி, தாமிரம், இரும்பு, சிலை, மரம் முதலியவைகளால் சிற்பியால் நிர்மாணிக்கப்பட்ட மூர்த்திகள்)

***ரத்னஜா ஹேமஜாசைவ ராஜதீதாம் ரஜா ததா!***

***சைகதீவாததா லோஹி சைலஜா த்ருமஜாததா!***

எனப் பல வடிவங்களில் ஆறு கலியாணக் குணங்களின் நிறைவுடன் எழுந்தருளி இருக்கும் நிலையாகும். பெரியோர்கள் இந்த ஐவகை நிலைகளில் இந்த அருச்சை என்ற மூர்த்தி வழிபாட்டையே நம் போன்றோர்க்கு வணங்கி வழிபட மிகவும் ஏற்றதென்பார்கள். இந்த அருச்சா வடிவங்கள் நின்றும் இருந்தும், கிடந்தும் பல தோற்றங்களில் சேவை தருகின்றார்கள். இந்த மூன்று தோற்றங்களும் ஒரே சேஷத்திரத்தில் ஒரே ஆலயத்தில் ஒரு சேர அருள்பாலிப்பது மிகவும் சிறப்பம்சமாகும். இத்தகைய சிறப்பு வாய்ந்த ஸ்தலமாக இத்திருப்புல்லாணித்தலம் அமைந்திருக்கிறது.

இக்கோயிலில் மூன்று பெருமான்கள் தனித்தனிச் சுற்றுடன் எழுந்தருளியுள்ளனர். வீற்றிருக்கும் திருக்கோலத்தில் (நின்றும்) ஆதி ஜகந்நாதப் பெருமானாகவும், தருப்பசயன இராமன் என்ற நாமத்துடன் சயனக்கோலத்திலும் (கிடந்தும்) பட்டாபி இராமனாக இருந்த கோலத்திலும் காட்சி தருகின்றார்.

### III.2.1. *ஆதிஜெகந்நாதர்*

"பூரிஜகன்னாத" ஷேத்திரத்தில் உருவமற்ற அருமீஜந்நாதப் பெருமாள் எழுந்தருளியிருக்க, இத்தலத்தில் சங்கு, சக்கரங்களுடனும், நான்கு தடக்கைகளுடனும், ஸ்வரூபஜகன்னாதனாகப் பெருமாள் எழுந்தருளியுள்ளார். இவருக்கு தக்ஷிண ஜகந்நாதன் என்ற திருப்பெயரும் உண்டு.

ஊரைக்காக்க துருவபேரம் அருச்சனை செய்ய "கௌதுகபேரம்", நீராட்டம் கண்டருள "ஸ்நானபேரம்", பலிக்காக "பலிபேரம்", திருவிழாவிற்காக "உத்ஸவபேரம்" என்ற வைகானஸ ஆகம விளக்கப்படிக்கு துருவ, கௌதுக, யாக,

பலி, நித்யோத்ஸவர் என்ற இம்மூவரின் பேரங்களும் இம்பெருமாள் வீற்றியிருக்கும் ஆஸ்தான மங்களபிடத்தில் எழுந்தருளியுள்ளார்கள்.

### III.2.2. *ஸ்ரீதருப்பசயனஇராமன்*

"ப்ரதிசயன பூமிகா பூஷித்வயோதி புலின (கருங்கடலுக்கெதிரே கருணையங்கடல் ஸ்பர்சித்துப்பள்ளி கொண்டாற்போல) என்ற தேசிகன் திருவாக்கிற்கிணங்க தருப்பபுல்லில் சயனத்திருக்கும் கோலத்தைக் கட்ட வானர வீரர்களுடன் ஆலோசனை செய்ததாகலும், அணை கட்ட வேண்டி கடலரசனின் அனுமதி கோரி இத்தலத்தில் மூன்று நாட்கள் தருப்பையில் பற்றி கொண்டதாகவும் இதனால் இம்மூலவருக்குத் தருப்பசயன இராமன் என்ற நாமம் வழுங்கி வருவதாகவும் வரலாற்று சான்றுகள், இலக்கிய, புராண இதிகாச சான்றுகள் உள்ளன".[56]

### III.2.3. *ஸ்ரீபட்டாபிஇராமன்*

**"சேது தர்சனம் இதம் புண்யம் சேஷேனாபிநகண்யதே"**

சேது ஸ்நானத்தின் பின்பு இங்கு வந்து, தக்கோர் ஒருவருக்கு அன்னதாரம் அளித்தால் "கயை" என்னும் ஷேத்திரத்தில் ஒரு லட்சம் பேர்களுக்கு அன்னதானம் அளிப்பதாகும். காசியில் இரண்டு லட்சம் பேர்களுக்கு அன்னதானம் செய்வதிலும், பிரயாகையில் ஏழு லட்சம் பேர்களுக்கு அன்னதானம் செய்வதாகும். விஞ்சிய பலனைத்தர வல்லது என்று பெருமாளே சீதையும் திருவாக்கிட்டாராம்.

> "***கயாயாம் ஏகலசஷந்து***
> ***வாராணஸ்யாம் த்ஷலகஷகம்!***
> ***ப்ரயாகே ஸப்த லக்ஷந்து***
> ***ஸ்ரீஸேதௌ க்ராஸ மாத்ரத்!!*** " **(58)**

இலங்கையில் இருந்து சீதையுடன் அயோத்தி திரும்புகையில் இத்தலத்தில் இவ்விடத்தில் பக்தர்களின் விருப்பத்திற்கிணங்க பட்டாபிஷேகம் செய்து கொண்டதால் இம்மூர்த்தி பட்டாபிராமன் என்ற நாமத்துடன் திகழ்கின்றார்.

III.3. *தீர்த்தம்*

“கங்கை முதலிய புண்ணிய நதிகளுக்குக் கிருச்சிரம் என்ற சடங்கு வகையின் எண்ணிக்கை உண்டு. இந்தக் குளமானது அதிபாதகம், மகாபாதகம் முதலிய எல்லாப் பாபங்களையும் போக்க வல்லது என்பதாலும் அநந்தன் என்ற ஆதிஷேசனுடைய தொடர்புள்ளதாலும் கிருச்சிர எண்ணிக்கை தேவைப்படாத புண்ணிய புஷ்கரிணியாக விளங்குகிறது. இதனால் இத்தீர்த்தத்தை அநந்த கிருச்சிரபலப்பிரதம் என்று இத்தீர்த்தம் போற்றப்படுகின்றது. இந்தப் புஷ்கரிணி திருதயுகத்தில் ஒரு யோஜனை அகலமுள்ளதாகவும், திரேதாயுகத்தில் அதில் கால்பங்கு குறைந்த அளவுள்ளதாகவும், துவாரயுகத்தில் அரையோஜனை அகலம் உள்ளதாகவும் இருந்து இப்பொழுது கலியுகத்தில் ஓர்குளம்போல் மாறியுள்ளது. நாட்டிற்கு வரப்போகும் நன்மை, தீமைகளை இக்குளத்தின் நீரில் ஏற்படும் மாறுதல்களால் அறியலாம் என்கிறார்கள். நீர் தெளிவாக இருந்தால் தேசத்திற்கு நன்மைகள் ஏற்படும். பொன்னிறமாக இருந்தால் நாட்டில் விளைச்சல் குறையும். பாசிபடர்ந்து அழுக்குப் படர்ந்திருந்தால் கால்நடைகள் நாசமடையும் என்று விளக்கமும் கூறுகிறார்கள். இந்த தீர்த்தத்திற்குப் பிரமதீர்த்தம், ஹம்ஸதீர்த்தம், தருமதிதீர்த்தம், வருணதீர்த்தம், சக்கரதீர்த்தம் என ஐந்து பெயர்கள் வழங்கப்படுகின்றன”.

சேதுபதி மன்னர்களின் திருப்பணிகள்

ஆய்விற்குட்பட்ட திருக்கோயில்களுக்கு சேதுபதி மன்னர்கள் பரம்பரையாக இறையிலி நிலங்களை சர்வமானியமாக வழங்கியுள்ளனர் என்பதனை ஆய்வின் மூலம் அறியமுடிகின்றது. இப்பகுதியில் ஆய்விற்குட்பட்ட திருக்கோயில்களுக்கு சேதுபதி மன்னர்கள் வழங்கியுள்ள விலைமதிப்பற்ற அணிகலன்கள், வாகனங்கள் போன்றவற்றை பற்றி காணலாம்.

**இராமேசுவரம் இராமநாதசுவாமித் திருக்கோயில்**

**விலைமிக்க நகைகளில் குறிப்பிடத்தக்கவை (புதுசு)**

1. அருள்மிகு இராமநாதசுவாமி உத்சவ நாயகர் இரத்தினக் கிரீடம்.
2. அருள்மிகு பர்வதவர்த்தினி அம்பாள் மூலவர் இரத்தினக் கிரீடம்.
3. உத்சவ அம்பாள் இரத்தினக் கிரீடம்.
4. இரட்டை வடம் பவள மாலை.
5. உத்சவ அம்பாள் இரத்தினங்கள் இழைத்த ஹஸ்தம்.
6. இரத்தின கை தீவட்டி.
7. தங்கக் குடை.
8. உத்சவ நாயகர் தங்கக் கவசம்.
9. ஆறு வட யக்ஞோப வீதம்.
10. உத்சவ அம்பாள் தங்கக் கவசம்.
11. தங்கக் குடம்.
12. வைரக் கிரீடம்.
13. இரட்டைக்கிளி பெரிய விஜயம் பதக்கம்.
14. தங்கக் கவச சங்கிலி.
15. பள்ளியறை சுவாமி திருவாட்சி
16. பள்ளியறை அம்மன் திருவாட்சி
17. தங்க மூடு பல்லக்கு

சேதுபதிகள் தவிர நேபாள மன்னர்களும் நீண்ட நெடுங்காலமாக இக்கோயிலுக்குச் சிலவகை ஆபரணங்களை வழங்கியுள்ளனர். இத்திருக்கோயிலுக்கு முத்துராமலிங்க சேதுபதி தனது மனைவியருடன் வருகை தந்து அம்பாளை தரிசனம் செய்து வணங்கிய பொழுது முத்துராமலிங்க சேதுபதி தன் மனைவியர்களிடம் நீங்கள் அணிந்திருக்கும் அணிகலன்களை அம்பாளுக்கு அணுவித்தால் சிறப்பாகவும், அழகாகவும் இருக்கும் என்று தம் மனக்கருத்தினை கூறியவுடன் அவர்கள் இருவரும் தாங்கள் அணிந்திருந்த விலைமதிப்பற்ற

ஆபரணங்களை இன்முகத்துடன் கழற்றி தந்ததாகவும் அவற்றை தீர்த்தங்களினால் சுத்தம் செய்து பின்னர் அம்பாலுக்கு அணுவித்ததாகவும், இன்று விசேச நாட்களில் அம்பாளுக்கு இவ்ஆபரணங்களை அணுவிக்கப்படுவதாகவும், இக்கோயில் தலைமைக்குருக்கள் அனந்த நாராயணன் கூறியதால் அறியமுடிகின்றது.

சேதுபதி மன்னர் தங்கப்பல்லக்கில் இக்கோயிலுக்கு வருகை புரியும் பழக்கம் உடையவராக இருந்தார் எனவும் ஒருநாள் அவரது கனவில் அம்பாள் தோன்றி தனக்கு தங்கப்பல்லக்கு வேண்டும் என்று கூறியதாகவும், மறுநாள் அம்பாளுக்கென தங்கப்பல்லக்கு சேதுபதி மன்னரால் வழுங்கப்பட்டதாகவும் இன்றும் அம்பாள் இத்தங்கப்பல்லக்கிலேயே திருக்கோயிலில் உலா வருவதாகும் தலைமைக்குருக்கள் அனந்தநாராயணன் கூறுகின்றார். இவ்வாறு இத்திருக்கோயிலுக்கு சொந்தமான கோடிக்கணக்கான ஆபரணங்களும், பொன் வெள்ளியிலான வாகனங்களும், சேதுபதி மன்னர்களால் வழுங்கப்பட்டு இன்றளவும் பாதுகாக்கப்பட்டும், பயன்படுத்தப்பட்டும் வருகின்றன என்பதனை அறியமுடிகின்றது.

உத்தரகோசமங்கை மங்களநாத சுவாமித்திருக்கோயில்

வைர அணிகள்

வைர விபூதி பட்டயம் – பாஸ்கர சேதுபதியின் சம்பந்தபாளையம்பட்டி ஜமீன்தாரால் வழுங்கப்பட்டது. வைர ருத்திராட்சம்.

தங்க அணிகள்

தங்க நாகாபரணம்–பெரிய குருக்களால் (560 தோலா) செய்து வைக்கப்பட்டது. தங்கருத்திராட்சம் (32) தங்கக்குப்பிகளால் பிடிக்கப்பட்ட ருத்திராட்சம், இரத்தினம் பதித்த ருத்திராட்சம், வெள்ளியினால் செய்யப்பட்ட சிவலிங்கக் கவசம் (பிரைபையுடன்)

அம்பாளுக்குரிய அணிகள்

அலங்கார நகைகள், ஜடையலங்காரம், சூரியப்பிறை, சந்திரப்பிளை, பூரான்பாலைய நெத்திச்சுட்டி, புலிநக அட்டியல் ஆகியவை அனைத்தும் வைரத்தாலும், இரத்தினத்தாலும் செய்யப்பட்ட அணிகளாகும்.

கழுத்தில் அணியக்கூடிய அணிகள்

விலையுயர்ந்த இரத்தின திருமாங்கல்யம்–பாஸ்கர சேதுபதி மன்னரின் மனைவியால் வழங்கப்பட்டது.

விலையுயர்ந்த இரத்தின முகப்புடைய சூடாமணி, முத்தினால் செய்யப்பட்ட (விலையுயர்ந்த முத்து) சூடாமணி.

சிவலிங்க முகப்புடைய முத்தினால் செய்யப்பட்ட சூடாமணி.

விலையுயர்ந்த பச்சைக்கல் அட்டியல், நவ இரத்தினமாலை பத்தொன்பது சரங்கள் கொண்டது.

இரத்தினம், தங்கத்தினால் செய்யப்பட்ட யக்ஞோபவீதம்.

பிரெஞ்சுமுக–டான்சிங் பேகரா.

பிரெஞ்சு காசுமாலை 32 காசுகள் கொண்டது–பிரெஞ்சுகாரரால் அளிக்கப்பட்டது.

மற்றுமொரு தங்கத்தினால் செய்யப்பட்ட காசுமாலை.

கழுத்தில் அணியப்படும் பதக்க அணிகள்

டான்சிங் மொஹரா, பூனைக்கண் பதக்கம், வைர வேடய பதக்கம், கிளப்பதக்கம், பச்சைக்கல் பதக்கம்.

இடுப்பல் அணியப்படும் அணிகள்

விலையுயர்ந்த வைர அட்டிகை (பெல்ட்)

– பாஸ்கர சேதுபதி மன்னரால் வழங்கப்பட்டது.

தங்கத்தால் செய்யப்பட்ட ஒட்டியானம்.

அட்டியல்

விலையுயர்ந்த பச்சைக்கல் கைக்கட்டி சூடாச்செரி (கையில் அணிவது) வைரத்தால் செய்யப்பட்டது.

கையில் அணியப்படும் பாட்லா

வைரத்தினால் செய்யப்பட்ட வளையல்கள்

இரத்தினத்தினால் செய்யப்பட்ட வளையல்கள்

விலைமதிப்புள்ள வைர மோதிரம், நவரத்தினமோதிரங்கள்

தங்கக்கை (அஸ்தம்)

தங்கப்பாதம்

அம்பாள் கையில் வைத்துக்கொள்ள இரத்தினக்கிளி, இரத்தின பூடகம்

தங்கச்கொலுசு மற்றும் நத்து, பில்லக்கு, பேசரி எனப்படும் மூக்குத்தி போன்ற சிறிய வைர அணிகளும் உள்ளன.

இவையனைத்தும் சித்திரை மாதம் நடைபெறும் திருக்கல்யாண வைபவத்தின்போதும், மற்றும் விஷேச திருவிழாக்களிலும், விஷேச அலங்காரத்திற்காகவும் அணிவிக்கப்படும் அணிகள் ஆகும்.

இவ்வணிகள் யாவும் சேதுபதி மன்னர்களாலும், பலதரப்பட்ட மக்களாலும் அம்பிகைக்காக வழங்கப்பட்டுள்ளன.

விக்ரகங்கள்

தங்கவிக்ரகங்கள்

பள்ளியறையில் பயன்படுத்தப்படும், **3579257** தோலா எடையுள்ள அந்த தங்கத்தினால் செய்யப்பட்ட சொக்கர், மீனாட்சி (அம்பாள், மூலவர்) விக்ரகங்கள் இக்கோயிலுக்காக வழங்கப்பட்டுள்ளன. இவையும் சேதுபதி மன்னர்களாலேயே வழங்கப்பட்டவையாகும்.

வெள்ளி விக்ரகங்கள்

மன்னர் பாஸ்கர சேதுபதி, தன் பூஜையறையில் வைத்துப் பயன்படுத்திய பின்வரும் வெள்ளி விக்ரகங்கள் அனைத்தையும் கோயிலுக்காகவே அர்ப்பணித்துள்ளார். இவை மட்டும் அல்லாது பூசை சாமான்கள் (வெள்ளி) அனைத்தையும் வழங்கியுள்ளார்.

1. விநாயகர் விக்ரகம் (மூஞ்சுறு வாகனம் உட்பட)
2. சுப்பிரமணியர் வள்ளி தெய்வானை உடன் உறைந்த விக்ரகம் (மயில் வாகனம் உட்பட)
3. சிவலிங்கம் (ருத்ராசம் உட்பட)
4. மங்களேஸ்வரி விக்ரகம்
5. நடராஜர் விக்ரகம் (சிவகாமி உடனுறைந்த)
6. துவார பாலகர்கள் விக்ரகங்கள்
7. நவகிரக சிற்பங்கள்
8. தெட்ஷிணாமூர்த்தி விக்ரகம்
9. மகாலெட்சுமி விக்ரகம்
10. துர்க்கை விக்ரகம்

இவை மட்டுமல்லாது ஒரு கோயிலில் என்னென்ன சிற்பங்கள் இடம்பெற வேண்டுமோ அனைத்து விக்ரகங்களையும் வெள்ளியினால் செய்து வழிபட்டார் என்றும், அவை அனைத்தையுமே இக்கோயிலுக்கு வழங்கிவிட்டார் என்றும் அறியப்படுகிறது.

ஐம்பொன் விக்ரகங்கள்

பள்ளியறையில் பயன்படுத்துவதற்காகவும், உற்சவ காலங்களில் பயன்படுத்துவதற்காகவும் பின்வரும் ஐம்பொன் சிற்பங்கள் உள்ளன.

1. அம்பாள் (மீனாட்சி)
2. சொக்கர்

3. நடராஜர் சிற்பம் (சிவகாமி உடனிருந்த படி பிரபையுடன் கூடிய)

4. மாணிக்கவாசகர்

5. பதஞ்சலி

6. வியாக்கிரபாதர்

7. காரைக்கால் அம்மையார்

8. அர்த்த நாதீஸ்வரர்

9. விநாயகர்

10. சண்முகர் (தனியாக)

11. சண்முகர் வள்ளி, தெய்வானையுடன் பிற இதர சிற்பங்களும் உள்ளன.

ஊஞ்சல்கள்

பொன்னூஞ்சல்

மன்னர்கள் காலத்திலும், குறிப்பிட்ட ஆண்டுகளுக்கு முன்பு வரையிலும் தங்கத்தினால் செய்யப்பட்ட பொன்னூஞ்சல் பள்ளியறையிலும், ஊஞ்சல் மண்டபத்தில் திருக்கல்யாண வைபவத்திலும், ஊஞ்சல் விழாவின்போது பயன்படுத்தப்பட்டுள்ளதாக அறிய வருகிறது.

வெள்ளி ஊஞ்சல்

இன்றைய தினத்தில் பள்ளியறையில் வெள்ளி உஞ்சலே பயன்படுத்தப்படுகிறது.

வெள்ளி வாகனங்கள்

1. பிள்ளையாருக்குரிய வாகனமான மூஞ்சுறு வாகனம் பெரிய அளவில் உள்ளது.

2. சுவாமி–அம்பாளுக்குரிய மிகப்பெரிய வெ்ளி ரிஷபம்.

3. அம்பாளுக்காக ஊஞ்சல் மண்டப விழாவிற்கென வழங்கப்பட்டுள்ள வெள்ளி ஊஞ்சல் மிகப்பெரியதாக உள்ளது. இவையனைத்தும் நகரத்தார் என அழைக்கப்படும் தேவகோட்டை செட்டியார்களால் வழங்கப்பட்டதாகும்.

**திருப்புல்லாணி ஆதிஜெகந்நாதப் பெருமாள் திருக்கோயில் திருவாபரணங்கள்**

ஸ்ரீபாஸ்கர சேதுபதி அவர்களால் ஆதரவுடன் பெருமாளுக்குச் சமர்ப்பிக்கப்பட்ட 25 காரெட் மதிப்புள்ள மிக விலை உயர்ந்த வயிரக்கடுக்கன்கள் இரண்டு உள்ளன.

ஸ்ரீ பாஸ்கரசேதுபதி அவர்களின் பட்டமகிஷியான ராணி மங்களேசுவரி நாச்சியார் அவர்களால் பக்திச்சிரத்தையுடன் தாயாருக்குச் சமர்ப்பிக்கப்பட்ட மிக விலை உயர்ந்த வயிர ஒட்டியானமும் கண்டாபரணமும் மற்றும் மாட்சிமை தாங்கிய ஸ்ரீ பாஸ்கரசேதுபதி அவர்கள் ஆர்வத்துடன் தருப்பசயன ராமனுக்கு அளித்த மிகவும் நீளமான 75 பவுன் எடையுள்ள 6 வடத்தங்க யங்ஞோபவீதமும், வயிரக்கிரீடம் மிக முக்கியமான திருவாபரணங்களும் உள்ளன. சென்னை இந்து ஆங்கில நாளிதழின் ஆசிரியரால் பக்தியுடன் அளிக்கப்பட்ட விலை உயர்ந்த இரு வைர ஹஸ்தங்களும் கல் இழைத்த மாங்காய் மாலையும் உள்ளன. இந்த நகைகளின் விவரங்கள்

1. 25 காரெட் மதிப்புள்ள வயிரக்கடுக்கன்கள் 2
2. ரத்தின கிரீடம் 1
3. வயிர ஹஸ்தங்கள் 2
4. நீண்ட தங்கத்தாலான பூணூல் (6 வடம்) 1
5. கல் இழைத்த தங்கக்கிளி 1

*தொகுப்புரை*

இராமனும் சீதையும் சிவனை லிங்க வடிவில் உருவம் அமைத்து வழிபட்ட திருத்தலம் இராமேசுவரமாகும்.

இறைவனுக்கு தீபம் ஏற்றுவதும், பூசையின் போது இசைக்கருவிகளை இசைப்பதும், இறைவனானவன் ஒளி வடிவமாகவும், ஒலி வடிவமாகவும் இருப்பதைக் குறிப்பதற்காக இவை செய்யப்படுகின்றன.

இத்திருத்தலம் வடக்கே காசியோடு தொடர்புடையவையாகக் காணப்படுகிறது.

இத்திருத்தலம் பற்றிய செய்திகள் மத்ஸ்ய புராணம், சேது புராணம், கூர்ம புராணம், பத்ம புராணம், சௌரா புராணம், நாரதீய புராணம் போன்றவைகளில் காணப்படுகின்றன.

இராமகாதை, மணிமேகலை போன்ற காப்பியங்களிலும் மூவர் பாடிய தேவாரங்களிலும் பெரியாழ்வார் பாசுரங்களிலும் இத்திருத்தலத்தின் சிறப்புகள் விளக்கப்பட்டுள்ளன.

உத்தர கோச மங்கை மங்களநாத சுவாமித் திருக்கோயிலில் நடராஜருக்குத் தனிக்கோயில் அமைந்துள்ளது. வேறெங்கும் நடராஜருக்குத் தனிக் கோயில் இல்லை என்பது பெறப்படுகிறது.

மாணிக்கவாசகர், அருணகிரிநாதர் ஆகியோர் இக்கோயிலைப் பற்றி பதிகங்கள் பாடியுள்ளனர்.

வேத ஆகமத்தின் ரகசியத்தை ஈஸ்வரன் பார்வதிக்கு உரைத்த தலம் என்பதால் இவ்வூருக்கு உத்தரகோச மங்கை என்ற பெயர்க்காரணம் கூறப்பெறுகிறது.

இத்திருத்தலத்தில் உள்ள நடராஜப் பெருமான், அம்பிகைக்கு அறையில் ஆடிக்காட்டியதால் இது ஆதிசிதம்பரம் என்றும் அழைக்கப்படுகிறது. தில்லையில் இறைவன் அம்பலத்தில் ஆடியதால் தில்லைப் பொன்னம்பலம் என்று வழங்கப்பெறுகிறது.

இத்திருத்தலம் மங்களபுரி, பார்பதிபுரி, சித்தகேந்திரம், தெக்கணகாசி, பிரதிகோசபுரம், கல்யாண்புரி என்று வேறு பெயர்களாலும் அழைக்கப்படுகின்றது.

இராமேசுவரம் போன்று இக்கோயிலும் இராமாயணத்தோடு தொடர்புடையவையாகக் காணப்பெறுகிறது.

மாணிக்கவாசகர் தமது நீத்தல் விண்ணப்பம் எனும் பனுவலை இத்திருத்தலத்தில் பாடினார் என்பதும், அவாரின் திருப்பொன்னூஞ்சல் இக்கோயிலின் நிலைவாயிலில் பாடப்பெற்றது என்பதும் பெறப்படுகிறது.

திருப்புல்லாணி ஆதிஜெகந்நாதப் பெருமான் திருக்கோயிலும் இராமாயணத்துடன் தொடர்புடையவைாயகக் உள்ளது.

இக்கோயிலின் இறைவன் நின்ற, கிடந்த, இடந்த கோலங்களில் காணப்படுகிறார்.

ஆய்வு எல்லைக்குட்பட்ட மூன்று கோயில்களும் சேது மன்னர்களின் ஆட்சிக்குட்டவைகளாகக் காணப்படுகின்றன. இறையிலிகளாக நிலங்களைத் தானமாகத் தந்து, இக்கோயிலின் வளர்ச்சிக்கு பெரிதும் உறுதுணையாக இருந்துள்ளனர் என்பது ஆய்வின் வழி பெறப்படுகிறது.

### அடிக்குறிப்புகள்

1. சேதுபதி மன்னர் வரலாறு, ப. 14
2. திருப்புல்லாணித் தலவரலாறு, ப. (vii)
3. டாக்.எஸ்.எம். கமால், இராமர் செய்த கோயில், ப.11
4. மேலது. ப.13
5. மேலது. ப.13
6. மேலது. ப.14
7. மேலது. ப.15
8. மேலது. ப.15
9. மேலது. ப.18
10. மேலது. ப.15
11. மேலது. ப.19
12. மேலது. ப.19
13. மேலது. ப.20
14. மேலது. ப.23
15. மேலது. ப.24
16. மேலது. ப.24
17. மேலது. ப.24
18. மேலது. ப.25
19. மேலது. ப.25
20. எஸ்.எம். கமால், James Ferguson: History of India and the great eastern architechers 1876: Page: 382-388
21. இராமர் செய்த கோயில் பக் 54–58
22. மாணிக்கவாசகர், ந. சுப்பு ரெட்டியார், திருவேங்கடவன் பல்கலைக்கழகம், திருப்பதி பக்–4, 5,
23. தி.வு.கோ.ம. தலபுராணம், தேவஸ்தான வெளியீடு, பக்.2,3
24. மேலது. ப–19
25. மேலது. ப–20
26. மேலது. ப–20
27. மேலது. ப–85
28. மேலது. ப–86
29. மேலது. ப–87

30. மங்களேசுவர குருக்கள், தி.உ. மங்கை, மங்க. கோயில்.

31. தி.உ.மங்கை தலபுராணம், ப–87

32. மேலது. ப–81

33. மேலது. ப–14, 15

34. ந. சுப்புரெட்டியார், மாணிக்கவாசகர், பக்–31, 32

35. மே.கு.நூ. பக்–159, 160

36. தி.உ.மங்கை தலபுராணம் ப–5

37. ந. சுப்புரெட்டியார், மாணிக்கவாசகர், ப–164

38. திருவாசகம் கீர்த்தி–48, 49

39. ந. சுப்புரெட்டியார், மாணிக்கவாசகர், ப–23.

40. திருஉத்திரகோசமங்கை தலபுராணம். பக்–13

41. மேலது. பக்–153, 154

42. மேலது. பக்–155, 156

43. மேலது. பக்–157, 158

44. மேலது. பக்–167, 168

45. திருப்புல்லாணித் தலவரலாறு, பக்–viii, ix, x

46. மேலது. பக்–viii, ix, x

47. மேலது பக்–viii, ix, x

48. மேலது பக்–viii, ix, x

49. மேலது பக்–viii, ix, x

50. நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதி, ப–76

51. திருப்புல்லாணித் தலவரலாறு பக்–41

52. மேலது. ப–42

53. மேலது. ப–42

54. மேலது. ப–5

55. மேலது. ப–6

56. மேலது. ப–27

57. மேலது. ப–29

58. மேலது. ப–69

# இயல் - 6

## கோயில் வழிபாட்டு முறைகள் உணர்த்தும் தத்துவங்கள்

முன்னோர்கள் கட்டிய கோயில்கள் வெறும் செங்கல், சுண்ணாம்பு, மரம், கருங்கல் இவைகளால் மட்டும் ஆனவையல்ல. அவை உயிர்த்துடிப்புள்ளவை, இன்றுவரையிலும் அவை உணர்வுடன் திகழ்கின்றன என்று கூறினால் மிகையாகாது. சேதுநாட்டுத் திருக்கோயில்களில் இவ்வாய்வேட்டிற்கு எடுத்துக்கொண்டுள்ள திருக்கோயில்களான இராமநாதபுரம் இராமநாதசுவாமித் திருக்கோயில் மற்றும் உத்தரகோசமங்கை மங்களநாதசுவாமித் திருக்கோயில் ஆகியன சைவ ஆகமத் தத்துவத்தை உள்ளடக்கியும் திருப்புல்லாணி ஆதி ஜெகந்நாதப் பெருமாள் திருக்கோயில் வைணவ ஆகமத்தை உள்ளடக்கியும் மெய்ஞானம் கலந்த விஞ்ஞானத் தத்துவங்களாக வடித்து, இத்திருக்கோயிலைக் கட்டியுள்ளனர் என்பதனை அறியமுடிகிறது.

திருக்கோயில்களின் அமைப்பும், வழிபாட்டு முறையும் ஒன்றோடொன்று தொடர்புடையவையாகவும், ஒன்றிலிருந்து ஒன்றைப் பிரித்தறிய முடியாத தன்மையுடையனவாகவும் திகழ்கின்றன. இவ்வாகமத் திருக்கோயில்களின் அமைப்பு, வழிபாட்டு முறையில் பொறித்துள்ள தத்துவங்கள் யாவும் நம்முன்னோர்கள் கண்டுணர்ந்த மெய்ஞான வழிகளாகும். நாமும் நம் சந்ததியினரும் கடைபிடித்தொழுகி ஞான மார்க்கத்தின்வழி முக்தியடைய இத்திருக்கோயில்கள் அன்றும், இன்றும் நிலைகளனாகத் திகழ்ந்து வருகின்றன.

இத்தலைப்பில் மனிதனோடு தொடர்புடைய கோயில் அமைப்புப் பற்றியும், அக்கோயில் அமைப்பு வழிபாட்டு முறைகள் உணர்த்தும் தத்துவங்கள் பற்றியும் விரிவாகக் கண்டறியப்பெற்றுள்ளது.

## I. மனிதனோடு தொடர்புடைய கோயில் அமைப்பு

ஆலயங்கள் அனைத்திலும் மனிதனுடைய அறிவு, இச்சை, செயல் மூன்றுக்கும் உணர்வளிக்கும் வகையில் மூவகை முறைகள் கையாளப்படுகின்றன. அவை ஆலய அமைப்பு முறை, ஆராதனை முறை, தரிசன முறை என்பனவாம். அவற்றுள்

(1) ஆலய அமைப்பின்பல அங்கங்களான மண்டபங்கள், பிரகாரங்கள், முதலியனவும், அங்குள்ள விக்கிரகங்கள், அவற்றிற்கேற்படுத்தப்பட்டுள்ள ஸ்தானங்கள், யந்திரங்கள், பிரதிட்டைகள் முதலியனவும், அமைக்கப்பட்டிருக்கும் விதமும் ஆலய அமைப்பு முறையாகும்.

(2) அர்ச்சகர், பட்டர், குருக்கள் முதலியோர் அங்குப் பூஜை இயற்றும் முறை ஆராதனை முறையாகும்.

(3) அடியார் சென்று வழிபடும் முறையெல்லாம் ஆலய தரிசன முறையெனப்படும்.

இந்த மூன்று முறைகளும் தனித்தனியே அறிகுறிப்பொருள், அருள்நெறிப்பொருள், அனுபவப்பொருள் என மூவகைப் பொருள்களைக் கொடுக்கின்றன. அறிகுறிப்பொருள் அடியாருடைய அறிவைப் பெருக்குவது. அருள்நெறிப்பொருள் அடியாருடைய இச்சையைப் பண்படுத்துவது, அனுபவப்பொருள் அடியாருக்கு மன அமைதியையும், சாந்தியையும், ஆன்ம முன்னேற்றத்தையும் அளிப்பது.

மனிதன் உடம்பல்லன்; குணங்களல்லன்; அறிவுமல்லன்; அவற்றிற்கெல்லாம் அப்பாற்பட்ட ஆன்மாவே அவன் என்ற உண்மையை விளக்குவதே நம் ஆலயங்களின் முதல் நோக்கம் ஆகும். இதனை,

**"பூதபரி ணாமத்தால் பூதான்மா ஆவன்,**
**புகல் சத்தம் பொருந்தலின் அந்தரான்மாஆவன்**

**மேதகுத் துவத்தால்தத் துவான்மா ஆவன்**

**விளம்புபிர கிருதிகுணந்தழீ இச்சுகத்துக் கங்கள்**

**தீதறவே புசித்தலனால் சீவான்மா ஆவன்,**

**திகழ்தருமந் தரப்புணர்வால் மந்திரான்மா ஆவன்**

**யாதுமற விட்ட அவன் பரமான்மா ஆவன்**

**ஏகான்மா வேஆறு திறனுமா யிருப்பன்"(1)**

**(ஸர்வஞனோத்தரம், பாட்டு 59)**

என்று கூறுகின்றது. ஒரே ஆன்மாவே அதன் அறிவு நிலையைப் பொறுத்தும், அது சார்ந்து நிற்கும் பொருளைப் பொருத்தும் பூதான்மா, அந்தரான்மா, தத்துவான்மா, சீவான்மா, மந்திரான்மா, பரமான்மா என ஆறு பேதங்களாக விளங்கும் என்பது ஆகமம் கூறும் கருத்தாகும். ஆன்மாவின் இந்த ஆறு நிலைகளையும் அறிகுறியாக உணர்த்துவதே சிவாலயங்களிலுள்ள

1. "முன்கோபுரம் – ஸ்தூலலிங்கம் – பூதான்மா
2. மகாபலிபீடம் – பத்திரலிங்கம் – அந்தரான்மா
3. கொடிமரம் – துவஜலிங்கம் தத்துவான்மா
4. மூலவர் – சதாசிவலிங்கம் – சீவான்மா
5. ஆசாரியர் – ஆன்மலிங்கம் – மத்திரான்மா
6. பரவெளி – அகண்டலிங்கம் – பரமான்மா"[(2)]

என்பனவாகும். கோயில் அமைப்பை மனித உடம்பின் அமைப்புடன் ஒப்பிடுகையில் அவை இரண்டும் ஒன்றே என விஸ்வகர்தீய வாஸ்து சாஸ்திரம் பின்வருமாறு கூறுகிறது.

## I.1. *விஸ்வகர்திய வாஸ்து சாஸ்திரம்*

### *1.1. மனிதன் நின்ற கோலத்தில் பார்த்தால்*

"உபபீடம்–அடித்தளம்–பாதம் (சுணம்)

அதிஷ்டானம்–அடிமுழங்கால் முட்டி–ஜானு

பாதவர்க்கம்–சுவர்கள்–கைகள்

கும்பபஞ்சரம்–பானை போன்ற அமைப்பு–வயிறு, நாடி (உதரம்)

பிரஸ்தரம்–கூரை–தோள் (பாஹு)

கண்டம்–கழுத்து–கலா

சிகரம்–விதானம்–தலை, முகம் (சிரஸ்)

உஷ்னீஷம்–முடிந்ததலைமுடி–விகா

மஹாநாசிகா–சன்னல்–மூக்கு, கண் (நாசி–நேத்ரம்)" [3]

### *1.2. கிடந்த கோலம்*

| | | |
|---|---|---|
| கர்ப்பகிரகம் | – | தலை |
| அந்தராளம் | – | கழுத்து |
| முக மண்டபம்– | மார்பு | |
| மகா மண்டபம் | – | வயிறு |
| கோபுரம் | – | கால் |

### *1.3. சர்வஞானாத்தர ஆகமம் கூறுவதாவது*

| | | |
|---|---|---|
| "கோபுரம் | – | பூதாத்மா |
| பலிபீடம் | – | அந்தராத்மா |
| துவஜஸ்தம்பம்– | தத்துவாத்மா | |
| குரு | – | மந்திராத்மா |
| பிரம்மத்திரம் | – | பரமாத்மா" [4] |

### *1.4. இதனையே சற்று விரிவாகப் பார்த்தால்*

| **"மனித உடம்பு** | | **கோயிலின் பாகம்** |
|---|---|---|
| பாதங்கள் | – | கோபுரம் |
| தொப்புள் | – | பலிபீடம் |
| மார்பு | – | மகாமண்டபம் |
| கழுத்து | – | அர்த்த மண்டபம் |
| சிரம் | – | கர்ப்பக் கிரகம் |

| | | |
|---|---|---|
| சிரத்தில் இருசெவிகள் | – | வலது தட்சிணாமூர்த்தி, இடது சண்டேசுவரர் |
| மார்பில் | – | நடராஜன் |
| கழுத்தில் | – | நந்தி |
| வாய் | – | ஸ்நபனமண்டபவாசல் |
| மூக்கு | – | ஸ்நபன மண்டபம் |
| புருவமத்தி | – | லிங்கம் |
| தலையின் உச்சி | – | விமானம்''[(5)] |

### I.2. *ஆலயம்*

கோபுரம் ஸ்தூல லிங்கமாகும். கோபுர தரிசனம் கடவுளின் பாத தரிசனமாகும். இதனைப் 'பிரம்மரந்திர மத்திய கபாலத்துவாரம்' என்று யோகிகள் கூறுகின்றனர்.

ஒவ்வோர் ஆலயத்திற்கும் உயர்நிலையாயிருப்பது அதன் மூலஸ்தான மூர்த்தியாகிய கர்ப்பகிரக விக்ரகம். அந்தக் கற்சிலைக்கு உயிரைக் கொடுத்து, அதைச் சான்னித்தியமுடைய மூர்த்தியாக்குவது அதன் அடியில் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கின்ற இயந்திரமாகும். இயந்திரமில்லாத வாகனம் பயன் இல்லாததுபோல் கோயிலின் மூல மூர்த்திக்குப் பிராணப் பிரதிஷ்டை செய்யப்படாத ஆலயம் ஆலயமாகாது. அங்கு வேதாகம ஆராதனையோ, வழிபாடே நடைபெறுவதில்லை. இம்மூலஸ்தான மூர்த்தியும் ஒன்று முதல் ஏழுவரையுள்ள ஆவணங்கள் அல்லது பிரகாரங்களின் மதில்களால் சூழப்பட்டிருக்கும். இன்றைய விஞ்ஞானம், அணுக்கருவை, எலக்ட்ரான், புரோட்டான், நியூட்ரானின் அமைப்பு, செயல்பாடுகளிலிருந்து அதன் தன்மையை ஒருவாறு தீர்மானித்திருக்கின்றது. இதனையே பழந்தமிழ் மூதாதையர்கள், சிற்றறிவுடைய சாதாரண மக்கள் அறிந்துகொள்ளும் பொருட்டு, அணுவின் உருவத்தை ஆனந்தக் கூத்தனாகும் நடராஜன் வடிவத்தாலும், ஆண், பெண் அணுக்கள் (Positive and negative atoms)

தம்முள் திருமணம் செய்து கொள்ளும் திருமண உறவை குறிக்கும் வகையில் சிவலிங்க வடித்தாலும், அர்த்தநாரீஸ்வரர், சோமாஸ்கந்தர் வடிவிலும் உருவமைத்து, அண்ட, பிண்டங்களிலுள்ள உண்மைகளையும், தத்துவங்களையும் ஆலய அமைப்பிலும் வழிபாட்டு முறையிலும் ஆக்கி வைத்துள்ளனர், என்று அறியலாம். அண்டத்தில் உள்ளது பிண்டத்தில் எனும் நடைமுறையே இந்துமதம் கூறும் தத்துவார்த்த உண்மையாகும் என்பதனை அறிய முடிகிறது.

*ஆலய மூலஸ்தான மூர்த்தி உணர்த்தும் தத்துவம்*

ஆலயம் செல்வோர் வெகு தொலைவில் வரும் பொழுது அவருக்கு முதலில் தெரிவது கோயிலின் உயர்ந்த முன் கோபுரமாகும். இக்கோபுரங்கள் வானளாக உயர்ந்து நின்றிடினும் அவற்றை யாரும் முதலில் வணங்குவதில்லை. கோபுரங்களில் இடம்பெற்றிருக்கும் சிற்பங்களையோ ஆலயத்தூண்களின் அழகிய சிலைகள், சதாசேவை உருவங்கள் முதலியவற்றை அவர்கள் வணங்குவதில்லை. கோபுரத்தையடுத்து, அதன் நேராக, சிறிதே ஒளி தெரியும் ஆலயக்கருவறையை நோக்கியே கைகூப்பி தொழுகின்றனர். புறக்கண்களுக்கு அவ்விருண்ட கருவறையில் ஒன்றும் புலப்படாவிடினும் அகக்கண்களுக்கு அங்குக் கோயில் கொண்டுள்ள இறைவனின் திருவுருவம் புலப்படுகின்றது. அதனையே மனத்தால் முதலில் வணங்கி, கோபுரத்தின் வாயிலாக உட்செல்கின்றனர்.

ஆலயக்கருவறையில் மூலவிக்கிரகத்திற்கு அடியில் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கும் யந்திரங்கள் உயிர்நாடியாயுள்ளவை. அதுவே பூஜைக்கு இன்றியமையாதது. ஆகமவிதிப்படி இதற்குப் பூசைகள் செய்யப்படுகின்றன. அதன் மேலுள்ள விக்கிரகம் உருவமாகவும் பூஜிக்கப்படும் எந்திரத்தின் ஆற்றல் அருவாமகவும் உள்ளன என்பது இதன் மூலம் அறிய வருகிறது.

யந்திரம் ஆகமவிதிப்படி வரையப்படும் பொழுது அஃது ஓர் உலோகத்தகடாய், வெறுஞ்சடப்பொருளாகவே இருக்கும். பின், மந்திரம், முத்திரை பாவனைகளாலும், உரிய, கிரியையாலும் அது பாடம் பண்ணப்படும்பொழுது, இரும்புத் துண்டு

காந்தமாவது போல அச்சடப்பொருள் சிறிது, சிறிதாக அருட்கருவியாக மாற்றப்படுகின்றது. இதனை 'சித்பிரகாச ஆவாகனம்' என்கின்றனர். முடிவில் அங்குப் பூரண உருவேறி யந்தரஸ்தாபனமும், பிராணப் பிரதிஷ்டையும் செய்யப்படும் பொழுது அது முழுவதும் இறைவனுடைய அருட்கருவியாக மாறி, அனுக்கிரக சக்தியை நாற்புறமும் இரவும் பகலும் இடைவிடாது செலுத்திக் கொண்டே இருக்கின்றது. ஆலயங்களில் நடைபெறும் அன்றாட ஆராதனைகள், வெறியாகும் சக்திக்கு ஈடுகொடுக்கின்றன. இதனை 'அபிமுக ஆவாகனம்' என்கின்றனர். இவ் ஆராதனை இல்லாத யந்திரங்கள் நாளாவட்டத்தில் சக்தியிழந்து விடும் என்பதும் இதனால் அறியப்படுகிறது.

உலக ஆன்மாக்கள் பொத்துநின்று பாடம் படிக்க உதவும் கருவி உடம்பாகிய நடமாடும் கோயிலாகும். இவ் உடம்புக்கு உயிர்நிலையாகிய ஆன்மா அங்கில்லாத பொழுது அவ்வுடம்பு பிணமென்றே அழைக்கப்படுகின்றது. அவன், அவள் அதுவாகின்றது. இன்னார் கிடக்கின்றார் எனப்படாமல், இன்னார் சவம் கிடக்கின்றது என்றே குறிப்பிடுகின்றோம். ஆன்மா வேறு, உடம்பு வேறு என்ற உண்மை மரண சமயத்தில் நன்கு அறியப்படுகின்றது. மற்ற விகார நேரங்களில் இவ்வுண்மை மனதால் ஏற்க மறுக்கப்பட்டும், மறந்தும் விடுகின்றது. அந்த மயக்கம் காரணமாக மனிதன் பல்வேறு இழி செயல்களிலும் ஈடுபடுகின்றான்.

இந்த மயக்கத்தை உணர்த்தி, அதனைப் போக்குவதே ஆலயத்தின் கோபுரமாகும். 'மனிதன் உடம்பல்ல ஆன்மா' என்ற உண்மையை இடைவிடாது நமக்கு ஞாபகமூட்டி நிற்பதே ஆலயத்தின் முன் கோபுரமும் உற்றிருக்கும் மூலஸ்தான மூர்த்தியுமாகும்.

திருக்கோயில் கோபுரத்தைப் புறத்தே கண்டவுடன், இப்புறஉடம்பு நிலையில்லாதது எனவும், நான் உடம்பல்ல, ஆன்மா என்ற உண்மையை உணர்த்தியும், ஆன்மாவைப் பக்குவப்படுத்தும் வகையில் கோயில் கோபுரங்கள்

வானளாவ ஆகமவிதிப்படி கட்டப்பட்டுள்ளன. இப்படமாடக்கோயில் கோபுரம் நடமாடும் மனிதனின் ஓர் 'உத்தம ஆத்ம சாதனமாக' விளங்கி வருகின்றது.

### I.2.1. *ஆவரண மயக்கம்*

இவ்வுடம்பை நான் என்று கொள்ளும் மயக்கம் இயற்கையினுள்ள ஆவரண சக்தியின் மறைப்பால் ஆகின்றது. இந்த மறைப்பு இறைவனுடைய ஐந்தொழில் முறையில் திரோதானம் அல்லது மறைத்தல் என்று அழைக்கப்படும்.

> **"அநியாயமாய் இந்த உடலை நான் என்று வரும்**
> **அந்தகற் காளாகவோ,**
> **ஆடித்திரிந்து நான் கற்றதும் கேட்டதும்**
> **அவலமாய்ப் போதல் நன்றோ"**
>
> **- தாயுமானவர்**

என்று தாயுமானவர் முறையிட்டுள்ளதும் இந்த ஆவரணமாகிய மனமயக்கத்தைப் பற்றியேயாகும். சாமானியர் முதல் ஞானியன் வரை யாவர்க்கும் இந்த ஆவரண மயக்கத்தை நீக்கும் வகையில் கோயில் கோபுரம் திகழ்கின்றது.

ஆலயங்களின் முன் கோபுரங்கள் மிக எளிதில் புலப்படுவன போலவே நம்மில் நமக்கு எளிதில் புலப்படுவது நமது தூல உடம்பாகும். தூல உடம்பைத் தானாக எண்ணும் ஆன்மாக்கள் தூல ஆன்மாக்கள், தேக ஆன்மாக்கள் எனக் கூறப்படுகின்றனர். தேகான்மா மனநிலையில் நிற்பவர் பட்டுப்படிபவர் எனவும் நன்மை, தீமையைப் பகுத்தறியும் தன்மையில்லாத சிற்றிவினராவர் என்றும் இதன் மூலம் அறியலாம்.

வழிபாடு என்பது சரியை, கிரியைகள் ஆகும். அவர்களுடைய கடமை அறப்பணியாகும். இவ்வறப்பணி என்பது அன்னதானமும் கல்விதானமுமேயாகும். இவ்வாறு பக்குவப்பட்ட, பண்பட்ட ஆன்மா, நன்மை, தீமை இன்னதென ஒருவாறு உணர்ந்து கோபுர வாயிலைக் கடந்து வழிபாடினை செய்கின்றது.

"சிவ ஆலயங்களில் சிவலிங்கம், அதிகாரநந்தி, கொடிமரம் மூன்றும் ஒரே வரிசையில் நிற்பதைக் காணமுடிகின்றது. அவற்றை முறையே பதி, பசு, பாசம் என்று சைவாகம நூல்கள் கூறுகின்றன. பசுவாகிய நந்தி (ஆறாதிக்கவல்ல ஆன்மா) உலகமாகிய கொடிமரத்தை நோக்கி நிற்குமாயின் உலகப்பற்றும், சிற்றின்ப ஆசைகளும் அவை காரணமாக துன்பமுமே ஆன்மாவுக்குப் புலப்படுமெனவும், நந்தி கொடிமரத்தை நோக்காது அதனைத் தாண்டி பதியாகிய இறைவனை நோக்கும் பொழுது அப்பசுவிற்கு (ஆன்மாவிற்கு) பேரின்ப அனுபவம் கைவரும் என்று சித்தாந்த நூல்கள் குறிப்பிடுகின்றன." [6]

திருக்கோயில் அமைப்புகளில் கோபுரம், பலிபீடம், கொடிமரம், அதிகார நந்தி ஆகியன தேகான்மா (பூதான்மா), அந்தரான்மா, தத்துவான்மா என இம்மூவகையினரும் ஆலயங்களில் முன்கோபுர நந்தியிலிருந்து கொடிமரம் வரை நின்று தொழும் நிலையினர் இம்மூன்றுவகை ஆன்மாக்களும் மண், பெண், பொன் அனுபவங்களையே விரும்பி நிற்பன என்பதனை இன்று உணர்த்தி நிற்கின்றது.

பலிபீடம், கொடிமரம் முதலியவற்றைத் தாண்டி உள்ளே செல்பவருக்குக் கிழக்கு நோக்கிய ஒரே வாயில் தான் காணப்படும். அந்ததுவாரத்தின் வாயிலின் வடக்கு ஸ்தம்பம் விதி என்றும், தெற்கு ஸ்தம்பம் விளக்கு என்றும் பொருள்படும். இத்ஸ்தம்பங்கள், கர்மம், தர்மம் என்றும் பொருள்படும். கர்மம் என்பது முற்பிறஷ்டிகளில் செய்த வினைகளுக்கேற்ப அமைந்த சூழ்நிலைகள் எனவும் தர்மம் என்பது இப்புறவிக்கேற்பட்ட கடமைகள் எனவும் கூறப்படுகின்றன. இவ்விரண்டையும் ஆராய்ந்து அவற்றின் கட்டுப்பாட்டிற்குள் ஒழுகிட வேண்டும். இதுவே ஒரே வாயில் அமைந்திருப்பதன் உட்பொருளாகும் என்பதை அறியமுடிகிறது.

### I.2.2. *மனிதனின் அன்ன உடம்பும்-ஆலய அமைப்பும்*

ஆலய அமைப்பில் பிரகாரங்கள் அல்லது ஆவரணங்கள் ஏழு வகையாக அமைக்கப்படுகின்றன. இவை மனிதனிடம் மறைப்புண்டு பண்ணும் உடம்புகளைக்

குறிக்கும் ஒன்றெனின் – மனித உடம்புகளை மொத்தமாகவும், ஏழாக இருக்கும் பொழுது அவ்வுடம்புகளைக் தனித்தனியே வேறுபடுத்தியும் குறிப்பிடும்.

| பிரகாரங்கள் | உடம்பு வகைகள் |
|---|---|
| ஒன்று | மனிதனின் முழு உடம்புத் தொகுதி |
| மூன்று | ஸ்தூல, சூட்சும, காரன உடம்புகள் |
| ஐந்து | அன்னமய, பிராணமய, மனோமய, விஞ்ஞான மயஆனந்தமய கோசங்கள் |
| ஏழு | அன்ன உடம்பு, பிராண உடம்பு, இச்சையுடம்பு, உருவமான உடம்பு, அருவமன உடம்பு, விஞ்ஞான உடம்பு, ஆனந்த உடம்பு (பார்க்க படம் பிற்கிணைப்பு) |

### I.2.3. *மூர்த்தி, தலம், தீர்த்தம் சிறப்பாய் அமைப்பதன் நோக்கம்*

> **“மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாய்த்**
> **தொடங்கினார்க்கு வார்த்தை சொலச்**
> **சற்குருவும் வாய்க்கும் பராபரமே”**

எனும் தாயுமானவர் பாடல் அடிகள் உணர்த்தும் பொருளாவது, தலயாத்திரை செய்வது, தீர்த்தங்கள் ஆடுவதன் பலன் இறையருள் கிட்டுவதற்கு மட்டுமல்லாமல் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கினையும் உணர்த்துவதற்கும் அதன் மூலம் நல்ல சற்குண வாய்க்கப்பெறுவதற்கும் என்ற உண்மை இங்கு உணரப்படுகின்றது. அதனால்தான் மாணிக்கவாசகர் திருஉத்திரகோச மங்கைத் திருத்தலத்தில் தாம் கண்ட ஞான ஆசிரியினை ‘சிக்கெனப் பிடித்தேன் உன்னை ’ என்று பாடியுள்ளார்.

முன்னோர்கள் கோயிலை எழுப்பும் பொழுதே மூர்த்தி, தலம், தீர்த்தம், தல விருட்ஷம் இந்நான்கும் மக்களுக்கு நன்மை பயக்கக் கூடிய வகையில் தேர்ந்தெடுத்து உருவாக்கியுள்ளனர். திருக்கோயில் நிறுவும் பொழுது திருக்குளமும்

அமைத்தல் மரபாகும். அவ்வாறு குளம் வெட்டும் பொழுது அங்கே கிடைக்கும் நீரின் தன்மை, அதில் உள்ள மூலப்பொருட்கள், மூலிகை கலந்த சத்துக்கள், அவ்விடத்தின் நீர் ஆதாரம் முதலியவற்றை ஆய்வு செய்த பின்னரே குளத்தை உண்டாக்கியிருக்கிறார்கள். எனவே அக்குளத்தின் தீர்த்தம் நோய் தீர்க்கும் தன்மை உடையதாய் அமைந்துள்ளது.

கோயில்களில் உள்ள தலவிருட்ஷங்கள் காற்றின் மூலம் பரவும் பலதரப்பட்ட நோய்களுக்கு மருந்தாக அமைகின்றன. வைத்தியத்தில் கைதேர்ந்த நம் முன்னோர்கள் இதனால்தான் ஒவ்வொருவரின் நோய், மனப்பான்மைக்குத் தகுந்தாற்போல் புனித மரங்கள் உள்ள தலங்களுக்குப் போகும்படி கூறி இருக்கிறார்கள். மூர்த்தி, தலம், தீர்த்தம், தலவிருட்ஷம் இந்நான்கும் நமக்கு இயற்கையோடு பொருந்திய ஆரோக்கியத்தையும், அமைதியையும் மறைமுகமாக அளிக்கின்றன. இந்தச் சூழ்நிலையில் வாழ வேண்டும் என்பதனை வலியுறுத்தியே ஔவையார் "கோயில் இல்லா ஊர் பாழ்" என்று கூறியுள்ளார்.

மனிதர்கள் ஒவ்வொருவரிடத்தும் உடம்பாகிய பாசமும், ஆன்மாவாகிய பசுவும், ஆட்டுவிக்கும் இறைவனாகிய பதியும் அடங்கி இருக்கின்றனர். இதனை உணர்த்தும் வகையிலேயே ஆலய அமைப்பு உள்ளது. இக்கோட்பாட்டின்படியே நம் முன்னோர்கள் திருக்கோயில் அமைப்புகளைக் கையாண்டுள்ளனர். ஆலய வழிபாட்டின் நோக்கம் மனிதனை நல்வழிப்படுத்துதலேயாகும். அமைப்பையும், வழிபாட்டையும் ஒன்றோடொன்று தொடர்பு படுத்தியே நம்முன்னோர்கள் கையாண்டுள்ளனர்.

### II. *வழிபாட்டு முறைகள் உணர்த்தும் தத்துவங்கள்*

வார்த்தை சொல்லி வழிகாட்டும் சற்குருவை அடைந்தால் போதும் வாழ்வின் உயர்ந்த நிலையை அடையலாம் என்பது உண்மையான கூற்றாகும். குருவின்

துணையை நாடி பிறவிப்பணி அளித்தல் ஒன்றே மனிதப்பிறவி எடுத்ததன் நோக்கமாக உள்ளது.

**“தெளிவு குருவின் திருமேனி காண்டல்**
**தெளிவு குருவின் திருநாமஞ்செப்பல்**
**தெளிவு குருவின் திருவார்த்தைக் கேட்டல்**
**தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே ”**

**- திருமந்திரம்**

தானே வருவதுதான் வாய்ப்பு எனினும், குருவானவர் தாமே வலியவந்து ஆட்கொள்வது அரிய வாய்ப்பாகும். அவ்வரிய வாய்ப்பு கோயிலுக்குச் செல்வதாலும் வழிபாட்டு முறைகளை முறையே செய்து, அவற்றின் தத்துவம் உணர்ந்து செயல்படுவதாலுமே கிட்டும்.

**“நட்ட கல்லைத் தெய்வமென்றே நாழுபுட்பம் சாத்தியே**
**சுற்றி வந்து மொணமொணவென்று சொல்லு மந்திரம் ஏதுடா?**
**நட்ட கல்லும் பேசுமோ? நாதன் உள்ளிருக்கையில்**
**சுட்ட சட்டி சட்டுவம் கறிச்சுவையறியுமோ? ”**

இது சித்தர் சிவவாக்கியர் வாக்கு. இவையெல்லாம் பரியக்குவம் அடைந்தவர்களுக்கென்றே சொல்லப்பட்டதாகும். திருமூலர் போன்ற சித்த மகான்கள் உள்ளத்தையே பெருங்கோயிலாக்கி ஆனந்தம் கொண்டவர்கள். மாணிக்கவாசகர் குருவருளாளயே திருவருள் பெற்றுள்ளார். சாதாரண மானிடர்களாகிய நாம் குருவாகிய இறைவன் உள்ள ஆலயத்திற்குச் செல்ல வேண்டியும், அங்கு நடைபெறும் திருவிழாக்களின் தத்துவத்தை நம் வாழ்க்கையோடு இணைத்து உய்வு பெறுவதுமே கோயில் வழிபாட்டு முறை மற்றும் திருவிழாக்களின் தத்துவங்களாக உள்ளன.

நித்தியப் பூசையில் செய்யப்படும் தாழ்வுகள் தீரச் சில நாட்கள் மட்டும், சிறப்பாகச் செய்யப்படுவதே நைமித்திகபூசை (திருவிழா) எனப்படும். இதனைப் பிரமோத்ஸவம் (வைணவ ஆலயங்களில்) என்றும் திரு அத்யயன உற்சவம் என்றும் (சிவ ஆலயங்களில்) கொண்டாடுகின்றனர். சிவஆலயங்களில் பத்து நாட்கள்

பிரமோத்ஸம் எனவும், வைணவத் தலங்களில் மார்கழி மாதம் சுக்கிலபட்ச ஏகாதசிக்கு முன் பத்து தினங்கள் சிறிய திரு அத்யயன உற்சவம் (பகற்பத்து) மாகவும், ஏகாதசி தொடங்கி பத்துத் தினங்கள் பெரிய திரு அத்யயன உற்சவம் (இராப்பத்து) என்றும் கொண்டாடப்படுகின்றன. இவற்றுள் ஆய்வு எல்லை கருதி சில ஆலயத்திருவிழாவின் தத்துவார்த்த கருத்துக்கள் மட்டும் இங்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றன.

## II. 1. *திருவிழாவிற்கான சிறப்பான சடங்குகளும் தத்துவங்களும்*

இறைவன் ஐந்தொழில்களை இனிது நடத்தி வருகின்றான். அவை சிருஷ்டி (உண்டாக்குதல்) ஸ்திதி (காப்பாற்றுதல்) தும்ஹாரம் (அழித்தல்) திரோபாவம் (மறைத்தல்) அனுக்கிரகம் (அருளல்) என்பனவாம். இந்த ஐந்தொழில்களையும் பத்து நாள் திருவிழாக்களில் அமைத்துள்ளனர்.

“மண் எடுத்தல், முறையிடுதல், கொடியேற்றம் முதலியவைகள் சிருஷ்டி (அ) படைத்தல் தொழிலை உணர்த்துகின்றன. வாகன உத்ஸவங்கள், யாகம், பலியிடுதல் முதலியன ஸ்துதி (அ) காத்தல், தொழிலைக் குறிக்கின்றன. தேர்த்திருவிழா பரிவேட்டை, சாந்தணிதல் முதலியன ஸம்ஹாரம் (அ) அழித்தல் தொழிலைக் குறிக்கின்றன. சத்தமிடாமல் மௌனமாக நடத்தும் திருவிழா திரோபவத்தை (மறைத்தலைக்) குறிக்கும் நடராஜர் உத்ஸவம், மட்டையடி, திருவூடல் முதலியன அனுக்கிரஹத்தை (அருளாளன்) குறிக்கின்ற வகையில் அமைந்துள்ளன.

பத்து நாள் திருவிழாக்களால் முதலைந்து நாள் விருத்திக்கிரம ஐந்தொழில்கள் நடக்கின்றன என்றும், பிற்பகுதி ஐந்து நாள் லயக்கிரம ஐந்தொழில்கள் நடக்கின்ற என்றும் கூறப்படுகின்றது. இதற்குத் தக்கபடி வாகனங்கள் அமைக்கப்படுகின்றன”.[7]

### II. 1.1. *துவஜாரோகனம் (கொடியேற்றம்)*

“முதல் நாள் திருவிழாவில் கொடியில் காளையின் ரிஷபத்தின் உருவத்தை வரைந்து முறைப்படி பூசைகள் செய்து கொடியேற்றப்படுகின்றது. இதில் ரிஷபம்

தர்ம உருவமாகவும், ஆத்மாவின் உருவமாகவும் மதிக்கப்படுகின்றது. ஆத்மாக்களையும் தர்மத்தையும் கீழ்நிலையிலிருந்து உயர்நிலைக்கு கொண்டு செல்லும் இறைவனின் கருணை இத்திருவிழாவில், இந்நிகழ்ச்சியால் விளக்கப்படுகின்றது”.[8]

### II. 1.2. *கொடியேற்றத்தின் தத்துவம் (துவஜா ரோகனம்)*

ஆகமவிதிக்குட்பட்ட திருக்கோயிலில் திருவிழாக்கள் கொடியேற்றத்துடனையே தொடங்குகின்றன. இத்திருவிழாக்கள் யோக நெறியையும் உபாய திஷா முறைகளையும், உண்மைத் தீஷா மார்க்கத்தையும் விளக்குவன. அதனால் ‘திருக்கோயில்களில் கொடியேற்றப்படும் பொழுது மற்ற கொடியேற்றம் போலன்றிப்பட்டமானது இடகலைப் போல கொடிமரத்தை வளைந்து வளைந்து சுற்றியே மேலேயேற்றப்படுகின்றது. இதில் குண்டலினி தத்துவம் உணர்த்தப்படுகின்றது. இடகலை, பிங்கலை நாடிகள் ஆண்களுக்கும், பெண்களுக்கும் எதிர்மாறாகவிருக்கும். ஆண்களுக்கு இடகலை இடப்புறமும், பெண்களுக்கு வலப்புறமும் தொடங்குவனவாகும். பிங்கலை ஆண்களுக்கு வலப்பக்கமிருந்தும், பெண்களுக்கு இடக்கைப் பக்கமிருந்தும், முதுகுத் தண்டின் அடியிலிருந்தும் எழும்பி மேலேறுவதாகும். பிங்கலையே ஆண்கலையாதலால் ஆண்களுக்கு வலது புறத்திலும், பெண்களுக்கு இடது புறத்திலும் ஏற்படும் நோய்கள் எளிதில் குணப்படுவதில்லை என்பதை முன்னோர்கள் அறிதியிட்டு கூறியுள்ளனர். இக்குண்டலினி தத்துவத்தின் அடிப்படையிலேயே ஆலயந் தொழும்பொழுது இறைசன்னதியில் ஆண்களும் பெண்களும் இடம், வலமாக எதிர், எதிராக நிற்கவேண்டுமென்பது நடைமுறையில் இன்றளவும் கடைப்பிடிக்கப்படுகின்றது. இவ்வேளையில் ஆண், பெண் இருவரும் இடகலையை இறைவனிடம் திருப்பி நிற்பர். இதன் பொருட்டே நம் முன்னோர்களிடம் “ஆலயந்தொழுவது சாலவும் நன்று என்ற பழமொழி” பயின்று வந்துள்ளதை அறிய

முடிகின்றது. இதனை மாணிக்கவாசகர், "உய்ய என் உள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற மெய்யா" என்று திருவாசகத்தைக் குறிப்பிட்டுள்ளதன் மூலம் அறியலாம்.

குண்டலினி சக்தியானது ஆலயக் கொடிமரத்தில் கொடிப்பட்டம் சுற்றி ஏறுவது போன்று முதுகுத்தண்டின் வழியாகப் பாம்புபோல வளைந்து மேலேறி நாடி, வயிறு, இதயம், கழுத்து, நெற்றி இந்த ஐந்து சக்கரங்களிலும் சீறி வெளிக்கிளம்பும். இதுவே ஐந்து தலைநாகம் எனப்படுவது. பாம்பாட்டிச் சித்தர்கள் பிடித்தாட்டும் பாம்பு இதுவேயாதும்'. (9)

**II. 1.3.** ***விருத்திக்ரம ஐந்தொழில்கள்***

| | | |
|---|---|---|
| நாள் | : | முதல்நாள் |
| வாகனம் | : | மரத்தடியில் இறைவன் வீற்றிருப்பதாக விளக்கும் விருஷப வாகனம் |
| தத்துவம் | : | விருத்திக்கிரம சிருஷ்டிக்கோலம், மரத்தின் இழைகள், கிளைகள் தத்துவங்களாகவும் உயிர் வர்க்கங்களாகவும் உள்ளன. |
| நாள் | : | இரண்டாம் நாள் |
| வாகனம் | : | சூரிய, சந்திர பிரபைகளில் எழுந்தருளள் |
| தத்துவம் | : | இறைவன் சூரிய, சந்திரர் மூலம் உலகுக்கு உயிரையும் இன்பத்தையும் ஊட்டுகின்றான். ஸ்திதி எனும் காத்தல் தொழிலை உணர்த்துவது. சூரியனைக் கொண்டு உலகைக் காப்பாற்றும் கருணை உலக வெப்பமாகிய துன்பக்கட்டுகளால் கட்டுண்டு தவிக்கும் உயிர்கட்கு இறைவன் சாந்திட தருகின்றான். |
| நாள் | : | மூன்றாம் நாள் |
| வாகனம் | : | காலை அதிகார நந்தி மாலை பூதவாகனம் |

தத்துவம் : சங்காரத்தின் அடையாளம் (அழித்தல்)

நாள் : நான்காம் நாள்

வாகனம் : நாகவாகனம்

தத்துவம் : திரோபவமாகிய மறைப்பு (நாகம் படத்தையும், நஞ்சையும், மாணிக்கத்தையும் மறைத்து வைத்து வைத்திருந்து வேண்டும் பொழுது வெளியிடும்)

நாள் : ஐந்தாம் நாள்

வாகனம் : இடப வாகனம்

தத்துவம் : அருள் பெற்ற ஆன்மா ரிஷபமாகும். அதன் வெள்ளைநிறம் அதனிடத்து எவ்வித மாசும் இல்லை என்பதை உணர்த்தும் அது தர்மம் என்ற அறத்தையே நான்கு கால்களாகக் கொண்டுள்ளது. மாசற்ற அறவடிவமான ஆன்மாக்களிடத்து இறைவன் வந்து அமர்வான் என்பதை இது குறிக்கிறது.

### II. 1.4. *இலயக்கிரம ஐந்தொழில்கள்*

நாள் : ஆறாந்திருநாள்

வாகனம் : யானை வாகனம்

தத்துவம் : உலகப் பொருட்கள் அனைத்தும் இறைவனிடம் ஒருங்கி ஒரே பிரும்தாண்டமான யானையின் உடம்பு போல பிரமனாய்க் கிடந்து ஒடுங்குதலாகும்.

நாள் : ஏழாந்திருநாள்

வாகனம் : கைலாஸை பர்வத வாகனம்

தத்துவம் : இறைவனுக்குத் தீங்கு செய்தவர்களும் அடங்கி நின்று வழியில் அவர்க்கும் இறைவன் அருள்புரிவான்.

நாள் : எட்டாந்திருநாள்

வாகனம் : காலையில் அசுவ (குதிரை) வாகனம், மாலையில் பிட்சாடினர்.

தத்துவம் : சம்மாரக்கோலம் திரோபவமாகிய மறைப்பு

நாள் : ஒன்பதாந்திருநாள்

வாகனம் : தேர்த்திருவிழா

தத்துவம் : திரிபுர சம்மாரமாகிய மும்மல காரியங்களின் அழிப்பும் ஆன்ம கோடிகளைக் காப்பாற்றிய அனுக்கிரகமும் அருளல் ஆகும்.

நாள் : பத்தாம் நாள்

வாகனம் : தீர்த்தவாரி

தத்துவம் : சபையை விட்டுவருவது சிருஷ்டி

காலை நடராஜன் திருவீதியுலா

அபிஷேகம் : ஸ்ததி

கருஞ்சாந்தனிதல் : அலங்காரம்

தீபாராதனை : சங்காரம்

வெள்ளை : திரோபவம்

சாந்துபொடி

**II. 1.5.** ***விதிவலம் வந்து மட்டையடி***

அனுக்கிரகத்தைக் குறிக்கும் பத்து நாட்களில் இரண்டு பகுதிகளாக நடத்தப்படும் ஐந்தொழில்களையும் பத்தாந்திருநாளில் ஒரேநாளில் தொகுத்துக் காட்டப்படுகிறது. இதன் பின்னர் தீர்த்தவாரி நடைபெறுகின்றது. பொங்கித் ததும்பிப் பூர்ணமாய் ஏக உருவாய்க் கிடக்கும் இறைவனின் பாதவாரியில் ஆன்மாக்கள் முற்றும் ஆழ்ந்து ஆனந்தித்திருப்பதை இது குறிக்கிறது. இதனை "மகாருத்ரபாத தீர்த்தம் என்பர்".

**II. 2.** ***திருக்கலியாணத் திருவிழாவின் தத்துவம்***

இறைவன் யோகியாய் இருந்து உயிர்களுக்கு யோக முத்தியை அருளுகின்றான். போகியாயிருந்து உயிர்களுக்குப் போகத்தைப் புரிகின்றான். இதனை சிவஞான சித்தியார்

**"போகியா யிருந்து உயிர்க்குப் போகத்தைப் புரிதல் ஓரார்**
**யோகியாய் யோகமுத்தி உதவுதல் அதுவும் ஓரார்**
**வேசியானாற் போற்செய்த வினையினை வீட்டல் ஓரார்**
**ஊகியா மூடரெல்லாம் உம்பரில் ஒருவன் என்பர்"**

என்று கூறுகின்றது. நமது தாய் தந்தையர் திருமணஞ்செய்து கொண்டு போகியாய் வாழாமற்போனால் மக்களாகிய நாம் பிறந்திருக்க முடியாது. பல தலமுறைகளுக்கு முற்பட்ட மூதைதையர்கள் முதற்கொண்டு முதற்கொண்டு வழி வழியாது போகியராய் வாழாமற்போனால் உலகில் மக்களே இருந்திருக்கமாட்டார்கள். இறைவன் போக வடிவில் வாழாமற்போனால் உலகத்து உயிர்கள் அனைத்தும் போகியாய் வாழாமற்போகும். ஆகவே இறைவனுக்கு நடைபெறும் திருக்கலியாணம் நம் பொருட்டேயாகும். நமது பெற்றோர்களது திருமணத்தை நம்மால் பார்க்கமுடியாது. ஆயினும் அவர்களது சஷ்டி அப்தபூர்த்தி விழாவில் சந்ததிகள் அனைவரும் அந்த திருமணத்தைக் கண்டு களிக்கின்றோம். அதுபோல இறைவனது திருமணத்தையும் நாம் கண்டதில்லை ஆயினும் ஆண்டுகொருமுறை ஆலயங்களில் இறைவனுக்குத் திருக்கலியாணம் நடத்தி ஆர்வத்தோடு கண்டுகளிக்னிறோம். இறைவனின் அனுக்கிரகத்தைப் பெற்று மகிழ்கின்றோம்.

திருஉத்தரகோசமங்கைத் திருத்தலத்தில் உறைந்துள்ள மங்கள நாயகி அம்மை தவமியற்றியே இறைவனை அடைந்ததாகத் தலபுராணம் குறிப்பிடுகின்றது. இந்நிகழ்ச்சியானது ஆணோ, பெண்ணோ யாவராயினும் தவமியற்றுவராயின் இறைவன் அவர்கள் முன்தோன்றி நல்லாசிபுரிவான் என்பதனையே குறிப்பிடுகின்றது.

சாமானிய மானுடர்கள் தருமசாஸ்திர வழிப்படி கட்டுப்பாட்டில் அடங்கி வாழத் திருமண வாழ்வே உபாயமாகும். அவ்வாறு மனிதர் செம்மையான வாழ்வு வாழ வேண்டும் என்று வலியுறுத்தவே இன்றளவும் திருக்கோயில்களில் இறைவனின் திருக்கலியாணத் திருவிழா நடைபெறுகின்றது. அவசரமும் பரபரப்பும் நிறைந்த இன்றைய உலகில் திருமணமும் அவசர அவசரமாக நடைபெற்று அவசரமாகவே

மணமக்களும் பிரிந்து விடுகின்ற அவலநிலையும் உருவாகிவிட்டது எனலாம். இலை மறைக்காயாக இருக்க வேண்டிய குடும்ப வாழ்வு திரைபோட்டு காட்டப்பட்டதால் நம் மக்கள் பாரம்பரியமான பண்பாட்டை மறந்து நாகரிகம் என்ற பெயரில் அழிவை நோக்கிச் செல்லும் இழிநிலை உருவான பொழுதும் அவ்வழிவிற்கு அணைபோடும் விதமாகவே கோயிலில் நடைபெறும் இதுபோன்ற விழாக்கள் அமைகின்றன என்பது உண்மையாகும்.

பள்ளி அறையில் மணமக்களைப் புகவிடுவதுபோல இறைவனையும் இறைவியையும் அம்பாள் சன்னதியில் உள்ள பள்ளியறைக்கு ஆடம்பரத்தோடு எழுந்தருளப் பண்ணுவது போக நிலையை உணர்த்துவதற்கும் பெண்மையின் நிலைப்பாட்டை வெளிப்படுத்துவதற்குமேயாகும். இறைவனது திருவடியைப் பள்ளியறைக்குப் பல்லக்கில் எழுந்தருளச் செய்கிறார்களே தவிர இறைவனுடைய திருவுருவத்தைப் பெரும்பாலும் பள்ளியறைக்குக் கொண்டு செல்வதில்லை. காலை முதல் இரவு வரை இறைவனையும், இறைவியையும் பிரித்து வைத்து, வணங்கி, இறுதியில் அவர்களைச் சேர்த்து வைத்துப் பூசித்து; பள்ளியறையில் வழிபடுகின்றோம். இவ்வழிபாடு யோகியாய் இருப்பது மட்டுமின்றி வாழ்வில் பிற கடமைகளையும் செவ்வனே செய்ய வேண்டும் என்பதை உணர்த்துகின்றது. மேலும் இவ்வழிபாடானது சக்தி வேறு சிவம் வேறு என்று பிரித்தறியக் கூடாது என்றும், சக்தி புலப்படும், சிவம் புலப்படாது என்று கூறுகிறது. இதனால் மனிதனுடைய உடல் சக்தியும் சிவமும் சேர்ந்ததுதான். உடம்பில் உள்ள ஓடு–சிவம், தட்பம்–சக்தி, சக்தியும் சிவனும் சேர்ந்தால் எச்செயலும் எவ்வடிவும் தோன்றும். இதானால்தான் திருக்கலியாணம் என்ற புனிதமான சடங்கு நடத்தப்படுகின்றது என்பததை அறியமுடிகின்றது.

இத்திருக்கலியாண விழாவின் போதும், பள்ளியறைப் பூசையின்போதும் சிறப்பாகப்பாடப்பெறும் திருப்பொன்னூசல் பாடலில்,

"ஏராரும் பொற்பலகை யேறி யினிதமர்ந்து"

-மாணிக்கவாசகர்.திரு.வா

என்ற அடியில் யேறி இனிதமர்ந்து மனவேறுபாடு இன்றி அன்புறுக என்று பொருள் தரும் வகையில் பாடியுள்ளார். இது இல்லற வாழ்வின் அன்புத் தத்துவத்தை உணர்த்துகின்றது.

### II. 2.3. *மார்கழி திருப்பள்ளியெழுச்சி*

சிவத்திருத்தலங்களிலும், வைணவத் திருத்தலங்களிலும் மார்கழி மாதம் திருப்பள்ளி எழுச்சி திருவிழா கொண்டாபடுகின்றது. தமிழ் மாதங்களில் மிகவும் சிறப்பு வாய்ந்த மாதம் மார்கழியாகும். அதனால்தான் கிருஷ்ணர் கீதையில் "மாதங்களில் நான் மார்கழி" என்று குறிப்பிட்டுள்ளார். இத்துணை சிறப்பு வாய்ந்த இம்மாதத்தில் கொண்டாடப்படும் திருப்பள்ளியெழுச்சித் திருவிழாவாதால் கொண்டாடப்படும் திருப்பள்ளியெழுச்சித் திருவிழாவானது மக்களின் உடல்நலத்தைப் பேணும் வகையிலும் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும். இம்மாதத்தில் அதிகாலையில் உடல் நலத்திற்கு நன்மை பயக்கும் தூய ஆக்ஸிசனின் அளவும், ஈரப்பதமும், ஓசோன் படலத்தில் இருந்து பெறப்படும் காற்றில் உள்ள நன்மை தரும் அளவும் அதிகம் இருப்பதால் அதிகாலையில் விழித்து மக்கள் நன்மைபெறும் வகையில் நம் முன்னோர்களால் அன்றிலிருந்தே மார்கழி மாதம் வழிபாட்டிற்கு மிகவும் உகந்த மாதமாகச் சிறப்பிக்கப்பட்டு வருகின்றது.

இறைவனுக்கும், மானுடர்களுக்கும் சிறந்த மாதமாக விளங்கி வரும் மார்கழி மாதத்தில் சைவர்களும் வைஷ்ணவர்களும் வைகறைப் பொழுது எழுந்து நீராடி உள்ளத்தையும் உடம்பையும் புத்துணர்வு பெறச் செய்கின்றனர். ஆண்டாள் திருப்பாவை நோன்பிருந்து அரங்கனையே நாயகனாகப் பெற்றவர். இதனால் அவர் சூடிக்கொடுத்த சுடர்க்கொடி என்ற சிறப்புடன் திகழ்கின்றாள். மாணிக்க வாசகப் பெருமாள் திரும்வெம்பாவையை இறைவனுக்குச் சூட்டி உளங்களித்தார். இதனால் மனதில் உருவாகும் உண்மையான அன்பினைப் பக்தியை ஆண்டவனுக்குச்

செலுத்தி இம்மாதத்தில் நோன்பிருந்தால் வேண்டுவோர் உய்யும்படி இறைவன் அருள் பாலிப்பான் என்பதை அறிய முடிகின்றது.

மேலும், இம்மாத்தில் கொண்டாடப்படும் வைகுண்ட ஏகாதசி விழாவானது வைச வைண மதங்களின் நல்லுறவினை வெளிப்படுத்துவதுடன் அன்று முழுவதும் துளசி தீர்த்தம், அரிசி மாவினால் செய்யப்பட்ட பதார்த்தங்களையே உட்கொண்டு (பிணி, மூப்பினால் பாதிக்கப்பட்டவர்கள்) இரவு முழுவதும் விழித்திருந்து நோன்பு கடைபிடிக்கப்படும். இதனால் எளிமையான ஆகாரங்களும், தூய்மையான எண்ணங்களுமே மனித வாழ்வின் சேமத்திற்கு வித்திடுவன என்ற உண்மைதனை அறிவின்றோம். மேலும் "ஊணினை சுருக்கி உள்ளொளி பெருக்கி " என்ற உண்மைதனை அறியமுடிகின்றது. மேற்கூறிய நோன்பினால் உடல் ஆரோக்கியமும் மனவலிமையும் ஏற்படுகிறது. இரவு முழுவதும் தியானம், பக்தி மார்க்கம் சார்ந்த அருளுரைகளைக் கேட்பதற்கு வாய்ப்பு ஏற்படுவதால் மனிதனால் ஆன்மீகம் சார்ந்த நன்மைகளையும் அடைய முடிகிறது.

### II. 2.3.1. *ஆடல் வல்லானை சிறப்பித்து கொண்டாடப்படும் திருவாதிரை திருவிழா (உத்தரகோசமங்கைத் திருத்தலம்)*

வழிபாட்டிற்கு முன் மூலவருக்குத் தினமும் திருமுழுக்கு நடைபெறுகின்றது. ஆனால் நடராஜர் திருமேனியோ உற்சவத் திருமேனி. எனவே தினமும் திருமுழுக்குக் கிடையாது வழிபாடு மட்டும் உண்டு. ஆகையால ஒவ்வொரு மாதமும் உற்சவருக்குத் திருமுழுக்கு நடைபெறும். இவற்றில் மார்கழி மாதம் திருவாதிரை நட்சத்திரத்தில் விடியற்காலையிலும் மாசிமாதம் வளர்பிறை சதுர்த்திசியில் காலையிலும், சித்திரை மாதம் திருவோண நட்சத்திரத்தில் உச்சிக்காலத்திலும், ஆனிமாதம் உத்திரத்தில் மாலையிலும் ஆவனி மாதம் வளர்பிறைச் சதுர்த்தியில் இரவிலும் புரட்டாசி வளர்பிறைத் சதுர்த்தியில் அர்த்த ஜாமத்தில் நடைபெறும் திருமுழுக்குச் சிறப்பு வாய்ந்ததாகும்.

இத்திருமுழுக்குகளில் ஆனித்திரு மஞ்சனமும், மார்கழித் திருவாதிரையும் முக்கியமானவையாகும். திருக்கோயில்களில் மார்கழித் திருவாதிரைத் திருநாள் மிகவும் சிறப்பாக நடைபெறுகின்றது. திருவாதிரைத் திருநாளன்று விடியற்காலையில் நடராசருக்குத் திருமுழுக்கு நடைபெறுகின்றது. மார்கழி திருவாதிரையன்றுதான் மரகத நடராஜனின் மேல் பூசப்பட்டிருக்கும் சந்தனம் அகற்றப்படுகின்றது. ஆடல் வல்லாணை காண ஆயிரக்கணக்கில் மக்கள் கூடுவர். தில்லை திருத்தலத்தைப் போன்றே, இத்திருத்தலமும் திருவாதியரையன்று சிறப்பிக்கப்படுகின்றது. இங்கு அறையில் ஆடுபவன் என்றும் தில்லையில் அம்பலத்தில் ஆடுபவன் என்றும் ஆடல்வல்லானைச் சிறப்பித்துக் கூறுவர்.

"மார்கழி மாதத்தில்தான் திருவாதிரை நட்சத்திரக் கூட்டத்தை நாம் வான்வெளியில் காணமுடியும். ஆலயத் திருவிழாக்களில் அநேகம் பௌர்ணமி தினத்திலேயே முடிவு பெறுவனவாகும். அதன்படியே ஆருத்ரா தரிசனத்தன்று பூரண சந்திரன் திருவாதிரை ஓரையில் இருக்கும். அதனால் அன்றிரவு திறந்த வெளியில் நின்று கொண்டு வானத்தை ஏறிட்டுப் பார்க்கும் பொழுது, வெண்ணிலாவையடுத்து திருவாதிரை நட்சத்திரமும், அதற்கு நேர் மேற்கில் ஒரு வெள்ளிய விண்மீனையும் காணலாம். இரண்டுக்கும் இடையே சற்று வடக்காக மிருகசீரளம் இருக்க காணலாம். இந்த மிருக சீரளம் பூரண நிலவின்போது வெறுங்கண்ணிற்கும் புலப்படுவதில்லை. சிறு பைனாக்குலர் மூலம் அதனைத் தெளிவாய்க் காணலாம். ஆனால் மற்ற இருட்டுக் காலங்களில் அது வெறுங்கண்ணிற்கு நன்கு விளங்கும் "சீராளம் மூன்றும் தேங்காய்க் கண்போல்" என்பது அதற்குரிய அண்ணாவிப்பாட்டு. இப்போது செந்தீயை (திருவாதிரை நட்சத்திரத்தை) ஆனந்தக் கூத்தனுடைய ஒரு திருக்கரத்துள்ள செந்தீயாகவும் மற்ற வெள்ளை விண்மீனை மற்றொரு திருக்கரத்திலுள்ள உடுக்காகவும் கருதுவோமானால், இரண்டிற்கும் நடுவே முகம் போலுயர்ந்துள்ள மிருக சீரளம் முக்கண்ணனாகிய சிவபெருமானுடைய முகத்தைக் குறிப்பிடும். இனிச் சற்றுக் கீழே நோக்குவோமோயானால், அங்கு வீசிய காறும்

ஊன்றிய திருவடியும், அதன் அடியில் முயலகனும் படம் பிடித்தது போல விளங்க காணலாம், முயலகனுடைய முகம் மிக்க ஒளி வீசும் ரைகல் (Rigel) என்ற நஷத்தரமாகும். திருவாதிரை பெட்டல் கீயுஸ் (Betel geuse) என்றழைக்கப்படுகின்றது. வானத்தில் மிகக் கம்பீரமாக விளங்கும் இந்த நசத்திரத் தொகுதி முழுவதும் மேனாட்டாரால் ஓரையான் (orion) என்றும் கிரேக்க புராண சம்பந்தப்பட்ட 'வேடன்' என்றும் நம்மவரால் ஆருத்ரதாண்ட நஷத்திரமென்றும் அழைக்கப்படுகின்றது. (பின் இணைப்பு: படம் பார்க்க) இவ்வாறு வானத்தை நோக்குவோர் வடக்கு நோக்கி நின்று நடராஜரைப் போல அபிநயம் பிடிப்பாராயின் ஆருத்ர தாண்டவன் இடதுகால் தூக்கி ஆடுவது விளங்கும். தெற்கு நோக்கி நிற்பின் தாண்டவமூர்த்தி வலது காலைத் தூக்கி நின்று தென்மதுரைச் சொக்கராலயத்தில் கால்மாறியாடும் வித்தையைக் காணலாம்".[10]

திருவாதிரையும், திருக்கார்த்திகையும் சிவபெருமானின் தனிச்சிறப்பு நாளாகும். திருக்கார்த்திகைத் திருநாள் சிவபெருமான் பேரொளிப் பிழம்பாய்த் தோன்றியருளியத்திருநாளாகும். இது அருவுருவத் திருமேனியைக் குறிப்பிடுகின்றது எனலாம். உருவத்திருமேனியை மட்டுமே கையால் தீண்டவும், கண்ணால் பார்க்கவும் இயலும். நிலத்தையும் நீரையும் கண்ணால் காண்பதுடன் கையால் தீண்டவும் செய்கிறோம். ஆனால் நெருப்பிறைக் கண்டதல்லாமல் தீண்ட இயலாது. தீண்ட முடியாமையை அருவுருவெனச் கூறுவர்.

தீண்ட முடியாத பிழம்புவுருவத் திருமேனியினின்று. தீண்டக்கூடிய உருவாக முதற்கண் தோன்றிய திருவுருவமே கூத்தபிரான் உருவமாகும். இது இறைவனின் ஐந்தொழில்களையும், ஐம்பெரும்பூதங்களாக உலகில் விளங்கி வருவதையும் சுட்டுகின்றது. இத்திருமேனியைக் குறிக்கும் திருநாள் திருவாதிரைத் திருநாளாகும்.

இவ்வாரே மனித உடலும் ஆன்மாவும் ஐம்புலன்களைப் பெற்றும், ஐம்பெரும் பூதங்களைத் தன்னுள் அடங்கப்பெற்றும் திகழ்கின்றது என்று திருவாதிரைநாள் ஆடல் வல்லான் வழிபாடு உணர்த்தி வருகின்றது எனலாம். மார்கழி என்பதில் மா–

மாய்தல், மறைதல், ஒடுக்கம், கழி–கழிதல், நீங்குதல் இறைவன் உயிர்கட்குத் தனுகரபுவன போகங்களை ஒடுங்கச் செய்து மீளத் தோற்றுவிக்கும் காலத்தை உணர்த்துகின்றது என்பது உண்மையாகும். ஆதிரை என்பதில் ஆ–ஆன்மா, திரை– மறைத்தல் என்பதாகும். உயிர்களை உலக வாழ்வில் அழுந்தச் செய்யும் ஆசை, பொறாமை, பொய், சூது, கோபம், சோம்பல் ஆகியவற்றை விட்டொழித்தால், இறைவனடி பணிந்தால் உலகத்தோர் போற்ற சிறப்பான புகழையும், நோய் நொடி நீங்கப் பெற்ற நீண்ட ஆயுளையும் பெறலாம் என்ற உயரியக் கருத்தினையே இம்மார்கழித் திருவாதிரைத்திருநாள் உணர்த்துகின்றது.

### II. 4. *அர்த்தோதய, மகோதயவிழா*

ஆண்டுதோறும் தை அல்லது மாசி மாதம் அமாவாசை, ஞாயிற்றுக்கிழமை, திருவோண நட்சத்திரமும் வித்யாபாதமும் கூடிய நாள் அர்த்ததோதயம் எனப்படும். இந்த நாள் மேற்படி திதி, நட்சத்திரம், கிழமை சேர்ந்து வந்தால் இதனை மகோத்யம் என்று அழைப்பர். இந்நாளில் இராமேசுவரத்திருத்தலத்தை அடுத்த தனுஷ்கோடியில் கடலில் நீராடுவது மிகச்சிறந்த புனிதச்செயலாகக் கருதப்படுகிறது. பித்ருக்களின் நற்கதிக்கு இந்த நீராமல் பயனுள்ளதாக அமையும் என்பது நம்பிக்கை.

அம்மாவாசை, பௌர்ணமி நாட்களில் கடல் நீராடும் (தீர்த்தமாடும்) பழக்கத்தை உருவாக்கிறார்கள். இந்நாட்களில் கடலின் கொந்தளிப்பு மாறுபடுவதால் கடல்நீரில் அப்பொழுது ஒரு இராசயன மாறுதல் ஏற்படுகிறது. இந்நாட்களில் நீராடுவதால் மனிதனின் உடல் நலத்திற்கு உகந்ததாகவும் அமைகின்றது என்பது உண்மையாகும்.

### II. 5. *விக்ரகங்களை கருங்கல்லில் அமைப்பதன் தத்துவம்*

விக்ரகங்களை (மூலவர்) களிமண்ணால், செம்பால் செய்யாமல் கருங்கல்லால் செய்கிறார்கள். கல்லானது எந்தப் பொருளையும் தன்பால் இழுத்துக் கொள்ளக்கூடிய சக்தி வாய்ந்ததாகும். ஆகாயத்தில் சென்று கொண்டிருக்கும் மேகத்தைத் தன்பால் இழுத்துக் குளிர்வித்து மழையாக பொழியும்படி செய்கிறது. மேலும் கல்லில் பஞ்சபூதங்களான ஆகாயம், காற்று, நெருப்பு, நீர், நிலம்

ஆகியவற்றின் தன்மையும் விசேடமாக அடங்கியிருந்து வெளிப்படுதல் போல மற்ற உலோகங்களால் இது சாத்தியமில்லை என்பதனை இதன் மூலம் அறியலாம்.

1. "ஆகாயத்தைப் போல் வெளியில் உள்ள சப்தத்தைத் தன்னகத்தே இழுத்து ஒடுக்கிப் பின்னர் வெளியிடும் சக்தி கல்லுக்கும் உண்டு.
2. கல்லிலே காற்று உண்டு (கல்லினுள் தேரை கூட வசிக்கும்)
3. கல்லிலே நெருப்பும் தங்கியுள்ளது. வேறு எந்தப் பொருளிலும் இல்லை. நெருப்பின் சக்தி மிகுதியாக கல்லில்தான் இருக்கிறது. நெருப்பு உருவான வரலாறு இதனை உணர்த்துகின்றது.
4. கல்லில் நீர் இருப்பதால் தன் இயல்பான குளிர்ந்த, நிலையிலிருந்தும் மாறாமல் இருக்கிறது. கல்லைத் தொட்டால் தண்ணீர்போல் தண்ணென்றிருப்பதும், கல்லினுள் நீர்த்தன்மை இருப்பதனை உறுதிபடுத்துகின்றது.
5. கல்லில் நிலம் என்ற கடைசிப் பூதமும் உள்ளது. ஐம்பூத வடிவாகி விளங்கும் ஆண்டவனது உருவத்தை ஐம்பூதங்களும் அடங்கிய ஒரு பொருளில் வீற்றிருந்தபடி செய்து வழிபட்டு வரும்படி நமது முன்னோர்கள் ஏற்பாடு செய்துள்ளனர்". [11]

## II. 6. *விநாயகர் வழிபாட்டின் தத்துவம்*

விநாயகர் என்ற சொல்லுக்கு விக்னங்களைக் களைபவர் என்று பொருள். வேறெந்த தெய்வ சன்னதியிலும் 'தோப்புக்கரணம் இடுதல்' என்ற விதிமுறை இல்லை எனலாம். ஆனால் கணபதி சன்னதியில் இது மிக முக்கியம்.

> **"வலக் கையால் வாமஸ்வரனை**
> **மிடகை விரலினால் வலம் காதும்**
> **தொட்ட குழலினை பிணைந்த நிலையில்-நிலக்**
> **கை முட்டாலே பலகுவி தொடவே**
> **அடியனுக்கின் நலம் காருண்**
> **யாப்தேகளக மமவிக்னம் கணபதே"**

இவ்வாறே தோப்புக்கரணம் இடவேண்டும் என வலியுறுத்துவதன் நோக்கம், நலம் பயக்க வேண்டியேயாகும். வலதுகையால் இடதுகாதும், இடது கையால் வலதுகாதும் தொட்டுக்கொண்டு கைமுட்டுக்கள் பலமுறை தரையில் தொட்டு கணபதியை வணங்க வேண்டும் என்பது நியதியாகும். இடதுகால் மேல் ஊன்றி நின்று வலதுகால் இடதுகாலில் முன்பக்கமாக இடதுபக்கம் கொண்டு வந்து பெருவிரல் மட்டும் தரையில் தொட்டும் நின்றும்; இடதுகைப்பெருவிரலும் ஆள்காட்டி விரலும் சேர்ந்த வலது காதிலும் வலது கையினை முன்பக்கமாக இடப்பக்கம் கொண்டு வந்து முன்கூறிய இருவிரல்களால் இடது காதையும் பிடிக்க வேண்டும். பின்பு குனிந்து வணங்கி நிமிர்வதே தோப்புக் கரணத்தின் முறை, இவ்வாறு செய்வதால் பக்தரிடமிருந்து தடங்கல்கள், துன்பங்கள் விலகும் என்பது ஐதீகம். 'இதில் அறிவியலை சம்பந்தப்படுத்தி பார்ப்போமானால் இதை புத்தியை உணர்தும், அதிகப்படுத்தும் ஓர் உடற்பயிற்சியாகவும் காணலாம். இது நரம்புகளை உணர்வடையச் செய்யவும், பலப்படுத்தவும் மூளைக்குச் செல்லும் இரத்த ஓட்டத்தை அதிகரிக்கவும் செய்யும் என்பது உண்மையாகும்'.[(12)]

**II. 7.** *குத்துவிளக்கு ஏற்றி வழிபடுவதன் தத்துவம்*

| | | |
|---|---|---|
| "தாமரை போன்ற ஆசனம் | – | பிரம்மா |
| நெடிய தன்ஷன் நீட்சி | – | விஷ்ணு |
| நெய்யேந்தும் அகல் | – | ருத்திரன் |
| திருமுனைகள் யாவும் | – | மகேஸ்வரன் |
| நுனி | – | சதாசிவன் |
| நெய் | – | நாதன் |
| திரி | – | பிந்து |
| சுடர் | – | திருமகள் |
| ஜோதி | – | சக்தி பிரம்மம் |

பெண்மைக்கு வேண்டிய அன்பு, அறிவு, உறுதி, நிதானம், பொறுமை ஆகிய ஐந்து பண்புகளும் ஐந்து முகங்களைக் குறிப்பிடுகின்றது எனலாம்''. (13)

## II. 8. *நமஸ்காரம் பண்ணுவதன் தத்துவம்*

கோயிலில் கொடிமரத்தின் அருகில் ஆண்கள் தலை, செவியிரண்டு, கையிரண்டு, புஜங்களிரண்டு, மேவாய்க்கட்டை ஆகிய எட்டு அவையங்களும் பூமியிற் படும்படி வணங்க வேண்டும். இதனை அஷ்டாங்க நமஸ்காரம் என்பர். பெண்கள் தலை, கையிரண்டு, முழந்தாளிரண்டு ஆகிய ஐந்து அவயங்களும் பூமியிற்படும்படி வணங்க வேண்டும். இதனைப் பஞ்சாங்க நமஸ்காரம் என்பர். இதனால் மனிதன் எப்பொழுதும் பணிவு என்ற உயர்ந்த பண்பினை மேற்கொள்ள வேண்டும் என்ற தத்துவத்தை உணர்ந்து கொள்ள முடிகின்றது. மேலும் "இந்நமஸ்காரத்தினால் இரத்த ஓட்டம், இருதயத்துடிப்பு நரம்புகளின் செயல்பாடுகள் ஆகியனவும் சீர்படுவதால் இது சிறந்த உடற்பயிற்சியாகவும் அமைகின்றது என்பது உண்மையாகும்''. (14)

### *தொகுப்புரை*

திருக்கோயில் அமைப்பும், வழிபாட்டு முறையும் ஒன்றிலிருந்து ஒன்றை பிரித்தறிய இயலாததாகும். ஆலய அமைப்பை மனிதனோடு ஒப்பிட்டு நோக்கப்பட்டுள்ளது.

மனிதனின் ஆறு ஆன்மாக்களம் (பூதான்மா முதல் – பரமான்மா முடிய) சிவ ஆலயங்களிலுள்ள ஆறு நிலைகளையும் (முன்கோபுரம் முதல் பரவெளி முடிய) உணர்த்துவதாக அமைந்துள்ளதை அறியமுடிகின்றது.

மனிதனின் நின்ற கோலம், கிடந்த கோலம் ஆகியன கோயிலின் தோற்ற அமைப்போடு ஒப்பிட்டும் நோக்கப்பட்டுள்ளது. இதற்குச் சர்வஞானாத்தர ஆகம முறையும் பயன்படுத்தப்பட்டுள்ளது.

ஆலயத்தின் முன் கோபுரம் முதல் மூலஸ்தான மூர்த்தி வரை பல்வேறு தத்துவங்களை உணர்த்துவனவாக அமைந்துள்ளன. அவை, மூலஸ்தான மூர்த்தியானது அமைப்பு, பிரதிஷ்டை ஆகியவற்றால் அண்டத்தில் உள்ளது பண்டத்தில் என்ற தத்துவத்தையும், ஆலய கோபுரமானது மனிதன் உடம்பல்லள் ஆன்மா என்ற தத்துவத்தை உள்ளடக்கித் திகழ்கின்றன.

ஆலய அமைப்பில் பிரகாரங்கள் ஸ்தூப, சூட்சும, காரண உடம்புகளோடு (ஏழு வகை வரையிலும்) ஒப்பிட்டு நோக்கப்பட்டுள்ளன.

வழிபாட்டு முறைகள் உணர்த்தும் தத்துவங்கள் பின்வருமாறு பெறப்பட்டுள்ளன. சிருஷ்டி (உண்டாகுதல்), ஸ்ததி (காப்பாற்றுதல்) சம்ஹாரம் (அழித்தல்) திரோபாவம் (மறைத்தல்) அனுக்கிரகம் (அருளல்) என்ற ஐந்தொழிலும் பத்து நாள் திருவிழாக்களின் மூலம் மக்களுக்கு எவ்வெவ் செய்திகளை உணர்த்துகின்றன என்ற செய்து பெறப்படுகிறது. இதில் இவ்வாறு நித்திய, தைமித்தக முறைகள், திருவிழாக்கள் மனித வழிபாட்டு வாழ்வோடு உணர்த்தும் பல்வேறான செய்திகளும் இத்தலைப்பின் மூலம் பெறப்பட்டுள்ளது.

*அடிக்குறிப்புகள்*

1. ஆ. சொக்கலிங்கம், ஆலயங்களின் உட்பொருள் விளக்கம், ப–36.
2. மேலது. ப–48
3. ஆர். இராமச்சந்திரன், சைவத்திருத்தலங்கள், ப–49.
4. மேலது. ப–49.
5. கே. ஆறுமுகநாவலர், இந்துமத இணைப்பு விளக்கம், பக்–45, 46.
6. ஆ. சொக்கலிங்கம், ஆலயங்களின் உட்பொருள் விளக்கம், ப–48.
7. கே. ஆறுமுகநாவலர், இந்துமத இணைப்பு விளக்கம், பக்–145, 146.
8. மேலது, ப–146.
9. ஆ.சொ. ஆலயங்களின் உட்பொருள் விளக்கம், ப–107.
10. மேலது, பக்–339, 340.
11. மு. திரவியம், இந்து சமயக் களஞ்சியம், ப–287
12. தினத்தந்தி, ப–7.
13. மு. திரவியம், இந்துசமயக் களஞ்சியம், ப–281.
14. மேலது, ப–282.

# முடிவுரை

தமிழர்கள் இயற்கையோடு இயைந்த வாழ்வை, அன்பை அடிப்படையாகக் கொண்ட அறவழியில் நடத்துபவர்களாவர். இறைப்பற்றுடன் கூடிய வாழ்க்கையே பேரின்பமாகிய வீடுபேற்றிற்கு வித்திடும் என்று உணர்ந்துள்ளனர். இதனால் தமிழகத்தில் சித்தர்களும், ஞானிகளும், சான்றோர்களும் எண்ணிலடங்காதோர் தோன்றினர். தங்கள் வாழ்க்கை முறையாலும், பக்தி பாசுரங்களாலும் மக்களின் மனதில் அன்புநெறி, பக்திநெறி தோன்றச் செய்தனர். அவர்கள் தங்களின் ஆன்ம, ஆத்ம தத்துவங்களைப் பல்வேறு வகையில் உலாவர, நிலைப்படச் செய்திருப்பினும், என்றும் அழியாத் திருக்கோயில்களே அவர்களின் தத்துவநெறிகளுக்கு நிலைக்களன்களாகத் திகழ்ந்துள்ளன. தமிழர்களின் பக்திநெறி, கோயில் அமைப்பு, வழிபாட்டு முறைகள் ஆகியன யாவும் மெய்ஞானமும், விஞ்ஞானமும் கலந்த தத்துவங்களாகவே அமைந்துள்ளன.

இத்துணைச் சிறப்புகள் வாய்க்கப்பெற்றத் திருக்கோயில்கள் இன்றைய நாகரிக யுகத்திலும் தன்பெருமைகுன்றாது தலைநிமிர்ந்தே நிற்கின்றது. அன்று தொட்டு இன்று வரையிலும் தமிழர் நாகரிகத்தை, வாழ்வியலை இயக்கியதில், இயக்குவதில் தனிப்பெறும் பங்காற்றி வருவன திருக்கோயில்கள். தமிழ்ச் சமுதாயத்தில் ஒவ்வொரு கால வளர்ச்சியிலும் அவை பெற்றுள்ள தனித்துவங்கள் ஏற்று நிற்கும் வரலாற்று நிகழ்வுகள், முன்னோர்கள் வாழ்ந்து காட்டிய வழிச்சுவடுகளின் பிரதி பிம்பங்களை, நாகரிக, கலாச்சார, அரசியல், பொருளாதாரம் சார்ந்த வளர்ச்சி, வீழ்ச்சி எனக் காலக்கண்ணாடியாக, காலவெள்ளோட்டத்தைத் தாங்கியும், எதிர்த்தும், நிலைத்து நிற்கும் நிலைக்களன்களாக விளங்கி வரும் திருக்கோயில்கள் சார்ந்த அமைப்பு, வழிபாட்டு முறைகள் அவைகள் ஏற்படுத்தியுள்ள தத்துவங்கள், கலைகள், முதலியனவையே இவ்வாய்வின் மையப்பொருளாக அமைகின்றன.

தமிழர்களின் வாழ்க்கைமுறை திருக்கோயில் என்ற அமைப்பு கால்கொள்வதற்கு முன்னால் இயற்கை வழிபாடு முதற்படியாக அமைந்துள்ளதை அறியமுடிகிறது. இவ்வழிபாடானது மனித மனங்களைப் பக்குவப்படுத்தி வளர்ச்சியின் பாதையில் இட்டுச்சென்றதால் விண்ணாளவிய திருக்கோயில்கள் தோற்றம் பெறலாயின எனக்கூறலாம்.

ஆரம்பகால மக்கள் இயற்கையை வழிபட்டுள்ளனர். இவ்வியற்கை வழிபாட்டில் மரவழிபாடு மேலோங்கி இருந்ததை அறியமுடிகின்றது. தமிழர்களின் நன்றி பாராட்டும் பண்பாட்டிற்கு மரவழிபாடு சிறந்த சான்றாகும். இதன் தொடர்ச்சியே இன்றும் திருக்கோயில்களில் வணங்கப்படும் தலவிருட்ச வழிபாடாகும். கடவுள் தன்மை வாய்ந்தவைகளாக ஆல், கடம்பு, வேங்கை, அரசு, பனை போன்ற மரங்கள் கருதப்பட்டுள்ளன. இனக்குழு மக்கள் தங்கள் அடையாளச் சின்னங்களில் வழிபடு மரத்திற்கும் முக்கியத்துவம் தந்ததை ஆய்வின் வழி அறியமுடிகின்றது.

தமிழர்கள் நாகரிக வளர்ச்சி பெற்ற நிலையில் தங்கள் இன, சமுதாய தலைவன் போரின் காரணமாக இறந்தபொழுது அத்தகையவனுக்கு நன்றி கூறும் வகையில் ஊர் எல்லையில் நடுகல் வைத்து வழிபட்டனர் என்றும், அவர்களைத் தங்கள் குலதெய்வமாக ஏற்றுக்கொண்டனர் என்ற செய்தியை அறிகின்றோம். இதிலிருந்து தோன்றியது குலதெய்வ, சிறுதெய்வ வழிபாடாகும். நடுகற் வழிபாட்டுமுறையிலேயே ‘பள்ளிப்படைக் கோயில்’ என்ற ‘கோயில்’ அமைப்பு உருவானதையும் அறியமுடிகின்றது.

வழிபாடானது ஐந்திணைகளிலும் வளர்ச்சி பெற்றுள்ளதையும், இக்காலகட்டத்தில் ஆரியர்களின் வருகையால் மன்னர்களிடத்தில் வைதீகச் செல்வாக்கும், வேள்வி நெறியும் முக்கியத்துவமும், முதன்மையும் பெற்றதையும் உணர முடிகின்றது.

திருக்கோயில் என்ற நிலைப்புத்தன்மை தமிழர்களின் வழிபாட்டை மையமாக வைத்து உருவானது என்ற செய்தியும், இத்திருக்கோயில்களில் ஆகம விதிப்படி பூசைமுறைகளும், திருவிழாக்களும் உருவாக்கப்பட்டு நடைமுறைப்படுத்தப்பட்டன என்றும் அறியலாகின்றது.

திருக்கோயில் வழிபாடு என்ற நாகரிகம் கால்கொள்வதற்கு முன்னால் சங்ககால மக்களிடம் பல்வேறு நிலையிலான வழிபாட்டு முறைகள் நடைமுறையில் இருந்ததை அறிகின்றோம். பாட்டு, தொகையின் வழி, திருமாலிருச்சோலையில் கோயில் கொண்டருளிய திருமால், திருப்பரங்குன்றத்தில் கோயில் கொண்டருளிய குறிஞ்சிக்கடவுள் முருகன், சிவன் ஆகிய தெய்வங்களின் அருள் நலன்களைக் கோயில் கொண்டருளும் தன்மையைப் பரிபாடல் நன்கு விளக்குகின்றது.

சங்க இலக்கியங்களில் தெய்வ வழிபாட்டின் தொடக்கநிலையாகத் திருவுரு அமைத்து வழிபட்டதனை அறியமுடிகின்றது. இத்தெய்வங்களை ஊருக்குள்ளும், இல்லங்களிலும் நல்இருப்பு செய்து, பலியிடுதல், வெறியாட்டயர்தல் என்ற வழிபாட்டு முறைகளையும் செய்துள்ளனர் எனவும் அறியலாகின்றது. இத்தெய்வத்திருவுருவச் சிந்தனையால் வழிபடு தெய்வங்களின் பல்வேறு வடிவங்களையும் கோயில்களில் அமைத்து வழிபட்டுள்ளனர்.

சங்ககால மக்கள் தாங்கள் செய்யும் எல்லா செயல்களையும், தெய்வம் சார்ந்த ஒரு வட்டத்தை, கோயிலை மையமாகக் கொண்டே செய்யவிழைந்ததை அறியமுடிகின்றது. தொடக்க காலத்தில் திருக்கோயில்களில் மலர் கொண்டு வழிபடுதல், மாலைசூட்டி அலங்காரம், தீபதூப வழிபாடு, மங்கலப்பொருள் படைத்து வழிபாடு, பலியிடுதல் வழிபாடு போன்ற முறைகளைக் கையாண்டுள்ளனர்.

ஆகமத்தின் தலையீட்டிற்குப் பின்னர் திருக்கோயில்களில் நாள்வழிபாட்டு முறையிலும், திருவிழாக்களிலும் மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. இதன் விளைவாகத்

திருக்கோயில் திருச்சுற்றுத்திருவிழா, இரதவீதித்திருவிழா, ஆளாட்டுத்திருவிழா, ஏழுநாள் திருவிழா, போன்றவை உருவாகின என்பதைப் பெறுகின்றோம்.

முன்னோர்கள் திருக்கோயில்களை நிறுவுவதில் ஆகம விதிகளைக் கையாண்டுள்ளனர். இவை சைவ, வைணவ ஆகமங்களாகும். சைவ ஆகமத்திலிருந்து, வைணவ ஆகமம் வேறுபடுவதால் திருக்கோயில்களின் அமைப்பிலும் வேறுபாடு ஏற்படுகின்றது என்று அறிகின்றோம். இவற்றின் அடிப்படையில் ஆய்வு மேற்கொள்ளப்பட்டதன் ஆய்வுத்தொகுப்பாவது சைவ சமய திருக்கோயில்களான இராமநாதசுவாமித் திருக்கோயில், மங்களநாதசுவாமித் திருக்கோயில் ஆகியன சைவாகமத்தின் அடிப்படையில் அமைந்துள்ளன. சைவஆகமத்தில் திருக்கோயிலின் பொதுவாக அமைப்பான கர்ப்பக்கிரகம் எனப்படும் கருவறையே, கோயில் அமைப்பில் முக்கிய கோயில் உறுப்பாகும். இக்கருவறையில் மூலமூர்த்திகள் பிரதிஷ்டையாகியுள்ளனர். இதற்கு அங்கமாக அர்த்த மண்டபம், முகமண்டபம், மகாமண்டபம், திருச்சுற்றுக்கள், சுற்றுக்கோயில்கள், மதில்கள், கோபுரவாசல், பலிபீடம், கொடிமரம் ஆகியவை அமைக்கப்படுகின்றன. கருவறைக்கு முன்னதாக அமைவது அர்த்தமண்டபம், மகாமண்டபமாகும். கருவறையைச் சுற்றி வலம் வருவதற்குரிய பிரகாரம் திருச்சுற்றாலை, பிரகாரத்தில் உள்ளவை பரிவாரக் கோயில்கள் அம்பாள் சன்னிதியில் கல்யாண மண்டபமும், பள்ளியறையும் அமைக்கப்படும் என்ற செய்திகளைப் பெற்றுள்ளோம்.

திருப்புல்லானியில் ஆதிஜெகந்நாதப்பெருமாள் திருக்கோயில் வைணவ ஆகமத்தின் அடிப்படையில் அமைந்ததாகும். இவ்வைணவ ஆகமம், 1.பாஞ்சராத்ரம் 2. வைகாணசம் என இரண்டு வகைப்படுகின்றது. பாஞ்சராத்ரம் என்றால் பிரம்மம், முக்தி, போகம், யோகம், பிரபஞ்சம் ஆகிய இவ்வைந்து தத்துவங்களின் ராத்ரம் (அறிவு) ஏற்ப வழிகாட்டுவதாகும் என்ற கருத்தினை இங்கு அறிகின்றோம்.

இவ்வைணவ ஆகமத்தின்படி திருக்கோயில் அமைப்பில், கோயிலின் நுழைவு வாயிலான இராசகோபுரமும், அதையடுத்துக் கொடிமரம், பலிபீடம், பெரிய திருவடி ஆகியன அமைந்திருத்தலை அறியலாகிறது.

இரண்டாவது திருச்சுற்றின் தென்கிழக்கில் அக்னி மூலையில் மடப்பள்ளியறையும், முகமண்டபம், மகாமண்டபம், ஆகியனவும் அம்மண்டபத்தினுள் வாயிற்காவலர்கள் இவர்களையடுத்து அந்தரானமும் அமைய கிழக்கே மூலவர் வீற்றிருப்பார்.

இரண்டாவது திருச்சுற்றின் தென்மேற்கு மூலையில் கிழக்கு நோக்கித் தாயார் சந்நிதி அமைக்க வேண்டும். வைணவகுரவர்களின் திருமேனிகளை முறைப்படி மூலவருக்குத் தெற்கு நோக்கி அமைக்கப்பட வேண்டும். கிழக்கில் திருமண மண்டபம், வடக்கில் வைகுண்ட வாசல் அமைக்கப்பட வேண்டும். இராசகோபுரத்திற்கு நேர்எதிரில் இறைவன் திரும்புதல் மண்டபமும், எதிரில் சிறிய திருவடியான அனுமன் சந்நிதியும் அமைக்க வேண்டும் என வைணவ ஆகமம் கூறுவதாக அறியமுடிகின்றது. இதனடிப்படையில்தான் ஆய்வு எல்லையாக அமைந்துள்ள திருக்கோயில்களும் அமைந்துள்ளன என்பது ஆய்வின் வழி பெறப்படுகின்ற செய்தியாகும்.

இக்கோயில்களின் வளர்ச்சியினை நோக்கும் பொழுது, இராமநாதசுவாமித் திருக்கோயிலானது தேவார காலத்தில் சின்னஞ்சிறு கற்றளியாக அமைந்திருந்தது எனவும், பிற்காலத்தில் சேதுபதி மன்னர்களால் வளர்ச்சி நிலையை அடைந்ததாகவும் அறிகின்றோம்.

இராமாயணக்காலத்தில் தோன்றியுள்ள இக்கோயிலின் மூலஸ்தானத்தை கி.பி. 12ம் நூற்றாண்டில் இலங்கை அரசர் பராக்கிராமபாகு என்பவர் கட்டியதாகச் சான்றுகளின் வழி அறியமுடிகின்றது. இவ்வாயில் அமைப்பும் அடுக்கடுக்கான

பிரகாரங்களும் கட்டிடக் கலைக்கு மிகவும் சிறப்பு தருவதாக அமைந்துள்ளதைக் காணமுடிகின்றது.

கோயிலின் மூன்றாம் பிரகாரமானது சிற்பச் சிறப்புடையதும், மிருதுவான, கற்களாலும் அமைக்கப்பட்டுள்ளதைக் கூறலாம். பிரகாரத்தை கி.பி. 1722ல் சேது மன்னர் முத்து விஜயரெகுநாத சேதுபதி ஆரம்பித்தார் எனவும், இதன் கட்டுமானத்தை கி.பி. 1772ல் நிறைவு செய்த மன்னர் முத்துராமலிங்க விஜயரகுநாத சேதுபதி எனவும் அறிகின்றோம். இப்பிரகாரம் ஆசியாவின் மிக நீண்ட பிரகாரமாக இன்றளவும் திகழ்கின்றதென அறியமுடிகின்றது. இவ்வாறு சிறப்பானதொரு கோயில் கட்டமைப்பையும், மூர்த்தி, தல, தீர்த்தப் பெருமைகளையும் பெற்று இத்திருத்தலம் விளக்கி வருவதை ஆய்வில் கண்டறியப்பட்டுள்ளது.

இராமயணக்காலத்துடன் தொடர்புடையது திருஉத்தரகோசமங்கைத் திருக்கோயில் சேதுபதி மன்னர்கள் காலத்தில் ஏற்றதொரு வளர்ச்சியைப் பெற்றதனை அறியமுடிகின்றது. இக்கோயிலின் மூலவர் இராசகோபுரம் எழுநிலைக் கோபுரமாகத் திகழ்கின்றது.

08–02–1795ல் அம்பாள் சன்னதி இராசகோபுரம், வடக்கு, தெற்கு நுழைவாயில்களில் அமைக்கப்பட இருந்த இராசக் கோபுரங்களும் கால்கோல் இட்ட நிலையிலேயே நின்றுவிட்டதனை இக்கோயில் வரலாற்றால் அறியமுடிகின்றது. காலங்கள் கடந்து போன நிலையிலும், பல்வேறு நடவடிக்கையினாலும், காஞ்சிப் பெரியவரின் பெருமுயற்சியாலும், பேருதவியாலும் இன்று இக்கோபுரத் திருப்பணிகள் மீண்டும் நடைபெற்று வருகின்றதைக் காணமுடிகின்றது.

ஆதி ஜெகந்நாதப் பெருமாள் திருக்கோயிலின் வளர்ச்சியும் சேதுபதி மன்னர்கள் காலத்தில் பலப்படிகளை, பல்வேறு காலகட்டங்களிலும் பெற்று இன்று அனைத்து மூலவர் திருக்கோயில்களும், திருச்சுற்றுகளும் ஒரே கட்டமைப்பில் அமைந்துள்ளன என்ற செய்தியினையும் இக்கோயிலின் வரலாற்று வாயிலாக பெறுகின்றோம்.

மன்னர்களின் பக்தி பராக்கிரமத்தின் வெளிப்பாடாக அமைந்துள்ள திருக்கோயில்கள் மக்களின் வாழ்வில் இரண்டறக் கலந்ததொரு அமைப்பாக விளங்கியுள்ளதைக் காணமுடிகின்றது. இத்திருக்கோயில்கள் கலைகளின் பிறப்பிடமாகவும், வளர்க்குமிடமாகவும், அறம் வளர்க்கும் கல்வி மையங்களாக, மருத்துவ சாலையாக, நீதிசபையாக, அறம் கூறும் அவையங்களாக, வரலாற்று ஏடாக விளங்கியுள்ளன. தமிழர்களில் வாழ்வியலில் அன்றாட நிகழ்வான பூத்தொடுத்தல் முதல் பூமி பரிபாலனம் வரையிலும், குடிமகன் முதல் மன்னன் வரையிலுமாக தமிழர் வாழ்வியலை இயக்குவதில் திருக்கோயில்கள் முக்கிய பங்காற்றியுள்ளன. மேற்கண்ட கருத்துக்களுக்குச் சான்றாக சேதுநாட்டுத் திருக்கோயில்கள் வேறு எந்தக் கோயில்களிலும் காண முடியாத அளவு மிகச் சிறப்பான கட்டடக்கலை இங்கு மட்டும்தான் காணமுடியும். தஞ்சைக் கோயிலுடன் இந்தத் திருக்கோயில்களை ஒப்பிடுகையில் பத்து மடங்கு மிகப் பெரியதாக நுணுக்கமாக அழகான கட்டடக் கலையுடன் கூடியதாக விளங்குகிறது.

திருப்புல்லாணியில் நடராஜப்பெருமானுக்குத் தனிக்கோயில் அமைந்துள்ளது. இத்தலத்திற்கு மிகப்பெறும் சிறப்பினைச் சேர்க்கின்றது. அம்பிகைக்கு நடராஜப் பெருமான் அறையில் ஆடிக்காட்டியதால் இத்தலம் ஆதி சிதம்பரம் என்றும், மங்களபுரி, பார்பதிபுரி, சித்தகேந்திரம், தெக்கணகாசி, பிரதி கோசபுரம், கல்யாணபுரி என்றும் அழைக்கப்படுகிறது. வேறெங்கும் நடராஜருக்கென்று தனிக்கோயில் கிடையாது என்பது ஆய்வில் பெறப்படுகிறது.

இத்திருக்கோயில்களின் அமைப்பும், வழிபாட்டு முறையுமானது மனித வாழ்வின் நடைமுறையோடு ஒத்தியையும் வகையில் அமைக்கப்பட்டு பல்வேறு தத்துவங்களை உள்ளடக்கியாகத் திகழ்கின்றன. திருவிழாவின் முதற் கட்டமான கொடியேற்றம் உணர்த்துவதாவது, கொடியில் வரையப்பட்டிருக்கும் ரிஷபம் (அ) கருடன் தர்ம உருவமாகவும் ஆத்மாக்களை தர்மமானது கீழ் நிலையிலிருந்து உயர்நிலைக்குக் கொண்டு செல்லும் கருணையே இத்திருவிழாவில் இந்நிகழ்ச்சியால் விளக்கப்படுகின்றது. கொடியேற்றத்திருவிழாக்கள் யோக

நெறியையும், உபாய தீட்ஷா முறைகளையும் உண்மைத் தீட்ஷா மார்க்கத்தையும் விளக்குவன. எனவேதான் திருக்கோயில்களில் கொடியேற்றப்படும்பொழுது மற்ற கொடியேற்றம் போலன்றி பட்டமானது இடகலைப்போலக் கொடிமரத்தை வளைத்து, வளைந்து சுற்றியே மேலேயேற்றப்படுகின்றது.

இதில் குண்டலினி தத்துவம் உணர்த்தப்படுகின்றது. இடகலை, பிங்கலை நாடிகள் ஆண்களுக்கும், பெண்களுக்கு எதிர்மாறாகவிருக்கும். ஆண்களுக்கு இடகலை இடப்புறமும், பெண்களுக்கு வலப்புறமும் தொடங்குவனவாகும். பிங்கலை ஆண்களுக்கு வலப்பக்கமிருந்தும், பெண்களுக்கு இடக்கைப் பக்கமிருந்தும் முதுகுத்தண்டின் அடியிலிருந்தும் எழும்பி மேலேறுவதாகும். பிங்கலையே ஆண்கலையாதலால் ஆண்களுக்கு வலதுபுறத்திலும், பெண்களுக்கு இடதுபுறத்திலும் ஏற்படும் நோய்கள் எளிதில் குணப்படுவதில்லை என்பதை முன்னோர் அறிதியிட்டு கூறியுள்ளதை இதன்மூலம் அறியமுடிகின்றது. இக்குண்டலிணி தத்துவத்தினாலயே இறை சந்நதியில் ஆண்களும், பெண்களும் இடம், வலமாக, எதிர்எதிராக நின்று வழிபடவேண்டுமென்பதை நடைமுறையில் இன்றளவும் பின்பற்றப்படுவதால் காணமுடிகின்றது. இவ்வாறே திருக்கோயில்களின் அமைப்பு, வழிபாட்டு முறைகள், திருவிழாக்கள் ஆகியன உணர்த்தும் தத்துவங்கள் பலவற்றையும் இங்கு ஆய்வின் வாயிலாக அறியமுடிகின்றது.

திருக்கோயில்களில் இறைவனுக்கு ஆண்டுதோறும் திருமணம் நடத்துவது இல்லறநெறியினை விளக்குவதற்காகவே என்பது பெறப்படுகிறது. சாதிய உணர்வுகள் மலிந்த இக்காலத்தில் தங்கள் இல்லத் திருமணத்திற்கு வேற்று சாதியினரை அழைப்பதில்லை. எல்லா சாதியினரும் ஒன்றாக இருந்து திருமணத்தைக் காண்பது இறைவனுக்கு நடக்கின்ற திருமணம் நிகழ்ச்சியேயாகும். அதனால் ஆண்டுதோறும் கோயில்களில் இறைவனுக்குத் திருமணம் நடைபெறுகிறது. சாதி ஒழிப்பில் திருக்கோயில்களின் பங்கு இன்றியமையாததாகக் காணப்படுகின்றது.

திருக்கோயில்கள் மக்களின் வாழ்க்கையோடு இணைந்து காணப்படுகிறது. விபூதி, குங்குமம் வைத்தல் போன்றவைகள் அன்றாட வாழ்வில் மக்களோடு கலந்து காணப்படுகிறது. ஆண்கள் நீறணிவதும், பெண்கள் குங்குமம் வைப்பதும் மருத்துவ ரீதியாகவும், மனோதத்துவ ரீதியாகவும் நலம் பயப்பனவாக உள்ளன. கண்களோடு கண்களை உற்று நோக்கி மயக்க நிலைக்கு ஒருவரைக் கொண்டுவரலாம் என்பது அறிவியல் உண்மை. அவ்வாறு மயக்கும் பார்வைகளிலிருந்து, நெற்றியில் வைக்கப்பட்ட குங்குமமும், திருநீறும் கண்களை உற்று நோக்க முடியாமல் செய்துவிடுகின்றன என மனோதத்துவ மருத்துவர்கள் கூறியிருக்கிறார்கள். இந்த உண்மையைச் சமயத்தின் வழி நோக்கினாலும், மருத்துவ முறையில் நோக்கினாலும் திருநீற்றால் இடர் களைகிறது என்பதை இதன்மூலம் உய்த்துணர முடிகிறது. சான்றோர்கள் ஆன்மீகத்தோடு அறிவியலையும் அறிந்திருத்தலை ஆய்வில் பெறப்படுகிறது.

உலகில் பல சமயங்கள் இருந்தன. இன்றும் இருக்கின்றன. மனிதனின் விலங்குணர்வை அகற்றி, மனித உணர்வை வளர்த்துத் தெய்வ குணத்துக்கு உயர்த்துவது சமயத்தின் பணியாகும்.

அன்றைய நாட்களில் சமயக் கலகங்கள் நடந்தபோது அந்தந்த சமயத் தலைவர்கள் மட்டுமே பாதிக்கப்பட்டார்கள். திருஞானசம்பந்தரின் திருமடத்திற்குத் தீ வைக்கப்பட்டது. திருநாவுக்கரசர் நீற்றறையில் இடப்பட்டார். ஏசுபெருமான் சிலுவையில் அறையப்பட்டார். நபிகள் கல்லால் தாக்கப்பட்டார் போன்ற நிகழ்வுகளாகும். இன்றைய மதக் கலவரங்களால் மடாதிபதிகளும், பேராயர்களும், இசுலாம் தலைவர்களும் பாதுகாப்பாக இருக்கின்றார்கள். தெருவோரத்தில் சிந்தப்படுகின்ற இரத்தம் அப்பாவி மக்களின் இரத்தம் என்ற உண்மையை மறக்காமல் திருக்கோயில்களைக் காப்பாற்றுவது ஒவ்வொருவரின் கடமையாகும்.

அன்றைய சமயம் அரசர்களின் சமயமாய் இருந்தது. இன்றைய சமயங்களை மக்களுக்கு விரும்பியதைத் தரும் அலாவுதீன் அற்புத விளக்காக மக்கள்

பார்க்கின்றனர். கேட்டதைத் தந்தால் இறைவன் கூட நல்லவனாக ஆராதிக்கப்படுகிறான். இல்லையேல் அவனும் சாதரண மனிதனின் கோபத்திற்கு ஆட்படுகிறான் என்பதை ஆய்வில் கண்டறியப்பட்டுள்ளது.

இறைவனுக்கு தீபம் காட்டுதல், பூசையின் போது இசைக்கருவிகள் இசைப்பது போன்றவை சடங்குகளாக மட்டுமின்றி இறைவனை ஒளி வடிவமாகவும், நாதவடிவமாகவும் அறிவது மக்களின் அறிவுத்திறனுக்குச் சான்றாக அமைகிறது. .

விழாக்கள் எடுத்து இறைவனை வணங்குதல் என்பது உறவுகளை மேம்படுத்திக் கொள்ள மனிதன் கையாண்ட வழிமுறையாகவும் இருப்பதை ஆய்வின் மூலம் அறியப்பெறுகிறது.

ஆய்வு எல்லைக்குட்பட்ட மூன்று கோயில்களும் இராமாயணத்துடன் தொடர்புடையவைகளாகக் காணப்படுவதை ஆய்வின் வழி கண்டறியப்பட்டுள்ளது.

பயத்திற்காக வணங்கப்பட்ட கடவுளர்கள் தற்போது பணத்திற்காக வணங்கப்படுவதையும் மறுப்பதற்கில்லை எனலாம். பணம் தருவார் என்ற நம்பிக்கையில் வணங்கப்படுகின்ற கடவுளர்கள் செல்வச் செழிப்புடனும், பிற தெய்வங்கள் அன்றாட பூசைக்குத் தடுமாறுகின்ற நிலையினையும் திருக்கோயில்கள் பெற்றிருக்கின்றன. இவ்வாறு திருக்கோயில்கள் தமிழர் வாழ்வியலை இயக்கியதில், இயக்குவதில் வரலாற்று சான்றாக கால வெள்ளோட்டத்தை எதிர்த்து நிற்கும் நிலைகளன்களாக என்றென்றும் திகழும் என்ற கருத்தைப் பெறுகின்றோம்.

## துணை நூற்பட்டியல்


1. அரங்கநாதன். இரா – தமிழகக் கோயிற்கலை
திருமலை, திருப்பதி தேவஸ்தான வெளியீடு
(வைணவ, சைவ ஆகம கழகம்)
மதுரை.
முதற் பதிப்பு : செப்டம்பர் 2000.

2. ஆதி பாலசுந்தரன் – சங்க இலக்கியங்கள் புலப்படுத்தும் வழிபாட்டு வரலாறு
மணிமேகலை பிரசுரம்
முதற்பதிப்பு–2002.

3. ஆறுமுகநாவலர் (பதிப்பாசிரியர் ஆ. குமரேசன்) – இந்துமத இணைப்பு விளக்கம்,
பாரதி ஆப்செட், நாகர்கோவில்
பதிநான்காம் பதிப்பு : டிசம்பர் 2002.

4. இராமச்சந்திரன். ஆர் – சைவத் திருத்தலங்கள்
சுவர்ண ஜோதி சுந்தரர் பதிப்பகம்
முதற்பதிப்பு : டிசம். 1997.

5. இராமசாமி சாஸ்திரி. கே.எஸ் – மகரிஷிகளின் வரலாறு
தமிழ்ப்பதிப்பகம்
முதற்பதிப்பு–1959

6. இராமநாதபுரம், மாவட்ட பயணியர் கையேடு – இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை
ராஜா பிரஸ், மதுரை
முதற்பதிப்பு–ஜூலை 2004.

7. இராமலிங்கம், மு. – நாராயணவனம் அருள்மிகு கல்யாண வெங்கடேசுவர சுவாமி திருக்கோயில் திருவிழாக்கள்
திருப்பதி திருமலை தேவஸ்தான வெளியீடு
முதற்பதிப்பு–டிசம். 1991

8. இராமலிங்கம் – சிதம்பரம் நடராஜர் கோயில்
திருவரசு புத்தகநிலையம்
முதற்பதிப்பு–டிசம். 2000.

9. எத்திராசன் – 108 திவ்ய தேசங்கள் ஸ்தல வரலாறு
ஸ்ரீ வைணவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
காரைக்குடி, முதற்பதிப்பு–1995.

10. கல்கி – பொன்னியின் செல்வன்
வர்த்தமானன் பதிப்பகம்
பத்தாம் பதிப்பு : ஜன. 2004

11. கமால். எஸ். எம். – இராமர் செய்த கோயில்
சர்மிளா பதிப்பகம்
முதற்பதிப்பு–2004.

12. கமால். எஸ்.எம். – சேதுபதி மன்னர் வரலாறு
சர்மிளா பதிப்பகம்
முதற்பதிப்பு– டிச.2003

13. குன்றக்குடி அடிகளார் – ஆலயங்கள் சமுதாய மையங்கள்
வானதி பதிப்பகம்
தி.நகர்., சென்னை
முதற்பதிப்பு–அக்டோபர் 1987.

14. கைலாசபதி, க. – பண்டைத்தமிழர் வாழ்வும் வழிபாடும்
மக்கள் வெளியீடு
பதிப்பு–1966.

15. ஞானசம்பந்தன். அ.ச – பெரியபுராணம் ஓர் ஆய்வு
தமிழ்ப்பல்கலைக்கழக வெளியீடு
முதற்பதிப்பு–ஜன.1987

16. சசீவள்ளி சி. – சமய சொல்லகராதி
நிறுவன வெளியீடு
பதிப்பு–1981

17. சுப்பிரமணியன். க – சங்ககால சமுதாயம்
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ்
பதிப்பு ஆண்டு–1982

18. சுப்புரெட்டியார். ந – மாணிக்கவாசகர்
ஆய்வுநூல்
திருவேங்கடவன்–பல்கலைக்கழகம்,
திருப்பதி வேங்கடேசன் பப்ளிக்கேஷன்
சென்னை.
முதற்பதிப்பு–1989.

19. செந்துரைமுத்து – திருத்தலங்கள் கூறும் தத்துவங்கள்
கிருஷ்டி. டி.டி.பி. சென்டர்
முதற் பதிப்பு–2000

20. சொக்கலிங்கம் – ஆலயங்களின் உட்பொருள் விளக்கும்
கழக வெளியீடு
முதற் பதிப்பு–2002.

21. தட்ஷிணாமூர்த்தி – தமிழர் நாகரீகமும் பண்பாடும்,

22. தனபாக்கியவாதி. த. – தமிழ் இலக்கியத்தால் திருமால் வழிபாடு
குறிஞ்சி பதிப்பகம்
முதற்பதிப்பு–ஜன. 1996

23. திரவியம் – இந்து சமயக் களஞ்சியம்
திருமகள் நிலையம்
முதற்பதிப்பு–அக்.1990

24. தேனப்பன், வ. – ஒன்பது நகரக்கோயில்கள்
தேன் வள்ளியம்மை பதிப்பகம்
காரைக்குடி.
முதற்பதிப்பு–டிச. 1990

25. நடன காசிநாதன் – கல்வெட்டு
தமிழ்நாடு அரசு,
தொல்பொருள் ஆய்வுத்துறை
இரண்டாம் பதிப்பு : 1976

26. மேலது – தமிழர் தெய்வங்கள்
தென்றல் நிலையம்
முதற்பதிப்பு – டிச. 2003

27. நாராயணசுவாமி – தமிழக அற்புத ஆலயங்கள்
நர்மதா பதிப்பகம்
முதற்பதிப்பு–நவம்பர். 1983

28. நெடுஞ்செழியன். க – தமிழ் இலக்கியத்தால் உலகாய்தம்
மதனம் பதிப்பகம்
முதற் பதிப்பு–1990

29. பூங்குன்றன் – அத்திகோசத்தார்
தொல்காப்பிய கருத்தரங்கு
தொகுதி–2

30. பெருமாள். அ.க – தொல்பழம் சமயக் கூறுகள்
முதற்பதிப்பு– டிச. 1990

31. மார்க்கிய காந்தி – ஐயனார் வழிபாடு

32. மாணிக்கவேலு. மு.அ. – தமிழ்நாட்டில் நடராசர் வழிபாடு
அம்பலவாணர் பதிப்பகம்
முதற்பதிப்பு–ஜூலை. 1994

33. முத்து இராமலிங்கம். ச.மு. – இராமேசுவரம் இராமநாதப சுவாமித் திருக்கோயில்–விழாக்கள்
பூரணம் பதிப்பகம்
முதற்பதிப்பு– ஜூன்.2005.

34. முத்து எத்திராஜன் – காக்குத்தி அய்யனார்

35. வெள்ளை வாரணனார் – சைவசித்தாந்த சாத்திர வரலாறு
தமிழ்ப்பல்கலைக்கழக வெளியீடு
முதற்பதிப்பு– டிச.2002

36. வேங்கடசாமி நாட்டார். மயிலை. சீனி. – தமிழகர் வளர்த்த அழகுக் கலைகள்
முதற்பதிப்பு : 2003

37. ஸ்ரீ சந்திரன் – சிலம்பு
வர்த்தமானன் பதிப்பகம்
சென்னை
இரண்டாம் பதிப்பு–2004

38. ஜெகாதா – விடுதலை வேங்கை

39 செளந்தரபாண்டியன். சு. – தமிழர் சிந்தனை, சமயக்கோட்பாடுகள்
மயன் பதிப்பகம்
முதற்பதிப்பு–டிச. 1999

**சங்க இலக்கியங்கள் மேற்குறிப்பு நூற்பட்டியல்**

1. அகநானூறு – எஸ். ராஜம்
மர்ரே அண்டு கம்பெனி
சென்னை–பதிப்பு–1985

2. ஐங்குறுநூறு – எஸ். ராஜம்
மர்ரே அண்டு கம்பெனி
சென்னை–பதிப்பு–1985

3. குறுந்தொகை – மர்ரே அண்டு கம்பெனி
பதிப்பாண்டு 1957

4. சங்க இலக்கியப் பகுதிகள் (பாட்டும் தொகையும்) – எஸ். வையாபுரிபிள்ளை
(பதிப்பும், தொகுப்பும்)
பாரி நிலையம்
சென்னை–பதிப்பு ஆண்டு–1967

5. தொல்காப்பியம் – (பொருட்படலம் புறத்திணையியல்) – ச. சோமசுந்தரபாரதியார் (உரை)
சி.எம்.ஷி. பிரஸ்
மதுரை
ப. ஆண்டு 1942.

6. தொல்காப்பியம் (பொருளதிகாரம்) இளம்பூரணர் உரை – திருநெல்வேலி தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
சென்னை. ப.ஆண்டு. 1982

7. நற்றிணை – எஸ். ராஜம்
மர்ரே அண்டு கம்பெனி
சென்னை. ப. ஆண்டு 1957

| | | |
|---|---|---|
| 8. பத்துப்பாட்டு (மூலமும் உரையும்) | – | உ.வே. சாமிநாதையர் நூல் நிலையம் திருவொன்மியூர் பதிப்பித்த ஆண்டு 1974. |
| 9. பதிற்றுப்பத்து | – | மர்ரே அண்டு கம்பெனி பதிப்பித்த ஆண்டு–1957 |
| 10. பதிற்றுப்பத்து (மூலமும் உரையும்) | – | உ.வே.சா. நூல் நிலையம் பதிப்பித்த ஆண்டு–1957 |
| 11. பதிற்றுப்பத்து (மூலமும் உரையும்) | – | ஔவை. அ. துரைசாமிப்பிள்ளை (உரை) திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் சென்னை. பதிப்பாண்டு–1973. |
| 12. பரிபாடல் | – | மர்ரே அண்டு கம்பெனி பதிப்பாண்டு–1957. |
| 13. புறநானூறு (1–200) | – | ஔவை துரை சாமிப்பிள்ளை (உரை) திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம், சென்னை பதிப்பாண்டு–1972. |
| 14. புறநானூறு (201–400) | – | மே.கு.ஆசிரியர், நூல் பதிப்பாண்டு–1973. |
| 15. புறநானூறு | – | மூலமும் உரையும் உ.வே.சா. நூல்நிலையம் பதிப்பாண்டு–1963. |
| 16. புறநானூறு | – | மர்ரே அண்டு கம்பெனி பதிப்பாண்டு–1958 |
| 17. புறப்பொருள் வெண்பாமாலை | – | மேற்குறிப்பிட்டுள்ள பதிப்பகம் பதிப்பாண்டு 1963. |
| 18. பக்தி இலக்கியம் திருவாசகம் | – | எட்டாம் திருமுறை சைவ சித்தாந்த பெருமன்றம் சென்னை, காந்தளம். |

19. பக்தி இலக்கியம் பக்தி இலக்கியம் (உபநிஷத் மந்த்ரங்கள்) – ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் திருப்பராய்த்துறை ஸ்ரீ ராமகிருஷ்ண தபாவனம் தயாரிப்பு (பிரசுரம்) ஒன்பதாம் பதிப்பு–1997.

20. திருமந்திரம் – மாணிக்கம்.அ வர்த்தமாணன் பதிப்பகம் தி. நகர், சென்னை ஏழாம்பதிப்பு–செப். 2004

21. தொல்காப்பியம் – புலியூர் கேசிகன் பாரிநிலையம் சென்னை நான்காம் பதிப்பு, பதிப்பித்த ஆண்டு–1970

22. தேவாரம் – (உரையாசிரியர்) புலவர். பி.ரா. நடராசன் உமா பதிப்பகம், மண்ணடி சென்னை முதற்பதிப்பு–ஏப்ரல்.2003

23. இராமேசுவரம் – அருள்மிகு இராமநாதசுவாமித்திருக்கோயில் விழாக்கள், இராமநாதபும் சமஸ்தானம் தேவஸ்தானம்.

24. திருஉத்தரகோசமங்கைத் தல புராணம் – இரா. சம.தேவ. வெளியீடு பதினோறாம் பதிப்பு–2001.

25. திருப்புல்லாணித்தலவரலாறு – இரா.சம.தேவ. வெளியீடு பதிமூன்றாம் பதிப்பு–2003.

ஆங்கில நூல்கள்

26. A Social History of the Tamils Part-I, Page 409, 410.

27. Elements of India I Conagraphy TA. Gopinatha Rao Page 485, 486. Vol-II, Part-2

28. Administration and Social life under the Pallavas Page-143, C. Minakshi

29. History of India and the great eastern architect ers 1876 Page 382, 388, James Ferguson.

## திருக்கோயில் ஆய்வு சார்ந்த செய்திகளை உள்வாங்க / கையாள (ஆய்வாளருக்கு) பயன்பட்ட திருக்கோயில் ஆய்வு நூல்கள்


1. அம்பை மணிவண்ணன் – பாண்டியநாட்டு வைணவக் கோயில்களின் கலையும் கட்டடக்கலையும்
ஜெ. ஜெ. பப்ளிகேஷன்ஸ்
மதுரை, 1999.

2. மேலது – மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் கோயில் அமைப்பும் சிறப்பும்
ஜெ.ஜெ. பப்ளிகேஷன்ஸ்
மதுரை, 2003.

3. இராசு பவுன்துரை – தமிழக ஓவியக்கலை மரபும் பண்பாடும்,
மெய்யப்பன் பதிப்பகம்
சிதம்பரம், 2004.

4. கருணாநந்தன், இரா.ப., காசிநாதன், (தொ.ஆ) – இராமலிங்க விலாசம்–இராமாயண ஓவியக்குறிப்புகள்
தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை
சென்னை, 1990.

5. குடவாயில் பாலசுப்ரமணியன் – தஞ்சைப்பெரிய கோயில்
அஞ்சனா பதிப்பகம்
தஞ்சாவூர், 1995.

6. சந்திரமூர்த்தி, மா., – தமிழ்நாட்டுச் சிவாலயங்கள்
தொகுதி I, II,
மணிவாசகர் பதிப்பகம்
சென்னை, 2003.

7. துப்ருயல். ழுவோ. முரளி அரூபன் (மொ.ஆ) – திராவிடர் கட்டடக் கலை
ரிஷபம் பதிப்பகம்
சென்னை, 1999.

8. நடராஜன், எஸ்., – ஆலயங்களும் ஆகமங்களும்
சென்னை, 1989

9. நாகசாமி, இரா., சுந்தரமூர்த்தி – தமிழகக் கோயிற்கலைகள்
தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை
சென்னை, 1963.

10. நாகசாமி, இரா., சந்திரமூர்த்தி, மா., – தமிழகக் கோயிற்கலைகள்
தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை,
சென்னை, 1976.

11. பரமசிவன், தொ., – அழகர்கோயில்
ம.கா. பல்கலைக்கழகப் பதிப்புத்துறை
மதுரை, 1989

12. மணிவண்ணன், எல்., – பாண்டிய நாட்டு வைணவக்கோயில்களின் கலையும் கட்டடக்கலையும்
ஜெ.ஜெ. பதிப்பகம்
மதுரை, 1999.

13. முத்துச்சாமிபிள்ளை, கோ.மு., – கோயிற்களஞ்சியம்–அறிமுகம்
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர், 1991.

14. வெங்கட்ராமன், ஆர்., – இந்தியக் கோயில் கட்டிடக்கலை வரலாறு
என்.எஸ். பப்ளிகேசன்ஸ்
மதுரை, 1983.

# PLAN SHOWING THE PROPOSED INDERLOCKING PAVER BLOCK PATH WAY TO OUTER PRAHARAM TO A/M MANGALANATHA SWAMY TEMPLE AT UTHIRAKOSAMANGAI,RAMNAD DISTRICT.



(5)

## வரைபட எண் குறியீட்டு விபரம்

1. சாமிசன்னதி இராஜகோபுரம்
2. அம்மன் சன்னதி முழுமைபெறா இராஜகோபுரம்
3. ஆலயத்திருமதில்
4. அம்மன் சன்னதி குடவரை கோபுரம்
5. சாமிசன்னதி குடவரை கோபுரம்
6. அக்னித்தீர்த்தம்
7. தபசுமண்டபம்
8. பிரதான முன்பிரகாரம்
9. வாகன அறை
10. சாமிசன்னதி நந்தி மண்டபம்
11. மடப்பள்ளி
12. யாகசாலை
13. சோபனமண்டபம்
14. சாமிசன்னதி முதல் பிரகாரம்
15. உற்சவர் சன்னதி
16. பைரவர் சன்னதி
17. யாகசாலை
18. அறுபத்துமூவர் கொரடு
19. திருமாளிகை பத்தி
20. விநாயகர் சன்னதி
21. லிங்க கொரடு
22. மகாலெட்சுமி சன்னதி
23. சாமி மூலஸ்தானம்
24. அம்மன் சன்னதி கொடிமர மண்டபம்
25. திருக்கல்யாண மண்டபம்
26. வடக்கு முழுமைபெறா பிரகாரம்
27. அம்மன் சன்னதி உள்பிரகாரம்
28. பள்ளியறை
29. உற்சவர் அறை
30. அம்மன்சன்னதி மூலஸ்தானம்

## திருப்புல்லாணி என்கிற புல்லாரணிய க்ஷேத்திரம்
## அல்லது தர்ப்பசயனம்
## ஸ்ரீ ஆதி ஜகந்நாதஸ்வாமி ஆலய வரைபடம்

1 சக்கர தீர்த்தம்
2 கருடாள்வார் மண்டபம்
3 தீர்த்த மண்டபம் அல்லது ஹரிச்சந்திரபுராண மண்டபம்
4 கிழக்கு பிராதன வாசல்
5 கண்ணாடி மண்டபம்
6 பகல் பத்து உத்ஸவமண்டபம்
7 வெள்ளி கருடவாகன அறை
8 ஜகந்நாதஸ்வாமி உள் பிராகாரம்
9 சேனை முதலியார் சந்நிதி
10 ஜகந்நாதஸ்வாமி அர்த்தமண்டபம்
11 ஜகந்நாத ஸ்வாமி கர்ப்ப கிரஹம்
12 பத்மாஸநீ தாயார் ஊஞ்சல் மண்டபம்
13 பத்மாஸநீ தாயார் மஹா மண்டபம்
14 பத்மாஸநீ தாயார் உள்பிராகாரம்
15 பத்மாஸநீ தாயார் கர்ப்பகிரஹம்
16 அசுவத்தம் (அரசமரம்) தல விருக்ஷம்
17 நாகர் குறடு
18 ஆண்டாள் ஸந்நிதி
19 சயன ராமர்
20 சந்தான கோபாலன்
21 பட்டாபி ராமர் சந்நிதி
22 திருவிதாங்கூர் கட்டளை அறை
23 பட்டாபி ராமர் துவஜஸ்தம்ப மண்டபம்
24 to 27 ஆலய முதல் பிராகாரம்
28 வைகுண்ட ஏகாதசி பக்தி உலா மண்டபம்
29 வைகுண்ட ஏகாதசி சுவர்க்க வாசல்
30 to 31 2வது பிராகாரம்
32 யாகசாலை
33 ஆழ்வாரதிகள் சந்நிதி
34 சாமான் அறை
35 மடப்பள்ளி
36 to 37 மணவாள மாமுனி, உடையவர் சந்நிதிகள்
38 பழைய விக்ரஹ அறை
39 தேவஸ்தான அலுவலகம்
40 வாகன மண்டபம்
41 to 42 சாமான் அறைகள்
43 வருண தீர்த்தம்
44 யாகசாலை



தேர்வீதி
செண்பக
பிள்ளையார்
மதில்
கன்னி பிள்ளையார்
ஐயனார்
தமிழ்க் கடவுள்
முருகவேள்
நாயன்மார்கள்
குரு
சண்டிகேசுவரர்
சனீசுவரர்
திருவுண்ணாழி
உற்சவர்
வாகன நந்தி
திருமுற்றம்
(உட்பிரகாரம்) திருச்சுற்று
(வெளிப்பிரகாரம்) திருச்சுற்று
அதிகார நந்தி
சூரியன்
அம்பல
பிள்ளையார்
பலிபீடம்
கொடிமரம்
அம்பல
சண்முகர்
வைரவர்
நவக்கிரகம்

சிவாலயம்




படம் 20.
அரைத்தூண் (Pilaster)




படம் 14.
பாதபந்த - கபோதபந்த (அ)
வர்க்கபேத அதிட்டானம்




படம் 15.
பிரதிபந்த அதிட்டானம்

| | | |
|---|---|---|
| 1. அதிட்டானம் | 2. பித்தி | 3. பிரஸ்தரம் |
| 4. கிரீவம் | 5. சிகரம் | 6. கலசம் என்பன. |

இவ்ஆறு அங்கங்களும் மனிதனுடைய பாதம், கால், தோள், கழுத்து தலை, முடி (கிரீடம்) ஆகிய உறுப்புகளுக்கு இணையாகக் கொள்ளப்படுகின்றன.




படம் 10. விமானத்தின் கூறுகளும் மனித உடற்கூறுகளும் (நின்ற நிலை)
(நன்றி: திருவாவடுதுறை ஆதீனம்)



எஸ்.ரமேஷ், இயற்பியல் ஆய்வுக்கூட இயக்குநர், ஜான்ஸ் ஹாப்கின்ஸ் பல்கலைக் கழகம், மேரிலேண்ட், அமெரிக்கா.



இந்திய அணுசக்தி துறைத் தலைவர் டாக்டர் அனில் கக்கோட்கர் மற்றும் CERN-இன் இயக்குனர் டாக்டர் ராபர்ட் ஐமார் ஆகியோர் 18.6.04 அன்று நடராஜரின் திருவுருவச் சிலையை நிறுவியபோது...

# நடராஜரைப் போற்றும் நவீன விஞ்ஞானம்

ஜெனிவாவிலுள்ள ஐரோப்பிய அணு இயற்பியல் ஆராய்ச்சிக்கூடம் (European Center for Particle Physics Research-CERN). செப்டம்பர் 10, 2008. அன்று அங்கு இதுவரை இல்லாத அளவில் முதன் முதலாக உலகின் மிகப் பெரிய அறிவியல் பரிசோதனை தொடங்கப்பட்டது.

மறுநாள் 'டைம்ஸ் ஆப் இந்தியா' இந்தச் செய்தியைக் 'கடவுள் அணுவிற்கான ஆய்வு தொடங்கியது' என்று எழுதியது.

**ஹாட்ரான் மோதும் பேரியந்திரம்:** CERN-இல் துகள்களைத் - Particles துரிதப் படுத்தி மோத வைக்கும் ராட்சத எந்திரம் Large Hadron Collider -LHC அமைந்துள்ளது. இது 27 கி.மீ நீளமுள்ள ஒரு வட்டமான சுரங்கம் போன்று பூமிக்கடியில் பிரான்சுக்கும் சுவிட்சர்லாந்துக்கும் இடையில் அமைக்கப்பட்டுள்ளது. (பார்க்க பக்கம் 47)

சுற்று வளைவான இச்சுரங்கத்தில் எதிர் எதிராக புரோட்டான் கதிர்களை அதிவேகத்தில் மோத வைத்து அதன் விளைவுகள் ஆராயப்படுகின்றன.

பிரபஞ்சம் படைக்கப்பட்டபோது முதல் சில கணங்களில் நடந்த நிகழ்வுகளைப் பற்றி அறிவதே இந்த ஆய்வின் நோக்கம். மேலும் ஆராய்ச்சியாளர்கள், 'கடவுள் அணுத் துகள்' எனப்படும் 'Higgs Boson'-ஐ ஆராயவும் இது துணை புரியும் என்று நம்புகின்றனர்.

***நடராஜரின் தலைமையில்...:*** உலகமே இந்த ஆராய்ச்சி பற்றி விவாதித்துக் கொண்டிருக்கும் வேளையில் அண்ட சராசரத்தின் தலைவரான தில்லையம்பல நடராஜரின் தலைமையில் இந்த ஆராய்ச்சி நடக்கிறது என்பது மிகச் சிலர் மட்டுமே அறிந்த ஒன்று!

ஜெனிவாவில் CERN தலைமையகத்தின் முகப்பில் ஆறு அடி உயரமுள்ள ஒரு நடராஜர் சிலை உள்ளது. இந்தச் சிலையின் கீழே உள்ள செவ்வகப் பீடத்தின் முகப்பில் சம்ஸ்கிருதம் மற்றும் ஆங்கிலத்தில் கீழ்க்கண்டவாறு பொறிக்கப்பட்டுள்ளது:

*'எங்கும் நிறைந்தவனே! நற்குணங்களின் உருவே! இந்த அண்டசராசரத்தைப் படைத்தவனே! ஆடலரசே! அந்தி நேரத்தில் ஆனந்தத் தாண்டவம் ஆடியவனே! உமக்கு நமஸ்காரம்! (மூலம்: சிவானந்தலஹரி, சுலோகம் 56, ஆதிசங்கரர்.) நன்றி: அணுசக்தி துறை, இந்திய அரசாங்கம்.'*

இந்திய அணுசக்தித் துறை உலகப் புகழ்பெற்ற ஓர் ஐரோப்பிய அணு ஆராய்ச்சிக்கூடத்திற்கு ஏன் இச்சிலையைப் அன்பளிப்பாகக் கொடுக்க வேண்டும்? நடராஜனின் திருமேனிக்கும் நவீன இயற்பியலுக்கும் என்ன சம்பந்தம்?

**1300** கோடி வருடங்களுக்கு முன் பேரொலியுடன் கூடிய மிகப் பெரு வெடிப்பு -Big Bang உண்டாயிற்று. அதற்கு முன் பிரபஞ்சம் ஒரு மாபெரும் அடர்த்தியான, அதிக வெப்பம் மற்றும் அழுத்தம் மிகுந்த ஒரு சக்தித் தொகுப்பாக இருந்தது.

இத்தொகுப்பு அதிவிரைவாக விரியவும் சுருங்கவும் செய்தது. அதனால் அது மாறி மாறி மிகச் சூடாகவும் குளிர்ச்சியாகவும் ஆயிற்று. இப்பெரு வெடிப்புக்குப் பின் பிரபஞ்சம் விரிவடையத் தொடங்கியது. மிக அதிக வெப்பத்தில் இச்சக்தித் தொகுப்பு சிறுதுகள்களாகப் பிரியத் தொடங்கியது.

இத்துகள்களின் எண்ணிக்கையும் பன்மடங்காயிற்று. இதன் தொடர்ச்சியால் உருவாக்கப்பட்ட சில நிமிடங்களிலேயே பல துகள்கள் அழிந்தன; மேலும் பல உருவாயின.

வெப்பம் குறையத் தொடங்கியவுடன் இச்சிறு அணுத் துகள்கள் இணைந்து பெரிய துகள்கள் உருவாகத் தொடங்கின. பிரபஞ்சமும் விரிவடையத் தொடங்கியது. இவ்வாறு பல துகள்கள் சேர்ந்து பிரபஞ்சம் உருவானது.

இன்றும்கூட இப்பிரபஞ்சத்தின் ஒரு மூலையில் சிறு

**சிறப்புக் கட்டுரை**

செயலில் ஈடுபடும்போது தடங்கல் ஏற்படுமானால், அதைக் கண்டு தைரியத்தைக் கைவிடக் கூடாது. - சான்றோர் மொழி


பிரிட்ஜாப் காப்ரா

அணுத்துகள்கள் சேர்ந்து பெரிய பகுதிகளாக உருவாகிக் கொண்டிருக்கின்றன; அதே நேரத்தில் பல துகள்கள் அழிந்து கொண்டும் உள்ளன. இந்த நிகழ்வுகள் விண்வெளியில் மட்டுமின்றி சூரியனிலும் நடைபெறுகின்றன. இந்த நிகழ்வுகளால் உருவாகும் காஸ்மிக் கதிர்கள் பூமியை வந்தடைகின்றன.

இந்தத் துகள்கள் நமது மூலக்கூறு பகுதியும், பிரபஞ்சத்தின் கட்டுமான கற்களும் ஆகும். தோன்றுவதும், இயங்குவதும், ஒடுங்குவதும் பிரபஞ்சத்தின் அடிப்படையாகும். இதை நம் முன்னோர் சிவனின் ஆனந்தத் தாண்டவத்தின் தத்துவ வடிவமாகக் கருதினர்.

இத்திருவுருவைக் கண்டு இன்றைய விஞ்ஞானிகள் வியக்கின்றனர். அந்த வியப்பில் மேலும் அண்ட சராசரங்களைப் பற்றி அறியத்தான் CERN-இன் முகப்பில் நடராஜர் சிலை வைக்கப்பட்டுள்ளதோ!

**நடராஜ வடிவின் உட்பொருள் :** 'நடராஜ வடிவம்' என்ற நூலின் ஆசிரியரும், ஸ்ரீராமகிருஷ்ண விஜயத்தின் முன்னாள் ஆசிரியருமான சுவாமி விபுலானந்தர் 'ஆகம சாஸ்திரத்தை அறியாமல் யாரும் நடராஜரின் உடற்கூற்றுத் தத்துவத்தை உணர முடியாது' என்கிறார்.

நடராஜ வடிவம் ரிஷிகளின் தியானத்தில் தோன்றியது. இத்தாண்டவம் மிகவும் நுட்பமானது.

**நடராஜரின் வைத்த திருவடி:** வலது பாதம் முயலகன் என்ற அசுரனின் மீதிருக்கும். அறியாமையை விரட்ட வேண்டும் என்பதை இது குறிக்கிறது.

**தூக்கிய திருவடி:** தூக்கியிருக்கும் இடதுபாதம் பிறப்பிற்கும் இறப்பிற்கும் இடையிலான காலச் சக்கரத்திலிருந்து விடுபடும் ஆன்மாவைக் குறிக்கும்.

**உடுக்கை ஏந்திய திருக்கை:** இந்தக் கையிலுள்ள உடுக்கை எழுப்பும் சப்தம் ஆக்கலைக் குறிக்கும். முதன் முதலில் எழுந்த சப்தத்திலிருந்தே பிரபஞ்சம் வந்ததாக வேதங்கள் கூறுகின்றன. சில அறிவியல் அறிஞர்களின் கருத்துப்படி, பிரபஞ்ச ஆரம்பத்தில் பெரும் ஒலி உண்டானதாகக் கூறுகிறது.

இன்றும் விஞ்ஞானிகள் இந்த ஒலி அதாவது Cosmic Background Radiation-ஐப் பற்றி ஆராய்கின்றனர். சில அறிஞர்கள் இதை 'ஓம்' எனும் பிரணவ ஒலி என்கின்றனர். வேதங்களும், இந்த பிரணவத்திலிருந்து பிரபஞ்சம் பிறந்ததாகக் கூறும்.

**அக்னி ஏந்திய மேல் இடதுகை:** பிறைவடிவில் காணப்படும் இது அழித்தலைக் குறிக்கும். பிரபஞ்சம் தோன்றியபோது பல நுண் துகள்கள் உண்டாகி நிர்மூலமாகின்றன என்பதை இது உணர்த்துகிறது.

**வலது அபய கரம் :** இது காத்தலைக் குறிக்கிறது. பெருவெடிப்பு மூலம் தோன்றிய நுண்துகள்கள் உடனே அழிந்திடாமல் சிறிது காலம் காக்கப்படுகின்றன. பின், அவை ஒன்றோடொன்று சேர்ந்து பெரும் துகள்களாக மாறுகின்றன. பிறகு அவையே கோள்களாகவும் உருமாறின. இப்படித் துகள்கள் அழிந்திடாமல் காப்பதை இந்தக் காக்கும் கரம் கூறுகிறது.

**இடது கரம்:** யானையின் துதிக்கை போல் இருப்பதால் இது கஜஹஸ்த முத்திரை எனப்படும். இறைவனின் நான்கு கைகளும் திசைகளைக் குறிக்கும்.

**தீ ஜுவாலையான திருவாசி:** நடராஜரைச் சுற்றியுள்ள திருவாசி பிரகிருதியை அதாவது எல்லாப் பொருள்களையும் குறிக்கிறது. தீ ஜுவாலை நம்மைச் சுற்றியிருக்கும் பிறப்பு இறப்பு மற்றும் சம்சாரச் சக்கரத்தைக் குறிக்கிறது. நமது சராசரம் சுழன்று கொண்டே இருக்கும் ஒரு சக்கரம் என்ற இயற்பியல் தத்துவத்துடன் இது பொருந்துகிறது.

**திருமுகம் மற்றும் சிரம் :** நடராஜரின் திருமேனி மிக வேகமான ஓர் அசைவைக் காட்டினாலும் திருமுகம் மிக அமைதியான புன்முறுவலுடன் விளங்குகிறது. இது இறைவன் பலவிதமான கோட்பாடுகளை உள்ளடக்கியவர் எனக் காட்டுகிறது.

பெருமானின் வலது செவியில் ஆண் அணியும் தோடும், இடது செவியில் பெண் அணியும் தோடும் அமைந்துள்ளன. உலகம் ஆண், பெண் (சிவ, சக்தி) கோட்பாடுகளால் ஆனது என்ற தத்துவத்தை இது வலியுறுத்துகிறது. மூன்றாவது கண் ஞானத்தையும், வளர்பிறை மற்றும் தேய்பிறையைக் குறிக்கும் சந்திரன் காலச் சக்கரத்தையும், சுழன்று வருதல் ஆக்கல் மற்றும் அழித்தலையும் குறிக்கின்றன. சிரசில் உள்ள மண்டையோடு உயிர்கள் மரணத்தை வென்று மரணமிலாப் பெருவாழ்வை பெற வேண்டும் என்பதையும் காட்டுகிறது.

**பஞ்ச பூதங்கள்:** நீர், நிலம், காற்று, அக்னி மற்றும் ஆகாசம் நடராஜ வடிவத்தின் அங்கங்களாகக் காணப்படுகின்றன. இந்து சாஸ்திரங்களின்படி, அண்ட சராசரம் இந்த ஐந்தினாலேயே உருவானது.

அமைதியாய் இரு, கோழையாய் இருக்காதே. -அனுபவமொழி

பிரம்மா படைப்பார்; விஷ்ணுவோ காத்தலோடு படைக்கவும் செய்வார்; ருத்ரரோ, அழித்தலுக்கான முதற்கடவுளாக இருந்தாலும் அவரால் படைக்கவும் காக்கவும் முடியும். மகேஸ்வரர் மாயையை விலக்குபவர் ஆகிறார். மற்றும் அவர் படைத்தல், காத்தல் மற்றும் அழித்தலையும் மேற்கொள்கிறார்.

சதாசிவர் மட்டுமே உலக பந்தங்களிலிருந்து நம்மை விடுவிக்க முடியும். சதாசிவர் நடராஜர் வடிவத்தில் பஞ்சகிருதி எனப்படும் ஐந்து செயல்களையும் செய்ய முடியும். இந்த ஐந்து செயல்களும் நடராஜர் வடிவில் அமைக்கப்பட்டிருப்பதை நாம் உணர முடிகிறது. - சுவாமி விபுலானந்தரின் 'நடராஜவடிவம்' என்ற நூலிலிருந்து

ஹாட்ரான் மோதும் பெரியந்திரம் அமைந்துள்ள பகுதியும் மாதிரி வரைபடமும்




இறைவனின் ஊன்றிய வலது பாதம் பூமியைக் குறிக்கிறது. மேலிருக்கும் இடது கையில் அக்னி. மெய்மறந்த நடனம் உருவாக்கும் காற்று, பரந்து விரிந்த ஜடாமுடியின் மூலம் விளக்கப்படு கிறது. அவரது சிரசிலிலுள்ள கங்கை, நீரையும் கையிலுள்ள டமரு, ஆகாயத் தையும் குறிக்கும். பஞ்ச பூதங்களும் அவருள் அடக்கம்.

இப்பிரபஞ்சம் எப்படி இயங்குகி றது என்கிற ஆழ்ந்த கருத்து சிவதாண் டவத்தில் அடங்கியுள்ளது. இத்தாண் ட்வ நிலையில் மிகச் சிறிய அணுத் துகள்கள் முதல் மிகப் பெரிய கோள் கள் வரை எல்லாப் பொருள்களின் இயக்கங்களும் அடங்கியுள்ளன.

நடராஜ வடிவை நம் முன்னோர் ஒரு கலைப்பொக்கிஷமாகவும், ஓர் அறிவியல் கோட் பாடாகவும் கண்டனர்.

**அறிஞர்களின் பார்வையில்...:** கலை - வரலாற்று அறிஞரும் ஆனந்த குமாரசாமி, 'எந்த ஒரு கலையும் மதமும் பெருமைப்படும் வகை யில் அமைந்த இறைவனின் செயலை உணர்த்து வதே நடராஜ வடிவம்' என்றார்.

'Tao of Physics' என்னும் நூலின் ஆசிரியரும் இயற்பியல் வல்லுனருமான பிரிட்ஜாப் காப்ரா (Fritjof Capra), நவீன இயற்பியலுக்கும் கிழக்கத் திய ஆன்மிகத்திற்கும் உள்ள தொடர்பை இப்புத்த கத்தில் வெளிப்படுத்துகிறார்.

1975-ல் வெளியான இந்த நூல் 25 ஆண்டுகளாக தொடர்ந்து பதிப்பிடப்பட்டு வருகிறது; உலகெங்கி லும் ஒரு கோடிக்கும் மேலாக விற்கப்பட்டுள்ளது; 23 மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

இந்த நூலில் காப்ரா, 'நவீன இயற்பியலின்படி, ஆக்கல், அழித்தலின் தாளம்-Rhythm என்பது காலங்களில் ஏற்படும் மாற்றம், பிறப்பு, இறப்பு ஆகிய மாற்றங்கள் மற்றும் எல்லாவிதமான உயிர் பொருள் சார்பில்லாத மூலக்கூறுகளின் உட்பொரு ளாகும். ஒவ்வொரு நுண் அணுவும் சக்தித் தாண்டவத் தின், ஆக்கல் மற்றும் அழித்தலில் முடிவில்லா ஒரு பயணமாகச் செயல்படுகிறது.

'நவீன இயற்பியல் அறிஞர்களுக்கு சிவதாண்ட வம் என்பது ஒரு நுண் அணுவின் தாண்டவமே. இந்து புராணங்களிலோ, இந்தத் தாண்டவமானது அண்ட சராசரமே அடங்கும் ஒரு பகுதியாகக் கருதப் படும் ஆக்கல் மற்றும் அழித்தலின் ஓர் அங்கமாகும். இதுவே எல்லாவித உயிரினங்களுக்கும் அடிப்படை யான ஓர் இயற்கையான சம்பவம்'.

காப்ரா மேலும் கூறுகையில், 'பண்டைய இந்தியக் கலைஞர்கள் இந்தத் தாண்டவத்தை வெண்கலச் சிலைகளாக உருவாக்கினர். இக்கால விஞ்ஞானிகளோ, அதிநவீன சாதனங்களைக் கொண்டு இந்தத் தாண்டவத்தை நடத்துகின்றனர்.

'இவ்வாறு நடராஜ வடிவம் பண்டைய புராணம், மதம் போற்றும் கலையையும் மற்றும் நவீன கால இயற்பியலையும் ஒன்றிணைக்கிறது'.

அமெரிக்க விண்வெளி ஆராய்ச்சியாளர் காரல் சேகன் Carl Sagan, ''பண்டைய் கால இந்துக்கள் இந்த ஆக்கல், காத்தல், அழித்தல் அடங்கிய தாண் டவத்தை ஓர் இறைவடிவாகவே கண்டனர். அதையே அவர்கள் சிலையாக வடித்தனர்'' என்கிறார்.

இவ்வாறு மேலைநாட்டு அறிஞர்கள் நடராஜ ரைப் போற்றும்போது இந்தியர்கள் மட்டும் விலகியே நிற்கின்றனர்.

" 'Quantum physics and the Dance of Nataraja' என்ற கட்டுரையில் George Kalamaras என்பவர் நம் (இந்தியர்களின்) அறியாமையைப் பற்றி எழுதியி ருக்கிறார்.

''ஏசுவின் சிலை CERN வாயிலில் வைக்கப்பட் டிருந்தால் இந்நேரம் கிறிஸ்தவ மதபோதகர்கள் எத்துணை ஆதாயம் தேடியிருப்பார்கள்? இந்துக்கள் மட்டும் ஏன் தமது கலை - பண்பாட்டு விஷயங்களில் குருடர்களாகிவிட்டனர்?'' என்று பேராசிரியர் சக்கரபாணி வருந்துகிறார்.

'எண்ணற்ற பெருமைகளையும், வானம் போல் தெளிவையும், அனைத்திற்கும் தலைவனான, தன்னையே கடந்தவனான சிவபெருமானிடம் மாறாத பக்தி ஏற்படட்டும்' என்று சுவாமி விவேகானந்தர் பிரார்த்திக்கிறார்.

நடராஜப் பெருமான் நமக்கும் அப்படியே அருள வேண்டிப் பிரார்த்திப்போம்!

-தமிழாக்கம்: ஸ்ரீராம்

திருச்சி அருகே

# 8ம் நூற்றாண்டை சேர்ந்த ஐயனார் சிலை கண்டெடுப்பு

**தஞ்சை, நவ. 6:** திருச்சி அருகே கி.பி. 8ம் நூற்றாண்டைச் சேர்ந்த பல்லவர் கால ஐயனார் சிலை கண்டெடுக்கப்பட்டுள்ளது.

தொல்லியல் ஆய்வாளர் குடவாசல் பாலசுப்பிரமணியன் திருச்சி மாவட்டம் காட்டுப்புத்தூர் நத்தம் பகுதியில் குழுவினருடன் ஆய்வு மேற்கொண்டார்.

அங்கு 2,000 ஆண்டுகளுக்கு முந்தைய தொல்பொருள் தடயங்களும், 1200 ஆண்டுகளுக்கு முற்பட்ட பல்லவர் கால சிற்பங்களும் பல இடங்களில் புதைந்த நிலையில் இருப்பதை இவர்கள் கண்டனர்.

இதுபற்றி குடவாசல் பாலசுப்பிரமணியன் கூறியதாவது:

காட்டுப்புத்தூரில் பழங்கால கறுப்பு, சிவப்பு பானை ஓடுகள் அதிகம் காணப்படுகின்றன. அங்குள்ள வாழைத் தோட்டம் ஒன்றில், கி.பி.8-9ம் நூற்றாண்டைச் சேர்ந்த மிகப்பெரிய ஐயனார் சிற்பம் புதைந்த நிலையில் உள்ளது. அதன் மார்பு, கைகளில் அணிகலன்கள் அணிந்தும், மார்பில் புரிநூலுடன் அமர்ந்த நிலையில் ஐயனார் சிற்பம் உள்ளது.

பல்லவர் கால லிங்கம், இடபம், திருமால் ஆகிய சிற்பங்களும் உடைந்த நிலையில் காணப்படுகின்றன. சோழர் காலத்துக்கு முன் பல்லவர் காலத்திலேயே இப்பகுதி வளமிக்கதாக திகழ்ந்திருந்தது என்பதற்கான சான்றுகள் பல உள்ளன.

ஐயனார் சிற்பத்தை சிதைவு ஏற்படாமல் வெளியே எடுத்து பாதுகாத்தால் எதிர்காலத்தில் அது கலை வரலாற்றுச் சின்னமாக திகழும்.

இவ்வாறு குடவாசல் பாலசுப்பிரமணியன் கூறினார்.



திருச்சி மாவட்டம் காட்டுப்புத்தூர் அருகே புதைந்த நிலையில் கண்டெடுக்கப்பட்ட 8ம் நூற்றாண்டைச் சேர்ந்த ஐயனார் சிலை.

இந்திய வாழ்க்கை முறையும் இன்றைய விஞ்ஞானமும்

பேராசிரியர் **தங்கமணி**

# விக்கிரக வழிபாடு அவசியம்தானா?

கோயில்களில் உள்ள தெய்வ விக்கிரகங்கள் மற்றும் சிவலிங்கம் சாதாரண கற்சிலைகள் அல்ல. அளப்பரிய சக்தியைப் பன்னெடுங் காலம் இருத்தி வைக்கும் ஆற்றல் கொண்டது லிங்கவடிவம்.



ஆலயங்களில் ஓதுகின்ற மந்திரங்கள், அர்ச்சனை, அபிஷேகம் மற்றும் பக்தர்கள் இசைக்கும் நாமாவளிகள் மூலம் ஏற்படும் நாம அதிர்வுகளை நீண்ட காலம் நிலைநிறுத்தி வைக்கும் ஆற்றல் விக்கிரகங்களுக்கும், லிங்கத்துக்கும் உள்ளது.

அணுமின் நிலையங்களில் உள்ள அணு சக்தி கொள் கலன்கள் (Nuclear Reactors) லிங்க வடிவில் அமைந்திருப்பதை ஈண்டு ஒப்பு நோக்கலாம்.

"விக்கிரகத்தில் ஆகர்ஷண (ஈர்ப்பு) சக்தி இருக்கிறது" என்று பகவான் ஸ்ரீ சத்யசாயி பாபா கூறுகின்றார்.

"ஈர்த்து எனை ஆட் கொண்ட எந்தை பெருமானே", என்று மணிவாசகர் சிவ புராணத்தில் குறிப்பிடுகிறார். பகவான் காந்தம் போன்றவர். பக்தர்கள் இரும்புத் துகள்கள் போன்றவர்கள். காந்தக்கல்லுடன் சில இரும்புத் துண்டுகளை வைத்து, இரண்டு - நாட்கள் கழித்துப் பார்க்கும் போது அந்தக் காந்த சக்தி இரும்புத் துண்டுகளிலும் பரவியிருப்பதைக் காணமுடியும். இது இயற்பியலின் தத்துவம்.

இலட்சக் கணக்கான பக்தர்கள் நல்லிணக்கத்துடன் வழிபாடு செய்யும்போது, அவற்றைத் தன்னுள் இழுத்துக் கொண்டு மிகுந்த சக்தி வாய்ந்த வடிவமாக விக்கிரகங்கள் மாறுகின்றன. விக்கிரகத்தை





## வழிபாடு செய்வது எப்படி?

எந்த வேளையும் இறைவனை நினைக்க வேண்டும்; அது ஆரம்பத்தில் முடியாவிட்டால்; மூன்றுவேளைகளில் தவறாமல் நினைக்கவும்.

காலை எழுந்தவுடன், "இறைவனே, இன்று நான் நல்வழியில் நிற்க அருள் புரி" என்று தொழ வேண்டும்.

உணவு உட்கொள்ளும் பொழுது, "இறைவனே இந்த உணவினால் எனக்கு நல்ல அறிவும் அன்பும் உண்டாக அருள்புரி" என்று தொழ வேண்டும்.

இரவில் படுக்கும்போது, "இறைவனே, இந்த உறக்கத்திலே, உன் எண்ணமே நிற்க அருள்புரி" என்று தொழ வேண்டும்.

**- திருமுருக கிருபானந்த வாரியார்**

வழிபடும் போது தன்னிடம் இருக்கும் சக்தியைத் தன்னை ஆராதிக்கும் பக்தர்களுக்கும் அளிக்கிறது.

மூலவிக்கிரகம் அமைந்துள்ள கர்ப்பக்கிரகம் மெய்ஞான மற்றும் விஞ்ஞான அடிப் படையில் அமைக்கப் பட்டுள்ளது. விக்கிர கத்தின் உயரத்துக்கு ஏற்ப, கர்ப்பக்கிரகத்தின் உள் அளவை வரையறுத் துள்ளனர்.



அதுமட்டுமின்றி, கர்ப்பக்கிரகத்தின் காற்று மண்டலத்தில் ஈரப்பதம் (Humidity) மற்றும் எதிர் மின்னூட்டம் (Negative Charge) இருக்கும் வகையில் கர்ப்ப கிரஹம் வடிவமைக்கப் பட்டுள்ளது.

ஆதலால், கர்ப்பக் கிரகத்தில் உள்ள காற்று மண்டலத்தில் 'ஓம்' என்ற ஒலியுடன் அர்ச்சனை செய்யும் போது அவ்வொலி விக்கிர கத்தில் பட்டு எதிரொலிக்கிறது.

"ஓம்" என்ற ஒலிக்குக் கர்ப்பகிரஹத்தில் உள்ள காற்று மண்டலம் ஒத்த அதிர்வு (resonance) பெறுகிறது.

இத்தகைய காற்று மண்டலத்தின் அயணியாக்கப்பட்ட (Ionized) மூலக்கூறுகள் (Molecules) எதிரேயுள்ள பக்தர்களை அடையும்போது, அவர்கள் உள்ளத்தை வளப்படுத்து வதற்கும் அடிப்படையான உடல் நலத்தை நல்குகிறது என்று விஞ்ஞானம் கூறுகிறது.

இதேபோல், அபிஷேகங்கள் ஆலயங்களில் நிகழ்த்தப்படும்போது, விக்கிரகத்தில் ஏற்படும் இயற்பியல் மாற்றங்களையும் ஆராய்ச்சி செய்திருக்கிறார்கள். ★

# ராஜகோபுர பணிகள் மீண்டும் தொடங்கியது

27.7.2003



திருஉத்திரகோசமங்கை அம்மன் கோபுரத்தில் 3-ம் மாடம் கட்டும் பணி தொடங்கியுள்ளது.

ராமநாதபுரம், ஆக. 6-

ராமநாதபுரத்தை அடுத்த திருஉத்திரகோசமங்கையில் ராமநாதபுரம் சமஸ்தானம் தேவஸ்தானத்திற்கு சொந்தமான மங்களநாதர்-மங்கள நாயகி அம்மன் கோவில் உள்ளது. ஆதி சிதம்பரம், பூலோக கயிலாயம் என்று அழைக்கப்படும் மிக பழமை வாய்ந்த இந்த கோவிலில் ஓரே கல்லினால் ஆன அபூர்வ பச்சை மரகத நடராஜர் சிலை உள்ளது.

இந்த ஆலயத்தின் தொன்மை சிறப்பு கருதி மத்திய அரசின் தொல்லியல் துறை கோவில் புனரமைப்புக்காக ரூ.2 கோடி ஒதுக்கீடு செய்தது. அதில் ரூ.1 கோடி செலவில் பல்வேறு பணிகள் நடந்து வருகின்றன.

## மீண்டும் தொடக்கம்

இந்த ஆயலத்தில் பிரதான வாயிலில் உள்ள சுவாமி சன்னதி ராஜ கோபுரம் மட்டுமே பூர்த்தியடைந்த நிலையில் உள்ளது. அம்மன் சன்னதியில் உள்ள ராஜகோபுரம் சுமார் 400 ஆண்டுகளாக மொட்டை கோபுரமாகவே காட்சியளித்தது. பக்தர்களின் கோரிக்கையை ஏற்று இந்த மொட்டை கோபுரத்தை ரூ.1 கோடியில் கட்டி முடிக்க காஞ்சி சங்கராச்சாரியார் முடிவு செய்து அதற்கான பணிகளை தொடங்கினார். இதன்படி பழைய மொட்டை கோபுரம் இடிக்கப்பட்டு பணிகள் தொடங்கின. 2ம் நிலை மாடம் கட்டப்பட்டிருந்த நேரத்தில் சங்கராச்சாரியார் மீது குற்ற வழக்கு தொடரப்பட்டதால் கோபுரம் கட்டும் பணி பாதிக்கப்பட்டது.

கோபுரப்பணிகள் பாதியில் நிற்பது குறித்து நெல்லையில் உள்ள திருப்பராய்த்துறை மட நிர்வாகிகளில் ஒருவரான சங்கரானந்த சுவாமியிடம் முறையிட்டனர். இதனைதொடர்ந்து அவரது முயற்சியால் கோவிலின் ராஜகோபுரம் கட்டும் பணி மீண்டும் தொடங்கியுள்ளது. தற்போது 3ம் நிலை மாடம் கட்டும் பணிகள் தீவரமாக நடந்து வருகின்றன. இதனால் பக்தர்கள் மகிழ்ச்சியடைந்துள்ளனர்.



சிற்ப கலைக்கு சிறந்த எடுத்துக் காட்டாக விளங்கும் யாழி.

# கல்லிலே கலைவண்ணம்...

ராமநாதபுரம்,ஆக.7-

ராமநாதபுரம் அருகே உள்ள திருஉத்திரகோசமங்கை கோவில் மிகப்பழமை வாய்ந்தது. உலகத்தில் முதன் முதலில் தோன்றிய பகுதி என்று கருதப்படுவதால் இந்த தலத்தை இந்துசமய குரவர்களுள் ஒருவரான மாணிக்க வாசகர் மண் முந்தியோ மங்கை முந்தியோ என்று புகழ்ந்து பாடியுள்ளார். பழமை வாய்ந்த இந்த கோவில் பண்டைய தமிழர்களின் கலைத் திறனுக்கு எடுத்துக்காட்டாக திகழ்கிறது.

இந்த கோவிலின் சுவாமி சன்னதி நுழைவாயிலில் தமிழர்களின் சிற்ப கலைக்கு எடுத்துக்காட்டாக 2 யாழி சிலைகள் உள்ளன. அந்த யாழியின் திறந்த வாய்க் குள் பந்து போன்ற கல் உருண்டை ஒன்று சுழலும் வகையில் வடிவமைக்கப்பட்டுள்ளது. கற்சிலையை செய்து அதனுள் கல் உருண்டையை திணிக்க முடியாது என்பதால் சுற்றுலா பயணிகள் ஆர்வமுடன் பார்த்து செல்கின்றனர். இதேபோல ஒரே கல்லினால் வடிக்கப்பட்ட சங்கிலியும் இந்த கோவிலில் உள்ளது. மேலும் அபூர்வ பச்சை மரகத கல்லினால் ஆன நடராஜா சிலையும் இந்த கோவிலின் சிறப்பு அம்சமாகும். ஒளி, ஒலி அதிர்வுகளை கூட தாங்கும் வல்லமை இல்லாத மரகத கல்லை உளியால் செதுக்கி சிற்பமாக வடித்துள்ளனர். இதுதவிர கோவிலின் மங்களநாயகி அம்மன் சன்னதியில் சுமார் 400 வருடங்களுக்கு முன்பு வரையப்பட்ட அபூர்வ சித்திரங்கள் இன்றளவும் பொலிவு குறையாமல் காட்சியளிக்கிறது. ராமநாதபுரம் அரண்மனையில் உள்ளதை போன்று இந்த ஓவியங்களும் மூலிகைச்சாறுகளின் கலவையை கொண்டு பல வண்ணங்களில் வரையப்பட்டுள்ளன. இந்த சன்னதியை அழகுபடுத்துவதற்காக மின்வசதி இல்லாத காலத்திலேயே தீபமேற்றி தொங்கவிடப் படும் அலங்கார விளக்குகள் அமைக்கப்பட்டுள் ளன. இந்த கோவிலின் வழிபாட்டிற்காக கடந்த 1865ம் ஆண்டு ராமநாதபுரம் மன்னர் பாஸ்கரசேதுபதியால் வழங்கப்பட்ட மணி ஒன்று உள்ளது.



ஒரே கல்லால் செய்யப்பட்ட சங்கிலி.



கோயில் கோபுரமும் சேதுபதி மண்டபமும்



கோயில் இராஜகோபுரம் (2. டங்கை)



ஸ்ரீமாணிக்கவாசகருக்கு
ஸ்ரீமங்கலநாதர் உபதேசித்த காட்ஷி



ஸ்ரீயோக தக்ஷிணா மூர்த்தி



மண்டல அபிடேக மாண்பார்த்த காட்சியி[illegible]



CHINESE TEMPLE BELL of 18th Century at Rameswaram
Photo by Courtesy of
French Institute of Indology, Pondicherry
**This Bell was presented by the RANA OF NEPAL**



ஓங்குநலம் வாய்ந்த சிற்ப அழகுடைய
பள்ளியறைச் சொக்கர்தம் தங்கத் திருமேனி

Photo by Courtesy of
French Institute of Indology, Pondicherry



உள்ளம் நிறைவிக்கும் சிற்ப வடிவமைந்த
பள்ளியறை அம்மன் தங்கத் திருமேனி

Photo by Courtesy of
French Institute of Indology, Pondicherry



[illegible] [illegible] ஓங்குபுகழ்ச் [illegible]ாந்தியவர்
எழில்கண்டு மகிழ்கின்ற இனிமையிகு காட்சியிது !
Who is not Charmed by Rare Jewellery?
Madam Prime Minister takes a look at the Temple's Jewels.




அஞ்சல் தலை

ஐந்தாம் ஜார்ஜ் சக்கரவர்த்தி
ஆட்சி வெள்ளிவிழாப் போதில்
இந்து சமயச் சிறப்புணர்த்த
இராமேச்சுரத்தைத் தேர்ந்தெடுத்து
சிந்தனை யழகு புலனுக
சீர்மிகும் அஞ்சல் தலையாக்கி
அந்த நாளில் வெளியிட்ட
அழகுக் கோலம் காணீரே !



சோழர் காலத் தோற்றம் நினைப்பூட்டும்
காளியின் காட்சியிது (9ம் நூற்றாண்டு)

Photo by Courtesy of
French Institute of Indology, Pondicherry



மண்டல அபிடேக மாண்பார்த்த காட்சியிது !



சீல ரளித்த சிற்பத்திறன்சேர்
ஆல மணியின் அழகியதோற்றம்

CHINESE TEMPLE BELL of 18th Century at Rameswaram
Photo by Courtesy of
French Institute of Indology, Pondicherry
This Bell was presented by the RANA OF NEPAL